

இது,
தமிழீழ விடுதலைப் புலிகளின்
வெளியீட்டுப் பிரிவின்
வெளியீடு.

# வணங்கா மண்

மணலாற்றில் வீரச்சாவடைந்த புலிவீரர்களின் குறிப்பேடு

☐ நூல் - வணங்காமண் ☐ தொகுத்தவர் - மணலாறு விஜயன்
☐ முன் அட்டைப்படம் - ஒலிவர் ☐ பின் அட்டைப் படம் - தயா
☐ அட்டைப் பதிப்பு, நூல் பதிப்பு - மாறன் பதிப்பகம் முல்லை வீதி,
தருமபுரம். ☐ வெளியீடு - தமிழீழ விடுதலைப் புலிகளின்
வெளியீட்டுப் பிரிவு- ☐ முதற்பதிப்பு - ஒகஸ்ட் 1996

விலை ரூ 750/=

# நுழைவாயில்

தமிழீழ விடுதலைப் போராட்டத்தின் முக்கியத்துவம் மிக்க போர்க்களமாக மணலாறு, காலத்துக்குக் காலம், திகழ்ந்து வந்திருக்கின்றது.

இந்தியப் போர்க்காலத்தில், நெருக்கடிகளால் சூழ்ந்த அந்த வரலாற்றுக் காலகட்டத்தில், போராட்டத்தின் முடிவைத் தீர்மானித்த சமர்க்களமாக அது விளங்கியது. மணலாற்றுக்களத்தை வென்று, அன்று, இந்தியப் படைக்கெதிரான போரை வென்றார் தலைவர்.

தமிழீழ தாயகத்தின் நிலத்தொடரைத் துண்டாடுவதற்காக சிங்கள அரசு மேற்கொண்ட உச்சக்கட்டப் படையெடுப்புக்களை மணலாறு எதிர்கொண்டது. பல முனைகளினூடு நகர்த்தப்பட்ட 'மின்னல்' படையெடுப்பு உட்பட, பெரும் படையெடுப்புக்களைச் சந்தித்தபோதும், துவளாமல் நிமிர்ந்தது அந்த "வணங்கா மண்"

அந்த மண்ணைக் காக்க நிகழ்ந்த பெருஞ்சமர்களில் களப்பலியாகிய புலிவீரர்களின் குறிப்பேடாகிய இது –

மணலாற்றுச் சமர்களின் முக்கிய தளபதியாக பணியாற்றிய லெப்ரினன்ற் கேணல் அன்புவின் முயற்சியால் உருவாக்கம் பெற்றது.

அவரது நினைவுகளுக்கே இந்த ஆவண ஏட்டினைக் காணிக்கையாக்குகின்றோம்.

தமிழீழ விடுதலைப் புலிகள்,
வெளியீட்டுப்பிரிவு.

நெருக்கடி மிகுந்த இந்திய போர்க் காலத்தில் மணலாற்றுக் காடுகள் எமது போராளிகளுக்கு இயற்கையின் கவசமாக அமைந்தன. இந்தக் காடுகளைக் களமாக்கி, காட்டுக் கரந்தடிப் போருக்கு புதிய இலக்கணம் வகுக்கும் பெரும் சமர்களை நாம் வெற்றிகரமாக நடத்தி முடித்தோம் இந்திய வல்லரசின் சிறப்புப் படையணிகள் பல, இங்குதான் புலிகளுக்கு புறம்காட்டி ஓடின

இந்திய - புலிகள் போரிலும் சரி, சிங்களத்துக்கு எதிரான சமர்களிலும் சரி, மணலாறு படைத்த வரலாறு மகத்தானது. இந்த வரலாற்றுக் காவியத்தின் கதாநாயகர்கள் என்றும் எம் நெஞ்சப் பசுமையில் நிலைத்திருக்க வேண்டியவர்கள். தாயகத்தின் இதயத்தைக்காக்க, தமிழீழம் எங்குமிருந்து இங்கு வந்து போராடி, தமது இன்னுயிரை ஈகம் செய்த மாவீரர்கள் அனைவருமே இந்த மண்ணுக்கு வணங்கா மண் என்ற மகுடத்தை சூட்டினார்கள்.

இந்த மாவீரர்களின் சுவடுகள் காலத்தால் அழியாதவாறு வரலாற்றில் பதிவு செய்து தருகிறது இந்தக் குறிப்பேடு.

மணலாற்று மண்ணில் களமாடி வீழ்ந்த மாவீரர்கள் நினைவாக ஒரு வரலாற்று ஆவணம் ஆக்கப்படவேண்டுமென அயராது உழைத்த லெப். கேணல் அன்புவிற்கு எனது வீர வணக்கம் உரித்தாகுக. எத்தனையோ சிரமங்கள் மத்தியில், போராளிகளின் தகவல்களைத் திரட்டி, அந்தத் தேசிய வீரர்களின் வாழ்க்கைக் குறிப்புகளை நூலுருவில் பதிவுசெய்து தந்த மணலாறு விஜயன் அவர்களின் மண்பற்றையும் விடுதலைப் பற்றையும் பாராட்டுகிறேன்..

"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"

வே. பிரபாகரன்
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

மணலாற்று மண்ணுக்கு ஒரு தனித்துவமுண்டு. தனக்கே உரித்தான வரலாறுண்டு. புவியியல் ரீதியான முக்கியத்துவமுண்டு. இது எமது தாயகத்தின் இதய பூமி.

இந்த மண், தொடரான சமர்களின் பெரும் களமாகத் திகழ்கிறது. இங்கு போராட்டப் புயல் என்றும் ஓய்வது இல்லை. இந்த மண் எந்தப் பகைவர்க்கும் தலைவணங்கியதாக சரித்திரம் இல்லை. இது வணங்காத மண் இந்த வணங்கா மண்ணின் வீர வரலாற்றைப் பதிவுசெய்து தருகிறது இக்குறிப்பேடு.

மணலாற்று மண்ணின் வரலாற்று முக்கியத்துவத்தையும், அந்த மண்ணில் நிகழ்ந்த பெரும் சமர்களையும், அந்த மண்ணில் களமாடி வீழ்ந்த வீர மறவர்களின் வாழ்க்கைக் குறிப்புகளையும் எழுத்தில் பொறித்து, சிறந்ததொரு ஆவணமாகத் தொகுத்த இம்முயற்சியை நான் மனமாரப் பாராட்டுகிறேன்.

எமது விடுதலைப் போராட்ட வரலாற்றில் மணலாறு வகிக்கும் பங்கு முக்கியமானது. இந்த மண் எத்தனையோ படையெடுப்புகளின் மையக் களமாக நின்று ஆக்கிரமிப்பாளருக்கு சவால்விடுத்திருக்கிறது.

## அணிந்துரை

எதிர்காலத்தைக் கற்பனை செய்து எழுதும் எழுத்தாளர்களை விட
நிகழ்காலத்தை ஆவணப்படுத்தும் எழுத்தாளர்களையே நாம் வரவேற்
கின்றோம். அவர்களே உண்மையான படைப்பாளிகள். தமிழர்கள் பாரெல்
லாம் வீரத்தை நிலைநாட்டியுள்ளார்கள். ஆனால், அவர்களின் வரலாற்றை
அன்றைய எழுத்தாளர்கள் முழுமையாக எழுதி ஆவணப்படுத்தத் தவறி
விட்டார்கள். முன்னைய எழுத்தாளர்கள் விட்ட தவறினை இன்றைய
எழுத்தாளர்கள் விட்டுவிடக் கூடாது. அத்தகைய உயர்ந்த பணியின்
ஒரு சிறு பகுதியே இந்நூல் வடிவம்.

மணலாறு, தமிழீழத்தின் இதயம் மட்டுமல்ல. வீரம் செறிந்த மண்
ணும் கூட. இந்தியப்படைகள் ''செக்மேற்'' என்ற பெயரில் மூன்று நடவ
டிக்கைகளையும் ''ஒப்பரேசன் பாஸ்'', ''ஒப்பிரேசன் புயல்'' என்ற பெயர்
சூட்டப்பட்ட இரண்டு நடவடிக்கைகளுமாக மொத்தம் ஐந்து சிறப்பு
நடவடிக்கைகளை மணலாற்றுக் காட்டின் மீது எடுத்தபோதும் காட்டினைக்
கைப்பற்றிவிட முடியவில்லை. ஒவ்வொரு நடவடிக்கையின் பின்பும் ஒவ்
வொரு படையணிகளை மாற்றி மாற்றி இந்தியா தனது கடைசிப் பலத்
தையும் பரீட்சித்தது. ஆனால், நடந்தது பல நூற்றுக்கணக்கான இராணு
வத்தை இழந்ததோடு மட்டும் அல்லாது, கேணல் பக்கி உட்பட மிகவும் சிறப்பு
வாய்ந்த அதிகாரிகளையும் பறிகொடுத்தது. இன்னும் பல நூற்றுக் கணக்
கான சிப்பாய்களும் அங்கவீனர்கள் ஆயினர். "காட்டிற்குள் புலிகள் இல்லை
பேய்தான் நின்று எங்களுடன் சண்டை செய்கின்றது. எங்கு தொட்டா

[illegible]
[illegible]

அதன் பின் இரண்டாம் கட்ட ஈழப்போரின் பெரும் சமரான ஆனை யிறவுச் சமரின்போது காட்டில் பெருமளவு புலிகள் இருக்கமாட்டார்கள் எனக் கருதி சிங்களப் படையில் காட்டிற்கென தனியான சிறப்புப் பயிற்சி பெற்ற இராணுவ அணியைப் பயன்படுத்தி ''கஜாசேன'' என்ற பெயரு டன் மூன்று சிறப்பு நடவடிக்கைகளை வெவ்வேறு திசைகளிலிருந்தும் தொடங்கினர் அப்போது அங்குள்ள எமது வீரர்கள் எதிரியைப் புறங் காணவைத்து எதிரியிடமிருந்து பல ஆயுதங்களையும் கைப்பற்றினர்.

ஆனையிறவுப் பெருஞ் சமரின் பின்னர் புலிகள் களைத்து இருப்பார் கள் இதுவே தருணம் என்று தமது மிகப்பெரும் பலத்துடன் ''மின்னல் 01'' என்ற பெயருடன் காட்டில் இறங்கினர். ஒரு மாத காலம் முயன்றும் ஈடு செய்ய முடியாத தோல்வியுடன் திரும்பினர். பின்னர் ''மின்னல் - 02'' என்ற பெயர் சூட்டி மக்கள் வாழ்ந்த கிராமங்களான கொக்குத்தொடுவாய், கோட்டைக்கேணி என்ற கிராமங்களைக் கைப்பற்றி நிலையான இரண்டு முகாம்களை அமைத்தனர் அங்கிருந்துகொண்டு ''இக்சா'' என்ற பெயரு டன் சில மாதங்கள் கழித்து நகரத்தொடங்கி பெறுமதி வாய்ந்த படைக் கலங்களையும் பறிகொடுத்து ஈடுசெய்யமுடியாத 'தோல்வியுடன் திரும்பி னர். இறுதியாக ''ஒப்றேசன் செவண்பவர்'' என்ற பெயருடன் முயன் றனர். வழமையான தோல்விகளையேதான் சந்தித்தனர். மற்றுமொரு நடவடிக்கையையும் மேற்கொண்டனர். அதற்குப் பெயர் ''காட்டு நரி'' என்று வானொலியில் தான் கூறினார்கள்

இந்திய இராணுவத்தின் பின்னர் இலங்கை இராணுவத்தினர் இன்று வரையும் எட்டுச் சிறப்புப்பெயர் சூட்டப்பட்ட நடவடிக்கைகளை மேற் கொண்ட போதும் இந்த மண் அவர்களுக்குத் தலைசாய்க்காது வெற்றிக் களிப்புடன் நிமிர்ந்தே நின்றது, நிற்கின்றது. இனியும் இந்தமண் எதிரிக் குத் தலை வணங்காது. விழிப்புடன் இருக்கும் மக்களையும், பலத்துடன் இருக்கும் போராளிகளையும் கொண்ட இந்த மண்ணை ஆக் கிரமிக்கும் சிங்கள இராணுவமும், துணை நிற்கும் சிங்கள மக்களும் தம் தவறை உணர்ந்து தலை குனிவர் என்பது மட்டும் உறுதி.

இரண்டாம் ஈழப்போரில் மணலாற்றுக்கு வெளியே எங்கெல்லாம் பாரிய தாக்குதல்களை எமது இயக்கம் நடாத்தியதோ அங்கெல்லாம் மணலாற் றுக் காட்டில் சிறப்புப் பயிற்சிபெற்ற அணிகளும் பங்கெடுத்தன. அதே போல் மணலாற்றுக் காட்டின்மீது இராணுவம் எடுத்த சிறப்பு நடவடிக்கை சிலவற்றை முறியடிக்க வெவ்வேறு மாவட்டங்களில் இருந்தும் தாக்குதல் அணிகள் பல வந்தன. மணலாற்றுக் காட்டிற்காக அறுநூற்றுக்கும் மேற் பட்ட வீரர்கள் தங்கள் உயிரைத் தியாகம் செய்திருக்கிறார்கள். இதில் ''வணங்கா மண்'' பகுதி ஒன்றில் 247 பேரின் வரலாற்று குறிப்பு அடங்கி யுள்ளது.

வீட்டில் இருக்கும்போது ஒரு துரும்புகூட தூக்கச் சிணுங்கும் எங்கள் சகோதரர், சகோதரிகள் காட்டு வாழ்க்கையில் மூடை மூடையாகச் சுமந்து கால்கள் தேய, கல்லும், முள்ளிலும்கூட நடந்து, மழையிலும், பனியிலும் வெயிலில் காய்ந்து, உண்ணிக் கடியுடன் நுளம்புக் கடியையும் தாங்கி, தூக்கத்தையும் ஓய்வையும் மறந்து, எமது இனிய தலைவனையும், மக்களையும் காத்து விடுதலைப் பயணத்தில் பெரும் பகுதியைக் கடந்து வருகின்றனர்.

போராளிகளைப் பொறுத்தவரையில் மணலாற்றுக்காட்டில் வளர்ந்தவர்கள், சண்டையிலும் சரி, குணவியல்பிலும் சரி வித்தியாசமான பண்புகளுடன் விளங்கினர். மனங்களையெல்லாம் கல்லாக்கி விடுதலை என்ற இலக்கினையே காத்து, மர வேர்களில் காவலிருந்து, காட்டுப் பறவைகளையும், விலங்குகளையும் நேசித்து, பொதிகள் பல சுமந்து, ஆழக் கிணறுகள் வெட்டி, பலம் மிக்க பாசறைகள் அமைத்து, உரமேறிய கரங்களுடன் எதிரியோடு பொருதி வெற்றியை நிலைநாட்டிய பெண் தளபதிகளும் போராளிகளும் பலர் உளர்.

இத்தனை துன்பங்களையும், துயரங்களையும் சுமந்து வளர்ந்த போராளிகளை 1990 ஆம் ஆண்டிற்குப் பின் தாய்க்குத் தாயாக, தந்தைக்குத் தந்தையாக இருந்து வளர்த்தெடுத்தவர் அன்பு அண்ணன். தலைவரின் வழிகாட்டலை சரியாகப் பின்பற்றி போராளிகளின் உள்ளங்களில் அன்பு என்ற வேரினை ஆழமாகப் பாயவிட்டு வீரமும், விவேகமும் பணிவும் உள்ளவர்களாக வளர்த்தெடுத்து எதிரி எம்மீது பெயர் சூட்டப் பட்ட இராணுவ நடவடிக்கைகளை மேற்கொண்டதுபோல் நாமும் பெரியதொரு நடவடிக்கையினைச் செய்ய வேண்டுமென்று தினமும் கூறி "ஒப்றேசன் இதயபூமி" என்ற பெயரில் மண்கிண்டி இராணுவ முகாமை நிர்மூலமாக்கிய வெற்றிக்களிப்புடன் திரிந்த அந்த வீரன் தனக்கென சில குணங்களை தன்னகத்தே கொண்டவன். எமது இயக்கத்தின் பெரும் வளர்ச்சியை உலகுக்கு எடுத்துக்காட்டிய 'ஒப்றேசன் தவளை" என்னும் நடவடிக்கையின் போது வீரச்சாவெய்திய மாவீரர்களுடன் வெற்றியோடு தானும் வீரசுவர்க்கம் அடைந்து கொண்டார். சொல்லாலோ, எழுத்தாலோ வடிக்கமுடியாத அந்த மாவீரர்களில் மணலாற்றில் வீரச்சாவெய்திய சில வீரர்களின் வரலாற்றுக் குறிப்புக்களை தாங்கிவரும் இந்நூலை தொகுத்து புத்தக வடிவாக்கிய ஆசிரியரை வாழ்த்தி, ஊக்கப்படுத்திய இன்னும் பல போராளிகளுடன் கதைத்து ஒவ்வொரு மாவீரர்களினதும் வரலாற்றைத் தொடர்ந்து எழுத முயற்சிக்க வேண்டுமென்று கேட்டு இம் முதல் வரலாற்றுப் பதிப்பை வெளியிட உதவிய அனைவருக்கும் நன்றி கூறுகின்றேன்.

— பாண்டியன்

# என்னுரை

எழுத்துலகுக்கு என்னைத் தூண்டி, என்பேனாவுக்கு வலுவூட்டி, சிந்
தனையை தெளிவாக்கி, நேர்காட்டிய அன்புக்கு வரிவடிவம் கொடுக்க
நினைத்தேன். என்னால் எழுத முடியுமென்று நான் நினைத்ததில்லை.
தான் வாழுகின்ற காலத்தில், தலைவனைக் காத்த மணலாற்றுக் காட்டி
னுக்காய் உயிர்கொடுத்த வீரர்களுக்கு வாழும் வரலாறொன்று எழுத
வேண்டுமென விரும்பி என்பேனாவை இயங்க வைத்தவர் அன்பு. தென்
தமிழீழத்திலிருந்து வந்து மணலாற்று மண்ணுக்காய் உயிர் கொடுத்த வீரர்
களின் நினைவுகள் அவரைப் பெரிதும் பாதித்திருந்தன. அவர்களின் உணர்வு
களை வரலாறாக்க அவரே எனக்கு வழிகாட்டினார். இங்கே வருகின்ற
வரிகளும், உணர்வுகளும் என்னுடைய சிந்தனையல்ல. உயிருடன் இருக்கிற
போராளிகளின் நினைவுகளுமே. கண்முன்னே நின்றுலவி, உணர்வுகளைப்
பகிர்ந்து, கட்டிப்பிடித்து புரண்டு விளையாடி, ஒன்றாகப்படுத்துறங்கி,
ஒரு தட்டில் உணவுண்டு பாதியிலே பிரிந்து பறந்து விட்ட சுதந்திரச் சிட்
டுக்களின் நினைவுகளை என்னுடன் பகிர்ந்து கொண்டார்கள். மனதாலும்
நினைவாலும் எட்ட முடியாத அந்த தியாக நெஞ்சங்களின் உணர்வலை
கள் திரும்பும் திசையெல்லாம் குவிந்து கிடக்கின்றன. நேற்று கண்டு பேசிய
வீரன் இன்றில்லை. இன்று பார்க்கும் வீரனை நாளை காணமுடியாது.
நாளை எங்களுக்காக மரணிக்கப்புறப்பட்டவன் இன்று பேனா பிடித்து
எழுதிக்கொண்டிருக்க விரும்பமாட்டான். விரும்பினாலும் அவனுக்கு நேர

யிருக்காது. ஆகவே, எழுத்துலகம் விழிப்புடன் இருந்து, இருக்கின்ற வீரர்களுடன், பறந்து சென்ற வீரர்களின் நினைவுகளைப்பெற்று கோவையாக்கி விட வேண்டும். அத்தகைய ஒரு பணியின் சிறிய முயற்சியாகவே 'எனது எழுத்து அமைகின்றது.

கடந்த இரண்டு தசாப்தங்களில் எத்தனையோ வீர வரலாறுகள் எம் மண்ணில் நடந்துமுடிந்துவிட்டன. எங்களுக்காக மரணத்தை தழுவிக் கொண்டவர்களும், நாளை எங்களுக்காகவே மரணிக்கப்போகின்றவர்களும் உங்களின் எங்களின் குழந்தைகளே. அவர்களை அணுகினால் உறங்கிக் கிடக்கும் உண்மைகள் வெளிப்படும். எழுதுங்கள் மீண்டும் ஒரு முறை தமிழன் வீரத்தை நிலைநிறுத்தும் எங்கள் தலைவனின் காலத்தில் இவற்றைபடைப் பாக்கி விட வேண்டும். நிஜமான காவியத்தை கை நழுவ விட்டுவிட்டு கற்பனைக்காவியம் எழுதுவதில் பயனில்லை, இன்னுமொரு சந்ததி எம்தவறுக் காக இரத்தம் சிந்தக்கூடாது.

அன்பு என்னை மூன்று மாதங்கள் போராளிகளோடு தங்கவைத்தார். அந்த தொண்ணூறு நாட்களில் கிடைத்தவைகளே இங்கு படைக் கப்படுகின்றது. தான் இருக்கும் போதே இதனைப் படைப்பாக்கி பார்த்துவிட விரும்பினார் தன்னுடைய ஆசையை நிறைவேற்று முன் தமிழ்த்தாய் அவரை தன்னிடம் அழைத்துவிட்டாள் நெஞ்சுடன் கலந்த அவரின் கனவுகளோடு அவர் விரும்பிய கர்ம வீரர்களின் பாதங்களுக்கு சமர்ப்பணமாகும். எனது வரிகளை, எங்கள், தலைவன் படைப்பாக்கி வைப்பார் என்ற நம்பிக் கையுடன் அவர்பாதங்களை மானசீகமாகப் பணிகின்றேன். நினைவுகள் நோக்கி என்பேனா நிழலாடுகின்றது. எதிரிக்கு என்றுமே தலை வணங்காத மணலாற்று மண்ணுக்கு அன்பு கொடுத்த பெயரே " வணங்காத மண் "

- மணலாறு விஜயன் -

# மணலாற்றில்
# புலிகள் - இந்திய யுத்தம்

## செக்மேற் - 01

ஒழுக்கம், கட்டுப்பாடு, உண்மை, வேகம், விவேகம், சுதந்திரப்பற்று, மானம் அனைத்தும் ஒருங்கே பெற்ற எமது தலைவர், காலத்தின் தேவை கருதி மணலாற்றுக் காட்டிற்கு வந்திருந்தார். யாழ்ப்பாணத்தில் போர் தொடங்கிய பின்னர் மணலாற்றுக் காடுகள், தலைவரையும் அவர் வளர்ப்புக்களையும் வரவேற்று நின்றன.

ஒரு இலட்சத்துக்கு மேற்பட்ட இந்தியப் படைகளை எதிர்த்துச் சண்டை செய்ய எம்மிடம் ஆட்பலமோ ஆயுதபலமோ இல்லையென்றாலும், தளராத மனஉறுதி இருந்தது. இந்த மனப் பலத்தினால் இந்தியப் படையினை நிலை கலங்கவைக்க முடியுமென்பதை, எம் தலைவர் உணர்த்தினார். புதிய இடம், திசைதெரியாத காடு; ஆனாலும், தன் புதல்வர்களை மறைத்துக் காத்த பெருமையில் உயர்ந்து நின்றது மணலாறு.

புலித்தலைவனும், அணியும் மணலாற்றுக் காட்டிற்குச் சென்றுவிட்டதை இந்தியப் படை தெரிந்துகொண்டது. மிகவேகத்தில், மணலாற்றுக் காட்டினைச் சுற்றி ஏழு இந்தியப் படை முகாங்கள் - வான்படை இறங்கு தளவசதிகளுடன்- அமைக்கப்பட்டன. சிறப்புக் கட்டளைத் தலைமைத்தளம் நித்திகைக்குளப் பிரதேசத்தில் அமைக்கப்பட்டது. நாற்பதினாயிரத்துக்கு மேற்பட்ட துருப்புக்கள் இம் முகாங்களில் குவிக்கப்பட்டன.

தாக்குதலுக்கான முற்றுகை ஆரம்பமாவதனைத் தலைவர் கணித்துக் கொண்டார். அனைத்து வீரர்களுக்கும் நம்பிக்கைமிக்க யுத்ததந்திர முறைகளைத் தெளிவுபடுத்தினார். ''இக்காடுதான் எங்களின் இறுதித் தளம்; இங்கிருந்து வெளியேறும் எண்ணம் இருக்கக்கூடாது; வாழ்வாயினும் சாவாயினும் இங்குதான் முடிவு எழுதப்படும்'' என்ற உறுதியான முடிவை வீரர்களுக்கு தெளிவுபடுத்தினார். தலைவரின் தாரக மந்திரம் எம்வீரர்களைப் பம்பரமாக்கியது; எந்த வல்லரசையும் எதிர்கொள்ளும் மனவலிமையைக் கொடுத்தது.

1988ஆம் ஆண்டு வைகாசித் திங்களில் யுத்தமேகங்கள் கருக்கொண்டன. மணலாற்றுக் கிராமங்களில் வெளித்தொடர்புகள் துண்டிக்கப்பட்டன. மணலாற்றுக் கிராமங்களையும் காட்டினையும் இருவலயங்களாக இந்தியத் துருப்புக்கள் சுற்றிவளைத்தன. காட்டிற்குள் நுழையும் நோக்கில் வேறோர் படைப்பிரிவு நகர்ந்தது.

எண்ணிக்கையில் எமது வீரர்கள் குறைவாக இருந்தாலும், அளவற்ற மனபலம் அவர்களிடமிருந்தது. அந்தப் பலத்தோடு முற்காப்பு காவலரணில் சண்டையைத் தொடக்கினர். சண்டையின் தொடக்கமே மூர்க்கத்தனமாக இருந்தது. சுதந்திர தாகம் எம் வீரர்களின் நெஞ்சில் ஊறியது. தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் இந்திய ஜவான்கள் பின்வாங்கி ஓடினர்.

மணலாற்றுக் காட்டில் விடுதலைக்கான முதல் உயிர் அர்ப்பணமாகியது. 2ஆம் லெப். ஜீவன், தான் நிலையெடுத்துக் கிடந்த இடத்திலிருந்து சற்றும் பின்வாங்காது - எதிரியை விரட்டிவிட்ட பெருமையில் - கண்மூடிக் கிடந்தான். அன்று மாலை இந்திய வானொலி, ''பருப்பு பொறுக்கி என்ற இடத்தில் புலிகளைத் தேடி அழிக்கும் நடவடிக்கையில், 17 படைவீரர் உயிர்இழந்தனர்; முப்பதுக்கு மேற்பட்டோர் காயமுற்றனர்'' எனச் செய்தி வெளியிட்டது.

23ஆம் திகதி நடைபெற்ற சண்டையில் சற்றுப் பின்வாங்கிய துருப்புக்கள், அந்த இடத்திலேயே நிலையெடுத்துக்கொண்டனர். 24ஆம் திகதி காலை மீண்டும் சண்டை தொடங்கியது. இந்திய வான்படைக் 'கெலிக்கொப்டர்'கள் வானில் சுற்றிப் பறந்தவண்ணமிருந்தன. காட்டிற்குள் பிரவேசிக்க வேண்டுமாயின், 'சந்தனம் சுட்ட பரவை' வெட்டையினைக் கடக்க வேண்டும். காட்டுக் கரையில் நிலையெடுத்துக் கிடந்த குட்டி, நூற்றுக்கு மேற்பட்ட இந்தியத் துருப்புக்களின் முன்னேற்றத்தை, தனது துப்பாக்கியால் தடுத்து நிறுத்தியிருந்தான். வெளியான அந்தப் பிரதேசத்தில் எழுந்து ஓடிவர நினைக்கும் ஒவ்வொரு துருப்பினரும்; குட்டியின் துப்பாக்கிக் குண்டுக்குப் பலியாகினர்.

சண்டை நடக்கும் இடத்துக்கு எமது வீரர்கள் விரைந்தனர். குட்டியின் துப்பாக்கியில் ரவுகள் தீர்ந்துவிட்டன. கடைசி ஒரு ரவை மட்டும் எஞ்சியிருந்

தது. தான் உயிருடன் பிடிபட்டால் விளைவு எந்தளவு பாரதூரமானதாக இருக்குமென்பதை அவன் உணர்வான். இதனால் அந்தக் கடைசி ரவையில் தன் முடிவைத் தீர்மானித்துக்கொண்டான். துப்பாக்கியின் சுடுகுழலைத் தன் தலைக்கு நேரே திருப்பிக்கொண்டான். சிந்தனைக்கு எட்டாத தியாகத்தை அந்தக் கடைசி ரவையினால் எழுதிக்கொண்டான். உதவிக்கு விரைந்த எம் வீரர்கள் வந்தடையும்போது, குட்டி இரத்த வெள்ளத்துள் கிடந்தான். படையினர் பலரை இழந்தநிலையில் இராணுவமும் பின்வாங்கிக்கொண்டது. குட்டியின் முடிவோடு, 'செக்மேற் - *01*' என்ற, காட்டின் முதற் தாக்குதல் முடிவுக்கு வந்தது.

## செக்மேற் - 02

காட்டில் தமது முதல் நடவடிக்கை பற்றியும், அதன் தோல்விக்கான காரணங்கள் பற்றியும் இந்தியப் படைத் தளபதிகள் ஆராய்ந்து கணித்தனர். காட்டில் புலிகள் பலமாக இருப்பதைத் தெளிவாகப் புரிந்துகொண்டனர். இதனால், மேலதிக படைப்பிரிவுகள் மணலாற்றுக்கு வருவிக்கப்பட்டன. அத்துடன், காட்டிற்கும் - கிராமங்களுக்கும் வெளிக்கிராமங்களுக்குமான இணைப்புப் பாதைகளில் போக்குவரத்துக்குத் தடையும் விதிக்கப்பட்டது; சிறிய வீதிகள், சந்துபொந்துகள் அனைத்தும் தடுக்கப்பட்டன. பட்டினி போட்டுப் புலிகளைப் பணியவைக்கலாமென்ற தவறான கணிப்பீட்டையும் அவர்கள் எடுத்திருந்தனர். தமது தடைகளையும் மீறி, மணலாற்றுக் கிராம மக்கள் புலிகளுக்கு உணவுப் பொருட்களைக் கொண்டுசென்று கொடுப்பதாகக் கருதினர். இதனால் மாட்டு வண்டி, சைக்கிள் வண்டிகள் கூட போக்குவரத்துக்குத் தடைசெய்யப்பட்டன. *1* கிலோ அரிசிக்கு மேல் ஒருவர் கொண்டுசெல்வதும் தடைசெய்யப்பட்டது. மணலாற்றுக் கிராமங்களில் இருந்த சிறிய கடைகளில், பொருட்கள் ஒவ்வொரு நாளும் இந்தியப் படையால் கணக்கிடப்பட்டன. பலமாதங்களாக இத்தடைகள் இறுக்கமாக மேற்கொள்ளப்பட்டன.

*1989*ஆம் ஆண்டு பங்குனித் திங்களில், இரண்டாவது முற்றுகை ஆரம்பமானது. இம்முற்றுகைக்கு முந்திய இடைக்காலத்தில், குமுழமுனை கொட்டுக்கிணற்றுப் பிள்ளையார் கோயில் மலையில் இருந்த படை முகாமிலிருந்து, காட்டின்மீது தொடர்ச்சியான 'ஆட்லறி'வீச்சு இடம்பெற்றது. பெரும் யுத்த முனைகளில் வீசப்பட்டதுபோல், மணித்தியாலமொன்றிற்கு *260* இற்கு மேற்பட்ட 'ஆட்லறி' எறிகணைகள் வீசப்பட்டன. இந்திய விமானப்படை 'கெலிக்கொப்டர்'கள், *250* கிலோ எடைகொண்ட குண்டுகளை நாள் தப்பாது வீசின. இவற்றினைத் தொடர்ந்து காட்டின் வெளியே - சுற்றிவர - பல ஆயிரக்கணக்கான படைகள் சங்கிலித் தொடராய் நிலையெடுத்துக்கொண்டன. காட்டினைச் சூழ்ந்த கிராமங்களிலும் இத்தகைய முறையில் படைகள் நிலையெடுத்துக் கிடந்தன.

பங்குனித் திங்கள் 2ஆம் நாள், காடுநோக்கித் துருப்புக்கள் நகரத் தொடங்கின. காட்டிலிருந்து உணவுப் பொருட்களைச் சுமந்துசெல்ல ஆற்றங்கரைக்குவரும் எமது வீரர்கள், அன்று வருவதற்குச் சற்றுத் தாமதமாகியிருந்

னர். மாலை ஐந்து முப்பது மணியளவில், ஆற்றங்கரையின் மறுபுறத்தில், நீண்ட வரிசையில் படைகள் நகர்வதை, காட்டுக்கரையில் அமைந்திருந்த முற்காப்பு அரணில் நின்று எம்வீரர்கள் அவதானிக்க முடிந்தது. மெதுவாக இருள் சூழும் நேரம், உணவுப் பொருட்களைச் சுமக்கச் சென்ற எமது அணியுடன் சண்டை ஆரம்பமாகியது. எதிர்பார்த்த இடத்துக்கு முன்பாகவே சண்டை தொடங்கியதால், இந்தியத் துருப்புக்கள் சிதறி ஓடின; இவ்வாறு சிதறிய படையினரை ஒன்றிணைப்பதில் இந்தியப் படைத் தளபதிகள் சிரமத்துக்குள்ளாயினர். இதனால், அன்று இரவு முழுவதும் வெளிச்சக் குண்டுகளை வானத்தில் வீசி, தாம் நிற்கும் இடங்களைக் காட்டவேண்டியதாயிற்று.

ஒன்றன்பின் ஒன்றாக வந்த தமது 'ஆட்லறி' எறிகணைகளுக்கு, தாமே தப்பித்துக்கொள்ள வேண்டிய அவசியமேற்பட்டது. தொடர்பு சாதனங்கள் தொடர்பற்றுப் போனதால், இரவிரவாக எங்கும் அவர்களின் குரலாகவேயிருந்தது. விடியுமுன் எப்படியோ ஒன்றுசேர்ந்தனர். மேலும் சில படைப் பிரிவுகள் உதவிக்கு வந்ததால், புதிய சண்டை ஆரம்பமாயிற்று. பகல் முழுவதும் சண்டை நடைபெற்றும் காட்டிற்குள் பிரவேசிக்கும் முயற்சி கைகூடாமையினால், 'செக்மேற் - 02' என்ற தமது இரண்டாவது நடவடிக்கையினை முடித்துக் கொண்டனர். ஆனால் 'ஆட்லறி' வீச்சும், வான்தாக்குதலும் நிறுத்தப்படவேயில்லை. நாற்பதுக்கு மேற்பட்ட துருப்புக்களை இந்த நடவடிக்கையில் இந்தியப் படை இழந்தமை குறிப்பிடத்தக்கதாகும்.

## செக்மேற் - 03

பெரும் எண்ணிக்கையில் தமது துருப்புக்கள் பலியாகியமை இந்தியத் தளபதிகளுக்குச் சினத்தை ஊட்டியது. இதனால், மிகவிரைவாக தமது அடுத்த கட்ட நடவடிக்கைக்குத் திட்டமிட்டனர். மணலாற்று படைத்தளங்களிலிருந்த துருப்புக்கள் மாற்றப்பட்டு, 'குர்க்காஸ்' படையினர் வருவிக்கப்பட்டனர். இவர்கள், ''எடுத்த கத்தியை ரத்தம் காணாது உறையில் இடாத குர்க்காஸ் படையினர்'' என்ற புகழ்பெற்றவர்கள்.

பங்குனித் திங்கள் 22 ஆம் நாள் கேணல் பஸ்கி தலைமையில், குர்க்காஸ் படைப்பிரிவு தாக்குதலில் இறங்கியது. வரிந்து கட்டிக்கொண்டு வந்த வேகத்தில் காட்டில் புகுந்தனர்; அதேவேகத்தில் வாங்கிக் கட்டினர். இறந்த வீரர்களைப் புதைக்க நேரமின்றி விழுந்த துப்பாக்கிகளையும், எறிந்த கத்திகளையும் எடுக்க மறந்து, கால்போன போக்கில் திசைமாறி ஓடினர். ஓடிய திசையெல்லாம் மிதிவெடிகள் வெடித்தன. பிடித்த மரம் எல்லாம் வெடித்துப் பிளந்தது; படுத்த புற்றெல்லாம் நெஞ்சை சிதைத்தது. எங்கு போகிறோம் என்பதை மறந்து ஓடியது குர்க்காஸ் படை.

கேணல் பஸ்கியையும் பறிகொடுத்து, நாற்பதுக்கு மேற்பட்ட கத்திகளையும் பறிகொடுத்து, இறந்த தம் சகாக்களை ஒரு அடி ஆழத்தில்கூட கிண்டிப் புதைக்க நேரமின்றி, பத்துப் பன்னிரண்டு சிப்பாய்கள் மட்டுமே தப்பியோடினர். பஸ்கியின் உடலையும் ஒன்பது சிப்பாய்களின் உடலையும் எமது வீரர்கள், இராணுவ மரியாதையுடன் அடக்கம்செய்தனர், இன்னும் அந்த இடத்தில், அழியாத சுவடுகள் சில இருப்பதைக் கண்டுகொள்ள முடியும்.

# ஒப்பரேசன் பாஸ்

'குளிக்கப் போய் முகத்தில் சேறு பூசிய கதையாய்' முடிந்த 'செக்மேற் - 03' நடவடிக்கையால் குழம்பிய இந்தியத் தளபதிகள், மாற்று நடவடிக்கை பற்றிச் சிந்தித்தனர். குர்க்காஸ் படைப்பிரிவுகள் மாற்றப்பட்டு, பராமிலிற்றரி படைகள் கொண்டுவந்து இறக்கப்பட்டன. ''கறுப்புப் பட்டிக்காரர் பொல்லாதவர்கள்'' என்று மக்கள் பேசிக் கொள்ளுமளவிற்கு, அட்டூழியங்கள் புரிந்த படையினர் இவர்கள். வந்தவர் காட்டையும் கிராமங்களையும் சுற்றிக் கிடந்தனர். காட்டிற்குள் புகும் சிந்தனையின்றியே திரும்பினர். ஏன் வந்தோம், என்ன சாதித்தோம், ஏன் திரும்பினோம் என்பது புரியாமலே 'ஒப்பரேசன் பாஸ்' முடிந்தது.

# ஒப்பரேசன் புயல்

பராத் துருப்புக்குத் துணையாக 'மட்றாஸ் படைப்பிரிவுகள்' புதிதாக வந்திறங்கின. சீக்கியப் படை, குர்க்காஸ் படை, பராப் படை, மட்றாஸ் படை என ஒவ்வொரு படைப்பிரிவையும் மணலாற்றுக் காட்டில் இந்தியா இறக்கியது. காட்டனுபவங்களை, பட்டவர்களிடம் கேட்டுப் பெற்ற மட்றாஸ் படைப்பிரிவு நடவடிக்கையைத் தொடங்கியது.

புத்திசாலிகள். காட்டிற்குள் புகும் எண்ணம் சிறிதும் இல்லாமலே, காட்டுக்கு வெளியே இருவாரங்களாகப் பதுங்கிக் கிடந்தனர். வான்தாக்குதலும், 'ஆட்லறி' வீச்சும் புயல் வேகத்தில் நிகழ்ந்தன; இயலாமையின் இறுதி வடிவம்.

''காட்டில் புலிகள் அழிக்கப்பட்டுவிட்டனர். பிரபாகரன் இறந்திருக்கலாம் அல்லது தப்பி ஓடியிருக்கலாம்'' என இந்திய வானொலி அறிவித்தது. இந்தியத் துருப்புக்களின் தேடி அழிக்கும் பணி முடிவுற்றதை இச்செய்தி எடுத்துக்காட்டியது. தன் சிறகால் தன் புதல்வர்களை மூடிக் காத்த வனமகள், அந்நியனைப் பார்த்து மெல்ல நகைத்தாள்! □

# முளையில் கிள்ளப்பட்ட 'ஒப்பரேசன் ஹயசேன'

இந்தியப் படைகள் எம் மண்ணைவிட்டு அகன்ற பின்னர், மீண்டும் சிங்களப் படைகளுடன் போர்மூண்டது.

புல்மோட்டையில் படைகளும் படைக்கலங்களும் கொண்டுவந்து குவிக்கப்பட்டுக்கொண்டிருந்தன. மணலாற்றுக் காட்டில் மிகப்பெரும் நடவடிக்கை ஒன்றினை மேற்கொள்வதற்காய், பலமாதங்களாகத் திரட்டிய பலம் இது. மிக ஆறுதலாகத் திட்டமிட்டுச் சேர்க்கப்பட்ட படைபலம். ஆனால் அவசரமாக-மிகவிரைவில் - இப்பலம் குழம்பிப் போகுமென சிங்கள அரசோ, இராணுவத் தலைமைகளோ சிறிதுகூட எண்ணிப் பார்த்திருக்கா.

ஆனையிறவு படைமுகாமிலுள்ள தனது வீரர்களைக் காப்பாற்ற வேண்டிய ஒரு நெருக்கடிநிலை ஏற்பட்டது. உலகம் முழுவதுமே இச்சமரினை உன்னிப்பாகக் கவனித்துக்கொண்டிருந்தது. வெற்றி என்பதை விட, தன் சுய கௌரவத்தையாவது தக்கவைத்துக்கொள்ள வேண்டுமென்ற முடிவுக்கு சிங்கள அரசு வந்தது. இரவோடிரவாக புல்மோட்டையில் குவிக்கப்பட்ட படைப்பிரிவுகள், வெற்றிலைக்கேணியில் கொண்டுசென்று இறக்கப்பட்டன. நவீன படைக்கலன்கள் அனைத்துமே அங்கு கொண்டுசெல்லப்பட்டன.

மணலாற்று நடவடிக்கையை திட்டமிட்டபடி நடத்தமுடியாது, அரசு குழம்பிநின்றது. ஆகக் குறைந்தது மணலாற்றிலிருந்து ஆனையிறவுக்கு உதவி கிடைப்பதையாவது தடுக்க வேண்டுமென்ற நிலைக்கு, அரசும் இராணுவத் தலைமையும் தள்ளப்பட்டன. அதன் வடிவம்தான் மணலாற்றில் மேற்கொள்ளப்பட்ட ஹயசேன -01 என்ற இராணுவ நடவடிக்கை.

1991ஆம் ஆண்டு ஆடித்திங்கள் 15ஆம் நாள், புல்மோட்டையில் எஞ்சி நின்ற சிப்பாய்களைப் பொறுக்கி எடுத்துக்கொண்டு - மணலாற்று படை முகாங்களில் முடங்கிக்கிடந்த இராணுவத்தையும் திரட்டிக்கொண்டு-காட்டிற்குள் நுழைய முற்பட்டனர். இத்தகைய எத்தனிப்பு நடக்குமென்பதை எம்வீரர்கள் முற்கூட்டியே அறிந்திருந்தனர். இதனால் ஆனையிறவுக்கு பல அணிகள் புறப்பட்டிருந்தபோதும், பொறுப்பு மிக்க அனுபவமுள்ள சில அணிகள் காட்டின் பாதுகாப்பிற்காய் நிறுத்தப்பட்டிருந்தன. எதிர்ப்பு எதுவுமே இருக்காதென எண்ணி ஆயிரத்துக்கு மேற்பட்ட இராணுவம் காட்டிற்குள் நுழைந்தது.

காட்டின் மகத்துவம் புரியாத படையினர் செம்மையாக வாங்கிக் கட்டினர். தப்பினால் பெரும் புண்ணியம் என்ற நிலையில், 'ஹயசேன - 01' ஒப்பரேசனை வெற்றிகரமாக முடித்துக்கொண்டதாக சிங்கள வானொலி அறிவித்தது.

## ஹயசேன - 02

1991 ஆம் ஆண்டு ஆடித்திங்கள் 16ஆம் நாள், சிதறி ஓடிய படைகள் ஒன்றுசேர்க்கப்பட்டன. இராணுவத் தலைமை, காட்டு நடவடிக்கையைத் தொடருமாறு படைகளுக்குக் கட்டளை பிறப்பித்தது. வேறுவழியில்லை, மாற்றுத் திசையில் நுழைந்து பார்ப்போம் என்று இராணுவத்தினர் கருதியிருக்க வேண்டும்.

''இழந்ததை மீட்கவேண்டும்; இருப்பதை இழக்கக்கூடாது; விடுதலைப் போரின் உயிர்காத்த மண்; உயிரைவிட இந்த மண் மேலானது'' என்ற உறுதி, எம்வீரர்களிடம் உறைந்து கிடந்தது. மணலாற்றுக் காட்டினுள் பிரவேசிக்க சிங்களப் படை முயற்சிப்பதை அறிந்த சிறப்புத் தளபதி, இரவோடிரவாக ஆனையிறவு களத்திலிருந்து மணலாற்றுக்குத் திரும்பினார். இந்த மண்ணில் பிறந்தவர்களை விட, இந்த மண்ணை நேசித்த தளபதி வீமன் சண்டைமுனையில் நின்றான்.

சண்டை கடுமையாக நடந்துகொண்டிருந்தது. சண்டையின் பாதியில், தனது 'வோக்கிரோக்கி'யில் சிறப்புத் தளபதியின் குரல் ஒலிப்பதைக் கேட்டான் வீமன். புதிய உத்வேகம்......சண்டையில் மூர்க்கத்தனம்.... பீதிகொண்ட சிங்களப் படை அலறியடித்துக்கொண்டு ஓடியது. ஓடினால் தப்பலாமென்ற பாடத்தை முதல்நாளே கற்றுக்கொண்ட படையல்லவா! வந்தவேகத்திலேயே திரும்பி ஓடினர். அன்று மாலை, ''மணலாற்றில் ஹயசேன - 2 நடவடிக்கையினை படையினர் வெற்றிகரமாக முடித்துக்கொண்டனர்'' என, இலங்கை வானொலி கூக்குரலிட்டது. காட்டிற்குள் புகும் சிந்தனையை முளையிலேயே

கிள்ளி எறிந்தனர், எம்வீரர்கள். காலமுணர்ந்து செயற்பட்டு, இருநாளில் இரு இராணுவ நடவடிக்கையினையும் முறியடித்த பெருமையில், தளபதி வீமன் உட்பட இருபத்தைந்து புலிகள் சிலையாகினர்.

## ஹயசேன - 03

மணலாற்றுக் காட்டில் எந்த முனையிலாவது ஒரு வெற்றியைத் தேடி விட வேண்டுமென, சிங்களப் படைத் தளபதிகள் முனைப்புடன் செயற்பட்டனர். காட்டுச் சண்டைக்கென வெளிநாடுகள் சென்று சிறப்புப் பயிற்சி பெற்ற கேணல். கெட்டியாராய்ச்சிதான், பயிற்சியின் திறமையை நிலைநிறுத்திக் காட்ட முழுவீச்சில் படைநடத்தினார். ஆனையிறவுச் சமர் முடியும்வரை மணலாற்று நடவடிக்கையினைத் தொடர்ச்சியாக மேற்கொள்ளும்படி, இராணுவத் தலைமையின் நெருக்குதலுமிருந்தது. இத்தகைய நெருக்கடி நிலையில், ஹயசேன - 03 என்ற தமது அடுத்த நடவடிக்கையினையும் நித்திகைக்குளப் பிரதேசத்தில் இருந்து படையினர் தொடக்கினர்.

ஆனையிறவுச் சமருக்குச் சென்ற எமது அதிரடி அணியொன்று, மணலாறு திரும்பியிருந்தது. இராணுவத்தினரை மடக்கித் தாக்குதல் நடத்தி, அவர்களின் உடல்களையும் கைப்பற்றிவிட வேண்டுமென்பதில் எம் வீரர்கள் உறுதியாக இருந்தனர். 1992 ஆம் ஆண்டு புரட்டாதித் திங்கள் 17 ஆம் நாள், கேணல். கெட்டியாராய்ச்சி தலைமையில் நுழைந்த படை மீது, எம் தாக்குதல் பலமாகத் தொடங்கியது. சிறப்புத் தளபதி தாக்குதல் களத்தில் நின்றதால், எமது வீரர்கள் நெஞ்சில் அளவற்ற நம்பிக்கை பிறந்திருந்தது; படையினர் நிலைகுலைந்தனர். முதல் நாளில் கடைப்பிடித்த தந்திரத்தையே இதிலும் கடைப்பிடித்தனர். எமது வீரர்களின் துப்பாக்கிக் குண்டொன்று கெட்டியாராச்சியின் கண்ணைத் துளைத்துச் சென்றது; காட்டுச் சிறப்புப் பயிற்சியை வெளி நாட்டில் பெற்றும், கண்ணை இழந்த நிலையில் தப்பி ஓட வேண்டி ஏற்பட்டது ! திரும்பி ஓடிய இராணுவத்தை எம்வீரர்கள் கலைத்துக் கலைத்துச் சுட்டனர். ''தலை போகவேண்டியது கண்ணோடு போய்விட்டது'' என்ற நிலையில், மூன்றாவது நடவடிக்கையினை முடித்துக்கொண்டனர்.

கேணல். கெட்டியாராய்ச்சியின் உயிரைக் காப்பாற்றிய அரசு அவரின் மூளையைக் காப்பாற்ற தவறியதை, சிங்கள வெகுசன தொடர்பு சாதனங்களே வெளியிட்டன. மணலாற்று நடவடிக்கைக்காக வெளிநாட்டில் சிறப்புப் பயிற்சி பெற்று வந்த கேணல். கெட்டியாராய்ச்சி, மூளைக்கோளாறு ஏற்பட்ட நிலையில் வைத்தியசாலையில் அனுமதிக்கப்பட்டுள்ளதாக அச்செய்தி கூறியது. □

# ஒப்பரேசன் மின்னல்
## (இலங்கையரசின் ஒரு தப்புக் கணக்கு)

மணலாற்றுக் காட்டில் விடுதலைப் புலிகளுக் கெதிராக மேற்கொள்ளப் பட்ட, சிங்களப் படைகளின் சிக்கறுப்பு நடவடிக்கைதான் ஒப்பரேசன் *மின்னல்*. ஆவணித் திங்கள் 29ஆம் நாள் தொடங்கி, புரட்டாதித் திங்கள் 26 ஆம் நாள் வரை 'மின்னல்' நீடித்து மின்னியது. மின்னலின் முடிவுகள் வெளியுல குக்குப் புலனாகாமலே முடிந்து போயின.

''ஆனையிறவில் மேற்கொண்ட 'பலவேகய' நடவடிக்கையினை விட பல மடங்கு பெரியது மின்னல் தாக்குதல்'' என, சிங்களப் படைகளின் தளபதிக ளால் பறைசாற்றப்பட்டது. ஆனால் இக்காலப்பகுதியில், இலங்கை நாடாளு மன்றத்தில் நிலவிய அரசியல் குழப்பநிலை, இந்த இராணுவ நடவடிக்கை யின் சுதந்திரத்தையும் இராணுவத்திற்கேற்பட்ட படுதோல்வியையும் வெளியுல குக்கு எடுத்துக்காட்டச் சாதகமில்லாது போயிற்று. வெளியுலகு மட்டும் அன்றி, தமிழீழ மக்களும் இதுபற்றி முழுமையாக அறியவில்லை.

அபாயங்களைத் துணிச்சலோடு எதிர்கொண்டு, விடுதலையின் எல்லையை நெருங்கி நிற்கும் எம் வீரர்களைப் பொறுத்தவரை, இது வித்தியாசமான சண்டையாகவோ வியப்பூட்டும் சண்டையாகவோ இருக்கவில்லை. ஆனாலும்,

எமது வீரர்களின் சாதனைகள், இழப்புக்களின் வேதனைகள், அவர்கள் பட்ட இன்னல்கள், இவற்றுக்கு மேலாக சிங்களப் படைகளின் இயலாமை, இயலாமையின் வெளிப்பாடுகள், இழப்புக்கள், இதனால் சிங்கள அரசு எதிர்கொண்ட சிக்கல்கள் எதனையுமே தமிழீழ மக்களும் வெளியுலகமும் அறியத் தவறிவிட்டனர்.

இச் சண்டையில் பங்கெடுத்து காடுகாத்த வீரர்கள் பலர், இன்று எம் கண்முன் இல்லை. நெஞ்சிலும் மண்ணிலும் அவர்கள் பதித்த நிகழ்வுகள், அந்த நிகழ்வுகளின் ஆழம் இங்கு எழுத்துருவம் பெறுகின்றன. நினைவாலயமாய் நிமிர்ந்து நிற்கும் அத்தியாகிகளின் உள்ள உணர்வுகளைத் தாங்கி வரும் உண்மை வரிகளின் வரலாறு இது.

## தாக்குதலுக்கான பின்புலங்கள்

இந்திய இராணுவ நடவடிக்கைகள் எம் வீரர்களுக்கெதிராகத் திரும்பிய போது, விடுதலைப் பணியின் காலத்தேவை கருதி, எம் தலைவர் மணலாற்றுக் காட்டில் பாதுகாப்புப் பாசறைகளை அமைத்துக்கொண்டார். இருந்த இடத்தில், வந்த எதிரியை ஆயுதரீதியாகவும் மன ரீதியாகவும் நிலைகுலைய வைத்த தாக்குதல்கள் நடாத்தப்பட்டன. உலகில் பலம்பொருந்திய இராணுவங்களில் இந்தியாவும் ஒன்று என்ற நிலை தெரிந்தும், அந்த அபாயத்தைத் துணிச்சலோடு எதிர்கொண்டு வெற்றிகண்ட தளம் மணலாற்றுக் காடு.

புதிய பல தாக்குதலணிகள் பயிற்சிபெற்று, அலையலையாய் களமுனைக்குச் செல்ல வித்திட்ட தளம் மணலாறு. மாவீரர் நினைவாலயங்கள் தோன்ற வழியமைக்கும் வகையில், சின்னஜீவனின் முதல் நினைவாலயம் மணலாற்றுக் காட்டில்தான் உதயமாகியது. எம் வீரர்களின் மன உறுதிக்கும், வேகத்துக்கும், பாசறைகளின் பலத்துக்கும், உந்துசக்தியாய் அமைந்தவை இந்த நினைவாலயங்கள். இந்தவகையிலும் மணலாறு தமிழீழ வரலாறோடு இணைந்துகொண்டது.

தமிழீழத்தின் வடபகுதியையும், தென்பகுதியையும் இணைக்கும் பாலம் மணலாறு. கடலும், கடல்சார்ந்த வளத்தைப் பெருமளவில் அள்ளிக் கொடுக்கும் வளநிலம் மணலாறு. வயலும் விளைநிலமும், நிறைய நீர்வளத்தை அள்ளிக் கொடுக்கும் தண்ணிமுறிப்புக் குளமும், நித்திகைக்குளமும் இங்கு தானுண்டு.

இந்திய இராணுவம் வெளியேறிய பின் புலிகள் - இலங்கை அரசு பேச்சுவார்த்தையும் முறிந்துபோனது; 'இரண்டாவது ஈழப்போர்' தொடங்கியது. கொக்காவில், மாங்குளம், கோட்டை என ஒன்றன் பின் ஒன்றாக படைமுகாம்களை எம்மிடம் பறிகொடுத்தனர். மணலாற்றுக் காட்டிலும் படிப்படியான அதிரடித் தாக்குதல்கள் நடைபெற்றன. இராணுவத்துக்கு மிகப் பெரும் இழப்புக்களை எம் வீரர்கள் தொடர்ச்சியாக ஏற்படுத்திக்கொண்டிருந்ததால், ஈழத்தைத் துண்டாடும் இலங்கையரசின் முயற்சி தடுக்கப்பட்டது.

புதிய சிங்களக் குடியேற்றங்களை அண்மித்ததாக எமது எல்லைப்புறக் காப்பரண்கள் அமைக்கப்பட்டன. இக் காப்பரண்களிலிருந்து தொடுக்கப்பட்ட

தொடர்ச்சியான தாக்குதல்கள், சிங்களக் குடியேற்றவாசிகளின் மனங்களில் பீதியையும், அரசின் பாதுகாப்பில் நம்பிக்கையின்மையினையும் ஏற்படுத்தியது. சிங்கள அரசின் திட்டங்களுக்கு இதுவும் ஒரு பெரும் தலையிடியாயிற்று.

தமிழீழத்தில் அமைந்துள்ள தங்கள் படைமுகாம்களை அழிப்பதற்குத் தேவையான ஆள், அணி, அம்புகள் யாவும் மணலாற்றுக் காட்டில் இருந்து தான் புலிகளுக்குக் கிடைப்பதாக அரசு கருதியது.

விடுதலைப் புலிகளின் தலைவர் மணலாற்றுக் காட்டிலிருந்து தான், தாக்குதல்களுக்கான திட்டங்களை வகுக்கின்றார் என்றும் அரசு உறுதியாகக் கருதியது. தொடர்ச்சியான நீண்ட இக்காரணங்களைக் கொண்டும், இப்பிரதே சத்தின் கேந்திர முக்கியத்துவத்தைக் கவனத்தில் கொண்டும் தமிழீழத்தைத் துண்டாடும் முயற்சியில் சிங்கள அரசு முனைப்புடன் செயற்படத் தொடங்கி யது. மணலாற்றை தடைப் பிரதேசமாக்கி, தமிழ் மக்களைக் கட்டாயமாக வெளியேற்றிவிட்டு, இராணுவ முகாம்களின் உதவியோடு சிங்களக் குடியேற் றங்களை மேற்கொண்டது. சிங்கள மக்கள் குடியேற்றம் என்று இதனைச் சொல்வதை விட, இராணுவக் குடியேற்றமென்று சொல்வதே பொருத்தமா னது. மணலாற்றுக் காட்டின் மேற்குப்புறக் கரையோரமாக நீள்பிறை வடிவில மைந்த தொடர்ச்சியான குடியேற்றமும், ஒருமைல் இடைவெளி கொண்ட இராணுவப் படைமுகாம்களும் அமைக்கப்பட்டன. கொக்கிளாய்க் கரையோரக் கிராமத்தைக் தொடும்வகையில், இது அமைக்கப்பட்டது.

தனது முயற்சிகள், திட்டங்கள் அனைத்தும் பயனற்றுப்போகும் விதத் தில் எமது தாக்குதல்கள் அமைந்தபோது, மணலாற்றுக் காட்டில் மிகப் பெரும் இராணுவ நடவடிக்கை ஒன்றினை மேற்கொள்ள வேண்டுமென்ற முடிவுக்கு அரசு வந்தது. ஆனால், அரசியல் தலைவர்களின் மனங்களில், இது சாத்திய மற்ற - வெற்றி பெறமுடியாத - ஒரு முயற்சி என்பது தெரிந்திருந்தது.

இந்தியத் துருப்புக்கள் பெற்ற இழப்புக்களும் துன்பங்களும் அவர்கள் கருத்தில் வெளிப்பட்டன. அத்துடன் புலிகளின் மனோபலம், ஆயுதபலம், ஆட் பலம் அனைத்துமே இப்போது பலமடங்கு பெருகிவிட்டது என்ற உண்மையும் தெரிந்திருந்தது. ஆனால், இதனை வெளிக்காட்ட முடியாத சுயகௌரவப் பிரச்சினை ஒன்று அவர்களுக்கிருந்தது. இதன் விளைவாக வடக்கு, கிழக்கு இராணுவ நடவடிக்கையின் சகல பொறுப்புக்களையும் கூட்டுப்படைத் தலை மையகத்திடம் அரசு ஒப்படைத்தது.

மணலாற்றுக் காட்டில் மேற்கொள்ள இருக்கும் நடவடிக்கைக்கான இராணுவ நுட்பத்தையும், புதிய இராணுவ தளபாடங்களையும் வெளிநாடு களிலிருந்து அரசு பெறத்தொடங்கியது. இராணுவத்துக்கான ஆட்சேர்ப்பும் நடைபெற்றுக்கொண்டிருந்தது. இத்தகைய அணிதிரட்டும் நடவடிக்கை நடை பெற்றுக்கொண்டிருக்கும்போதுதான், எமது வீரர்களின் தாக்குதல்வீச்சு ஆனை யிறவு முகாமில் இறுக்கப்பட்டது. இது இராணுவ நடவடிக்கைத் தலைமை யகத்தில் பெரும் குழப்பத்தை ஏற்படுத்தியது. திரட்டியபடையின் பலத்தை ஆனையிறவு நோக்கி நகர்த்தவேண்டிய அவசரமும் அரசுக்கு ஏற்பட்டது; 'ஒப்பரேசன் பலவேகய' என்ற பெயருடன் அது செயலுருவம் பெற்றது.

ஆனையிறவுப் போர் தமக்குப் பெரும் வெற்றியென இராணுவத் தலைமைப்பீடமும் அரசும் நம்பியது. தமது சிப்பாய்களின் இழப்புக்களையும்,

மனப்பீதியையும் கருத்திற்கொள்ளத் தவறியது. இதற்கு மேலாக புலிகளின் கள அனுபவத்தையோ, மனோபல அதிகரிப்பையோ, அலையலையாய் அதிகரித்த ஆட்பலத்தையோ, ஆயுதபலநிலையினையோ சரியாகக் கணிப்பிடத் தவறிவிட்டது.

'பலவேகய' நடவடிக்கையைத் தொடர்ந்து, இராணுவ பலத்தை ஒன்றிணைக்கும் முயற்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஆனையிறவில் அழிந்த சிப்பாய்களின் எண்ணிக்கையை சிங்கள மக்களுக்கு மூடிமறைக்கும் புயல்வேக பிரச்சாரங்கள் நடைபெற்றன. இராணுவ சிப்பாய்களுக்கு துணிவு கொடுக்கும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. ஊக்குவிப்பு நிதிவழங்கல், இறந்த சிப்பாய்களின் குடும்பங்களுக்கு வீடுகட்டிக் கொடுத்தல், சிலை எழுப்புதல் போன்ற முயற்சிகளில் அரசு இறங்கியது.

உலகில் புதிதாக கண்டுபிடிக்கப்பட்ட 'ஆர். சி. எல்' பின்னுதைப்பற்ற பீரங்கிகள் போன்ற சுடுகலன்களைக் கொள்வனவு செய்தது; இராணுவச்செலவு அதிகரிக்கப்பட்டது.

இக்காலப் பகுதியில் இலங்கை அரசின் நாடாளுமன்றத்தில் குழப்பங்கள் உருவாகின. முக்கியமாக தமது படைகளின் பலவீனம், புலிகளின் பலம், புலிகளின் பலத்துக்கான காரணம், மறைக்கப்பட்ட இராணுவ ரகசியங்கள், உயிரிழந்த இராணுவத்தினரின் எண்ணிக்கை, படையைவிட்டு ஓடிய சிப்பாய்களின் எண்ணிக்கை எல்லாம் இக் குழப்பத்தில் அம்பலமாகின. இதனை வைத்து ஆளும் கட்சிகளுக்குள்ளேயே கருத்து முரண்பாடுகளும், பிளவுகளும் ஏற்பட்டன. அரசியலில் ஏற்பட்ட கருத்து முரண்பாடுகளும் குழப்பமும் பிளவும் இராணுவத்திற்குள் ஏற்பட்டுவிடாமலிருப்பதற்காக, பிரேமதாசா அரசு தனது நம்பிக்கைக்குரிய இராணுவத் தளபதிகளின் பொறுப்பில், மணலாற்றில் 'ஒப்பரேசன் மின்னல்' என்ற நடவடிக்கையைத் தொடங்கியது.

## மின்னல் களம்

நித்திகைக்குளப் பிரதேசத்திலிருந்து தனது படை நகர்த்தலை இராணுவம் தொடங்கியது. சிங்கள மக்களுக்குத் துணிவூட்டும் பல கருத்துக்களை அரசின் வெகுசன தொடர்புசாதனங்கள் தொடர்ச்சியாக வெளியிடத் தொடங்கின.

'' ஆனையிறவுச் சமரில் புலிகள் பலர் காயப்படுத்தப்பட்டோ கொல்லப்பட்டோ விட்டனர். ஆயுதத் தட்டுப்பாடு புலிகளிடம் நிலவுகிறது. மணலாற்றுக் காட்டில் ஐநூறு புலிகள் ஒளித்திருக்கின்றார்கள்; அவர்களையும் அழித்துவிட்டால் வடக்கு கிழக்கில் - சிவில் நிர்வாகம் ஏற்பட்டுவிடும். பத்து இந்திய இராணுவ வீரர்களின் பலத்துக்கு எமது ஒரு இராணுவ வீரனின் பலம் சமமாகும். இந்திய இராணுவத்தால் சாதிக்க முடியாததை எமது வீரர்கள் சாதிக்கப் போகிறார்கள் '' என்ற துணிவூட்டும் கருத்துக்களை, இராணுவத் தலைமைப் பீடங்களும் சிங்கள அரசின் வெகுசன தொடர்புசாதனங்களும் அள்ளி வீசின.

தாக்குதலுக்காக இறக்கப்பட்ட சிங்களப் படைக்கு பிரிகேடியர் ஜானக பெரேரா தலைமை தாங்கினார். கேணல் சரத் பொன்சேகா உதவிக் கொமாண்

டராக நியமிக்கப்பட்டார். இரு விசேட கொமாண்டோ பட்டாலியனை லெப். கேணல். பெர்னாண்டோவும் நான்கு காலாட்படைப் பிரிவுகளைக் கொண்ட விசேட படைப்பிரிவை மேஜர். ஜயவி பெர்னாண்டோவும், சிங்கப் படைப்பிரி வின் முதலாவது பட்டாலியனை லெப். கேணல். பராக்கிரம பன்னிப்பிட்டியும், சிங்கப் படைப்பிரிவின் நான்காவது பட்டாலியனை லெப். கேணல். சுசந்தா மெண்டிசிங்கும், கெமுனு படைப்பிரிவின் ஐந்தாவது பட்டாலியனை லெப். கேணல். ஜெயம்பதி விஜயரத்னாவும், கஜபாகு படைப்பிரிவின் நான்காவது பட்டாலியனை மேஜர். றோகான் சில்வாவும், 'ஆட்லறி' 120. எம். எம். தூரக் குண்டுவீச்சு, 81. எம். எம். களக் குண்டுவீச்சு, ஆகிய குண்டுவீச்சுக்களை மேஜர். அந்துல ஜயவர்த்தனாவும் வழிநடத்தினார்கள்.

ஆவணித் திங்கள் 29 ஆம் நாள், மணலாற்றுக் காட்டினைச் சூழ்ந்திருந்த கிராமங்களில் 'வை. 12', 'வை. 8', 'சியா மாசெற்றி 2608' விமானங்கள் பாடசாலைகளையும், அரச மருத்துவமனைகளையும், ஆலயங்களையும் குண்டு வீசி அழித்தன.

தமிழ் மக்களின் வளர்ச்சி மையங்களை அழிப்பதோடு தொடங்கிய 'மின்னல்', தொடர்ச்சியாக புரட்டாதித் திங்கள் 26 ஆம் நாள்வரை நீடித்தது. ஏறக்குறைய 16,000 ச. யார் பரப்புக்கொண்ட மணலாற்றுக் காட்டில், 50 சதுரயாருக்கு ஒரு எரிகுண்டு என்ற அடிப்படையில் விமானங்கள் குண்டுகளை வீசின.

நாளொன்றுக்கு காட்டில் வீசப்பட்ட குண்டுகளின் அண்ணளவான எண்ணிக்கை இங்கே தரப்படுகின்றது.

'வை. 12' விமானம், 100 கிலோ எடைகொண்ட 40 குண்டுகளை வீசியது.

'வை. 8' விமானம், 150 கிலோ எடைகொண்ட 20 குண்டுகளை வீசியது.

'சியா மாசெற்றி 2608', 'எஸ்' விமானங்கள், 55 கிலோ எடை கொண்ட 50 குண்டுகளை வீசின.

60. எம். எம். மோட்டார் குண்டுகள் 200 இற்கு மேல் வீசப்பட்டன.
81. எம். எம். மோட்டார் குண்டுகள் 200 இற்கு மேல் வீசப்பட்டன.
120. எம். எம். மோட்டார் குண்டுகள் 180 இற்கு மேல் வீசப்பட்டன.
'ஆட்லறி' எறிகணைகள் 100 இற்கு மேல் வீசப்பட்டன.

மொத்தத்தில், காட்டினை எரித்து அழிக்கும் முயற்சி நடைபெற்றது. ஒரு மாத காலமாக ஒரு மைல் தூரத்துக்கு புல்டோசர்கள் சகிதம் முன்னேறிய இராணுவம் சுகந்தன், சதீஸ் என்ற எமது இரு எல்லைப்புற முற்காப்பு அரண்களைச் சூழ 180 ஏக்கர் காட்டினைக் குண்டுகளால் எரித்தது. சதீஸ் பாசறையில் இருந்த மாவீரர் சமாதிகளைக் குண்டுவைத்துத் தகர்த்தது. உலகில் எந்த இராணுவமும் செய்யாத இந்த இழிவுச்செயலை, இலங்கைச் சிப்பாய்கள்செய்தனர். இருநூறுக்கு மேற்பட்ட சிப்பாய்களைப் பறிகொடுத்ததாயும், எண்பதுக்கு மேற்பட்ட சிப்பாய்கள் கால்களை இழந்ததாகவும் இராணுவத் தளபதிகளே செய்தி வெளியிட்டனர். சிப்பாய்களுக்கு ஏற்பட்ட மனக்கசப்பை, பசியை, பயத்தை, தூக்கமற்ற இரவுகளை, கட்டுப்பாட்டுச் சீர்குலைவை, ஒட்டுமொத்தமான பொருளாதார இழப்பைச் சீர்தூக்கிப் பார்க்கத் தவறிவிட்டனர்.

காட்டுச்சண்டையில் ஊறிப்போன எமது வீரர்களுக்கு, எதிரியை எதிர்கொள்வதில் சிரமம் இருக்கவில்லை. '' மணலாறு காடல்ல; எம்மை வளர்த்த புனிதபூமி '' என்ற உணர்வு, அனைவரின் மனதிலும் ஓங்கி நின்றது. ஆனையிறவுச் சமரில் பங்குகொண்ட எமது வீரர்களின் எண்ணிக்கையை விட குறைந்த தொகையிலான புலிவீரர்கள் இச்சண்டையில் பங்கெடுத்திருந்தனர்; மிகக் குறைந்த ஆட்பலத்துடனும், அதிகூடிய மனோபலத்துடனும் ஆயிரக்கணக்கான படையைச் சிதறடித்தனர்.

புரட்டாதித் திங்கள் 26 ஆம் நாள் திலீபனின் நினைவுநாள். இந்நாளில் காட்டிற்குள் நுழைய முற்படும் இராணுவச் சிந்தனைக்கு ஆப்பு வைக்கும் தாக்குதல் திட்டங்கள் வகுக்கப்பட்டன; இரவோடிரவாக வியூகங்கள் வகுக்கப்பட்டன. அழிவு ஏற்படப் போவதை உணர்ந்த படைகள், ஒருமாதமாக முன்னேறிய தூரத்தை ஒரேநாளில் கைவிட்டு ஓடினர். மின்னல் வேகத்தில் தப்பி ஓடிய தமது நடவடிக்கைக்கு அவர்கள் சூட்டிய பெயர்தான் ' ஒப்பரேசன் மின்னல்'?

' காடு வெறும் காடல்ல; அது இரும்பறை ' என்ற உண்மையை உணரவைத்த எம் வீரர்களின் தியாகங்களைக் கல்லாலோ, சொல்லாலோ, வரிகளாலோ வடித்துக்காட்ட முடியாது; முடியாத அந்தத் தியாகத்தின் அழியாத சுவடுகளாய் இவ்வெழுத்து அமைய முடியாது - அதனைத் தொட்டுப் பார்க்க முனைகின்ற சிலவரிகளே இது. □

# முறியடிக்கப்பட்ட ஒப்பரேசன் சிக்சர்

மணலாறு காடல்ல; அது எங்களின் கண். இங்கு இருக்கும் ஒவ்வொரு இராணுவ முகாமும், அம் முகாமிலிருந்து நடை பெறக்கூடிய இராணுவ அசைவுகளும், எம் வீரர்களின் கண்களிலிருந்து தப்பிவிட முடியாது. அதனாலேதான் எதிரிக்கு தலையடி கொடுத்து, அவர்களை விரட்டியடிக்க முடிகிறது. ஒவ்வொரு சண்டையிலும் நாம் விடுகின்ற தவறுகளை ஆராய்ந்து எடுத்த முடிவுகள்தான், எமது அடுத்த சண்டைக்கான படிப்பினையாக அமைகின்றன. இலங்கைப் படைகள் 'மின்னல்' தாக்குதலில் பாவித்த பலத்தைக் கணிப்பிட்டு, சிக்சர் நடவடிக்கையை எதிர்கொண்டோம். இதனால், மின்னலைப்போல் இரட்டிப்பான மின்னலையும் சந்திக்கக்கூடிய திறனையும், திடத்தையும் எம் வீரர்கள் பெற்றிருந்தார்கள்.

சிங்கள அரசினால் நடைமுறைப்படுத்தப்படுகின்ற திட்டமிட்ட மணலாற்று நடவடிக்கைகளைச் சிதறடிப்பது மட்டுமன்றி, அடியோடு அழித்துவிடக்கூடிய மனோவலிமையும் எம் வீரர்களுக்குண்டு. எதிரிக்கும் தன்சாவு அர்த்தமற்றது என்பது புரிகின்றது; புரிவது மட்டுமல்ல, அதுதான் உண்மையுமென்பதை 'சிச்சர்' சண்டையின்மூலம் உணர்த்தினோம்.

நவீன ஆயுதங்களையும், எறிகணைகளையும் எதிரி எமக்கெதிராகப் பயன் படுத்தலாம்; இவ்வாயுதங்கள் எம்மிடம் இல்லாமலிருக்கலாம். ஆனால்,

அவற்றை எதிரியிடமிருந்து கைப்பற்றக்கூடிய மனோவலிமை எம் வீரர்களிட முண்டு. எத்தகைய நவீன சுடுகலன்களை ஒருவன் வைத்திருந்தாலும் மன உறு தியும், ஒழுக்கமும், கட்டுப்பாடும் இல்லாவிடில் வெற்றி பெறுவது முடியாத காரியம். இம் மூன்றையும் எம் தலைவன் எமக்கு ஊட்டிவளர்த்தபடியினால் தான், எந்த ஒரு சவாலையும் இலகுவாக முறியடித்தோம்.

'மின்னல்' நடவடிக்கையைக் கைவிட்டு ஓடிய இராணுவம், "காட்டில் இருந்த ஐநூறு புலிகளும் அழிக்கப்பட்டுவிட்டனர்; அல்லது தப்பி ஓடிவிட்ட னர்" எனவும், "'வன் போர்' என அழைக்கப்படும் பதின்நான்கு முகாங்க ளையும் கைப்பற்றி அழித்துவிட்டோம்" எனவும் பறைசாற்றியது. ஆனால், 1992 ஆம் ஆண்டு பங்குனித் திங்கள் 17 ஆம் நாள், 'ஒப்பரேசன் சிக்சர்' என்ற பெயரில், ஆயிரத்துக்கு மேற்பட்ட இராணுவத்தை, கொக்குத்தொடு வாய்ப் பிரதேசத்திலிருந்து நாயாறு நோக்கி நகர்த்த முற்பட்டது.

"தான் பிறந்த மண்ணின் விடுதலைக்கு தன் உயிரை அர்ப்பணிக்க எவன் துணிகின்றானோ, அவனை வெற்றிகொள்ள எவராலும் முடியாது." எம் வீரர்களைப் பொறுத்தவரை, அனைவருமே இந்த மண்ணுக்காகத் தம்முயிரை அர்ப்பணிக்கத் துணிந்தவர்கள். அதனால், இம் மண்ணில் தொடர்ச்சியான பெரும் தோல்விகளையே அரசு சந்தித்துக்கொண்டது. அந்தத் தோல்விகளின் வரிசையில் 'சிக்சரும்' முடிந்து போயிற்று!

## ஒப்பரேசன் சிக்சரில் எதிரியின் இலக்கு

வன்னி விக்ரம் - 02 என்ற தமது இராணுவ நடவடிக்கையில் சீனா விலிருந்து பெற்ற 'ராங்கி'களைப் பரீட்சித்துப்பார்த்த இலங்கை இராணுவத் தளபதிகள், "யாழ்ப்பாணத்தில் எமது இறுதித் தாக்குதலுக்குத் தயார்" என்று பூச்சாண்டி காட்டினர். ஒப்பரேசன் வலம்புரி என்று கூறி எமது பார் வையை யாழ்ப்பாணத்தின் மீது திசைதிருப்பிவிட்டுத் திடீரென, கொக்குத் தொடுவாயில் நுழைந்து முகாமமைத்துக்கொண்டு, *மின்னல் - 2* என்று அந்த நடவடிக்கைக்குப் பெயர் சூட்டிக்கொண்டதையும் நாம் மறந்துவிடவில்லை. அதே உத்தியை இம்முறையும் கையாண்டு, சிறப்பாக 'சீன ராங்கி'களையும் இணைத்து கொக்குத்தொடுவாயிலிருந்து நாயாறு நோக்கி முன்னேறத் திட்ட மிட்டனர். நாயாற்று முகத்துவாரத்தைக் கைப்பற்றுவதையே இலக்காகக் கொண்டதாக 'சிக்சர்' ஆரம்பமாகியது.

நாயாற்று கிராமத்தையும் கைப்பற்றிவிட்டால், அதையும் தமது தாயக பாரம்பரியபூமி என்று பெயர் சூட்டிச் சிங்களக் குடியேற்றத்தை விரிவு படுத்தலாமென்றும், இங்கு புதிய முகாம் ஒன்றை அமைப்பதன்மூலம் மண லாற்றில் புலிகளின் நடவடிக்கையைக் கட்டுப்படுத்தி விடலாமென்றும், கட்டுப் படுத்துவதன்மூலம் தமது யாழ்ப்பாணப் படையெடுப்பை வெற்றிகரமாக நடாத்தி முடிக்கலாமென்றும் தப்புக் கணக்குப் போட்டது. இவற்றைவிட பெரியளவில் எம்மை முகம் கொடுக்கவைத்து, எம்மில் பலரை அழித்தோ காயப்படுத்தியோவிட்டால், யாழ். நடவடிக்கை இலகுவாக இருக்கும்; கிழக்கி லிருந்து எமது படையணிகள் மணலாற்றினூடாக யாழ். நோக்கி வருவது

தடுக்கப்பட்டுவிடும்; தமிழீழத்தைத் துண்டாடும் குடியேற்ற நடவடிக்கைகளை இலகுபடுத்தலாம்; குடியேற்றப்பட்ட சிங்கள மக்கள் பாதுகாப்பின்மை கருதி வெளியேறுவதும் புதிதாக குடியேறுவதற்கு மறுப்பதும் தமது திட்டத்தைக் குழப்பதுக்குள்ளாக்குவதால், அவர்கள் மனத்தில் நம்பிக்கையை வளர்க்க லாம் என்ற பல காரணங்களை அடிப்படையாக வைத்து, 'சிக்சர்' நடவடிக் கையில் இராணுவம் இறங்கியது.

## தாக்குதல் களம்

நிகழ்காலத் தரவுகளைக் கணித்து, எந்த நிமிடமும் எதிரி தன் படை யெடுப்பை நிகழ்த்தலாமென, எமது சிறப்புத் தளபதி எச்சரிக்கை செய்தார். இராணுவத்தினரின் நகர்வு இடம்பெறக்கூடிய பாதைகள் அனைத்திற்கும் எமது அதிரடி கொமாண்டோ அணிகளை வியூகம் அமைத்து நிறுத்தினார். எமது முன்னணிப் படையின் அதிரடிவீரர்கள் மிகக்குறைந்த எண்ணிக்கையில், முக்கிய இடங்களில் நிலையெடுத்துக்கொண்டனர்.

1992ஆம் ஆண்டு பங்குனித் திங்கள் 14ஆம் நாள், நடவடிக்கையை எதிர்பார்த்து நிலைகளில் கிடந்தோம். இரண்டு தினங்கள் மறைத்தன. எதிரி யின் நகர்வு முயற்சிகள் எதனையும் காணமுடியவில்லை; கொண்டுசென்ற உணவும் நீரும் தீர்ந்துபோனது. ஆனால், சிறப்புத் தளபதியிட மிருந்தோ தளபதியிடமிருந்தோ எந்தவித அறிவித்தலும் கிடைக்கவில்லை பசி யையும்தாகத்தையும் மறந்து, எதிரியின் வரவையே எதிர்பார்த்துக் கிடந்தோம்.

பதினைந்தாம் நாள், கொக்குத்தொடுவாய் இராணுவ முகாமிலிருந்து ஓரிரண்டு எறிகணைகள் வீசப்பட்டன. பதினாறாம் நாள் மாலை 'சியா மாசெற்றி' வியானங்கள் மூன்றும். 'வை. 8', 'வை. 12' விமானங்களும், கெலிக்கொப்ரர் ஒன்றும் வானில் சுற்றிப் பறந்தன; ஆனால் குண்டுகள் எவற்றையும் அவை வீசவில்லை.

பதினேழாம் நாள் காலை, இராணுவத்தினர் 'ராங்கி'கள் சகிதம் மூன்று பாதைகளில் முன்னேறிக்கொண்டிருந்தனர். கடற்கரை, பிரதான வீதியின் இருமருங்கு, உலத்துவெளி செல்லும் வீதி என மூன்று முனைகளிலும் ஏறக் குறைய 2500 படையினர் நகர்ந்துகொண்டிருந்தனர். படையினருடன் பின் னுதைப்பற்ற நவீன 'ஆர். சி. எல். பீரங்கி' பொருத்தப்பட்ட ஜீப்வண்டியும் வந்துகொண்டிருந்தது. எம் வீரர்கள் அனைவரின் கண்ணிலும் நெஞ்சிலும் அப்பீரங்கி ஆழப்பதிந்தது. எமது நிலைகளைக் கடந்து படையினர் சென்று விட்டனர். எங்கள் மண்ணில் முளைத்த புற்களே எங்களை மறைத்துக் காக் கும் கவசங்களாய் நின்றன. 'பவள் கவசவண்டி'யொன்று முப்பது யார் தூரத் துக்குள் வந்துவிட்டது. அவ்வளவுதான், எமது ஆர். பி. ஜி. முழங்கியது. மின்ன லாய்ச் சென்ற எறிகணை பவளைப் பிளந்தது. சமகாலத்தில் அனைத்து அணி களும் தாக்குதலைத் தொடங்கின. எம் தாக்குதலை முன்னால் எதிர்பார்த்து வந்த சிப்பாய்கள், பின்னால் இருந்து தாக்குதல் தொடங்கியதை சற்றும் எதிர்பார்க்கவில்லை. காலங்காலமாய் காட்டில் வாங்கிய அடி அவர்களை நிலை குலைய வைத்தது; சிதறி திசைமாறி ஓடினர்; பின்னே நின்று கட்டளை பிறப்

த்த தமது தளபதிகளையும் இடறிக்கொண்டு, முகாமைநோக்கி ஓடினர். வீழ்ந்த தம் சிப்பாய்களைத் தூக்க எவருக்கும் துணிவிருக்கவில்லை. ஆர். சி.எல், பீரங்கி உட்பட்ட சுடுகலன்களைப் பாய்ந்து அள்ளிக்கொண்டோம்.

ஐநூறு யார்கூட முன்னேற முடியாது - ஈடுசெய்யமுடியாத இழப்புடன்- தப்பிவந்த படைகளைச் சந்திக்க, கொக்குத்தொடுவாய் படைமுகாமுக்கு உடனே விஜயம் செய்தனர். கமில்டன் வனசிங்காவும் கொப்பேகடுவாவும், இழப்பை மூடிமறைக்க படைகளை மீண்டும் சரிசெய்துகொண்டனர். 19ஆம் நாள் மீண்டும் ஒருமுயற்சி; எம் வீரர்களும் தயாராகினர். தாக்குதல் தொடங் கியது. எமது அதிரடி அணி ஒன்று இராணுவ அணியை ஊடறுத்துத் தாக்கத் தொடங்கியது. மீண்டும் சிப்பாய்கள் தப்பி ஓட்டம் பிடித்தனர்.

'சிக்சரின்' இரண்டாவது முயற்சியும் தோல்வியில் முடிய, மூன்று நாட் கள் இடைவெளியின் பின்னர் வேறொரு திசையில் முன்னேற முயன்று மூக் குடைபட்டு, முடிவில் நடவடிக்கையினையே முடித்துக்கொண்டனர். நூற்றுக்கு மேற்பட்ட படைவீரரையும் நவீன ஆர். சி. எல். பீரங்கியையும் ஒரேநாளில் பறிகொடுத்த இராணுவமும் இலங்கை அரசும். காடுபற்றிய தெளிவான முடி வுக்கு இன்னும் வரவில்லையென்றே தோன்றுகின்றது. ஒன்றுமட்டும் உண்மை; மணலாற்றுக் காடு, சிங்களப் படைகளுக்கு உயிரின் முடிவை எழுதும் உயில்; எதிரிக்கு அது என்றும் தலைவணங்காது ! □

முனைக் கிராமம் நோக்கி முன்னேறினர். தங்கபுரம் கிராமத்தில் எம் வீரர்கள் அதிரடித் தாக்குதல் தொடுத்தனர்; நிலைகுலைந்த படையினர் அலம்பிலுக்கு மீண்டும் பின்வாங்கிச் சென்றனர். இடையில் முல்லைத்தீவுப் படையினருடனான தொடர்பும் துண்டிக்கப்பட்டதால், அலம்பிலில் நிரந்தரமாக முகாமிட்டுக் கொண்டனர்.

அலம்பில் கிராமத்தை உள்ளடக்கி, நான்கு சதுரமைல் பிரதேசத்தை இராணுவ முகாமாக மாற்றிக்கொண்டனர். தென்னை மரங்கள் தறிக்கப் பட்டன; வீடுகள் அழிக்கப்பட்டன. சுருங்கச் சொன்னால் ஒரு கிராமத்தைச் சுடுகாடாக - பாலைவனமாக - மாற்றினார்கள். தமிழ் மக்களினை விரட்டியடிக் கவும், அவர்கள் உடமைகளைக் கொள்ளையிடவும், வீடுகளை இடித்து நாச மாக்கவுமே, ஏழு சக்திகள் என்ற இந்த இராணுவ நடவடிக்கை உதவியது.

படைமுகாம் நிரந்தரமாக அமைக்கப்பட்ட நாளிலிருந்து, தொடர்ச்சி யான தாக்குதல்கள் பலவற்றை எமது வீரர்கள் மேற்கொண்டனர். இம் முகாமைப் புலிகள் எந்தநேரமும் தாக்கியழிக்கலாமென்ற அச்சம், படை யினருக்கு ஏற்படத் தொடங்கியது. ஐந்து மாதகாலம் கோடிக்கணக்கில் செலவு செய்து அமைத்துக்கொண்ட இம்முகாமை, **1990**ஆம் ஆண்டு கார்த்திகைத் திங்கள் 2ஆம் நாள் கைவிட்டுச் சென்றனர். மணலாற்றைக் கைப்பற்றுவது முடி யாத காரியமென்பதையும், படைமுகாம் தாக்கி அழிக்கப்படப் போகின்றதை யும் எப்படியோ உறுதியாக நம்பிய படையினர், பின்வாங்கிக்கொண்டனர். கோடிக்கணக்கில் செலவிட்டு நடத்திய இந்த ஒப்பரேசனின் தோல்வியை, இப் படை வெளியேற்றம் காட்டி நிற்கின்றது. □

# ஒப்பரேசன் செவன் பவர்
( ஏழு சக்திகள் )

## இலக்குத் தவறியது

**1992**ஆம் ஆண்டு வைகாசித் திங்கள் 28ஆம் நாள், முல்லைத்தீவு இராணுவத் தங்ககத்திலிருந்து, நாலாயிரத்துக்கு மேற்பட்ட பெரும் படையொன்று கவசவாகனங்கள், 'ரி. 55 ராங்கி'கள், ஆர். சி. எல். பீரங்கிகள் சகிதம் மணலாறு நோக்கி நகர்ந்தது. விமானப்படை விமானங்களும் கடற்படையின் பீரங்கிகளும் இடைவிடாது தாக்குதல் நடத்திக்கொண்டிருக்க, முல்லைத்தீவு - கொக்கிளாய்ப் பிரதான வீதியில் முன்னேறிக்கொண்டிருந்த படைகளை, நான்காவது மைல்கல்லில் வைத்து எம் வீரர்கள் தாக்கத் தொடங்கினர்.

இழப்புக்களுடன் மெல்லமெல்ல நகர்ந்த படை, ஆனித் திங்கள் 1ஆம் நாள், அலம்பில் கிராமத்தை வந்தடைந்தன. 'புல்டோசர்'கள் தமிழ் மக்களின் வீடுகளையும், பாடசாலைகளையும், கோயில்களையும் இடித்துத் தள்ளிக் கொண்டு வந்தன. அலம்பிலில் நடைபெற்ற கடுமையான எமது தாக்குதலினால், மேலும் முன்னேற முடியாமல் தடுத்து நிறுத்தப்பட்டனர். தாக்குதலைச் சில தினங்கள் நிறுத்தித் தம்மைப் பலப்படுத்திக்கொண்ட படையினர் குமுழ



# லெப். கேணல் அன்பு

## ஒரு செயல்வீரனை இழந்துள்ளோம்

மணலாற்றுக் காட்டு வாழ்விலிருந்து அன்பண்ணனின் இறுதிப் பயணம் வரை, அவருடைய வளர்ச்சியின் ஒவ்வொரு படியினையும் அருகிருந்து பார்த்துத் தட்டிக்கொடுத்து வளர்த்தவர்களில் மூத்த தளபதி சொர்ணமும் ஒருவர். அவர் அன்பண்ணனின் நினைவுகளைப் பகிர்ந்து கொண்டார். அவரது நினைவுகளில்......

''மணலாற்றுக் காட்டிற்கு தலைவர் வரும்போது, அவருடன் வந்தவர்கள் மிகக் குறைந்த போராளிகளே. காட்டிற்கு அண்ணனிடம், ஐம்பது வீரர்கள் மன்னாரில் இருந்து அனுப்பப்பட்டனர். அந்த அணியில் ஒருவனே அன்பு. இவர்களில் விலகியோர், வீரமரணம் அடைந்தோர் போக நின்றவர்கள் இருவர்; அவர்களில் ஒருவன் அன்பன். அவனும் போய்விட்டான்.

காட்டுக்கு வந்தபோது ஒரு 'ஏ.கே. - 47' துப்பாக்கியோடு வந்திருந்தான். வந்த நாள் தொடங்கி அவனின் செயற்திறனை அவதானித்திருக்கின்றேன். எந்த நேரமும் வேலை செய்துகொண்டு இருப்பான். செய்யும் வேலை ஒழுங்காகவும் சுத்தமாகவும் இருக்கும். மற்றவர்கள் விடுகின்ற பிழையை உடனே என்னிடம் சொல்லிவிடுவான். இது சகபோராளிகளை இவன்மீது

வெறுப்படைய வைத்தது. ஆனால் எனக்கு, அவனின் திறந்தமனம் பிடித்துக்கொண்டது. சிறு சிறு பொறுப்புக்களை அவனிடம் கொடுத்தபோது, அவற்றைச் செவ்வனே முடித்துக்கொண்டான். இதனால் அவனிடம் இருந்த ஏ.கே.ரகத் துப்பாக்கியை வாங்கிவிட்டு, என்னிடமிருந்த ஆர்.பி.ஜியை இவனிடம் கொடுத்தேன்.

சுவைபடச் சமைப்பதற்கு அன்பனைப்போல் ஒருவரையும் நான் காண வில்லை. அதுவும் காட்டில் ஒரேயொரு கறியான 'ரின்மீன்' கறியை, சாப்பிடக்கூடியதாகச் சமையல் செய்பவன் இவனொருவன் மட்டுமே. 'ரின்மீன்' கறியைச் சுவையாக விரும்பி நான் சாப்பிடத் தொடங்கியது, அன்பனின் சமையலிலிருந்துதான். பலசமயம் அவன் எவ்வாறு சமைக்கிறான் என்பதை அருகே சென்று நின்று பார்த்திருக்கிறேன். இந்திய இராணுவத்துடன் ஏற்பட்ட மோதல்களில் காயப்பட்ட போராளிகளை அருகில் இருந்து அவதானித்து, நல்ல சாப்பாடுகள் செய்து கொடுக்கிறதில், அன்பனைப்போல் ஆள்கிடையாது. மிகக் குறைந்த வீரர்கள் இருக்கும்போது மட்டும் இவன் செயற்திறன் உள்ளவனாய் இருக்கவில்லை; சில மாதங்களில், ஆயிரக்கணக்கான வீரர்கள் காட்டிற்கு வந்தபோதும், உணவுப்பொருட்கள் பங்கிட்டுக் கொடுக்கும் பொறுப்பை இவனிடமே கொடுத்தேன். அளவாக, குறைவின்றி, சுத்தமாகப் பங்கிட்டுக்கொடுக்கிறதில் கெட்டிக்காரன்.



காட்டில் வாழ்ந்த காலத்தில் எங்களுக்குத் தேவையான இராணுவத் தளபாடங்களும், முக்கிய உணவுப் பொருட்களும் வெளியில் இருந்துதான்

வந்துகொண்டு இருந்தன. வெளியில் இருந்து காட்டுக்கு வந்தாலும், அதைக் காட்டுக்குள் கொண்டுவருவதற்கான ஒழுங்குகளைச் செய்து கொடுக்கும் பணியும் இவனிடமே கொடுக்கப்பட்டது. இந்திய இராணுவ நெருக்குதலுக்கு ஈடுகொடுத்து பொருட்களை உள்ளே அனுப்பிக்கொண்டு இருந்தான். இந்தக் காலத்தில்தான் இந்தியாவில எங்களின் செயற்பாடுகளை ஒருங்கிணைக்கவும், செயல்படுத்தவும், கிட்டண்ணையை இந்தியாவினூடாக லண்டனுக்கு அனுப்பவும் பொறுப்புள்ள - திறமையுள்ள - ஒரு போராளி தேவைப்பட்டான். நல்ல ஒருவர் இந்தியாவில் இல்லாமல் இந்தியாவினூடாக தான் செல்ல முடியாதெனக் கிட்டண்ணை கேட்டுக்கொண்டதால், அன்பனை அண்ணன் இந்தியாவுக்கு அனுப்ப முடிவுசெய்தார்.

இந்திய மண்ணில் அப்போது இருந்த இக்கட்டான நிலையினைச் சமாளித்து, சிறந்த தொடர்புகளை ஏற்படுத்தியபின் அவன் நாடு திரும்பினான். அன்பன் நாடு திரும்பும்போது அண்ணையுடன் நாம் காட்டைவிட்டு வெளியே வந்திருந்தோம். இந்திய இராணுவம் நாட்டைவிட்டு வெளியேறிய காலமது. காட்டிற்கு நல்லதொரு பொறுப்பாளரைப் போடவேண்டுமென அண்ணன் ஆலோசனை கலந்திருந்தார்; இந்தியாவிலிருந்து திரும்பிய அன்புவிடமே காட்டைக் காக்கும் பொறுப்பினை ஒப்படைக்க முடிவுசெய்தார். அன்பன் மணலாற்றின் காவலனாக அனுப்பிவைக்கப்பட்டான்.

காட்டினைப் பொறுப்பேற்றபின் அவனுக்கும் எனக்கும் இடையில் இருந்த உறவில் சற்று வித்தியாசம் இருந்தது. தோழமையும் சகோதர பாசமுமாய் அது மாறியது. அனைத்துப் போராளிகளும் என்னோடு எட்டநின்று மரியாதையுடன்தான் பேசுவார்கள். அன்பன் அப்படி இல்லை. துணிவுடன் என்னருகில் இருந்து பேசுவான். 'என்னம்மான், எல்லாரும் நான் கோபக்காரன்... அடிக்கிறநான் என்று எட்ட நிக்கிறாங்கள். நீங்கள் மட்டும் கிட்ட வாறியள்!' என்று கிண்டலாக ஒரு தடவை நான் கேட்டபோது, 'சின்ன வயசில அம்மாவை நான் பறிகொடுத்த பிறகு, என்ட மூத்த அண்ணன்தான் என்னை ஊத்தை தேய்த்து குளிக்க வார்த்ததும், உடைஉடுத்தி திருநீறு பூசி பொட்டு வைத்து கோயிலுக்குக் கொண்டு சென்றதும், நித்திரையாக்கியதும் எல்லாமே அவர்தான். உங்களைப் பார்த்தால் மூத்த அண்ணனைப் போலவே இருக்கிறதால, மூத்த அண்ணன் என்று நினைத்துப்பழகிறன்' என்று சொன்னான்.

தன்னுடைய பிறப்பிடம், வீடு, சகோதரங்களைப்பற்றி உண்மையான தகவலை அவன் ஒருநாளும் சொல்ல மாட்டான்; வீட்டிற்குக் கூட்டிக்கொண்டு செல்லவும் மாட்டான், கடைசியாக பூநகரி தாக்குதலுக்கான பயிற்சி நடந்துகொண்டிருந்தபோதுதான், 'அம்மான் நடவுங்கோ, உங்கட வீட்டினை ஒருக்காப் பார்க்கோணும்.' என்று சொல்லி, ஆளை வாகனத்தில தள்ளி ஏற்றிக்கொண்டு போனேன். சகோதரியும், ஒரு தமையனும், அண்ணிக்காரியுமே அங்கு நின்றனர். அவர்களுக்கு என்னை, 'பிரிகேடியர் என்று கேள்விப்பட்டிருப்பியள்- இவர்தான் அவர். கவனமாய்ப் பார்த்து வைத்துக்கொள்ளுங்கோ, நான் செத்தாலும் இவர்தான் என்ர பொடி கொண்டுவந்து தருவார்' என்று சொல்லித்தான் அறிமுகப்படுத்தினான்.

பூநகரி - நாகதேவன்துறை கூட்டுத் தளத் தகர்ப்பில் 'ரி. 56 ராங்கி' கைப்பற்றப்பட்டபோது, ராங்கி அருகே நாம் நிலை எடுத்து இருந்தோம். இவன் என்

பின்பக்கமாக வந்து, என் கழுத்தைக் கட்டிப்பிடித்து என் கன்னங்களை முத்த மிட்டு, மகிழ்ச்சி பொங்க நின்றான். என்னிடமிருந்த அப்பிள் ஒன்றை அவனி டம் கொடுத்தேன். ஒரு கடி கடித்துவிட்டு, என் வாயினுள் திணித்தான். அந்த நிகழ்வுதான் அவனோடு என் கடைசி நிமிடமாயிற்று. அன்பனின் இழப்பு ஒரு பெரிய இழப்பு'' என்று சொல்லி முடித்தார்.

## ''தாயை நேசிப்பவன் எவனோ-அவனே தாய் மண்ணையும் நேசிக்கின்றான்.''

1991 ஆம் ஆண்டு, கார்த்திகை மாதம் முழுவதும் விமானப்படை விமா னங்கள் அடுக்கடுக்காய் வீசிய குண்டுகளினால் எரிந்துபோன அடர்ந்து உயர்ந்த காடுகள், கார்த்திகை மாத மழையில் நனைந்து புதிய தளிர்கள் விட்டிருந்தன. தன் மண்ணின் புதல்வர்களைக் காத்து மறைப்பதில் அவை கங்கணம் கட்டிக் கொண்டு நின்றன. அடர்ந்த காட்டில் அமைதிகொண்டிருந்த பாசறையில்,மேசை விளக்கின் முன் அன்பண்ணனோடு அமர்ந்திருந்தேன். தான் வளர்த்து பறி கொடுத்த தியாகிகளுக்கு வாழும் வரலாறு எழுதவே என்னை அழைத்திருந்தார்; அந்த நாளின் சில நினைவுகளை இங்கு நிழலாட வைக்கின்றேன்.

''இன்று அறுபது ரூபாவுக்குச் சாப்பிட்டுவிட்டீர்கள். அறுபது ரூபா வுக்கு நட்டம் இல்லாமல் எழுதிப்போடுங்கோ.''

உண்மையும், சீண்டலும் கொண்ட வார்த்தை; என்னை வழமையாகக் கிண்டல் செய்யும் வார்த்தைகள்தான். ஆனால், அன்றைய இரவு எனக்குத் தூக்கம் வரவில்லை. அருகே படுத்திருந்த அவரை எழுந்திருந்து நோக்கினேன். கால் மாட்டில் கண்ணுக்கு நேரே தலைவரின் படம் தொங்கிக்கொண்டிருந் தது. தலைவனையும் அவன் இலட்சியத்தையும் போராளிகளையும் தன் உயிராக நேசிக்கும் இவர், ஏன் வீட்டிற்குச் செல்வதில்லை? காலையில் எழுந் ததும் அவரிடம் முதலில் இதைத்தான் கேட்க வேண்டும். உறங்கிவிட்டேன். கண் விழிக்கும் நேரம் துப்பாக்கி வேட்டுக்கள் இடையிடையே கேட்டன. ஏரண்டன் குருவிகளின் ஆரவாரம் மிகுதியாக இருந்தது. அன்பண்ணனைப் பார்த்தேன்; காணவில்லை. வெளியே சென்றேன். பட்ட மரக் குற்றி ஒன்றில் துப்பாக்கியோடு அமர்ந்திருந்தார். பக்கத்தில் ஏழெட்டு ஏரண்டன் குருவிகள் இருந்தன. ''இன்றைக்கு ஏரண்டன் குருவிப் பொரியலோடு சாப் பாடு தருவம் என நினைச்சன். ஏதோ பொரியலுக்கு கணக்காயாவது எழுதிப் போடுங்கோ'' - சாப்பாட்டுடன் கடமையை நினைவுபடுத்தினார்.

பக்கத்தில் அமர்ந்துகொண்டேன். ''அண்ணோய் இண்டைக்கு, நீங்கள் ஏன் ஒருநாளும் வீட்டுக்கு போறேல்லை எண்டு சொல்லவேணும்'' என்று நான் கேட்டபோது, ''அந்த இந்தக் கேள்வியெல்லாம் என்னட்டைக் கேட் கக்கூடாது. வந்தால் வந்த வேலையைப் பார்த்துக்கொண்டு போகவேண்டியது தான்'' என சட்டெனப் பதில் சொன்னார். சற்று நேரம் மௌனமாக இருந் தேன். கேட்கக்கூடாததைக் கேட்டு விட்டேனோ என்ற சந்தேகம் கூட ஏற் பட்டது. என்னைப் பொறுத்தவரை, என்னை முழுமையாகப் புரிந்துகொண்ட

ஒரேயொரு உயிர் அன்பண்ணன் மட்டுமே. என் வேதனை அவருக்குத் தெரிந்து விட்டது. சற்று நேரம் என்னை உற்று நோக்கிவிட்டு, ''சரி, உங்களுக்குச் சிலதைச் சொல்லி வைக்கத்தானே வேணும். ஆனால் ஒரு நிபந்தனை, நான் சொல்லுறதை அங்க இஞ்ச போய் சொல்லக்கூடாது'' என்று வேண்டிக் கொண்டார்.



''அம்மா என்னைவிட்டு பிரியும் வரை, அம்மாவின் தொங்கல் சீலையினால் என்னைச் சுற்றிக் கொண்டு, அம்மாவுடன் ஒட்டிக்கொண்டுதான் படுத்தனான். அப்படிப் படுக்காவிட்டால் எனக்கு நித்திரை வராது. எனக் கடுத்த தங்கை இருக்கிறாள், அவள்தான் கடைக்குட்டி. இண்டைக்கும் நான் போய் இயக்கத்துக்கு வா என்று கேட்டால் உடனே வந்துவிடுவாள். அம்மாவுக்குப் பிறகு மூத்த அண்ணர்தான் என்னை வளர்த்து விட்டவன். இவர்களை எல்லாம் போய்ப் பார்க்கக்கூடாது என்றில்லை. என்னைப்போல எத்தனை போராளிகள் தாய் தகப்பனை, சகோதரங்களைப் பார்க்காமலே செத்திட்டான்கள். மட்டக்களப்பிலே இருந்து வந்து தங்களின் பிள்ளைகளின் சமாதிகளை மட்டும் பார்த்திட்டுப் போகும் எத்தனை தாய்மார் இருக்கிறார்கள்! என்னுடைய உணர்வுகள்தான் எல்லாப் போராளிகளுக்கும் அவங்கள் எல்லாம் ஈவிரக்கமில்லாதவங்கள் இல்லை; தாய்ப்பாசம் இல்லாதவங்களும் இல்லை. மக்களுக்குப் பார்க்கேக்கை இவர்கள் முரடர்போல, இரக்கமில்லாதவர்கள் போல, அன்பில்லாதவர்கள்போல தோன்றும்; அப்படித்தான் பேசிக் கொள்கிறார்கள். பதின்நான்கு, பதினைந்து வயதிலை தங்களோடு இருக்கின்ற தங்களின்ரை பிள்ளைகள் கோவித்தால் - பிழைவிட்டால் - அது பெரிதாகப்படாத தாய்

தகப்பன், அதேவயதிலை கொடுமைகளைக் கண்டு கொதித்து - துப்பாக்கியுடன் விடுதலைக்காய்ப் புறப்பட்டு வந்த குழந்தைகளில் மட்டும் பிழையும், குறையும் கண்டுவிடுகிறார்கள். உண்மையான தாயன்புள்ளவனும், தாய்மையை நேசிப்ப வனும்தான் ஒவ்வொரு போராளியும்; அதானாலதான் தன் தாய்மண்ணை விடுவிக்கப் புறப்பட்டு வந்திருக்கின்றார்கள். அவர்கள் எல்லாம் தாய், சகோதரங் களை பார்க்காமலே மரணித்துப் போக நான்மட்டும் எப்படிப் போவது......?

இரவில் மனக்குழப்பம் அடைந்து நித்திரை வராது போனால் மட்டும் அம்மாவை நினைக்கின்றேன். அம்மாவை நினைத்தால் அமைதியான, நிம்மதி யான உறக்கம் ஓடிவரும். காலையிலே கண்விழிக்கிறபோது அண்ணனின் படம் கண்முன்னேஇருக்கவேண்டும். அவரைப் பார்க்கும் போது அவர் என்னைப் பார்ப் பது போன்றிருக்கும்; என் கடமைகளை எனக்கு உணர்த்துவது போன்றிருக்கும், உடலில் புது ரத்தம் ஓடும்; புது வேகம் பிறக்கும். இந்த நேரத்தில்தான், அன்றைய எமது பணிகளைத் திட்டமிட்டுக்கொள்கின்றேன். இந்த நேரத்தில் என்னுடன் எவரும் பேசுவதை விரும்பமாட்டன். நீங்களும் இதைத் தெரிந்து வைத்துக்கொண்டால் நல்லது'' என்று சொல்லி முடித்தபோது, என் கண் ணில் முட்டிய நீரை விரலால் தட்டிக்கொண்டேன்.

எனக்குத் தெரியும், தாய்போல தான் வளர்த்த போராளிகளைத் தண்டிப்பதும், கண்டிப்பதும், அரவணைத்துப் புத்தி புகட்டுவதும். அவரைத் தம் பெற்ற தாயாகவே அவர் வளர்த்த போராளிகள் நேசித்தார்கள். எந்தப் போராளியைக் கேட்டாலும், 'நான் என் தாயை இழந்து விட்டேன்; நான் என் தந்தையை இழந்து விட்டேன்; நான் என் அன்புக்குரிய அண்ணனை இழந்து விட்டேன்; நான் என் தோழனை இழந்து விட்டேன்' என்றுதான் சொல்கிறார்கள்.

''பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்
நற்றவவானில் நனி சிறந்தனவே''

என்ற பாரதியின் கூற்றுக்கு இலக்கணம் தந்து நிலைத்தவர் அன்பு அண்ணன். ஒரு போராளியை அந்தப் போராளியைத் தந்த தாய் தந்தையை அவர் எவ்வாறு நேசித்தார் என்பதை. ஒரு போராளியின் தந்தை அவருக்கு எழுதிய கடிதம் அளவிடும். அந்தக் கடிதம்......

க. பொன்னுத்துரை,
சங்கத்தார் வயல்.
இயக்கச்சி
13. 01. 1993.

மணலாறு மாவட்டப் பொறுப்பாளர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

அன்பான மகன் அன்பு அறிவது!

எனது மகன் செங்கோலனின் வீரமரணம் குறித்து தங்களுடைய கவலை தோய்ந்த கடிதம் கிடைத்தது. ஒருவனின் மரணத்தின் பின்புதான் அவனது தலைமைப்பீடம் அவனைப் பாராட்டுவது பொதுவான வழக்கம்.

ஆனால் செங்கோலையோ அவன் உயிருடன் இருக்கும் போதே, அவனது தலைமைப்பீடம் ( தாங்கள் ) என்னிடம் வந்து பாராட்டியது. ஆனால், இப்பொழுது அவனது இழப்பால் என்னிலும் பார்க்க தங்களுக்குத்தான் அதிக தாக்கம் என்பதை அறிவேன். மேலும் அன்று நான் தங்களுடன் உரையாடும்போதும் அவனின் குறைகளைச் சொல்லும்படி கேட்டது, உண்மையில் அவனில் குறையிருக்கும் என்றல்ல; மேலும் எனது நம்பிக்கையை உறுதி செய்வதற்காக. மேலும், அன்றைய உரையாடலின்போது அவன் தங்களிடம் வைத்த, தாங்கள் அவனிடம் வைத்த, பாச உணர்வுகளைப் பற்றிப் பரிமாறினோம்.

அடுத்து அவனது உள்ளத்தின் மூலவேருக்கு ஓரளவு கிட்டப் போன பாண்டியனது கைவண்ணத்தில் உருவான விழுதுகள் *(08. 01. 1993 'ஈழநாதம்')* எங்கள் எல்லோரையும் அழவும், ஆனந்தப்படவும் வைத்துவிட்டது.

அடுத்து, மணலாற்றுப் பெடியள் முன்போல இப்பவும் வந்து போகிறார்கள். செங்கோலது அந்தியேட்டி *23. 01. 1993* இல் செய்யவுள்ளோம்.

இப்படிக்கு,
தங்கள் அன்பிற்குரிய,
க. பொன்னுத்துரை
எழுதுமட்டுவாள்.

## "குடிக்காதே குடி குடியைக் கெடுக்கும்; குறிக்கோளை மாற்றிவிடும்."

விடுதலைப் புலிகளின் கெரில்லாப் போர் வளர்ச்சியில், மணலாற்றில் துணைப்படையின் தோற்றம் ஓர் புதிய வடிவமாகும். மக்களை விழிப்படையச் செய்து, அவர்களை ஆயுதமேந்திய கட்டமைப்புள்ள படைப் பிரிவாக உருவாக்கி வெற்றி கண்டவர் அன்பண்ணன். மற்றவர்களால், முடியாதென்று கருதியதை முடித்துக் காட்டிய முதல் தளபதி அன்பு என்பதை, எவருமே மறுக்க மாட்டார்கள். முல்லை மாவட்டத்தில், ஆயிரக்கணக்கான துணைப் படை வீரர்கள் விசேட பயிற்சி பெற்ற அணியாய், கனரகத் துப்பாக்கிகளோடு களம் நிற்கின்ற பெருமை அவருடையதே.

'இதயபூமி - 01', மண்கிண்டிமலை முகாம் தகர்ப்பு, 'ஒப்பரேசன் தவளை' என்ற பூநகரி - நாகதேவன்துறை கூட்டுத்தளத் தகர்ப்பு எனும் மிகப் பெரும் வரலாற்றுப் புகழ்மிக்க தாக்குதல்களில், எம் விடுதலை வீரர்களின் பாய்ச்சலுக்குப் பக்கபலமாய் நின்று சாதனை புரியுமளவிற்கு, துணைப்படை வளர்ந்து நிற்கின்றது. பூநகரி - நாகதேவன் துறை கூட்டுத் தளத் தகர்ப்பில் மறு முனைத் தாக்குதலில் அன்பண்ணன் நிற்கின்றாரெனக் கேள்வியுற்றபோது இவர்கள் அடைந்த மகிழ்ச்சியை, நேரில் பார்த்திருக்க வேண்டும். சண்டை பிடித்ததும் எங்களைச் சந்தித்துப் பாராட்டுவார். அவர் பிறந்த மண்ணில் நடைபெற்ற சண்டையில் கலந்துகொண்டதற்காக நாமெல்லாம் மகிழ்ச்சியடைவோம். பூநகரி - சங்குப்பிட்டியால்

அணிவகுத்து யாழ்ப்பாணம் சென்றுவர வேண்டும் என்றெல்லாம் பேசிக் களிப்புற்றார்கள்.

தந்தைபோல் இருந்த முதியவர்க்கெல்லாம், வயது முதிர்ந்த இந்தியச் சிப்பாய்களின் வீரத்தை உதாரணம் காட்டி, விழிப்படைய வைத்து, அவர்களின் அருகில் இருந்து தலைவருடி, இன்ப துன்பங்களில் பங்கெடுத்து, குறை தீர்த்து, அவர்களின் உள்ளமெல்லாம் அன்பண்ணனாய் உயர்ந்து நின்றவரின் மறைவு கேட்டதும், ''குடிக்காதே, குடி குடியைக் கெடுக்கும்; குறிக்கோளை மாற்றிவிடும் என்று சொல்லிச் சொல்லி உத்தமர்களாய் எங்களை வளர்த்துவிட்டுப் போய்விட்டீர்களே......'' என்று சொல்லி வெம்பி வெம்பி அழுதார்கள். வாழ்க்கை முழுவதும் நினைத்து நினைத்து அழவைக்கு மளவிற்கு அவருடைய அன்பு உயர்ந்துவிட்டது. இவருடைய தினக்குறிப்பின் முதற் பக்கத்தில், ''நான் இருக்கும்வரை, மணலாற்று மக்கள் எவரும் எதிரியின் குண்டுபட்டு இறக்க விடமாட்டேன்; ஆயுதம் தரித்த மிகப் பெரும் மக்கள் படையணியொன்றை உருவாக்குவதே என் பணி'' என்றும் குறித்திருந்தாராம்.

மண்ணோடும் மக்களோடும் இணைந்து விடுதலைப் போரை எவ்வாறு வெற்றிகரமாக முன்னெடுத்துச் செல்லமுடியுமென்பதற்கு, அன்பண்ணனின் போராட்ட வாழ்க்கை முன்னுதாரணமாக இருக்குமென்பது, மிகப் பெரும் உண்மையாகும்.

## "நிகழ்காலத்தை விலை கொடுத்துத்தான் எதிர்காலம் பெறப்படுகின்றது"

விடுதலைப் போரின் காலத்தேவை கருதி தலைவர், இந்திய மண்ணில் பணி புரிவதற்காக அன்பண்ணையை அனுப்பியிருந்தார். அங்கும் தன் கடமையில் இவர் பிறழவில்லை. மீண்டும் தமிழ் மண்ணுக்கு அழைக்கப்பட்டார். மணலாற்று மண்ணும், மக்களும் அவர் வரவில் புத்துணர்ச்சி பெற்றனர்; புதுமைகாண விழைந்தனர். வெற்றி மிகு தாக்குதல்கள் ஆரம்பமாயின. வெற்றிகளும் காயங்களும் அவருக்குப் புதியது அல்ல; வெற்றியே அவரின் வாழ்க்கை.

''எதையும் நுணுக்கமாக ஆராய வேண்டும்;
அதையும் கவலையுடன் ஆராயக்கூடாது.''

இதுவும் அவரின் உள்ளத்தில் உதித்த வாக்கியம்தான். சோகமான- கவலைமிகுந்த - வசனங்களைப் பேசவோ, கேட்கவோ விரும்ப மாட்டார். வீரம்மிக்க வசனங்களையும், வார்த்தைகளையும் எத்தனை மணித்தியாலங்கள் ஆயினும் கேட்பதில் - படிப்பதில் ஆர்வமுடன் இருப்பார். மொழி ஆளுமை அவரிடம் நிறைந்திருந்தது. கருத்துச் செறிவுள்ள வசனங்களை அடிக்கடி சொல்லிக்கொள்வார். அரசியல் பற்றி நீண்டநேரம் பேசிக் கொண்டிருந்தால் மகிழ்வுடன் பேசுவார்.

'' வெளிப்படையான போரைவிட
வஞ்சகமான சமாதானம் பெரும் கேடு விளைவிப்பது.''

பேச்சுவார்த்தை அல்லது சமாதானம் பற்றிக் கதைக்கும்போதெல்லாம் இந்த வசனங்களைச் சொல்லிக்கொள்வார். பேச்சுவார்த்தைகள், சமா தானம் என்பவற்றில் அவருக்கு துளிகூட நம்பிக்கையில்லை. சிங்களவனை ஓட ஓட அடித்துத்தான் எங்களது சுதந்திரத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்பதில், உறுதியாகச் செயற்பட்டவர்.



'' அன்பு எந்தப் பக்கம் நிற்கின்றானோ அந்தப் பக்கத்தைப் பற் றிச் சிந்திக்கத் தேவையில்லை; அங்கு எல்லாம் சரியாக நடக்கும். ஒரு பெறு மதி மிக்க கொமாண்டர் அவன். நான் என்ன நினைக்கிறேனோ அதையே அவனும் நினைப்பான்; அவன் எதை நினைக்கிறானோ அதையே நானும் நினைக்கிறேன். அந்தளவிற்கு எனக்கும் அவனுக்கும் இடையே கருத்தொற் றுமை இருந்தது. அவனுக்கு முந்தி நான் போய்விட வேண்டும் என்று விரும்பினேன்; எனக்கு முந்தி தான்போய்விட வேண்டும் என்று அவன் விரும்பினான். நாம் இருவரும் மட்டுமல்ல மூத்த தளபதி சொர்ணத்துடன் நாம் மூவரும் ஓரிடத்தில் நிற்கின்றபோது, அங்கு நிறைவையும் வெற்றியை யும்தான் கண்டிருக்கின்றோம். எங்கள் மூவருக்கும் ஒரு ராசிப் பொருத்தம் இருந்தது; கருத்துப் பொருத்தம் இருந்தது.

' உயிர் காப்பான் தோழன்'

என்ற பண்பு எம் மூவருக்குமிடையில் இருந்தது. 'நான்தான் முந்திக்கொள்வேன், நான்தான் முந்திக் கொள்வேன்' என்று மூவரும் சொல்லிக் கொள்வோம். ஆனால் அவன் எங்களை முந்திவிட்டான்!

''சண்டைக்குச் செல்லும் போதுகூட, என்ன பாதிர்? நான்தான் முந்தப் போறன் என்று சொல்லிவிட்டுத்தான் சென்றான். அவனுடன் கூடச் செல்ல முடியவில்லை என்று கவலைப்பட்டுக் கொண்டேன்'' என்றெல்லாம் துணைத் தளபதி அன்பண்ணை பற்றி சொல்லிக்கொண்டிருந்தார். அவருடைய கையில் அன்பண்ணனின் வானொலி இருப்பதை அவதானித்தேன். தோழனின் நினைவு களை அதனோடு பகிர்ந்து கொள்கின்றார் போலும்! தளபதி பால்ராஜ் அன் பண்ணனைப் பற்றிச் சொல்லிய கருத்துக்களை மனதில் நிறுத்திப் பார்க்கி றேன். எவ்வளவு பெரிய உண்மை..... எத்துணை ஆழமான தோழமை!

'இதயபூமி - 01' நடவடிக்கை வெற்றிகரமாக முடிந்த பின்னர் அன்பண் ணையைச் சந்தித்தேன். தமிழீழத்தின் துணைத்தளபதி இன்று சொன்ன உண் மைகளை அன்று என்னிடம் அவர் சொல்லியிருந்தார். ''பெரிய சண்டைகளா யினும் துணைத்தளபதியையும் மூத்த தளபதி சொர்ணத்தையும் அழைத்துக் கொள்வேன். என்னால் செய்து முடிக்க இயலாது என்பதற்காகவல்ல; அவர் கள் இருவரும் என் அருகில் இருக்கும்போது, ஒரு நிறைவைக் காண்கிறேன்'' என்று அன்று சொன்னதை இன்று நினைத்துப் பார்க்கின்றேன்,

''மண்கிண்டிமலை இராணுவ முகாம் தாக்குதலுக்குச் சென்றிருந்தபோது தான் என்றுமில்லாதவாறு தன்னுடைய உடல் வியர்த்துக் கொட்டியதாக சொன் னார். நீண்ட காலம் போடப்பட்ட திட்டம்; எமது போராளிகள் நீண்ட கடின பயிற்சியைப் பெற்றிருந்தனர். சண்டைக்குச் சென்று நிலையெடுத்துக் கிடக்கும் போது, இராணுவ முகாமில் நாய்கள் குரைக்கத்தொடங்கின. தாக்குதல் குழம்பி விடுமோ என நினைத்தபோது, குப்பென வியர்க்கத் தொடங்கியது. 'வோக்கிரோக்கி'யை இறுகப் பிடித்துக்கொண்டேன். இறுகப் பிடித்திருந்த கையினூடாக வியர்வை சிந்தியது. அன்றுதான் நான் இறைவனை வேண்டிக் கொண்டேன், என்னைப் பெற்ற தாய், என்னை வளர்த்த தலைவன், என் தாய் பற்று வைத்த முருகன் மூவரையும் மானசீகமாக வேண்டிக்கொண்டேன். தாக்குதல் வெற்றிகரமாக முடிந்தது'' என்று தன் நெஞ்சின் நினைவுகள் சில வற்றினைப் பகிர்ந்து கொண்டார்.

ஒவ்வொரு சண்டையும் முடிந்த பின்னர் அச்சண்டை பற்றிய மக்கள் அபிப்பிராயம் என்னவென்பதை வந்து கேட்டறிந்து கொள்வார். தலைவனை மணலாற்று மக்கள் நேரில் கண்டதில்லை; ஆனால், அன்பண்ணனில் அவரைக் கண்டனர். அன்பண்ணன் வளர்த்த போராளிகளும் தளபதிகளும் அவர் மீது வைத்திருந்த அன்பு, எழுத்தில் வடிக்க இயலாதது.

காட்டில் ஆரம்பகால போர்வாழ்வில் இருந்து, அவருடைய மெய்க்காப்பா ளனாக நின்று வளர்ந்து இன்று உயர்ந்த ஒரு போராளியோடு, அவர் பற்றிப் பகிர்ந்து கொண்ட சில வரிகளை இன்று நினைவுகூருகிறேன். சிலவரிகள் அன் பண்ணை பற்றி எழுதித் தருவீர்களா? என்று அவரை கேட்டேன். மௌனமாக இருந்தார். மௌனத்தின் பின் ...

''வேறு யாருக்கும் எழுதித் தருவதென்றால் கேளுங்கள்; அவரைப் பற்றி சொல்லவோ, எழுதவோ எனக்குத் தகுதி போதாது. எழுத நினைத்தால் கைகள் நடுங்குகின்றன. அவரைப் பற்றி எழுத தமிழில் சொற்களைத் தேடி எடுப்பது கடினம். தலைவரின் இலக்கினை நிறைவேற்ற அவர் நீண்டகாலம் வாழவேண்டுமென விரும்பினேன்; அதற்காக, சண்டைக் களங்களில் மட்டுமல் லாமல் இரவு பகல்கூட அவரை விட்டுப் பிரியாமல் இருந்தேன். அவருடன் ஒட்டி ஒட்டித் திரிந்ததற்காகவே எத்தனை அடிகள் வாங்கியிருக்கின்றேன். அந்த அடிகளை என் பாக்கியமாகவே கருதுகின்றேன். அந்த அடிகளே என்னை

வளர்த்தன. எண்ணற்ற தாக்குதல்களில் அவர் கூடவே இருந்து அவரைக் காப்பாற்றியிருக்கிறேன். சண்டைக்களத்தில் அருகே அவர் நிற்கும்போது எம் வீரர்களிடம் எவ்வளவு நம்பிக்கையும் துணிவும் இருந்ததென்பதை, மற்றவர்களுக்குச் சொல்லி விளங்க வைக்க முடியாது. அவருடைய பார்வையில் இருந்து தப்பி எந்தக் களவையும் செய்யமுடியாது; செய்தாலும் பொய் சொல்லித் தப்பமுடியாது. பொய் அவர் முன் மண்டியிட்டுவிடும்; உண்மை அவருடன் உறவாடும்.

அன்பண்ணனை ''டேய்'' என மரியாதைக் குறைவாக எவரும் அழைத்ததை நான் பார்க்கவில்லை. அவரை மட்டுமென்ன, எம் போராளிகளில் எவரையாவது மற்றவர்கள் இப்படி மரியாதைக் குறைவாக அழைத்தால் அவர் நெருப்பாகிவிடுவார்; சமாதானம் சொல்லி தப்பமுடியாது.

'உன்னை அடித்தவனை திருப்பி அடிக்காமல் என்னிடம் நீ திரும்பி வரக்கூடாது என்று சொல்லித்தான் என்னுடைய பாட்டி என்னை வளர்த்தவள்' என அடிக்கடி சொல்வார். பொய்க்காகவும், புரளிக்காகவும், சுத்தமின்மைக்காகவும்தான் எம் போராளிகள் அவரிடம் அடிவாங்கியிருக்கின்றார்கள். அதனால்தான் இன்று உத்தமராய், உயர்ந்தவராய், நிமிர்ந்தவராய் நாம் நிற்கின்றோம். ''நான் உயிருடன் இருக்கும்வரை உங்களைச் சாகவிட மாட்டன்; என் மரணத்துக்குப் பின்புதான் உங்களின் மரணம் நடக்கலாம்'' என்று நான் சொல்லும்போதெல்லாம், ''அது நடக்காது; நீ சாகேலாது. உங்களையெல்லாம் சாகக் கொடுக்க நான் வளர்க்கேல்லை. அண்ணையின்ரை ஆசைகளை நிறைவேற்ற வேண்டுமென்று எவ்வளவு கஸ்ரப்பட்டு உங்களை வளர்க்கின்றனென்று தெரியுமா? வளர்த்து வளர்த்துஎத்தினபேரை பறிகொடுத்திட்டன்! பறிகொடுத்துட்டு நான் மட்டும் தப்பியிருக்கிறதா? நாளைக்கு மக்கள் என்னைப் பார்த்து எத்தினை தளபதிகள் செத்திட்டாங்கள்; இவன் மட்டும் எப்படி இன்னும் உயிருடன் இருக்கின்றானென்று கேட்கக்கூடாது. நீளமாக கதை என்னத்துக்கு, உனக்கு முதல் நான் செத்திடுவன்'' என்று அடித்துச் சொல்லுவார். இறுதியாக மணலாற்றிலிருந்து யாழ்ப்பாணம் வந்தபின், இங்கிருந்து எனக்கொரு கடிதம் எழுதியிருந்தார்.

''தலைவரைக் காத்த காடு, தலைவரைக் காத்த மக்கள், மணலாற்றைத் தம் இதயமாகக் கருதிப் போரிடும் போராளிகள் எல்லாவற்றையும் கட்டுக் குலையாமல் பார்த்துக்கொள். துணைப்படையின் குறைகளை அறிந்து தீர்த்து வளர்த்துக்கொள். தலைவரின் தளராத உறுதிக்கு உரமான புதிய தலைமுறையை உருவாக்கிக் கொடு'' என்றெல்லாம் நிறைய எழுதி இறுதியில், ''உனக்கு முந்தி நான் போய்விடுவேன்'' என்ற வரிகளோடு முடித்திருந்தார். காலமெல்லாம் அவர் காப்பாளனாக இருந்த நான், கடைசியில் அவர் பக்கத்தில் நிற்க முடியாது போய்விட்டது.

''நிகழ்காலத்தைக் கொடுத்துத்தான்
எதிர்காலம் பெறப்படுகின்றது''

என்ற அவரின் தத்துவத்தை மனதில் போட்டு ஆறுதலடைகின்றேன். தலைவன் பணி செய்வதே எங்கள் கடன். அன்பண்ணனுக்குப் பக்கத்தில எனக்கும் இடம் வைத்திருக்கும்படி எழுதி வைத்துக்கொள்ளவேண்டும். அவரோடு சேர்த்து எனக்கும் எழுத மாட்டீர்களா? அவரைப்பற்றி நான் என்ன சொல்வது. உங்களுக்குத் தெரியாதா? என்று மூச்சு விடாமல் சொல்லி முடித்தார்.

அன்பண்ணன் வளர்த்த மற்றுமோர் போராளியைச் சந்தித்தேன்; அவரிடமும் அன்பண்ணனைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களெனக் கேட்டேன். அவரும் கண்கலங்க மௌனமாகவே இருந்தார். ஓரிரண்டு வார்த்தைகள் மட்டும் அவரால் சொல்லமுடிந்தது. ''நான் மட்டுந்தான் அவர் மடியில் படுத்துக்கொள்வேன். அவருடைய அன்புத் தம்பியாகவே நானிருந்தேன். இரவில்

படுக்கச் செல்லும்போது அவர் படுக்கும் இடம் தேடிச் சென்றுவிடுவேன். ஏனெனில், அவர் சிறு சத்தம் அல்லது அசைவுகள் கேட்டாலும் விழித்துக் கொள்வார். உறக்கத்திலும் விழித்திருப்பவர் அவர். இறுதியில் அவரின் நம்ப முடியாத முடிவைத் தெளிவாக அறிய,ஆறாத என் காயத்தில் இருந்து குருதி கசியக் கசிய ஓடினேன். முடிவு ... என்று சொல்லிக் கொண்டிருந்த அவரால் தொடர்ந்து பேச முடியாது போகுமளவிற்கு, வேதனை முட்டிக்கொண்டது.

## ''எலியோடு உறவாடுவதை விட புலியோடு உறவாடுவது மேல்.''

அன்பண்ணனுக்கென தனித்துவமான ஆளுமைப் பண்புகள் இருந்தன. தன்னுடைய பணியில் மற்றவர்கள் தலையிடுவதை விரும்ப மாட்டார். இதனால் மற்றவர்களுடைய திறமையில் அவருக்கு நம்பிக்கையில்லையென்பது அர்த்தமல்ல. தன்னுடைய கடமையைத் தன்னால் சரியாகச் செய்து முடிக்க முடியுமென்ற அபார நம்பிக்கை அவருக்குண்டு. அதுமட்டுமல்ல, தன்னால் திட்டமிட்டுச் செய்யப்படும் பணியில் அல்லது தன் பொறுப்பின் கீழ் திட்டமிட்டுச் செய்யப்படும் பணியில் தான் நேரடியாக சம்பந்தப்படாவிட்டால், அவருக்குத் திருப்தி இருக்காது. சண்டையாக இருந்தாலும் சரி, அரசியல் வேலைத்திட்டங்களாக இருந்தாலும் சரி, தன் கண்ணிலும் கருத்திலும் அது சரியாகப் பட்டால் மட்டுமே செயற்படுத்துவார்.

விடுதலைப் போராட்ட வாழ்வில் தனக்கெனக் கொடுக்கப்பட்ட பணியில், தன் கடைசிப் பயணம்வரை, தன்னை வளர்த்த தலைவனோ அன்றித் தான் தலைவனுக்காய் வளர்த்துக் கொடுத்த தளபதிகளோ, தன் மீது சிறு பிழைகூட கண்டுபிடிக்காத வகையில் செயல்புரிந்த வீரன் அன்பு. அன்பண்ணனின் வழிநடத்தலை மற்றவர்க்குத் தலைவர் உதாரணமாகக் காட்டுமளவிற்கு, உதாரண புருஷனாய் விளங்கிய தளபதி இவர்.

தலைவர் மணலாற்றுக் காட்டில் இருந்தபோது இவருக்கு, உணவுப் பொருட்களை உள்ளே அனுப்பும் பணியை கொடுத்திருந்தார். அடிக்கு அடி, முழத்துக்கு முழம் இருந்த இந்திய ஜவான்களின் கண்ணில்படாமல், பல மாதங்கள் இப்பணியைச் செய்திருக்கின்றார். அந்த நாட்களில் ஒருநாள்கூட ஓய்ந்ததோ, சோர்ந்ததோ கிடையாது; அல்லது ஒருநாள்கூட தன் பணியில் தவறிழைத்தது கிடையாது. எவருமே அவருக்கு ஈடாகச் செயற்பட முடியாமையினால்தான், அவர்மீது பிழைகாண முடியாமல் போயிற்று. மற்றவர்களுக்கு இவர்மீது பிழைகாணும் தகுதி இருக்கவில்லை. இவரைக் கண்டபோதெல்லாம் சகபோராளிகள் அஞ்சி ஒதுங்கினார்கள். பயத்தினாலல்ல; அவரின் தூய்மையான பணியினால். அவர் முன் வாய்திறந்து யாரும் பொய் சொல்லியதில்லை; அது அவருக்குப் பிடிக்காத முதல் செயலென்பது, அவரால் வளர்க்கப்பட்ட அனைத்துப் போராளிகளுக்கு மட்டுமல்ல சக தளபதிகளுக்கும்கூடத் தெரிந்தது தான்.

அன்பு நிற்கும் இடத்தில் சண்டை இருக்குமென்பது போராளிகளினதும் பல தளபதிகளினதும் கருத்தாகும். அன்பண்ணன் கடந்த சில மாதங்களாக யாழ். வந்து நின்றபோது, ''அன்பு வந்து நிற்கிறான்; ஏதோ சண்டை 'செற்றப்' இருக்குது போலக் கிடக்குது'' எனப் பல போராளிகளும், தளபதி

களும் பேசிக்கொண்டதைக் கேட்டிருக்கின்றேன். அவர்களின் கருத்துப் பொய் யல்ல என்பதை மக்களும் அறிவார்கள்.

மக்கள் அன்பண்ணன் முன் தலைகுனிந்து நின்று பேசியதைத்தான் நான் கண்டிருக்கின்றேன். இவரின் சர்வாதிகாரத்தினாலல்ல; பண்பால், பார்வையால் மக்களின் குறையறிந்து தீர்த்த உயர் குணத்தினால் மணலாற் றில் இருக்கும் எந்த உயிரையும் நீங்கள் சந்தித்துக் கேளுங்கள், கண்ணீரைத் துடைத்துவிட்டே அன்பண்ணனின் கதை சொல்லுவார்கள்.

''அதிகாரி என்பவனுக்கு அதிகாரங்கள் தேவைதான்
ஆனால் அவன் சர்வாதிகாரியாகிவிடக் கூடாது''

என்று அடிக்கடி சொல்லுவார். தன்கீழ் அரசியல் பணி புரிய நியமித்த வீரர்களுக்கு அவர் அடிக்கடி சொல்லும் புத்திமதிகளில் இதுவும் ஒன்று. ''மக் கள்மீது நாம் கோவிக்கக் கூடாது; மக்கள் விடுதலைக்காக எங்களை அர்ப் பணிக்கப் புறப்பட்ட நாம், மக்கள் மீது காரணம் இன்றிக் கோவிக்கலாமா? அவ்வாறு கோவித்தால் அவர்களுடைய இலக்கு என்ன? ஒவ்வொரு நிமிஷமும் மக்களோடு அன்பாக அவதானமாக நடந்து கொள்ள வேண்டும்.''

துட்டர்களோடு உறவு வைத்துக்கொள்ளமாட்டார்; துட்டர்களோடு உறவு வைத்துக்கொள்பவர்களையும் பிடிக்காது. ஆனால் திருத்த முடியா தெனக் கண்ட பலரைத் திருந்தி, வாழ வழியமைத்துக் கொடுத்திருக்கின்றார். அவர்களோடு அவரின் கைத்துப்பாக்கிதான் பேசும். உயிரைப் பறிப்பதற்கல்ல; உயர்ந்தவர்களாக்குவதற்கு. காதருகால், காலருகால், தலையருகாலென நாலைந்து குண்டுகள் பறக்கும். காலடியில் விழுவார்கள், ''அண்ணோய் நான் திருந்திட்டனண்ணோய். சுட்டுப் போடாதேங்கோ, சுட்டுப்போடாதேங்கோ'' என்று வேண்டி எழுவார்கள். இவ்வாறு அவரின் கைத்துப்பாக்கியால் திருந்தி வளமாக வாழ்வோர் பலர். அவர்களை உங்கள் முன் கொண்டுவந்து நிறுத்த முடியும்; அவர்களிடம் அன்பண்ணனைப் பற்றிக் கேளுங்கள் - கண்ணீர் பெருக கதை சொல்வார்கள்.

''எலியோடு உறவாடுவதை விட
புலியோடு உறவு கொள்வது மேல்''

என்று சொல்லி, அதற்கு விளக்கமும் தந்து, மீசையைக் கடித்துக் கொண்டே சிரிக்கும் அவரை எப்படி மறக்க முடியும்?

## தலைவனில் பற்று வையுங்கள் தமிழீழம் நிச்சயம் கிடைக்கும்

"நாம் செய்கின்ற அனைத்தும் சரியில்லாவிடினும், மேலும் பிழைகள் விடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். நாம் பத்து நாட்கள் இயக்கத்தில் இருந்தாலும்சரி, பத்து மாதங்கள் இருந்தாலும்சரி, இயக்கத்திற்கு எவ்வள விற்கு எவ்வளவு நம்பிக்கையுடனும் விசுவாசத்துடனும் இயங்கிக்கொண்டிருக்க முடியுமோ அந்த அளவிற்கு இயங்கிக்கொண்டிருக்க வேண்டும். நம்மால் எதைச்

செய்ய முடியவில்லையோ அதை உடன் மேலிடத்துக்கு அறிவித்துவிட வேண்டும். எல்லாம் சரியாகச் செய்கின்றோம் எனக் கூறிக்கொண்டு, எமது தனிப்பட்ட நலனையோ அல்லது இயக்கத்தில் சகபோராளிகளுக்கு தனிப்பட்ட சலுகைகளையோ செய்து, குழப்பத்தை ஏற்படுத்தக்கூடாது. எமது இயக்கத்தைப் பொறுத்தமட்டில் நாமாகவே வந்து சேருகின்றோம்; அதேபோல் விரும்பாவிடில் விலகிக்கொள்ளலாம். ஆனால் இயக்கத்தில் இருந்துகொண்டு, எமது சொந்த வாழ்க்கை தொடர்பாகச் சிந்திக்கவோ செயற்படவோ நினைப்பது துரோகச் செயலாகும். இயக்கத்தின் கட்டுப்பாட்டிற்குட்பட்ட பிழைகள் இருப்பின் திருத்த முடியும். கட்டுப்பாட்டிற்கு மேற்பட்ட தவறுகள் செய்வதைப் பொறுத்தே விலக்கிவிடுகின்றார்கள்; அல்லது மரண தண்டனை வழங்கப்படுகின்றது. நான் செய்கின்றது அனைத்தும் சரியில்லாவிடினும் குழப்பமான, சோம்பேறியான, துரோகத்தனமான நிர்வாகம் நடத்தவில்லை.''

''நீ வீரனாக இருந்தால்மட்டும் போதாது; நீ மரணிக்கும் போது இன்னும் ஒருவனை உருவாக்கிவிட்டு மரணிப்பாயானால் அதுவே தியாகத்தின் நிழலாகும். என்னால் இயன்றமட்டில் இயக்கத்திற்குத் துரோகம் செய்யாமல் நடக்கின்றேன். நான் மட்டும் அவ்வாறு நடந்தால் போதாது; சகபோராளிகளும் தவறான வழியில் செல்லாமல் பார்த்துக் கொள்வதே தலைவன் வழியில் செல்வதாகும். என்றைக்கு இயக்கத்தில் சத்தியப் பிரமாணம் செய்தோமோ, அன்றிலிருந்து சாகும்வரைக்கோ அல்லது இயக்கத்தைவிட்டு விலகும் வரைக்கோ தாய், தந்தை, சகோதரன் எல்லாம் - எமது தலைவர். தலைவர் என்றால் தமிழீழம்; தமிழீழம் என்றால் தலைவர் என்பதில் சந்தேகம் இல்லாதிருந்தால், நிச்சயம் வெல்வோம் தமிழீழம்.''

''எமது தலைவன் தமிழீழத்தை நேசித்தாரே தவிர, சலுகைகளை அவர் யாசிக்கவில்லை. தமிழ் மக்களின் சோகத்தைத் தீர்க்கவேண்டும் என்று யோசித்தாரே தவிர, சொந்தபந்தத்தைப் பற்றிச் சிந்திக்கவில்லை.''

1990இன் தொடக்கத்தில், தனது நாட்குறிப்பில் தளபதி அன்பு குறித்துக்கொண்ட வரிகள் இவை. தலைவன் வளர்த்த தளபதியைப்பற்றி எழுதும் வரிகளல்ல இவை; தலைவன் வளர்த்த தளபதி, தன் கைப்பட எழுதிய வரிகளே இவை !

தலைவனின் காலடியில் வளர்ந்து, அவனின் ஒவ்வொரு அடிச்சுவட்டின் அர்த்தங்களையும் புரிந்துகொண்டு, அதனை நெஞ்சில் ஆழமாகப் பதித்து, தலைவனின் இலக்கினை இரட்டிப்பாக பாய்ந்து நிறைவேற்றி வெற்றிகொள்ளும் தளபதி அன்பு. இதனை மறுபக்கமாகச் சொன்னால், உறுதிகொண்ட தலைவன் உண்மையின் வடிவமாய் - வீரத்தின் சிகரமாய் - நேர்மையின் நிமிர்வாய் - அஞ்சாமையின் தணலாய் - அன்பின் உருவமாய் - காட்டின் காவலனாய் - அனைத்திற்கும் மேலாக தன் அன்புக்குழந்தையாய், அன்புவை வளர்த்திருந்தார்; அந்த அன்பு உள்ளத்தின் உண்மை வரிகளே இவை.

## தியாகத்தின் நிழல் எது?

மற்றவர்களைப் பயன்படுத்தி தான் உயர்ந்துவிட வேண்டுமென்று நினைக்கும் மனித உலகைத்தான் நாம் சந்தித்திருக்கின்றோம்; கண்டிருக்கின்றோம்;

கேட்டிருக்கின்றோம். ஆனால், தானிருக்கும் காலத்தில் பலரை வளர்த்து ஆளாக்கி விட வேண்டுமென விரும்பி, அதற்காக இடையறாது முயன்று வெற்றிகண்டவர் தளபதி அன்பு.

சக போராளிகளுக்கு இராணுவ வகுப்பு எடுக்கும்போது, தத்துவ வசனங்களோடு விளக்கம் கொடுப்பது இவரின் சிறப்பியல்பு. கடந்த சில ஆண்டுகள் மணலாற்று வாழ்வில் அவர் சொல்லிய தத்துவ வசனங்களையும், அதற்கான போராட்ட விளக்கங்களையும் புரட்டிப்பார்ப்பது கடினமானது. கடந்த ஆவணித் திங்களில் அவர் எடுத்த வகுப்பில் சொல்லிய சிலவற்றை இங்கு நினைவுகொள்கின்றேன்.

''உலகத்தில் எத்தனையோ விடுதலை அமைப்புக்கள் போராடுகின்றன. ஆனால், எமது தலைமைபோல் உறுதியான, ஆழ்ந்த சிந்தனையுள்ள, பரந்த நோக்குள்ள, கட்டுப்பாடான தலைமை எங்கும் இருந்ததில்லை. இதனால் தான், எந்நிலையிலும் எமது குறிக்கோளில் அசையாத நம்பிக்கையுடன் போராடிக்கொண்டிருக்கின்றோம்''.

நெருப்பு தொட்டால் சுட்டெரிக்கும். சுட்டெரிக்குமென்பதற்காக அதைக் கைவிட்டுவிடக்கூடாது; ஏனெனில், அதுதான் சமைக்கவும் உதவுகிறது. இது போன்ற தொடர்புதான், ஒரு போராளிக்கும் பொறுப்பாளருக்குமிடையில் இருக்க வேண்டும்.

''தன்னால் செய்யமுடியுமென்ற வேலையைத்தான் இன்னுமொருவனுக்குக் கொடுக்கவேண்டும். அதன்மூலம், இரண்டுபேருமே புரிந்துணர்வுடன் அந்த வேலையைச் செய்யமுடியும். கட்டளைகள் தெளிவாக இல்லாதுபோனால், அது அதிகாரியின் தவறு; கட்டளைகள் தெளிவாக இருந்து செயலில் தவறு இருந்தால், அதை நடைமுறைப்படுத்தவேண்டியது குழுத்தலைவரின் பொறுப்பு; இரண்டும் சரியாக இருந்தும் செயற்பாட்டில் தவறு இருந்தால், அது போர் வீரனின் பொறுப்பு''.

''மில்றி என்ற பெயரைக் கேட்டு நாம் பயந்துவிடக்கூடாது. அது உடைக்கு இடப்பட்ட பெயர்; அந்த உடைக்குள்ளே இருப்பவன் நம்மைப் போன்றவன். இந்த உண்மையைத் தெளிவாகப் புரிந்துகொண்டால், வெற்றி எமது பக்கந்தான். எமக்கென்று கடமைகள் பலவுண்டு. நாம் வீரனாக மட்டுமிருந்தால் போதாது; நாம் மரணிக்கும்போது இன்னுமொருவனை உருவாக்கி விட்டு மரணிப்போமானால், அதுவே தியாகத்தின் நிழலாகும்''.

பயனுள்ள இத்தகைய தத்துவங்களைப் போராளிகளுக்கு உணர்த்திய வழிகாட்டி, இன்று தியாகத்தின் நிழலாய் எம்மைத் தொடர்கின்றான். அவன் நிழலாய் நாம் தொடர்கின்றோம். ஒவ்வொரு தடவையும் புத்திபுகட்டிவிட்டு இறுதியாக, ''நான் சொல்லுறது இப்ப உங்களுக்கு ஏறாது; நான் செத்தாப் பிறகு நினைச்சு நினைச்சுக் கவலைப்படுவியள்'' என்று சொல்லிக்கொள்வார்.

நெஞ்சு புண்ணாக நினைக்கின்றோம்; அவர் காட்டிய வழிகள் தெளிவாகத் தெரிகின்றன.

## போர்வீரன் குரலொன்று.....

சிங்களத்துச் செருக்கழிக்க செந்தமிழன் புறப்பட்டான்
வஞ்சகரை வரித்தழிக்க வரிப்புலியாய்ப் புறப்பட்டான்

அஞ்சினரின் துயரழிக்கத் தூயவனாய்ப் புறப்பட்டான்
மெய் சிலிர்க்கும் நெஞ்சமொடு செந்தணலாய்ப் புறப்பட்டான்.

புண்பட்ட தமிழினம் பண்பட்டு வாழ்ந்திடவே
விண்முட்டத் தமிழரின் வீரம் விரிந்திடவே
கண்முட்டும் தமிழரின் திரைகள் அகன்றிடவே
பூநகரி மண்ணிலே புலியாகப் புறப்பட்டான்.

வஞ்சகச் சிங்களரின் நஞ்சகம் கண்டதுமே
கொடும் சிங்களக் கொலைஞரின் கொடுமைகள் கண்டதுமே
கடும் வெஞ்சமர் வேள்வியில் தமிழர் துஞ்சிடல் கண்டதுமே
பெரும் வெஞ்சினங் கொண்டே வேங்கையாய்ப் புறப்பட்டான்.

சிங்களக் கோரர் சிதைந்து ஒழிய
தங்கத் தமிழர் மண் விடிந்து புலர
தமிழர் மண்ணது மீண்டும் பெருக
தானைத் தளபதி தளராது களமமைத்தான்.

பாசமென நாம் நினைத்த பக்கத் தயலவனோ
மோசமென மாறியதால் மோதல் வெடிக்க
தீயர் இவரெனவே தீரனாய்த் திரண்டெழுந்து
வேகமென மணலாற்றில் வென்றொழித்தான் பாதகரை.

ஹயசேன மின்னலொடு கஜபார ஏழுசக்தி எனவெல்லாம்
எதிரியவன் எம்மண்ணை எடுத்தாள எண்ணியதை
மின்னலெனக் கலங்காமல் புயலாகிப் புவியதிர
அன்பினது படைநகர சிதறியது சிங்களமே.

கோட்டை முடிதொட்டு மணலாற்று எல்லைவரை
இதயபூமி ஒன்று தொட்டு பூநகரி வெற்றிவரை
இம்மண்ணில் இருந்தழித்த இரக்கமற்ற ஈனர்களை
எரித்தழிக்க எரிமலையாய் எழுந்தவன்தான் அன்பு.

தலைவன் வளர்த்தெடுத்த தங்கச் சிமிழே
பெரும்படைகள் எதிர்த்தழித்த எரிமலையின் பிழம்பே
படைகள் நகர்ந்து விடிகின்ற வேளைதனில்
தலைமகனே! நீ மட்டும் எங்கே போய்விட்டாய்.

மறவராய் நீ வரித்த வீரர்கள் கண்கலங்க
துணிவோடு நீ வளர்த்த துணைப்படைகள் துயர் கொள்ள
திரண்டெழுந்த முல்லை மக்கள் வழிபார்த்து விழிகலங்க
தலைமகனே! நீ மட்டும் எங்கு போனாய்?

தடைகள் அழிப்பதற்காய் பிறப்பெடுத்த உயிரே
துன்பம் துடைத்தெறிய துணிந்த வீரனே
வஞ்சகரைத் தீர்த்தழித்த வரிப்புலிகள் வரிசையிலே
தூயவனாய் துயில்கின்றாய் நீ தூங்கு.

தாயக விடுதலைக்காய் தணிந்த உன்னுடலை
தோளிலே சுமந்து மண்ணிலே விதைத்தவர்கள் - உன்
கல்லறையில் கை தொட்டு நிமிர்ந்த நினைவுடனே
விடுதலைக் களம் நோக்கி வீறுடனே சென்று விட்டார்.

போர்முகம் சென்று வீரர்கள் அணிவகுக்க
துணிந்தவராய்த் துணைப்படைகள் வெகுண்டெழுந்து நிற்கின்றார்
அந்தோ! எங்கள் மண்ணது அழகாய்த் தெரிகிறது.
தமிழ் மகனே அமைதியாய் நீ தூங்கு.

– கோபி

## இணையற்ற தளபதியே!

மணலாற்று மண்ணின்
இணையற்ற தளபதியே
தமிழ்காக்க வந்த தர்ம சீலனே
காலம் கரையலாம் - ஆனால்
கரையாது உன் வீரம்.

நாள் முழுதும் நீ விழித்து
பலமான படை வடித்து
தளராது போர் தொடுத்து
நிலையான பல வெற்றி
நிறைவாகத் தந்தவன் நீ

தமிழகத்தில் எம் பணிக்கு
சில காலம் பொறுப்பானாய்
மறத் தமிழர் குலத் தலைவன்
பிரபாகரனைக் காத்த
மணலாற்று மண்ணின்
தளபதியும் நீயானாய்.

அன்று தொட்டு,
அண்ணா, அக்கா, அப்பு, தாத்தா,
அனைவரும் படையினிலே
நாலுதெருச் சந்தியிலே
வம்பு பேச ஆளில்லை
அனைவரும் சென்றியிலே
மணலாற்று மழலைகூட
புறம்பாட வைத்தவன் நீ.

தாடி என்று பெயரொலித்தால்
தரிக்காது எதிரி படை
'எல்'வலயக் குடியேற்றம்
எட்டவே ஓட

கட்டுப்பாடுள்ள
காட்டுப்புலி வளர்த்தவன் நீ.

மணலாற்று மண்ணில்தான்
என் முடிவிருக்கும் என்று
வாயாரச் சொன்னாய்
விடிவு தெரிந்தது.
நீ பிறந்த மண்ணில்
புகழின் கொடியொன்று
வான்முட்டப் பறந்தது.
காற்றோடு செய்தியொன்று
காதிலே நுழைந்தது.

கானகத்து உன் வீட்டில்
கண்கலங்கச் சிலையானோம்
கைகட்டி நின்று - மீசை
கடிக்கின்ற உன்னுருவம்
நெடிதுயர்ந்து நிற்கிறது.
துடிக்கிறது எம் கரங்கள் - நாளை
வெடிக்கும் சமரில்
வடிக்கும் உன் நினைவுகளை
மண்ணும், காற்றும், விண்ணும்
இசைக்கின்ற கானத்தில்
இருக்கும் சுதந்திரம்.
இது உறுதி!

- **வேணியன்**
(போராளி)
மணலாறு.

வீரஜனனம்:
05. 04. 1970

வீரமரணம்:
23. 05. 1988



## 2 ஆம் லெப். ஜீவன்

(இந்திய மோதல்)
(சுந்தரலிங்கம் ரகுநாதன்)
தென்னமரவாடி,
மணலாறு

**வீ**டு போனது; தான் பிறந்த கிராமம் போனது; இனிப் பறிபோவதற்கு உயிரொன்றுதான் உள்ளது என்பதை உணர்ந்து - உயிரை மண்மீட்புக்காய்க் கொடுக்க நினைத்துக் களம் புகுந்தான் ஜீவன். இவன் பிறந்த தென்னமர வாடிக்கிராமம் சிங்களத்தின் வெறிப்பசிக்கு இரையாகிப் போனகதை வேதனை யானது. அந்த வேதனை, அவனது மரணம்வரை அவனுள் எரிமலையாய்க் கொதித்தது.

மேஜர் பசிலனின் வளர்ப்பில் உருவாகிய புலி இவன். தலைவரின் நம் பிக்கைக் காவலரான பசிலனிடம் இருந்து மணலாற்றுக் காட்டுக்கு அனுப்பப் பட்ட புலிகளில் ஜீவனும் அடங்கியிருந்தான். இடம், பணி, காலம் என்ற மூன்றையும் கருத்திற்கொண்டு செயற்படத்தொடங்கினான் ஜீவன். 'செக்மேற் - 01' என்ற முதல் இராணுவ நடவடிக்கையினை இந்திய இராணுவம் காட்டில் தொடங்கியிருந்தது. நாவல்கேணியில் காவல் பணியில் நின்றான் ஜீவன்.

தடயங்கள் எமது இருப்பிடத்தை எதிரி தேடிப்பிடிக்கப் பெரிதும் உதவி விடுகின்றன. சாமான்களைத் தூக்கி வரும்போது பல இடங்களில் பருப்புக் கொட்டுப்பட்டிருந்தது. அத் தடயங்களின் வழியே இந்திய ஜவான்கள் விரைந்து வந்துகொண்டிருந்தனர். சில நிமிடங்களில் சண்டை தொடங்கியது.

குறைந்த வீரர்கள்; பெரும் எண்ணிக்கையான இராணுவத்தினரை சந்திக்க வேண்டிய இக்கட்டான நிலமை; ஜீவனின் துப்பாக்கி சடசடக்கத் தொடங்கி யது. ஒவ்வொரு ஜவானையும் குறிவைத்துத் தாக்கிக்கொண்டிருந்தான். கண் முன்னே எதிரிகளிற் பலர் வீழ்ந்துகொண்டிருப்பதைக் கண்டு, ஜீவன் பெரு மகிழ்ச்சி கொண்டான். தன் கடமையில் நிதானமுடன் செயற்பட்டுக் கொண்டிருந்த ஜீவனின் உடலை, எதிரியின் குண்டொன்று அறுத்துச் சென்றது; ஜீவனின் உயிர் பெருமிதத்துடன் மெல்ல மறைந்தது.

காட்டுக்காய் உயிர் கொடுத்த முதல்வீரன்என்ற பெருமையோடு அவன் கண்மூடினான். காட்டில் முதலில் உதிர்ந்த ஜீவன் 'வணங்கா மண்ணின்' முதல் வித்து. புகழோடும் பெருமையோடும் உதிர்ந்த ஜீவனின் குரல் காடெல்லாம் ஒலிக்கிறது! ☆

வீரஜனனம்:
11. 10. 1960

வீரமரணம்:
02. 03. 1989



# மேஜர் கமல்

(அருணாசலம் சுந்தரராஜன்)
4ஆம் வாய்க்கால்,
கிளிநொச்சி.

உள்ளத்தில் வேரோடி, எண்ணத்தில் விருட்சமாய் நின்றவர் கமல் அண்ணன். பலசாலிகள் பலரைப் பார்த்திருக்கிறேன். ஆனால், கமல் அண்ணனைப்போல், இரண்டு ஜி. பி. எம். ஜி. துப்பாக்கியை, இரண்டு கைகளிலும் தூக்கி நேராகப் பிடிக்கக்கூடிய பலசாலிகளைப் பார்க்கவில்லை. பலரின் தோற்றத்தைக் கண்டு பயந்து வியந்திருக்கின்றேன். கமலண்ணனின் தோற்றத்தைக் கண்டு பயந்து, வியந்து நின்றது போல் எங்கும் நிற்கவில்லை. அன்பும், கருணையும் எல்லாரிடமும் இருந்தது; கமலண்ணனிடமே அவற்றை நான் அதிகமாகப் பெற்றிருக்கின்றேன்.

மணலாற்றுக் காட்டில் இவருடன் வாழ்ந்த நாட்களின் சில நிகழ்வு களையும், அவரைப்பற்றி சகபோராளிகள் பேசிக் கொண்டவற்றையும் சில கணம் சிந்தித்துக்கொண்டிருந்தேன். அந்தச் சிந்தனையின் கோடுகள் ஓரி ரண்டு வரிகளாய் எழுகின்றன.

அகன்ற மார்பு......திரண்டு முறுக்கேறிய தசைநார்கள், ரத்தம்போல் சிவந்திருக்கும் கண்கள்......சவரம்செய்யப்படாத தாடி......சிப்பினை அறியாத தலைமுடி...... இருண்ட நிறம்......கமலண்ணையை இலகுவில் மறந்துவிட முடியுமா......? நினைவை விட்டு அகலாத தோற்றம் மட்டுமல்ல, உள்ளத் தில் ஆழப்பதிந்த நினைவுகள் கொஞ்சமா......?

மணலாற்றுக் காட்டில் நித்திகைக்குளப் பிரதேசத்தில், இந்தியப் படையின் மிகப்பெரிய முகாமொன்று அமைந்திருந்தது. வான்படை 'கெலிக் கொப்ரர்களின்' இறங்குதள வசதிகளுடன் கூடிய இப் படைமுகாமில், தின மும் நான்குக்கு மேற்பட்ட 'கெலிக்கொப்ரர்கள்' தரித்துநிற்கும். இவற் றைத் தாக்கி அழிக்கின்ற பணி ஒப்படைக்கப்பட்டது. ஒன்பது பேர்கொண்ட அணி...... தற்கொலைப் படைக்கு ஒப்பான தாக்குதல்...... தனது நம்பிக்கை மிக்க, பொறுப்புமிக்க வீரர்களையே தெரிந்தெடுத்து அனுப்பினார் தலைவர். கமலண்ணையின் தோளில் சிறுதடி போல் கிடந்தது ஆர். பி. ஜி. சிறு தளம்பல்கூட இல்லாமல் ஆர். பி. ஜி இயக்கும் வலிமை, கமலண்ணையி டம் சாதாரணமாகவே இருந்தது. குறிதப்பாமல் செலுத்திய கமலண்ணை யின் ஆர். பி. ஜி. கணையில் 'கெலிக்கொப்ரர்கள்' தீப்பற்றி எரிந்தன. இன்றும் கண்முன்னே நிழலாய்த் தெரியும் அந்த நிகழ்வை மறந்துவிட முடி யுமா......?

இந்திய மண்ணில் பயிற்சி முடித்த கமலண்ணன் பயிற்சியின் பின் தலை வரின் மெய்க்காப்பாளனாகவும், அவரது வாகனச் சாரதியாகவும் இருந்து, அவருடனேயே ஈழமண்ணில் கால்பதித்து, யாழ்ப்பாணத்தில் இந்தியப் படைக்கெதிரான களம்கண்டு, மணலாற்றுக்கு அவருடனேயே வந்தவர் என்று தோழர்கள் அவரைப் பற்றிச் சொல்லக் கேள்விப்பட்டேன். மண லாற்றில்தான் அவரோடு பழகும் பாக்கியம் கிடைத்தது.

மணலாற்றுக் காட்டில், பெண் போராளிகளுக்கான இரண்டாவது படைப்பயிற்சிப் பாசறையைப் பொறுப்பேற்று நடத்தி முடித்தவர். இவரை இழந்து, வேதனைகளைச் சுமந்து சுமைதாங்கியாய் நின்ற அந்த இறுதி நாட்களைப் பற்றி, நினைக்காமலிருக்க முடியாது.

இந்தியப் படையின் காட்டு முற்றுகைத் தாக்குதலின் இரண்டாம் கட்ட நடவடிக்கையான 'செக்மேற் - 02' தொடங்கியது. நீண்ட நாட்கள் சவரம் செய்யப்படாத முடியையும், தாடியையும் சவரம் செய்திருந்தார். பார்ப்பதற்கு லட்சணமாக இருந்தது. அழகு பார்த்து சிரித்து மகிழ நேர மில்லை. சண்டை தொடங்கியது. சிலமணி நேரந்தான் ...மலையொன்று சரிந்தது .....உரமேறிய அந்த நெஞ்சில் எப்படித்தான் குண்டு துளைத்துக் கொண்டதோ தெரியாது! குருதியாற்றில் குளித்துக் கிடந்தார் கமலண் ணன். நெஞ்செல்லாம் ஒருகணம் நின்று துடித்தது. அசையாத மலை யொன்றினைக்கூட அவன் சாவு, ஒருகணம் அசைத்துநின்றது!

வீரஜனனம்:
02. 09. 1970

வீரமரணம்:
27. 06. 1989



## மதன்

(இந்திய மோதல்)
(வேலுப்பிள்ளை இராஜேந்திரம்)
செல்வா நகர்,
கிளிநொச்சி.

கலியுகனோடு இணைந்து, அவன் பட்ட துன்பங்களிலும் அவன் சுமந்த சுமைகளிலும் பங்கெடுத்து, இறுதியில் மரணத்திலும் அவனுடன் இணைந்து கொண்டவன் மதன். வெட்டப்படாத தலைமுடி, சீவி இழுக்க நேரமற்ற வேலை, நித்திரையற்ற இரவுகள்...... இவற்றையெல்லாம் ஒரு கெரில்லா யுத்தத்தில் அனுபவிக்கவேண்டி வரும் என்பதை முன்னர் படித்திருந்தபோதும், அதனை அனுபவத்தில் உணர்ந்துகொண்ட காட்டு வாழ்க்கையை மறக்க முடியாது.

தண்ணீருக்காய் அலைந்து இறுதியில், சேற்று நீரையும் பாசிநீரையும் குடித்துக்குடித்தே கிணறு வெட்டியவர்களில் மதனும் ஒருவன். இவர்கள் சிந்திய வியர்வையில் - இவர்கள் சிந்திய இரத்தத்தில் - முளைத்த பாறைகள் தான் பல்லாயிரக்கணக்கான போராளிகளை உருவாக்கி, பாதுகாத்து வளர்த்து, விடுதலைப் போரில் நிறுத்தி நிற்கிறது. கடமைவீரர்கள் பிறர் வாழத் தம்மை ஈந்த வள்ளல்கள்; தற்கொடையாளிகள். எந்தச் சொல் லால் அவர்களின் தியாகத்தை எழுதுவதென்பது சிந்தனைக்கு எட்டாதது.

ஓடி ஓடி - ஓய்வின்றி உணவுப் பொருட்கள் சுமந்து கொண்டிருக்கும் போது, எதிர்பாராமல் தூண்டாவியில் எதிர்ப்பட்ட இந்திய இராணுவ அணி யுடன் ஏற்பட்ட மோதலில்தான், இந்த வள்ளலும் தன்னைத் தற்கொடை யாக்கிக்கொண்டான்.

வீரஜனனம்:
17. 06. 1965

வீரமரணம்:
27. 06. 1989




# லெப். ஜோக்கின்

( இந்திய மோதல் )
( செந்தில் சக்திவேல் )
வல்வெட்டித்துறை.

அடுப்பெரிந்தால் வயிறு நிறையும். எல்லார் நிலையும் அதுதானே என்ற கேள்வி எழலாம். ஆனால் ஜோக்கின் வீட்டில், விடிந்ததும் விடியாததுமாய் தோசைக்கல் அடுப்பில் ஏறும். அவனது தாய், முகத்தில் குப்பெனப் பிடிக்கும் புகையால் கண்கலங்க, தன் கையாலும் சேலைத்தலைப்பாலும் மாறி மாறிக் கண்ணீரைத் துடைத்தபடி, தோசை அல்லது அப்பம் சுட்டுக்கொண்டிருப்பாள். அன்றைய காலை வியாபாரத்தில்தான் அக் குடும்பத்தினரின் வயிறு அன்று நிரப்பப்படும்.

அடுப்படியில் இருந்து நெருப்பு வெக்கையாலேயே ஓடாய்ப்போன தாய்க்கு, தான் ஒரு சுமையாக இருக்க விரும்பவில்லை. அத்துடன் தலைவர் பிறந்த மண்ணில் பிறந்தவனாகையால், மண்பெருமை குன்றி விடாமல் காக்க வேண்டுமெனவும் நினைத்துவிட்டான். இதனால் ஈழப்போரில் தன் பங்கையும் செய்துவிடப் புறப்பட்டான். யுத்தப் பயிற்சியைப் பெற்றுக்கொண்ட பின், வல்வெட்டித்துறையிலேயே தனது அரசியல் பணியையும் தொடங்கினான். மக்களோடு பழகி மக்கள் பிரச்சினைக்கு முகம் கொடுப்பது, சற்றுச் சிரமமானது; அதுவும் இந்திய இராணுவ நெருக்கடிக்குள் மக்களுக்குள் வேலை செய்வது, அதைவிடக் கடினம். ஜோக்கின் உற்சாகத்துடன் இப்பணியைச்

செய்தான். இரண்டு மூன்று தடவைகள் இந்திய ஜவான்களின் சுற்றிவளைப் புக்குள்ளாகினான். ஒருதடவை துப்பாக்கிச் சூட்டிற்கு இலக்காகி, காயத் துடன் தப்பிக்கொண்டான். நெடியகாடு சுற்றிவளைக்கப்பட்டபோது 'கிரனேட்' டொன்றை வீசி வெடிக்கவைத்துத் தப்பிக்கொண்டான்.

இயக்கத்திற்காக பல இளைஞர்களைத் திரட்டி அனுப்பிய பெருமை யும் ஜோக்கினுக்குண்டு. இந்திய இராணுவ நெருக்கடிக்குள்ளாகியிருந்த நிலையிலும் தன்பணியைச் சரியாகச் செய்து நின்றான். 89 இல் மணலாற்றுக் காட்டுக்கு அழைக்கப்பட்டான். மணலாற்றில்தான் அவன் சாவு வரையப் பட்டது. காட்டிற்குள் உணவுப் பொருட்களைக் கொண்டுவரும் பணியில், தூண்டாவியில், எதிர்பாராமல் இந்திய இராணுவத்துடன் மோதல் ஏற்பட்டது. காலில் காயமுற்ற நிலையில் காப்பாற்றும் பணி நடந்தது; ஆனால் ஜோக்கின் தன்பணியை முடித்துக்கொண்டான். ☆

வீரஜனனம்:
04. 07. 1970

வீரமரணம்:
27. 06. 1989




# லெப். அற்றி

( இந்திய மோதல் )
(கந்தசாமி கருணாகரன்)
கோட்டைக்கல்லாறு,
மட்டக்களப்பு.

கோட்டைக்கல்லாறு கிராமத்தில் இருந்து விடுதலைப் போருக்குப் புறப் பட்ட அற்றியின் வாழ்வில், பல புதிர்கள் உண்டு. கறுப்பு நிறமும், சிவந்த கண்ணும், சிரித்த முகமும் கொண்ட அற்றியின் அண்ணன் ஒருவன் தேச விரோதக் கும்பலில் இணைந்துகொண்டான். எமது இயக்கத்தில் அற்றி இணைந்தபோது, இருவருக்குமிடையே கருத்துமோதல் ஏற்பட்டு, சபதம் செய்துகொள்ளுமளவில் முடிந்தது. இருவரும் ஒருவரையொருவர் சுட்டுவிடுவ தாய்ச் சபதம் கொண்டனர்.

மாதங்கள் சில சென்றன. காடொன்றில் எதிர்பாராமல் தமையனைச் சந்தித்தபோது, அற்றி மீது சரமாரியாகச் சுட்டான் தமையன். காலில் இரண்டு சூட்டுக் காயங்களுடன் தப்பிக்கொண்டான் குறிதவறாது சுடுவதில் அற்றி நிகரற்றவன். மணலாற்றுக் காட்டுக்கு வந்தபின், கரும்புலிக்கான பயிற் சியை முடித்துக்கொண்டான். பொய், களவு செய்யத் தெரியாதவன். எவரு டனும் அதிகம் பேச விரும்பமாட்டான்; ஆனால் அமைதியாக இருக்கும்போது, ''வானுயர்ந்த காட்டிடையே நானிருந்து பாடுகிறேன்......'' என்ற பாட்டை மெதுவாக அவன் வாய் முணுமுணுத்துக் கொண்டிருக்கும். அல்லது ''வண் ணாத்திப்பூச்சி வயதென்ன ஆச்சு'' என்று தன்னை மறந்து பாடிக்கொண் டிருப்பான்.

இந்திய ஜவான்களின் காட்டு முற்றுகையை முறியடித்து உணவுப் பொருட்களை உள்ளே அனுப்பும் அணியில் ஒருவனாய் நின்று செயற்பட்டுக் கொண்டிருந்தான். ஒற்றை மாட்டு ரயர் வண்டியைக் கேட்டால் அற்றியின் கதை சொல்லும். தூண்டாவில் கடற்கரையும், கொத்தியாம்பத்தை ஊண்ணிப் பத்தையூடான ஒற்றையடிப் பாதைகளும், கரச்சிவெளியும் இவன் பாதச்சுவடு களால் நிறைந்தன.

அலம்பில் ஐந்தாம் கட்டையில் சாமான்கள் சுமந்து கொண்டிருக்கும் போது, திடீரென ஒருநாள் இந்திய இராணுவத்தை எதிர்கொள்ளவேண்டி ஏற்பட்டது. எதிர்பாராத சண்டை; ஆனால் உக்கிரமான சண்டை. அற்றி யின் துப்பாக்கிக் குண்டுகள் ஒவ்வொரு இராணுவ வீரனையும் துளைத்துத் தூக்கிப் போடுவதை பார்த்துக்கொண்டே சுட்டுக்கொண்டிருந்தோம். அருகே கிடந்த இந்தியப் படையின் 'பிறண் எல். எம். ஜி.' துப்பாக்கியொன்றைத் தூக்கிக்கொள்ள முனைந்தபோது, அற்றியின் உடலைக் குண்டொன்று துளைத் துச் சென்றது.

குற்றுயிராய்க் கிடந்த அற்றியை அந்த ரயர் வண்டியில் ஏற்றி, இழுத் துச் சென்றுகொண்டிருந்தோம், கடற்கரை மணல், ''தண்ணி தாருங்கோ தண்ணி தாருங்கோ'' என்று பொறுப்பாளரிடம் வேண்டினான். தண்ணி குடிக்கக் கூடாதென அன்பண்ணன் கூற, ''தண்ணி இல்லாட்டிலும் உங்கட மடியில என்னக் கிடத்துங்கோ'' என்று வேண்டினான். நிலைகுலையாத அவனின் நெஞ்சு ஒருகணம் நின்று துடித்தது. அற்றியை இறக்கி அன்பண்ண னின் மடியில் கிடத்தினோம். தன்னில் ஆழமான அன்பு வைத்திருக்கும் அவ ரின் முகத்தை இமைக்காது பார்த்துக்கொண்டிருந்த அற்றியின் கண்கள், மெல்ல மூடிக்கொண்டன. காட்டுக்கு வெளியே மணலாற்றில் மரணித்த முதல் வீரன் என்ற பெருமையோடு, அவன் நினைவாலயம் எழுந்து நிற்கிறது! ☆

வீரஜனனம்:
24. 08. 1969

வீரமரணம்:
02. 09. 1989




# 2ஆம் லெப். கலியுகன்

(இந்திய மோதல்)
(பொன்னுத்துரை தங்கத்துரை)
தம்பலகாமம்,
திருக்கோணமலை.

கலியுகன் பிறந்த மண் தம்பலகாமம். நேசித்து உயிர்கொடுத்த மண் மணலாறு. காட்டில் மூன்று பாசறை அமைக்கும் பணியில் பங்கெடுத்தவன். பாசறை என்று சொன்னால் அது இலகுவாகத் தெரிகிறது. காட்டு வாழ்வின் ஆரம்பப் பாசறைகளில் பங்கர்களும், இருப்பிடமும் அமைப்பது இலகுவானது. ஆனால், தண்ணீர் தேடி கிணறு தோண்டுவது......?

கிணறு தோண்டியே தண்ணீர் குடிக்க வேண்டும் என்ற நிலையில், 'இன்று தண்ணீர் வந்துவிடும் இன்று வந்துவிடும்' என்ற எதிர்பார்ப்போடு, பசியோடு, தாகத்தோடு, காவி படிந்த உடுப்போடு, வாழ்ந்த அந்த நாட்கள்...... கொடுமையானவை. கலியுகன் இந்த துன்பங்களிலெல்லாம் தோள் கொடுத்து நின்றான். மூன்று பாசறைகளில் மூன்று கிணறுகள் வெட்டிய நம்பிக்கை மிக்க ஓர் வீரன். காட்டனுபவம் இல்லாமல், திசையறிகருவிகளைப் பயன்படுத்தும் நுட்பம் தெரியாமல், காட்டில் எத்தனை தடவைகள் மாறுண்டு அலைந்திருப்பான்! தவறுதலாக ஒருதடவை இந்தியப் படைமுகாமுக்குள் சென்று, மிதிவெடியில் தட்டுப்பட்டு, வெடிக்காமல் தப்பிய அந்த நாள்..... தன்னுடன் கூட வந்த தோழர்களின் கால்கள் பறிபோக அவர்களை விரைந்து காத்த சம்பவங்கள் இருபத்தொரு நாட்கள் குறிப்பின்றி கிணறு வெட்டி தண்ணீரைக்கண்டு ஆனந்தமடைந்த நாட்கள்.....! எதைப் புரட்டிப் பார்த்தாலும் கலியுகனின் நினைவுகள் முன்னே வந்து நிற்கும். முடிவில், தூண்டாவி வீதியில் இந்திய இராணுவத்துடன் மோதி, வீரனாய் வீழ்ந்து கிடந்த கதைகள் ...! ☆

வீரஜனனம்:
29.03.1968

வீரமரணம்:
03.03.1989



# ஜஸ்ரின் சேவியர்

( இந்திய மோதல் )
(தில்லையம்பலம் பற்குணராசா)
முகுந்தன்குளம்,
செட்டிகுளம்

இன்று சிங்களத்தின் இன ஆக்கிரமிப்புப் பசிக்கு இரையாகிப் போய்க் கிடக்கும் வன்னித் தமிழ்க் கிராமங்களில், செட்டிகுளமும் ஒன்று. பிறந்த மண்ணையும் குடிசையினையும் இழந்தபின், இனி இழப்பதற்கு என்ன உண்டு எனும் சிந்தனையின் விளிம்பில், விடுதலைப் போரில் அடியெடுத்து வைத்தவன் ஜஸ்ரின். எழுப்பமான தோற்றம், இறுக்கமான உடல், விறுத்தமான நடை இவையெல்லாம் ஜஸ்ரின் நம்பிக்கை மிக்க போராளி என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டிவிடும்.

நாட்டின் நிலைப்பாடு, தலைவனின் நிலைப்பாடு, இயக்கத்தின் நிலைப்பாடு அத்தனையினையும் ஒட்டுமொத்தமாகப் புரிந்துகொண்டவர்கள் சிலருடனேயே, மணலாற்றுக் காட்டு வாழ்வின் வரலாறு தொடங்குகிறது. தலைவனும் காடும் இழக்கப்பட்டால் என்ன நடக்கும் என்பதை உணர்ந்தவர்களில் ஜஸ்ரினும் மறக்க முடியாதவன்.

பல்லாயிரக் கணக்கான இந்திய இராணுவத்தினரின் கட்டங் கட்டமான பல நடவடிக்கைகளை எதிர்கால நம்பிக்கையோடு துணிந்து நின்று வெற்றி கண்டவர்கள், காடு வெறும் காடா அல்லது தமிழீழத்தின் இரும்புத் திரையா என்பதை நிலைநிறுத்திய யுத்தங்கள் பல. ஆனால், கேணல். பஸ்கியின் உயிர் பறிக்கப்பட்டு, அடுத்த கட்டமாக காட்டுக்குள் ஒருதடவை புகும் இந்திய இராணுவத்தின் சிந்தனையைச் சிதறடித்த சண்டையில்தான், ஜஸ்ரின் காயமுற்றான்; காயமுற்றவனைக் காப்பாற்ற முனைந்துகொண்டு இருக்கும் போது, அவன் விழிகள் மூடிக்கொண்டன! ☆

வீரஜனனம்:
18. 01. 1969

வீரமரணம்:
04. 07. 1988




# 2 ஆம் லெப். ஆனந்தி

( இந்திய மோதல் )

(காமாட்சியம்மாள் தர்மரெட்டியார்)

கணேசபுரம்,

பரப்புக்கடந்தான்,

வட்டக்கண்டல்.

**வ**லிமை, துணிவு, ஒழுங்கு, கட்டுப்பாடு இவற்றின் இலக்கணமாய் நின்றவள் ஆனந்தி. உயரமான தோற்றம், வட்டமுகம், சிறிய கண்கள், நம்பிக்கை தளராத செயற்பாடு - இவையெல்லாம் ஆனந்தியைக் கண்முன் கொண்டுவந்து நிறுத்தும். தோற்றத்தால் பெண்ணாக இருந்தாளேயொழிய, இவளின் செயற்பாடுகள் அனைத்தும் ஆண்மையின் செயற்பாடுகளே!

மன்னாரில் இருந்து புறப்பட்டு, இந்திய மண்ணில் முதலாவது மகளிர் படையணிப் பாசறையில் பயிற்சியை முடித்துக்கொண்டு, மன்னாருக்கே திரும்பி யிருந்தாள். உடன் பிறந்த அண்ணன் மாற்று இயக்கமொன்றிலிருந்து எமது இயக்கத்துக்கு எதிரான விரோதச் செயல்களில் ஈடுபட்டமை, இவளைப் பெரி தும் வேதனைக்குள்ளாக்கியது. அண்ணனைத் திருத்த முயன்றாள்; ஆனால் அவளால் முடியவில்லை. சொந்த அண்ணன் துரோகச் செயற்பாட்டிற்காக மரண தண்டனையைப் பெற்றபோதும், ஆனந்தி சிறிதுகூடத் தளம்பவில்லை.

மன்னார் மண்ணில் சிறீலங்காப் படைக்கெதிரான தாக்குதல்கள் பல வற்றில் பங்குகொண்ட ஆனந்தி, புதிய பல பெண்புலிகளை விடுதலைக்காக இணைத்துக்கொண்டாள். ஒழுக்கமும் கட்டுப்பாடும் நிறைந்தவர்களாய் ஒவ்

வொரு பெண்போராளியையும் உருவாக்கும் பணியில், இரவு பகலாக முனைப் புடன் இருந்தாள்.

காட்டிலும் எம்மால் வாழமுடியும் என்ற உணர்வை எமக்குத் தந்தவள் ஆனந்தி. ஒரு மூடை சீனியைத் தனித்துத் தூக்கிக்கொண்டு தளம்பாமல் அவள் நடந்து வருவது, கண்ணில் அப்படியே பசுமையாய் நிற்கிறது. நாம் தூக்க முடியாது நிற்கும் பொருட்களை எல்லாம் வெகு சாதாரணமாகத் தூக்கிக் கொண்டு வருவாள். மற்றவர்கள் துன்பத்தைக் கண்டு கணமும் தரி யாமல் உதவி செய்வதில் இன்பத்தைக் கண்டவள் ஆனந்தி. மணலாற்றுக் காட்டில் ஆர். பி. ஜி. வைத்திருந்த முதற் பெண்புலி ஆனந்திதான். அவளது தோற்றத்துக்கும், வலிமைக்கும், திறமைக்கும் அது பொருத்தமானதுதான்.

மணலாற்றுக் காட்டில் புதிய பாசறை ஒன்று அமைக்கும் பணியில் தீவிர மாக ஈடுபட்டிருந்தோம். தண்ணீர்தான் அருந்தலான பொருளாக இருந்த தால், கிணறு வெட்டும் பணியினை முதலில் செய்துகொண்டிருந்தோம். ஆனந்தி களைப்பின்றி, அலுப்பின்றி, வெட்டிக்கொண்டிருப்பாள். கடினமான வேலையை இலகுவாக எப்படிச் செய்யலாம் என்பதை, இவள்தான் சொல்லித் தந்துகொண்டிருப்பாள். 'இனிமேல் தண்ணீர் வந்துவிடும், இனி வந்து விடும்' என்று ஆர்வமுடன் வெட்டிக் கொண்டிருந்தபோதும், தண்ணீர் ஊற்றெடுக்க வில்லை. ஆனந்திக்கு நல்ல தண்ணீர் விடாய் வந்துவிட்டது. ''இப்ப ரீ தந் தால், இருபத்திரண்டு கப் ரீ குடிப்பன்'' என்று ஆதங்கத்தோடு சொல்லிக் கொண்டாள்.

பாசறை அமைத்துக்கொண்டிருக்கும்போது, இந்திய விமானப்படைக் 'ஹெலிக்கொப்ரர்' அவ்விடத்தைக் கண்டு தாக்கத் தொடங்கியது. சிலமணி நேரத்தில் அந்த இடத்தினை நோக்கி 'ஆட்லறி'கள் வந்து விழத் தொடங் கின. 'ஷெல்' துண்டு துளைத்து தான் சாகக்கூடாது என்பது ஆனந்தியின் நீண்ட நாள் ஆசை. ''செத்தால் உடம்பில் ஒரு துண்டுகூட எடுக்கமுடியாமல் சிதறவேண்டும்'' என்று அடிக்கடி சொல்லிக்கொள்வாள். ஆனால், பாசறைக் குள் வந்து வீழ்ந்து வெடித்த 'ஆட்லறி' எறிகணையில் ஆனந்தியை நாம் இழந்துநின்றோம். ஆனந்தி இன்று எம்முடன் இல்லைத்தான், ஆனால், அவள் சொல்லித் தந்த இலகுவான சில உத்திமுறைகள்தான் காட்டில் எம்மை மகிழ்வுடன் வாழவைக்கின்றன. ☆

வீரஜனனம்:
26. 09. 1963

வீரமரணம்:
11. 01. 1990



# மேஜர் சோதியா

**(அமலஉற்பவ வசந்தி மைக்கல்)**
**தபாற் கந்தோர் வீதி,**
**நெல்லியடி,**
**கரவெட்டி.**

**சோ***தியா* ஒரு சோதி. ஈழமண்ணில் ' பெண் விடுதலையின் ஒளிச்சுடர்.' தாயாய், சகோதரியாய், தாதியாய் மட்டுமல்ல - விவேகியாய், துணிவுள்ள வளாய், தளம்பாத நிர்வாகியாய் நின்று பெண்களின் படையணியைக் கட்டி வளர்த்த உத்தமி. சோதியாவின் வீரத்தை - சோதியாவின் தியாகத்தை - எழுதச் சொற்களைத் தேடுவது கடினம்; சொற்களுக்குள் அடங்காத தியாக காவியம் இவள்.

*1983* இல் மாற்று இயக்கமொன்றில் இணைந்துகொண்ட சோதியா, அங்கு ஏற்பட்டகொள்கை முரண்பாட்டால், *1984* இல் எமது இயக்கத்தில் தன்னை இணைத்துக்கொண்டாள். இந்திய தேசத்தில் 1985 இல், பெண்களுக் கான எமது பயிற்சிப் பாசறை தொடக்கப்பட்டது. அந்த முதலாவது பயிற்சிப் பாசறையிலேயே சோதியா யுத்தக்கலைப் பயிற்சியைப் பெற்றாள். சோதியா ஒரு வித்தியாசமான பிறவி. சிந்தனைக் கெட்டாத புதிர். தெரியாத வேலை யென்றோ இயலாத வேலையென்றோ இவளின் போர்வாழ்வில் இருந்ததில்லை. தொலைத் தொடர்பு சாதனங்ளைப் பயன்படுத்துவதில் சிறப்புத் தேர்ச்சி பெற்ற சோதியாவைப் பற்றி எழுதுவதா......? வைத்தியத்துறையில் வல்லமை பெற்ற சோதியாவைப் பற்றி எழுதுவதா......? ஆங்கில அறிவும் நிர்வாகத்

திறமையும்மிக்க சோதியாவைப் பற்றி எழுதுவதா......? தாய்க்குத் தாயாக இருந்து சக தோழிகளின் துன்பங்களையெல்லாம் தானே சுமந்துகொண்ட சுமை தாங்கி சோதியாவைப் பற்றி எழுதுவதா......?

லெப். கேணல் விக்ரர் மரணித்த - சாதனை மிக்க - சண்டைதான் யுத்த முனையில் இவளது முதலனுபவம். இச் சண்டையில் தொலைத் தொடர்பு சாதனம் பயன்படுத்தும் பணியில் முனைப்பாகச், செயற்பட்டாள். யாழ்.மண்ணில் 'புலிகள் - இந்திய மோதல்' தொடங்கியபோது, இவளின் துப்பாக்கி பேசியது. அவற்றையெல்லாம் எழுதினால், முடிவற்ற காவியமாய் அவள் வரலாறு நீண்டுசெல்லும். யாழ். மண்ணில் இருந்து காயமுற்ற போராளிகளுடன் விசுவமடுவுக்கு வந்தபோது, சோதியாவின் பணி மாறுபட்டிருந்தது. அனுபவம் மிக்க வைத்தியராய், அன்புமிக்க மருத்துவத் தாதியாய், கருணையுள்ள தாயாய் நின்றாள்.

சோதியாவின் மணலாற்றுப் பயணம் விஸ்வமடுவிலிருந்துதான் தொடங்குகிறது. மணலாற்றுக் காட்டினைச் சென்றடைய எடுத்த ஒருமாத காலம் எத்தனை சிக்கலானது! சந்தித்த துன்பங்கள்தான் கொஞ்சமா? 1989இல், நாலாவது ஐந்தாவது ஆறாவது மகளிர் படைப் பயிற்சிப் பாசறையினைத் தனித்து நின்று கட்டியெழுப்பிய பெருமை மட்டுமன்றி, மகளிர் படைக்கென தனித்துவமான செயல்பாட்டைத் தலைவரின் அனுமதியோடு ஏற்படுத்திக் கொண்டவளும் சோதியாதான். புதிய காட்டு வாழ்க்கை அனுபவமும், அங்கு ஏற்பட்ட சிக்கல்களும், துயரங்களும் கொஞ்சமல்ல - ஒவ்வொரு போராளியும் தன் பிரச்சினைகளையும் சிக்கல்களையும் மனந்திறந்து பேசவைக்கக்கூடிய பண்பும், உளவியல் திறனும், நிர்வாகத் திறனும் சோதியாவுக்கிருந்தது. இவளின் இத் திறமையால் தான் மகளிர் படை துரிதமான வளர்ச்சிபெற முடிந்தது.

மணலாற்றில் செல்வராசா மாஸ்ரர் தலைமையில் நடந்த வெலிஓயா சண்டைக்கு மகளிர் அணியை வழிநடத்திச் சென்றதோடு, மகளிர் படையின் தாக்குதல் தலைமைத்துவத்தைத் தொடக்கிவைத்தாள். தலைவரின் நம்பிக்கை மிக்க பெண்புலியாய் நின்ற சோதியாவுக்குள் மெதுவாய்த் தலையெடுத்த மாற்ற முடியாத நோயை, எவராலும் தெரிந்துகொள்ள முடியவில்லை; மற்றவர்கள் தெரிந்துகொள்ளுமளவிற்கு அவள் நடந்துகொள்ளவுமில்லை. ஆறடி உயரமும் நிமிர்ந்த தோற்றமும் நேர்கொண்ட பார்வையும் வெள்ளை நிறமும் அழகிய இருண்ட கேசமும் கொண்ட சோதியா, மெல்ல மெல்லத் தேய்ந்து கொண்டிருந்தாள். போராளிகளின் நலனைக் கவனத்திற்கொண்ட சோதியா தன்நலனைக் கவனிக்க மறந்துவிட்டாள். மற்றவர் தவறுகளை மற்றவர் துயரங்களைத் தானே மனதில் சுமந்ததால், அவளை ஆட்கொண்ட நோய் அதிகரித்த போது ...அவசர சிகிச்சைக்காக சோதியாவை யாழ். கொண்டுசென்றார்கள். ''நான்தப்பமாட்டேன்; என்னை காட்டைவிட்டுக் கொண்டுசெல்ல வேண்டாம்'' என வேண்டினாள். ''சோதியாக்கா......சோதியாக்கா'' என வாய் ஓயாமல் சுற்றிச் சுற்றி வந்த தோழியர், இழக்கக்கூடாததை இழந்ததுபோல் மௌனமானார்கள்; சோதியாக்கா மீண்டும் காட்டுக்கு வருவாள் என்று நம்பினார்கள். நாளும் பொழுதும் சோதியாவின் சுக செய்தியை அறிந்துகொண்டிருந்தோம்.

மாதக் கணக்கில் சரியாகச் சாப்பிடாத சோதியா, தனக்குப் பசிப்பதாகச் சொன்னாளாம்; இரண்டு இடியப்பம் சாப்பிட்டாளாம். சாப்பிட்ட சோதியாக்கா, தானிருந்த வீட்டில் வைக்கப்பட்டிருந்த 'சொரூபத்தை' உற்று நோக்கினாளாம்.

மெல்ல எழுந்து சென்று சொரூபத்தின் பாதத்தில் தன் தலையைப் பதித்தாளாம். அவள் கண்ணில் இருந்து முத்துமுத்தாய்க்கண்ணீர்த்துளிகள் புரண்டோடியதாம். அவள் சொரூபத்தில் ஏன் தலை வைத்தாள்......? எதற்காக அழுதாள்......?கண்ணீர் பெருகத் திரும்பிய சோதியாக்கா 'சொரூபத்தில் எம் தலைவனின் உருவைக் கண்டதாயும்......அவனது பாதத்தில் தலைவைத்து தன் கடைசிப் பயணத்தை அறிவித்ததாயும்' சொன்னாளாம். சொல்லி முடியும்போதே அவள் இமைகள் மூடிக்கொண்டதாம். தொடர்ந்து வந்த இந்தச் செய்தியின் கடைசி வரிகள் காட்டில் ஓங்கி ஒலித்தன. ''சோதியாக்கா......சோதியாக்கா......'' என எம்மை மறந்து ஒருகணம் அழுதுவிட்டோம்; அடுத்த கணமே அவளின் வழிகாட்டலை நினைத்து நிமிர்ந்து நின்றோம். மேஜர் *சஞ்சியா*, மேஜர் *தாரணி*, கப். *டோறா* ......என அவள் வளர்த்த வளர்ப்புக்கள்...... ''சோதியாக்கா... '' என்று ஆண் புலிகள் அனைவருமே அழைத்துக் கொள்ளுமளவிற்கு நிறைந்து நின்ற அவளின் புனிதத் தன்மை......காட்டினை விட்டுத் தன்னைக் கொண்டு செல்ல வேண்டா மென்ற அவளின் வேண்டுதல்...... அவள் இல்லாவிட்டாலும் அவள் நினைவு களைக் காடு சுமக்கிறது; அவள்சுவடுகளை உறுதியாய் நெஞ்சில் பதிக்கிறது. ☆

வீரஜனனம்:
24.04.1966

வீரமரணம்:
03. 07. 1988



## ராதை

(இந்திய மோதல்)
(விக்கினேஸ்வரி கணேஷ்)
இராச வீதி,
கரந்தன் சந்தி,
நீர்வேலி.

மணலாற்றுக் காட்டின் வரலாற்றோடு நிலைத்துப்போன பெண்புலிகள் மிகச் சிலரே. புலியின் பாய்ச்சலில் ஆண்புலி, பெண்புலி என்ற வேறுபாடு கிடையாது என்பதை உணர்த்தியவள் ராதை. இவள் சாதாரண பெண் புலியல்ல; அடர்ந்த காட்டில் தலைவன் வழிகாட்டலில் வளர்ந்த புலி.

சுதந்திரதேவி ராதையின் நெஞ்சில் குடியிருந்த கதை, நீண்ட கதை. நீர்வேலியில் நடுத்தரக் குடும்பமொன்றில் பிறந்தவள். இவளின் அன்னை ஒரு மருத்துவத் தாதி. தாய்மையின் மிக உயர்ந்த அந்தப் பணி ராதையிலும் இருக்கத் தவறவில்லை. தாயின் இரத்தம் அவள் பணியில் வெளிப்பட்டுநின்றது. யுத்தமுனைப் புலியாய் பயிற்சி பெறும் முன்னரே லெப். கேணல். திலீபனின் முயற்சியில் உருவான மகளிர் அணியில், ராதை செயற்படத் தொடங்கிவிட்டாள். போராளிகளுக்கான வைத்திய சேவை, அநாதைச் சிறார்களுக்கான பாடசாலைகள் அமைத்தல் போன்ற உயர்ந்த சமூகப் பணியில் ஓய்வின்றி உழைத்தாள்.

கோபம் என்பதை அறியாத ராதை, மகளிர் அணியின் இரண்டாவது பயிற்சி முகாமில் யுத்தப் பயிற்சியை எடுக்க முடியாது திரும்பிய

போதும், பயிற்சி இன்றியே லெப். கேணல் கிரேசியின் கீழ் இராணுவ நடவடிக்கைகளில் ஈடுபடத் தொடங்கினாள். இயக்கத்தின் எந்த வேலையினையும் சோர்வின்றிச் செய்யும் இவள், பெண் போராளிகளை புத்தி சொல்லி நெறிப்படுத்துவதிலும் வல்லவளாக இருந்தாள்.

மணலாற்றுக் காட்டில் தலைவரின் நேரடிக் கண்காணிப்பில் நடைபெற்ற பெண்புலிகளுக்கான முதலாவது பயிற்சிப் பாசறையில், யுத்தப் பயிற்சியினையும் பெற்றுக்கொண்டாள். தனக்கு ரைபிள் கிடைக்காத ஒரு நீண்ட பெரும் குறை இவளுக்கிருந்தது; இதனை அடிக்கடி வெளிப்படையாகவே சொல்லிக்கொண்டாள். கடைசிவரை இவளின் இந்த ஆசை நிறைவேறாமலே போய்விட்டது.

காட்டில் புதிய பாசறையொன்றினை அமைக்கும் பணியில் வீரர்கள் தீவிரமாக ஈடுபட்டுக்கொண்டிருந்தனர். அப் பாசறையின் அண்மையில், முதல் நாள் இந்தியப் படையுடன் பெரும் மோதல் ஒன்று ஏற்பட்டிருந்தது. இந்திய வான்படை 'ஹெலிக்கொப்ரர்' மீதும் தாக்குதல் நடத்தப்பட்டது. அதைத்தொடர்ந்து அந்த இடத்தை நோக்கி, குமுழமுனை இந்தியப் படை முகாமில் இருந்து 'ஆட்லறி' எறிகணைகளை வீசத் தொடங்கினர். மணித்தியாலமொன்றுக்கு நூற்று அறுபதுக்கு மேற்பட்ட எறிகணைகள் வீசப்பட்டன. இந்த எறிகணைகளிலொன்று பாசறைக்குள் விழுந்து வெடித்தது; இவ்வெறிகணை வெடிப்புக்கு ராதையின் உயிர் இலக்காகுமென நாம் நினைக்கவேயில்லை!

ராதையின் உடலைத் தாங்கும் கல்லறை மணலாற்றில் உருவானது. காட்டில் முதற் பெண்புலியின் கல்லறை என்ற பெருமையோடு, ராதையின் வரலாறு வரையப்படுகின்றது! ☆




# றொபேட்
## ( இந்திய மோதல் )

மட்டக்களப்பு ஆரையம்பதி கிராமத்தில் றொபேட் பிறந்த குடிசையுண்டு. இந்தக் கிழக்குப் புதல்வனின் வாழ்க்கைப் பயணம் மணலாற்றில் முடிவுற்றுப் போனது; ஆனால், பயணத்தின் சுவடுகள் வலிமையானவை; அந்தப் பயணத்தில் அவன் தாங்கிய துன்பங்கள் வேதனையானவை. வெளியுலகிற்குப் புரியாத பெறுமதி மிக்க புலிகள், இந்தியப் படையுடனான போரில் மணலாற்றுக் காட்டிற்குள் மரணித்துப் போயினர். 'பழம்பாசி' கிராமத்திலிருந்து தென்னமரவாடி கிராமம் வரையிலான ஆறுகளுக்கும், காடுகளுக்கும் பேசும் சக்தியிருந்தால்...... இவனின் கதைகளை சொல்லிக்கொண்டேயிருக்கும்.

காட்டினையும், நாட்டினையும், தலைவனையும் காக்கும் நிதானமிக்க சண்டைகள் இந்திய இராணுவத்துடன் காட்டில் நடந்தன. தெரிந்து எடுக்கப்பட்ட சிறப்பு வீரர்கள் காட்டில் காவலராய் நின்று, அணியணியாய் வரும் இந்தியப் படைகளை எதிர்கொண்டனர். கிணறு வெட்டினால் மாத்திரம் தண்ணீர்; உணவுப்பொருள் உள்ளே வந்தால் மாத்திரம் சாப்பாடு; இரவுகள் எப்படிப்பட்டதென்பதே தெரியாத வேலை - இவற்றையெல்லாம் சகித்தவன் றொபேட்.

'செக்மேற் - 03' என்ற பெயரில் இந்தியப் படைகள், மூன்றாம் கட்ட சிக்கறுப்பு நடவடிக்கைக்காக பல படைப்பிரிவுகளைக் காடு நோக்கி நகர்த்தினர்.

வெளியிலிருந்து சண்டை ஆரம்பமாகியது. தொடக்கமே கோரமான சண்டையாகியது. அவ்வேளைதான் றொபேட்டின் மார்புப் பகுதியை இந்தியப் படையின் துப்பாக்கிக் குண்டு ஒன்று துளைத்துச் சென்றது. அவனுக்கு அவசர சிகிச்சை தேவைப்பட்டது. அவனை வெளியே கொண்டுசெல்லும் முயற்சிகள்

நடந்தன. இரவைக் கிழித்துக்கொண்டு ஆற்றில் மெல்ல ஊர்ந்துகொண்டிருந்தன பிளாஸ்ரிக் படகுகள், றொபேட் மெல்ல முனகும் சத்தம் கேட்டது. படகு மறுகரையைத் தொடும்போது றொபேட்டின் முனகல் சத்தம் நின்று போயிருந்தது. முகத்தை மெல்லத் திருப்பிய போது..... கண்கள் மூடியநிலையில் றொபேட் மறைந்துவிட்டான். நீண்ட பெருமூச்சோடு - எடுத்த முயற்சி பயனளிக்காது போன வேதனையுடன் - அந்த இரவில், அவன் உடலைச் சுமந்து புதைகுழிக்குச் சென்ற நாள்.... !

☆

வீரஜனனம்:
23. 03. 1969

வீரமரணம்:
20. 04. 1989




# கிளாஸ் நிக்கோவ்

( இந்திய மோதல் )
(கதிரமலை காந்தன்)
கற்குடா,
மட்டக்களப்பு.

மட்டக்களப்பு கல்குடாப் பிரதேசத்தில் இருந்து லெப். கேணல் ரீகனுடன் மணலாற்றுக் காட்டுக்கு வந்த இருபது வீரர்களில் கிளாஸ்நிக்கோவும் ஒருவன். காட்டுக்கு வந்த காலம் கடினமான காலம். வரும்போது இரு வாரங்களாய் நடந்தான்; இருவாரங்களிலும் இடையில் மூன்று தடவைகள் மாத்திரம் வயிறாரச் சாப்பிட்டிருந்தான்; தாகம் தீரத் தண்ணீர் பருகியிருந்தான். மணலாற்றுக்கு வந்தும் மூன்று நாட்களின் பின்னர்தான் சாப்பிட முடிந்தது.

இந்திய இராணுவத்தின் காட்டு முற்றுகை முடிவடைந்த காலம் அது; 'செக்மேற் - 02' என்ற சிக்கறுப்பு நடவடிக்கையில் இந்தியப் படைகள் இறங்கியிருந்தன. காட்டிற்குள் சாப்பாட்டுப் பொருட்கள் வந்துசேர்வது பெரும் கஷ்டமாக இருந்தது. தண்ணீர்த் தட்டுப்பாடு சாப்பாட்டுக் கஷ்டத்தையும் மிஞ்சி நின்றது. நிரந்தரமான பாதுகாப்பான பாசறைகள் எதுவும் அமைக்கப்படவில்லை.

கிணறு வெட்டினாலேதான் தண்ணீர். கிணறு வெட்டுவது சாதாரண விடயமாக இருக்கவில்லை. வெடிவைத்துக் கற்களை உடைத்துத்தான் வெட்ட வேண்டியிருந்தது. வெடிவைத்துத் தகர்க்கும் சத்தம் வெளியே கேட்டுவிடக் கூடாது; கேட்டால் இந்தியச் சிப்பாய்களுக்கு அது தடயமாகிவிடும். வெடிமருந்தை உள்ளே வைத்துவிட்டு, சுற்றிவர மரங்களை மேலே அடுக்கி மூடி

மறைத்துவிட்டே மருந்தை வெடிக்க வைக்கவேண்டும். அதன்பின், மூடிய மரங்களை அகற்றவேண்டும்; அகற்றினாலும் அதற்குள்ளிருக்கின்ற புகை வெளியேற சில நாட்கள் எடுக்கும். அத்துணை ஆழமான கிணறு. புதிதாக அமைக்கும் பாசறையில் வெட்டிக்கொண்டிருந்த கிணற்றில் தண்ணீர் ஊறத் தொடங்கியது. அனைவருக்கும் அளவற்ற தாகம்; தண்ணீர் எடுத்தால்தான் குடிக்கலாம். வெடிமருந்துப் புகைக்குள் யார் கிணற்றினுள் துணிந்து இறங்குவது? கிளாஸ் நிக்கோவ் துணிந்து இறங்கினான். இறங்கியவன் புகைக்குள்ளால் ஏற முடியாது தவித்தான். வெளியேறி வந்தபோது, வெடிமருந்துப் புகை அவனை மயக்கமடையவைத்தது. சாதாரண மயக்கம் என நினைத்திருந்தோம்; அவன் மூச்சு நின்று போனபோது வேதனையால் வெடித்து நின்றோம் !

☆



வீரஜனனம்:
16.05.1970

வீரமரணம்:
19.08.1988




## கோபு

( இந்திய மோதல் )
(கதிர்காமத்தம்பி தர்மராசா)
புதூர்,
மட்டக்களப்பு.

**வீ**ரத்தால், தியாகத்தால் மணலாற்றுக்கு வரலாறு எழுதிமறைந்த வீரர்களில் கோபுவும் மறக்க முடியாதவன். மிதிவெடிவைத்து இந்தியப் படைகளைக் கதிகலங்க வைத்த காடு, மணலாற்றுக்காடு. ஆயிரக்கணக்கில் வந்த அந்நியப் படைகளின் கால்களைப் பறித்துப் பதறவைத்ததும் இதே காடுதான். காட்டில் எப்படி மிதிவெடி வைப்பது என்பதைச் செயலிலேயே செய்து காட்டினார் தலைவர். கோபு இதனை நன்கு அவதானித்துக்கொண்டான்.

மிதிவெடி வைக்கும் பொறுப்பு கோபுவிடம் ஒப்படைக்கப்பட்டது. எங்கெல்லாம் மிதிவெடிகளை வைக்க வேண்டுமோ அங்கங்கெல்லாம் துரிதகதியில் அவற்றை வைத்து,வைத்த இடம் தெரியாமலே மறைத்துவிட்டான் கோபு.

இந்தியப் படைகள் குர்க்காஸ் படைப்பிரிவுடன் மிகப்பெரும் முற்றுகையொன்றைக் காட்டில் மேற்கொண்டனர். கேணல் பஸ்கி அப்படைகளின் வழிநடத்துநரானான். சண்டை தொடங்கியபோது கோபு வேகமாக இயங்கினான்; ஓடி ஓடி மிதிவெடிகளை வைக்கத் தொடங்கினான். எதிரியின் 'கால்கஸ்ரோ' விலிருந்து புறப்பட்டு வந்த எறிகணை கோபுவின் உடலைத் தூக்கிப் போட்டது. எண்ணிக்கையற்ற இந்தியப் படைகளைக் காலிழக்க வைத்த கோபு, நிரந்தரமாகவே உறங்கிக்கொண்டான்! ☆

வீரஜனனம்:
05.12.1966

வீரமரணம்:
06.06.1988




# லெப். சுபேசன்

( இந்திய மோதல் )
(பேரம்பலம் கிருஷ்ணலிங்கம்)
புலோலி தெற்கு,
புலோலி.

மணலாற்றுக் காட்டில் தலைவருடன் நின்ற வீரர்கள் அனைவருமே தெரிந்தெடுக்கப்பட்ட வீரர்கள். விவேகமும், உறுதியும், துணிவும் மிக்க இவ்வீரர்களில் சுபேசனும் ஒருவன். இந்திய மண்ணில் படைப்பயிற்சியினை முடித்துவிட்டு, வடமராட்சியில் நடைபெற்ற இலங்கைப் படையின் 'லிபரேசன் ஒப்பரேசன்' என்ற மிகப்பெரும் இராணுவ நடவடிக்கையை எதிர்கொண்ட அனுபவம் மிக்க புலிவீரன்.

மணலாற்றுக் காட்டில் புதிய பாசறைகளை அமைப்பதிலும் பாதுகாப்பு மிக்க அழகான பதுங்குகுழிகளை அமைப்பதிலும், சுபேசன் தீவிரமாக ஈடு பட்டான். சலிப்பின்றி - களைப்பு மறந்து - வேலைசெய்யும் பொறுப்புணர்வு மிகு தியாக இவனிடமிருந்தது. தலைவர், சுபேசனையும் அவனுக்குத் துணையாக இன்னுமோர் வீரனையும் பொறுப்புள்ள - பொறுமையுள்ள - வேவுப் பணியொன்றுக்கு அனுப்பினார். காட்டில் வேவுபார்ப்பது புதிய அனுபவம். அதனால் வேவுப் பணியில் அனைத்து நுட்பங்களையும் இருவருக்கும் சொல்லிக்கொடுத்து அனுப்பினார். பாசறைக்கு அருகில்வைத்து இராணுவத்தைத் தாக்காமல், நீண்ட தூரத்தில் அதிர்ச்சி கொடுக்கும் மிகப் பெரும் தாக்குதல் ஒன்றைச் செய்வதற்கு தலைவர் திட்டமிட்டதையும், மிகக் குறைந்த வீரர்களோடு அதனைச்செய்யத்

துணிந்ததையும் நினைத்து, சுபேசன் தன்னுள் வியப்பும் பெருமையும் அடைந்துகொண்டான்; சகவீரனிடம் இதை அவன் வெளிப்படுத்தியும்விட்டான். ஒன்றரை மாதத்துக்கு மேலாக இவ்வேவு பார்க்கப்பட்டது. இதன்பின்னர் நித்திகைக்குள முகாமை நோக்கி நடந்தனர். முகாமை அண்மிக்கும்போது இரு வேறு குழுக்களாகப் பிரிந்துகொண்டனர். எதிர்பாராத பிரச்சினைகள் ஏற்படின் அனைவரும் சந்தித்துக்கொள்ள வேண்டிய இடமொன்றையும், தீர்மானித்துக் கொண்டனர். எதிர்பார்த்தது போலவே இராணுவத்தை எதிர்கொள்ள நேர்ந்தது. இதனால் இருகுழுக்களும், குறிப்பிட்ட இடத்தில் சந்திக்க முடியாது போய்விட்டது. சுபேசனின் குழுவிடம் திசைகாட்டியும் இருக்கவில்லை. வானத்து நிலவுதான் திசைகாட்டியாயிற்று; நடந்தனர்; நடந்துகொண்டேயிருந்தனர். இறுதியில் வீதி ஒன்றில் வெளிப்பட்டனர்.

அப்போதுதான் அவர்களுக்கு ஒரு விடயம் - அந்த வீதியைப் போக்கு வரத்துக்குப் பயன்படுத்துவதைத் தவிர்த்துக்கொள்ளும்படி சொன்னது - ஞாபகம் வந்தது. மீண்டும் திரும்பி,சற்று நிதானமாக அடியெடுத்து நடக்கத் தொடங்கினர். காலம் நிதானத்தை வென்று விடுகிறது; ஆம், மிதிவெடி சுபேசனைப் பறித்துக்கொண்டது. அனுபவமும், விவேகமும் உள்ள சுபேசனை அன்று மண்லாறு இழந்திருக்கிறது. ''தமிழீழம் கிடைக்கிற நேரத்தில் செத்துப் போறன்'' என்று அவன் உதடுகள் முணுமுணுத்துக் கொண்டிருந்தபோதே, அவன் உயிர் பிரிந்தது! ☆

வீரஜனனம்:
20. 02. 1970

வீரமரணம்:
27. 10. 1988




# சுகந்தன்

(இந்திய மோதல்)
(சிற்றம்பலம் பரம்சோதி)
பன்குளம்,
திருமலை.

திருமலை மாவட்டம். தமிழீழத்தின் இயற்கைத் துறைமுகம் அமைந்த இவ்வழகிய மாவட்டத்தில் வயல் வளங்கள் நிறைந்து விளங்குவது, பன்குளம் என்ற கிராமம். அழகும் வளமும்மிக்க தமிழ்க் கிராமங்களை அலங்கோலமாக்குவதுதான் சிங்களத்தின் முதற் பணி. அடுத்த கட்டம், இராணுவ வலயமாக அதைப் பிரகடனப்படுத்தி விட்டு அங்கு சிங்களக் குடும்பங்களைக் குடியமர்த்துவது. இத்தகைய ஆக்கிரமிப்புப் பசிக்கு இரையாகிப் போய்விட்ட தமிழ்க் கிராமங்களில் பன்குளமும் ஒன்றாகிவிட்டது.

பன்குளத்தில் பிறந்துவிட்ட சுகந்தனுக்கு மணலாற்றில், புகழ்மிக்க வரலாற்றுப் பதிவொன்று அழியாது பொறிக்கப்பட்டுவிட்டது. நித்திகைக்குளத்தில் அமைக்கப்பட்டிருந்த இந்தியப் படையின் தலைமை முகாமில், தினமும் நான்கிற்கு மேற்பட்ட விமானப்படை 'ஹெலிக்கொப்ரர்'கள் தரித்து நிற்கும். அவற்றைத் தாக்கி அழிக்க வேண்டும். கடினமான காரியம் இது. ஆனாலும் இப் பணிக்கென ஒன்பது வீரர்கள் தலைவரால் தெரிவுசெய்யப்பட்டிருந்தனர்.

''கரும்புலிகளாகச் செல்கிறீர்கள்; வெற்றிகரமாகத் தாக்கி விட்டுத் தப்பி வருவது உங்கள் திறமையைப் பொறுத்தது'' என்று தலைவர் அறிவித்துவிட்டார். இவ்வொன்பது பேரில் சுகந்தனும் அடங்கியிருந்தான். மரணத்துடனான

விளையாட்டு ஆரம்பமானது. ஆர். பி. ஜி., கால்கஸ்ரோ ஆகிய பெறுமதிமிக்க ஆயுதங்களுடன் பயிற்சி நுட்பங்களைப் பயன்படுத்திக்கொண்டிருந்தனர். குளத்து வெட்டையில் ஒருநாள் முழுவதும் 'குரோல்' இழுத்து, குளக்கட்டில் காவல் நிற்கும் இந்திய ஜவான்களின் கண்களில் படாது, குளக்கட்டுக்கு மேலாகத் தலையை நீட்டிப் பார்த்தனர். அன்றைய கடின முயற்சிக்குப் பலன் கிடைக்க வில்லை. குறிப்பிட்ட இடத்தில் 'ஹெலிக்கொப்ரர்'கள் வந்து சேரவில்லை. மீண்டும் குளத்துவெட்டையைக் கடக்க இவர்கள் பட்ட வேதனையை, எழுத் தில் காட்டுவது கடினமானது. முயற்சியில் வெற்றி கிட்டாததற்காக இவர்கள் மனந்தளரவில்லை; அடுத்த நாளுக்காகக் காத்திருந்தனர்.

அதே முயற்சி அடுத்த நாளும் ஆரம்பமானது. ''முயற்சி தன் மெய் வருந்தக் கூலி தரும்'' என்பது வள்ளுவர் வாக்கு. அன்று வெற்றிக்கு வழி பிறந்தது. கால்கஸ்ரோவும், ஆர். பி. ஜியும் முழங்கின. எதிர்பாராத இடத் தில். எதிர்பாராத தாக்குதலாகையால், காட்டில் காவலரணில் நின்றிருந்த ஜவான்கள் நிலைகலங்கி ஓடினர்.

இரண்டு 'ஹெலிக்கொப்ரர்'கள் தீப்பிடித்து எரிந்துகொண்டிருந்தன. இன்னும் இரண்டு 'ஹெலிக்கொப்ரர்'கள் சிதைந்து நாசமாயின. வெற்றி மிக்க தாக்குதலை சிறுகாயம் கூட இன்றி நடத்தி முடித்தனர்; சுகந்தனின் பங்கு இதில் குறிப்பிடத்தக்கது. வரலாற்றுப் பதிவு மிக்க இத் தாக்குதலொன்றே, மணலாற்றில் சுகந்தனின் திறமைக்கு நிலைக்கல்.

இந்தியப் படைகள் காட்டிலிருந்து வெளியேறிய காலத்தில் வைத்துச் சென்ற மிதிவெடிகளை அகற்றும் பணியில்தான், சுகந்தனின் மரணம் நிகழ்கி றது. மூன்று நாட்களாக நடந்த இப் பணியின் மூன்றாம் நாளில் வெடித்த மிதிவெடி, சுகந்தனின் காலைப் பறித்தது. அவசரமான சிகிச்சைக்காக வைத் தியசாலைக்கு எடுத்துச் செல்லப்பட்டான், அதிகமான இரத்தப் போக்கு இவ னின் இறுதிப் பயணத்தை எழுதிக் கொண்டது! ☆

வீரஜனனம்:
20. 10. 1974

வீரமரணம்:
02. 09. 1989




# திலகன்

( இந்திய மோதல் )
(காசிலிங்கம் பிரபாகரன்)
திருநெல்வேலி,
யாழ்ப்பாணம்.

பயிற்சியின் திறமையைப் பாராட்டி, மணிக்கூடு ஒன்றினைத் தலைவர் இவனுக்குப் பரிசாகக் கொடுத்தார். சில்லுவண்டில் துப்பாக்கியைச் சரியாகத் தூக்கிப் பிடிக்க முடியாத வயது. ஆனால் 600 மீற்றர் சுற்றளவுள்ள மைதானத்தை ஐம்பது சுற்றுக்கள் ஓடி, முதலாவதாக வந்தான்; அதிசயமான சாதனை தான். வயதை விட அவனின் மனவலிமை மிகப் பெரிதாய் இருந்தது. போராளிகள் பலரின் முன்னிலையில், இவன் திறமையைப் பாராட்டிப் பரிசு வழங்கினார் தலைவர்.

காட்டில்நின்ற ஏனைய சிறுவர்களின் குழுவுக்கு திலகனே பொறுப்பாளனாக நியமிக்கப்பட்டான். தேவண்ணன் தனக்குக்கற்றுக் கொடுக்கும் கராத்தே பயிற்சிகளை, தன் குழுவிலுள்ள தன்போன்ற குழந்தைத் தோழர்களுக்கும் கற்றுக் கொடுத்தான்.

எந்த நிமிடமும் சுறுசுறுப்பாக, துடிப்புடனும் மிடுக்குடனும் செயற்படும் திலகன், வளர்ந்து எதிரிக்கு சித்தம் கலங்கும் அடி கொடுப்பான் என நினைத்துக் கொண்டிருந்தபோதே உதிர்ந்துவிட்டான்.

முல்லைத்தீவு பெருந்தெருக்கள் திணைக்களத்திலிருந்த இந்தியப் படையின் மினிமுகாமைத் தாக்கியழிக்கச் சென்ற அணியில், தானும் துள்ளிக் குதித்துப் புறப்பட்டான்.

காட்டிற்கு அவன் உடல் மட்டுமே திரும்பியது! ☆

வீரஜனனம்:
20. 07. 1970

வீரமரணம்:
23. 03. 1989




## றெஜினோல்ட்

( இந்திய மோதல் )
(இராசையா சின்னராசா)
ஆவரங்கால்,
புத்தூர்.

மணலாற்றுக் காட்டில் பயிற்சி எடுத்ததென்றால், போராளிகளிடையே ஒரு மதிப்புண்டு; அதிலும் செல்வராசா மாஸ்ரரிடம் பயிற்சி எடுத்திருந்தால் இரட்டிப்பு மடங்கு பெருமையுண்டு. அந்தளவிற்கு நுட்பமானதும் சிறப்பானது மான பயிற்சியாக இருக்கும். இந்த நிலையில் பயிற்சித் திறமைக்காக செல்வ ராசா மாஸ்ரரிடம் பரிசும் பெற்றிருந்தால் சொல்ல வேண்டுமா......?

''பயிற்சியைத் திறம்பட முடிப்பவர் எவரோ அவருக்குத் தன்னிடமுள்ள 'பைனட்' கத்தியைப் பரிசாகத் தருவேன்'' என்று, பயிற்சியின் தொடக்க நாளில் சொல்லியிருந்தார் செல்வராசா மாஸ்ரர். றெஜினோல்ட் அன்றே மன துள் உறுதியெடுத்துக்கொண்டான். பயிற்சியின் முடிவில் எல்லாரையும் வியப்பில் ஆழ்த்திக் கத்தியைப் பெற்றுக்கொண்டான்.

றெஜினோல்ட்டுக்கு செவிப்புலன் சற்றுக் குறைவு; ஆனால் செயற் திறனோ மிக அதிகமாக இருந்தது. பயிற்சியில் வெற்றி பெற்றவன் தன் திற மையை யுத்தமுனையில் பரீட்சித்துப் பார்க்க, வாய்ப்புக் கிட்டவில்லை.

இந்திய இராணுவத்தின் சிக்கறுப்பு முயற்சிகள் மணலாற்றுக் காட்டில் ஆரம்பிக்கப்பட்ட நாள், றெஜினோல்ட்டின் பயிற்சியின் முடிவு நாளாக இருந்

தது. ஒரு சண்டைக் களத்துக்கு எவ்வாறு உதவி வழங்குவது என்ற பயிற்சி மட்டுமே பெறவேண்டியிருந்தது. சண்டை தொடங்கியதால், அந்தப் பயிற்சியை அனுபவத்திலேயே பெற்றுக்கொண்டிருந்தான் றெஜினோல்ட்.

காட்டு வாழ்க்கையில் உணவுச்சிக்கனம் - சோற்றினைக் குழைத்துக் கவன மாக கையில் கொடுக்கும் ஒரு கவளத்துடன் அன்றையப் பொழுதினைக் கழிக்க வேண்டிய நெருக்கடியான நிலை; 'ஆட்லறி' எறிகணை வீச்சு அதிகமாக இருந் தால் அந்தக் கவளமும் இல்லை. மணித்தியாலத்துக்கு நூறு 'ஆட்லறி' எறி கணைகள் வந்து விழுந்து வெடிக்கும். நாங்கள் துப்பாக்கியிலிருந்து ரவைகள் சுடுவது போல, அவன் 'ஆட்லறி' எறிகணைகளை வீசிக்கொண்டிருந்தான்.

றெஜினோல்ட் சாப்பாட்டினைக் குழைத்து பானையில் போட்டுக் கொண்டு, எறிகணைகளுக்கு நிலை எடுத்தெடுத்து ஓடி வந்தான். அவனது பானையினை எதிர்பார்த்துத்தான் எம் வயிறு அழும்.

ஓடிவந்த றெஜினோல்ட்டினருகே ஒரு எறிகணை வீழ்ந்து வெடிக்கிறது. அவனது வயிறு எறிகணைத் துண்டினால் கிழிக்கப்படுகிறது. ஆனால் சோற்றுப் பானையை மட்டும் அவன் கைவிடவில்லை; அதன் பெறுமதி அவனுக்குத் தெரி யும். பானையினை இறுகப் பிடித்துக் கொண்டிருந்தவனின் முனகல் மெல்ல மெல்ல மறைந்துகொண்டிருந்தது. அவசர சிகிச்சைக்காகத் தூக்கிக்கொண்டு ஓடிவந்தோம்.

பாதிவழியில் ...அவன் குரல் முற்றாகவே நின்றுபோனது ! ☆

வீரஜனனம்:
10. 06. 1968

வீரமரணம்:
22. 03. 1989



## 2ஆம் லெப். கிர்மானி

( இந்திய மோதல் )
(ஏகாம்பரம் உதயகுமார்)
கொழும்புத்துறை,
யாழ்ப்பாணம்.

கொத்தியாம்பத்தைக் கிராமம்; பாதையின் இருமருங்கிலும் மந்துக் காடுகள். கோடுபோல் நீண்டு செல்கின்ற அந்த ஒற்றை வழிப்பாதையில் இராணுவம் சுடத் தொடங்கியது. தப்பித்துக்கொள்வது கடினமானது. ஆனால் கிர்மானிக்கு இப்பாதை பழக்கமாகிப்போய்விட்டது. இந்திய இராணுவத்தின் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டு, எவ்வளவு பொருட்களை அப்பாதை வழியாகக் கொண்டு சென்றிருப்பான்!. அந்த ஒற்றை மாட்டு ரயர் வண்டிலும், இவனும் பட்ட துன்பங்கள் ஒன்றிரண்டல்ல. மேஜர். ரஞ்சனுடன் நின்று இரவு பகலாகச் சுமந்த உணவுப் பொருட்கள்தான், அன்று காட்டில் வளர்ந்த புலிகளைப் பட்டினிச் சாவிலிருந்தும் காத்தது.

வழமைபோல் காவல் கடமையில், அதே கொத்தியாம்பத்தை வீதியில் நின்ற கிர்மானி, ''மச்சான்எத்தின நாளைக்கு இப்படி நித்திரை இல்லாமல் ஓடி ஒளிச்சு வாழுறது. அடிபட்டுக் கெதியாய்ச் செத்திட்டா நல்லது'' என்று சலிப்புடன் கூறினான். களைப்பும், சோர்வும், விரக்தியும் அவன் பேச்சில் வெளிப்பட்டது. சிலநாட்களில் நான்கு ஐந்து இடங்களில்கூட துப்பாக்கிச் சூட்டுக்குத் தப்பி, சாமான்களைக் கொண்டுபோய்ச் சேர்த்திருக்கின்றார்கள். தற்காப்பு சண்டைகூடச் செய்யமுடியாத நிலை. சண்டை செய்தால் சாமான்

பறிபோய்விடும். அந்த இடமும் கண்காணிப்புக்குட்பட்டு விடும். இதனால் இயன்றளவு ஓடித் தப்பிக்கொள்ளவேண்டும். பொறுப்புள்ள - பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டிய - இப்பணியில், கிர்மானி நீண்ட நாட்கள் இருந்தான்.

இந்திய இராணுவத்தின் குண்டுகள் இவன் உயிரைக் குடித்திருக்கலாம். ஆனால், இவனிடமிருந்த தேசப் பற்றை, இவன் செய்த தியாகத்தை - அழித்துவிடும் சக்தி, இந்தியத் துப்பாக்கிக் குண்டுகளுக்கு மட்டுமல்ல எந்த இராணுவத்தின் குண்டுகளுக்கும் இருக்காது. ☆



வீரஜனனம்:
22. 10. 1966

வீரமரணம்:
24. 10. 1988



## கப். சதீஸ்

( இந்திய இராணுவ கால மிதிவெடி மரணம் )
( மூத்ததம்பி தெய்வேந்திரன் )
வரணி.

இந்திய மண்ணில் பயிற்சியை முடித்தவன் *சதீஸ்*. சண்டையில் நிறைந்த அனுபவத்தைப் பெற்றிருந்தான். அடக்கம், அன்பு, அமைதி என்பன இவனின் உயர் குணங்கள்.

மணலாற்றுக்கு வருமுன்னே யாழ். தொலை தொடர்பு நிலையத்தில் முகாமிட்டிருந்த இலங்கைப் படை மீதான தாக்குதல், யாழ். மண்ணில் இந்தியப் படையுடனான பல மோதல்கள் ஆகியவற்றிலெல்லாம் பங்குகொண்டான். 1988இல் மணலாற்றுக்கு வந்து சில நாட்களில், மீண்டும் லெப். கேணல் இம்ரானுடன் யாழ்ப்பாணத்துக்கு அனுப்பப்பட்டான். யுத்தகளங்கள் அடிக்கடி அவனைத் தேடி வந்தன.

சில மாதங்களில் மீண்டும் மணலாற்றில் அவன் பாதங்கள் பதிந்தன. இவனது சண்டைத்திறனும், அனுபவமும், இனிமையான சுபாவமும் தலைவரைப் பெரிதும் கவர்ந்திருந்தன. இதனால், அவனது பிறந்த மண்ணுக்கே அவனைத் தளபதியாக அனுப்பக் கருதியிருந்தார்; கருத்து செயலாகுமுன்னே அவனின் கதை முடிந்துபோனது.

கிட்டு அம்மானைக் கரையிலிருந்து காட்டுக்குள் அழைத்து வருவதற்காகச் சென்றிருந்தான் சதீஸ். ஒருவர் பின் ஒருவராய், காட்டின் ஒற்றையடிப்

பாதையில் கடற்கரையிலிருந்து வந்துகொண்டிருந்தனர். முன்னே பலர் சென்றுவிட்டனர்; இந்திய இராணுவத்தின் மிதிவெடி சதீசுக்காகத் தப்பியிருந்தது போலும் ! எல்லாரின் கால்களிலும் தப்பிய அது சதீசின் காலைப் பதம் பார்த்துவிட்டது.



இந்திய ஓநாய்களின் வேட்டையில் இரையாகிப் போன எமது பெறுமதி மிக்க வீரர்கள், தளபதிகள் கொஞ்சமல்ல. அவர்களின் வரிசையில் இவனும் இணைந்துகொண்டான். அவனின் தடங்கள் அன்றிலிருந்து இன்று வரை அழியாமலே கிடக்கின்றன ! ☆

வீரப்பிறப்பு:
26. 04. 1970

வீரச்சாவு:
03. 03. 1989




# 2ஆம் லெப். காஸ்ரோ

( இந்திய மோதல் )
( கணேஸ் சந்திரமோகன் )
கிளிநொச்சி.

மணலாற்றுக் காட்டினையும், காட்டில் வாழ்ந்த தலைவனையும் காத்து நின்ற வீரர்கள் பலர் இன்று எம்முடன் இல்லை. இந்த மண்ணுக்கே உரமாகிப் போனவர்கள் தவிர, ஒரு சிலர் மட்டுமே களமுனையில் நிற்கின்றனர்; ஆனால், அவர்கள் வளர்த்த ஆயிரக்கணக்கான வீரர்கள் யுத்தமுனையில் நிற்கிறார்கள்.

காஸ்ரோ ஆரம்பகால மணலாற்றுப் போராளிகளில் ஒருவன். கிளிநொச்சி மாவட்டத்திலே வளமுடன் அமைந்த வட்டக்கச்சி கிராமந்தான் இவனின் பிறந்த மண்.

காட்டில் வாழ்ந்த காலத்தில் அனைத்துப் போராளிகளின் மனதையும் கவர்ந்தவன். திறமைகள் இவனிடம் நிறைந்து கிடந்தன. அதேபோல் குறும்புத் தனமும் மிகுதியாக இருந்தது. தன் குறும்புத்தனத்தாலும் மற்றவர்களைக் கேலி செய்வதனாலும், எவ்லார் மனதிலும் நிறைந்து நின்றான். இவனுக்கு வெட் கமோ பயமோ துளிகூடக் கிடையாது. மற்றவர்கள் தன்னைக் கேலி செய் கிறார்களே என்பது பற்றிக் கவலையோ கோபமோ கொள்ளமாட்டான். பாசறைகளில் ஏதாவது நிகழ்ச்சிகள் நடந்தால், கூச்சமின்றி மேடைக்கு வந்து விடுவான். பாட்டுப் பாடுவதும் நாடகம் நடிப்பதும் அவனுக்கொரு விளை யாட்டு. பெண் போராளிகளாக இருந்தாலும் சரி, யாரென்று பார்க்க மாட்

டான். கிண்டலும் கேலியும் செய்து, மற்றவர்களை மகிழ்விப்பதில் மகிழ்வைக் கண்டுகொண்டான்.

காஸ்ரோ தன் குழப்படிக்காக வாங்காத தண்டனை இல்லையெனலாம். தண்டனையைச் சிரித்துக்கொண்டே செய்துமுடிப்பான். ஆனாலொன்று, யாராயினும் பேசிவிட்டால் மனம் புண்பட்டு அழுதுவிடுவான். அடிவாங்கும் வலு அவனுக்கிருந்தது; ஆனால் சொல்லால் அடிப்பதைத் தாங்கிக்கொள்ளும் மனவலிமை அவனிடமில்லை. என்ன குறும்பு செய்தாலும் சண்டையென்று வந்துவிட்டால், உறுதி மிக்க துணிவுடன் சண்டை செய்வான். சண்டையைக்கூட ஒரு விளையாட்டாகவே கருதினான். காஸ்ரோ புரியாத புதிர். எம்முடன் அவன் வாழ்ந்த நாட்கள் மறக்க முடியாதவை. நாவற்கேணியில் இந்திய இராணுவத்துடன் ஏற்பட்ட வீரவிளையாட்டில், தன் மரணத்தை விளையாட வைத்துவிட்டான்! ☆

வீரஜனனம்:
09. 05. 1969

வீரமரணம்:
07. 08. 1989




# வேந்தன்

( இந்திய மோதல் )
( சண்முகம் பவளராசா )
நிலாவெளி,
திருமலை.

திருக்கோணமலையில் பிறந்து, சாவகச்சேரியில் வளர்ந்து, மணலாற்று மண்ணுக்குத் தன் உயிரைக் கொடுத்தவன் வேந்தன். சுறுசுறுப்பும், அதற்கேற்ற குழப்படியும் கொண்டவன். காட்டில் அவனது மிதிவெடிகளுக்குக் கால் கொடுத்த இந்திய ஜவான்கள் பலர்.

வேந்தன் தன் குழப்படிக்காக பொறுப்பாளரிடம் பல தடவைகள் பேச்சு வாங்கினான்; இருந்தாலும், பொறுப்புள்ள பணிக்கு நியமிக்கப்பட்டிருந்தான். உணவுப் பொருட்களைக் கொண்டுவரும்போது அவற்றுக்குப் பாதுகாப்பு வழங்கும் நால்வர் கொண்ட அணியில், இவனும் ஒருவன். இரவும் பகலும் நடந்து நடந்தே கால்கள் உரமேறிப் போயிருந்தன. எந்தளவுக்கு விரைவாக அதிக பொருட்களை உள்ளே கொண்டுவந்து சேர்க்கமுடியுமோ அந்தளவிற்குக் கொண்டு வருவதில், முனைப்பாக நிற்பான்.

காட்டைச் சுற்றி முழத்துக்கு முழம் பதுங்கிக் கிடக்கும் இந்திய ஜவான்களின் கண்களில் அகப்பட்டுக்கொள்ளாமல் இருப்பதில், நிதானமாகவே இருந்தான். வயல்வெளிகளையும் காட்டினையும் தொட்டுச் செல்லும் பேராறுக்குப் பேசும் வல்லமையிருந்தால், அது வேந்தனின் கதை சொல்லும். தண்ணி

முறிப்பு...... தகரவாடி......ஒற்றைப்பனை......இவற்றைப் பார்க்கும்போதெல்லாம் வேந்தன் கண்முன் தெரிவான். இந்த இடங்களிலெல்லாம் இந்தியத் துப்பாக்கி களை எத்தனை தடவைகள் சந்தித்திருப்பான் !

1989ஆம் ஆண்டு ஆடித் திங்கள் 8ஆம் நாள், வேந்தன், எதிர்பாராது இந்திய இராணுவத்தின் தாக்குதலைச் சந்தித்துக்கொண்டான். விடுதலைப் போரை விருட்சமாய் வளர்க்கத் தோள் கொடுத்த வீரபுருசன்......வரலாற்றுப் பாதையின் சிக்கல் நிறைந்த கட்டங்களில் பக்கபலமாய் நின்ற மறவன் ...நெஞ்சில் குண்டு சுமந்தான் !

☆

வீரப்பிறப்பு :
03. 04. 1972

வீரச்சாவு:
07. 08. 1989



## ஈசன்

( இந்திய மோதல் )
(வேலுப்பிள்ளை மகேஸ்வரன்)
தம்பசிட்டி,
பருத்தித்துறை.

பாசறையில் வேகமாக சமையலில் ஈடுபட்டிருந்தான் ஈசன். பலருக்குச் சமையல் செய்யவேண்டும்; ஆனால் புகை எழும்பக்கூடாது. புகை எழுவதைக் கண்டால்......அவ்வளவு தான், இந்திய விமானப்படையின் இராட்சத ' கெலிக் கொப்ரர் ' 250 கிலோ குண்டுகளை அவ்விடத்தில் வீசும். குமுழமுனை இந் தியப் படை முகாமிலிருந்து அடுக்கடுக்காக ' ஆட்லறி ' எறிகணைகள் வந்து விழும். இதனால், சமைப்பதே ஒரு பெரும் போராட்டமாக இருந்தது.

ஈசன் பொறுப்புணர்வுடன் சமையல் செய்துகொண்டிருந்தான். திடீரென துப்பாக்கிச் சத்தங்கள், அதுவும் பாசறைக்கு மிக அண்மையில். சமையலைப் பாதியில் நிறுத்திவிட்டு, தனது எஸ். எல். ஆர். துப்பாக்கியை எடுத்துக் கொண்டு ஓடிவந்தான்.

சண்டை மோசமாக நடந்துகொண்டிருந்தது. சிலவேளை, இராணுவத் தினர் பாசறைக்குள்ளும் வந்துவிடக்கூடிய சாத்தியக்கூறுகளிருந்தன. ஈசன் தன் துப்பாக்கியை இயக்கியபடி முன்னேறத் தொடங்கினான். இராணுவத் தினர் பின்னோக்கி ஓடத் தொடங்கினர். வெளியான பிரதேசம், ஈசன் தன் பயிற்சியின் நுட்பங்கள் அனைத்தையும் பயன்படுத்தி முன்னோக்கி நகர்ந்து

கொண்டேயிருந்தான். திடீரென ஈசனின் துப்பாக்கி ஓய்ந்தது; அவனது ரவைக் கூடுகள் வெறுமையாகிவிட்டன. இராணுவத்தைக் காட்டிற்குள் ஒரு அடிகூட எடுத்துவைக்க விட்டுவிடக் கூடாதென்பதில் அவனின் முழுக் கவனமும் இருந்ததால், ரவைகள் தீர்ந்து செல்வதை மறந்திருந்தான்.

ஈசனுக்கு உதவி கிடைக்கவில்லை. பின்னே வந்த வீரர்களின் மூச்சும் நின்றுபோனது. ஈசன் ஒருகணம் சிந்தித்தான். பின்வாங்குவதைத் தவிர வேறு எதுவும் அவனால் அப்பொழுது செய்யமுடியாது. காட்டில் உதவியணி வந்து சேருவதாயினும் நீண்ட நேரமாகும்.

இதனால் காயமுற்ற ஜேம்சையும், கர்ணனையும் தூக்கிக் கொண்டு பின் னோக்கி வேகமாக நகர முற்பட்டான். அவன் முயற்சி பயனற்றுப் போனது.

இந்திய ரவைகள் அவன் உடலையும் துளைத்துக்கொண்டன. இரா ணுவத்தைக் காட்டுக்குள் நுழையவிடாமல் தடுத்தவன், காட்டுக்காகவே தன் னைக் கொடுத்துக்கொண்டான்.

உணவுப் பொருட்களைச் சுமக்கும்போது, சுமை தெரியாமல் நகைச் சுவைக் கதை சொல்லும் ஈசன் எங்கே......? பாரமான பொருட்களை நாம் தூக்க முடியாது கஷ்ரப்பட்டபோது, தானே அதை வாங்கிச் சுமந்த ஈசன்......ஈசன் இன்றும் எம்மனதில் வாழ்கிறான்; வணங்காத மண்ணில் அவன் சிலை எழுந்து நிற்கிறது! ☆

வீரஜனனம்:
26. 03. 1973

வீரமரணம்:
07. 08. 1989




## கர்ணன்

( இந்திய மோதல் )
(சிவப்பிரகாசம் சிவகுமார்)
சாவகச்சேரி.

மட்டுவில் சரசாலையில் பிறந்தவன் கர்ணன். பள்ளிக்கூடம் சென்று வந்தபோது ஒருநாள், இந்திய இராணுவம் இவனைக் கைது செய்து நையப் புடைத்தது. ஆத்திரம் கொண்ட கர்ணன், தன்னைத் தாக்கியவர்களையும், தாக்குவதற்குத் துணை நின்றவர்களையும் அழித்துவிடத் துடித்தான். பள்ளி வாழ்வு முற்றுப்புள்ளியானது. வீட்டில் வறுமை இருந்தது. ஆனால் எதிரி களுக்கு நடுவில் இருந்து வறுமையை நீக்க பெரிதாக எதுவும் செய்துவிட முடியாதென்பதை உணர்ந்து, நாட்டு விடுதலைக்குத் தன்னை அர்ப்பணித் துக்கொண்டான்.

மணலாற்று வாழ்க்கையில் பாசறைகளை அழகுற அமைப்பதிலும், பெரும்பொதிகளை காட்டின் நீண்டபாதையில் சலிப்பின்றிக் களைப்பின்றிச் சுமப்பதிலும், கர்ணனுக்கு நிகர் கர்ணன்தான். பார்ப்பதற்கு முரட்டுத் தோற் றமாக இருந்தாலும், பேச்சில் மழலையும் பழகுவதில் இனிமையும் அவனிட மிருந்தது.

இயக்கப் பணியில் இணைந்த பின், இறப்புவரை, தாய் தந்தையினை காணும் வாய்ப்புக் கிடைக்கவில்லை. அம்மாவையும் அப்பாவையும் கடைசியாக ஒருதடவை எப்படியும் பார்த்துவிட வேண்டுமென, அடிக்கடி சொல்வான். காலமும் நேரமும் அதற்குக் கிடைக்காமலே போய்விட்டது.

காட்டிற்குச் சாமான் கொண்டுவரும் பாதைக்குப் பாதுகாப்பு வழங்கும் நால்வரில் இவனும் ஒருவனாய் நின்றான். தன் பயணத்தின் இறுதி நாளில், ''இண்டைக்கு ஏனோ மனம் ஒரு மாதிரியாய்க் கிடக்குது. சாகிறத்துக்கோ தெரியல்லே'' என்று கூறிக்கொண்டான்; சொன்னதுபோலவே முடிந்துவிட்டது.

கர்ணனின் உடலைக் கூட தாய் தந்தையரிடம் கொண்டுசெல்ல முடியவில்லை; உடல் மட்டுமன்றி, அவனின் மரணச்செய்தியைக்கூட உடனே அறிவிக்க முடியவில்லை. இறுக்கமான இந்திய இராணுவ முற்றுகையினால், முரண்பட்ட தகவல்களோடு, காலம் தாழ்த்தியே இவனின் மரணச் செய்தி தாய் தந்தையர்க்குக் கிடைத்தது. ☆

வீரப்பிறப்பு :
04. 05. 1973

வீரச்சாவு:
07. 08. 1989



# ஜேம்ஸ்

( இந்திய மோதல் )
(சிவசுப்பிரமணியம் மணிவர்மன்)
பருத்தித்துறை.

வடமராட்சியில் பிறந்து, வன்னிக்காட்டில் பாசறைப் பயிற்சியை முடித்துக்கொண்டவன் **ஜேம்ஸ்**. அமைதி குடிகொண்ட முகம்; இனிமையாகப் பழகும் சுபாவம்; சிரித்துப் பேசும் பண்பு - இவை எல்லாம் இவனின் இயல்புகள்.

காட்டுவழிப் பயணம், திசை காட்டும் திறமை, வேவுப் பிரிவின் அனுபவம் - இவையெல்லாம் அனுபவத்தில் பெற்றவை. கொடுத்த பணியைச் சரியாக முடிப்பதில் ஜேம்ஸ் வல்லவன். அதனால்தான் இந்திய இராணுவத்தின் நெருக்கடியான காலகட்டத்தில், மணலாற்றுக் காட்டுக்கு உணவுப் பொருட்கள் கொண்டுவரும் காட்டுவழிப் பாதையில் காவலனாய், இராணுவ நடமாட்டத்தை அவதானிக்கும் வேவுப் பிரிவில் ஒருவனாய், துணிவுடனும் நம்பிக்கையுடனும் செயற்பட்டான்.

தண்ணிமுறிப்பு தகரவாடியும், கிரவலும் கள்ளியும், மாறி மாறி அமைந்த வெட்டை வெளிப் பாதைகளும், வயல்வெளிகளும், கதைக்கும் சக்தியைக் கொண்டிருந்தால் ஜேம்ஸ் பட்ட துன்பங்களையும், இந்தியத் துப்பாக்கிக் குண்டுகளுக்கு 'உச்சி'யபடி செயற்பட்டதையும் ஒன்றும் தப்பாமல் சொல்லும்.

மணலாற்றுக் காட்டின் முக்கியத்துவத்தை உணரவைத்து, ஆரம்ப நாட்களிலேயே கல்லறையாகி விட்ட ஜேம்ஸ் லெப். கருணாவின் நெருங்கிய

நண்பன். கருணாவுடன் இணைந்து வேவுத்துறை அனுபவத்தையும் தாராள மாகப் பெற்றுக்கொண்டான். தண்ணிமுறிப்பு, நித்திகைக்குளம், குமுழமுனை ஆகிய பிரதேசங்களில் இந்திய இராணுவத்தின் அசைவுகளை அவதானிக்கும் பொறுப்பு, இவனிடமே கொடுக்கப்பட்டிருந்தது. அந்தநாளில்தான் நெஞ்சை நெகிழவைக்கும் இவனின் இறுதிப் பணி முடிகிறது.

சாவுக்கு முன்னர், நண்பர்களுடன் ஒன்றாக இருந்து ஒரே தட்டில் சாப்பிட்ட பின், பொருட்கள் கொண்டுவரும் முயற்சியில் இறங்கினான். ஏற் கெனவே இவன் வரும் பாதையில் பதுங்கியிருந்த இராணுவத்தினர், திடீரெனத் தாக்கத் தொடங்கினார்கள். வெளியான அந்தப் பிரதேசத்தில் காயமுற்று வீழ்ந்த ஜேம்சினைத் தூக்கி வந்த கர்ணன் சூடு பட்டு விழ...... இருவரையும் தூக்க முற்பட்டு ஈசன் மரணிக்க...... தப்பிக் கொள்வது கடினம் என்பதை உணர்ந்து, ஜேம்சும் கர்ணனும் ஒரே 'சயனைட்'வில்லையைக் கடித்து மரணத் தைத் தழுவிக்கொண்டனர்! ☆

வீரஜனனம்:
25. 07. 1966

வீரமரணம்:
22. 03. 1989




## கப், கைலன்

(இந்திய மோதல்)
(கதிரவேல் முத்துராசா)
இத்திக்கண்டல்,
அடம்பன்,
மன்னார்.

முறுக்கேறிய உடல், திரண்ட தோள்கள், அந்தத் தோளில் பளபளத்துக்கொண்டிருக்கின்ற ஜி. பி. எம். துப்பாக்கி; ஒரு கையால் அதனை லாவகமாகத் தூக்கிக் குறிபார்த்துச் சுடுகின்ற வலிமை. கைலனை எப்படி மறக்கமுடியும்?

கைலன் சாதுவானவன்; நல்லகுணங்கள் நிறைய இருந்தன. ஆனால், தனது ஜி. பி. எம். துப்பாக்கியை யாராவது தொட்டு விட்டால் எரிமலையாகி விடுவான்; வாய்க்கு வந்தபடி வசனங்கள் வரும். நெருங்கிய தோழனாக இருந்தாலும் சரி, தனது பொறுப்பாளராக இருந்தாலும் சரி, துப்பாக்கியில் கைபோட முடியாது.

குளிரையும் நுளம்புக்கடியையும் தாங்க எல்லாரும் தம் போர்வையினால் உடலைத்தான் போர்ப்பார்கள். கைலன் மட்டும், தன் போர்வையினால் ஜி. பி. எம். துப்பாக்கியைப் போர்த்திவிட்டுச் சும்மா படுத்துக் கொள்வான். துப்பாக்கியைத் தன் உயிரைவிட நேசித்த கைலனைத் தலைவர்கூட பாராட்டினார். ''எத்தனையோ உயிர்களைக் கொடுத்து எடுத்த

துப்பாக்கி '' என்பதை கைலன் நன்கு உணர்ந்தவன். கைலன் பேசும்போது பேச்சு குறைமொழியாக இருக்கும். 'பங்கர்' அமைக்கும் பணியை ஒப்படைத்தால், பங்கரின் இருபக்கங்களையும் சீமெந்து போட்டு அழுத்தியது போல் சீவிச்சீவி அழகாக அமைத்துக்கொள்வான். பொறுப்புடன் - பொறுமையாக - அழகுற இவ்வாறு அமைக்க எவராலும் முடியாது. தலைவர் இவனின் நினைவிற்காக பங்கரின் சிறு பகுதியைப் பூசாமலே வைத்திருந்தார்.

மணலாற்றுக் காட்டின் ஆரம்ப காலப் போர்வாழ்வில், நிலையான களஞ்சியங்கள் இருக்கவில்லை. மரக்கெவருக்குள் பரண் அமைத்து அவற்றின் மேல் சாமான்களை வைப்பதே வழக்கமாக இருந்தது. ஒருதடவை இந்தியச் சிப்பாய்கள், சாமான் வைத்த பரணுக்கு அண்மையில் பதுங்கிக் கிடந்துவிட்டனர்; ஆனால், அவர்கள் பரணைக் காணவில்லை. அத்தியாவசியமான சில பொருட்களை உடனே அதிலிருந்து எடுக்கவேண்டிய நிலை ஏற்பட்டது. கைலன் துணிவுடன் செயற்படத் தொடங்கினான். 'தேவாங்கு' மரத்தில் எவ்வாறு சத்தமின்றி ஏறுமோ அதேபோன்று, ஒரு பொருக்குடையும் சத்தம் கூட இல்லாமல் மரத்தில் ஏறி, சாமான்களை எடுத்துக்கொண்டு இறங்கினான்.

மணலாற்றில் இந்திய - புலிகள் யுத்தத்தில் கைலனுக்குப் பெருமை தேடித் தந்த வரலாற்றுப் பதிவொன்று உண்டு. இந்திய விமானப்படை 'கெலிக்கொப்ரரொன்று' காட்டினை நோட்டம் விட்டுக் கொண்டிருந்தது. கைலனின் ஜி. பி. எம். துப்பாக்கி இதனைக் குறிபார்க்கத் தொடங்கியது. குண்டுகள் நெருப்பாய்ப் பறந்தன. அவசர அவசரமாக அக் 'கெலிக்கொப்ரர்' நித்திகைக்குள இந்தியப் படைமுகாமில் தரை இறங்கியது. அன்று மாலையிலேயே, 'கெலிக்கொப்ரரில்' இருந்த இரு உயரதிகாரிகள் இறந்துவிட்டதாக இந்திய வானொலி அறிவித்தது.

சந்தனம் சுட்டபரவையில் இந்திய இராணுவத்துடன் ஏற்பட்ட மோதவில் மரணித்தவன் மேஜர் கமல். பாதுகாப்பு எதுவுமற்ற அந்த வெளியில் கமலின் உடலை மீட்டெடுக்க கைலன் துணிந்துகொண்டான். வலிமைமிக்க தன் ஒரு கரத்தால் ஜி. பி. எம். துப்பாக்கியை இயக்கியபடியே முன்னேறி உடலை மீட்டுவந்தான்.

கமல் மரணித்த அடுத்த தினமே கைலனின் கண்களும் மூடிக்கொண்டன. '' மச்சான், காட்டுக்கு வந்த பிறகு இப்பதான் ரெண்டாவது தடவையாய் 'சேவ்' எடுத்திருக்கிறன் '' என்று கூறிக்கொண்டே, சண்டைக்குப் புறப்பட்டான். அன்று அவன் வீரம் களத்தில் வென்றது; ஆனால், உடல் மட்டும் மலையாய்ச்சரிந்து கிடந்தது! ☆

வீரப்பிறப்பு :
10. 10. 1969

வீரச்சாவு:
07. 03. 1989



# துஷ்யந்தன்

(இந்திய மோதல்)
(தங்கவேலாயுதம் ஜெயக்குமார்)
பொலிகண்டி,
வல்வெட்டித்துறை.

**உ**ணவு கொடுக்க வந்து உயிர் கொடுத்த உத்தமன் துஷ்யந்தன். 'சினைப்பர்' தாக்குதலுக்கான பயிற்சி பெற மணலாற்றுக்கு வந்த வீரன்; குறிதப்பாத போராளி. இவனது போராட்ட வரலாற்றில். மணலாற்று வாழ்வின் அத்தியாயத்தையே இங்கு தொட்டுப் பார்க்கின்றோம்.

துஷ்யந்தன் ஒரு சகலகலா வல்லவன். தடியில் நடந்து சாகச விளையாட்டுக் காட்டுவது அவனுக்குக் கைவந்த கலை. அனைத்துக் கலைத்திறனும் அவனிடமிருந்தது. ஆனால் மரணதேவதை அவனை தேடி அணைத்துக் கொண்டாள்......

'ஆட்லறி' எறிகணைக்கு பங்கரில் நிலை எடுத்துக் கிடந்த துஷ்யந்தனை எறிகணை தாக்கிவிடுமென எதிர்பார்க்கவில்லை. மரத்தின் மீதுபட்டு வெடித்த எறிகணையின் துண்டொன்று நேராக கீழ்நோக்கி வந்து துஷ்யந்தனைத் துளைத்துச் சென்றது.

எங்கிருந்தோ வந்த படை, எங்கிருந்தோ பெற்ற எறிகணையால், இந்த மண்ணின் சுதந்திரத்தை - கௌரவத்தை - மானத்தை விரும்பித் தன் இலட்சியச் சுவடுகளைப் பதிக்க முயன்றவனை அழித்த கதை கொடுமையானது; ஜீரணிக்க முடியாதது. துஷ்யந்தனைத் தான் அவர்களால் அழிக்க முடிந்தது. அவனின் மூச்சு, இலட்சியத் தீயினைப் பற்றி எரியவைத்ததை அந்த அந்நியப் படைகளால் உணர முடியாது!

☆

வீரப்பிறப்பு :
10.11.1965

வீரச்சாவு :
04.03.1989




# லெப். மணியம்
( இந்திய மோதல் )
( கந்தையா மணிவண்ணன் )
நவாலி கிழக்கு,
மானிப்பாய்,
யாழ்ப்பாணம்,

நவாலியில் பிறந்தவன் மணியம். விடுதலைப் பணியின் பாதிப் பகுதியை யாழ். மண்ணிலேயே புரிந்தவன். யாழ். மாவட்டத்தில் பிரதேச அரசியல் பொறுப்பாளனாக இருந்தவன். தன் அரசியல் பணியால் மக்கள் உணர்வைத் தட்டி எழுப்பியவன். துட்டர்கள் இவனைக் கண்டு நடுங்கினார்கள்; நல்லவர்கள் நட்புறவு கொண்டார்கள். துணிவுமிக்க சில செயற்பாடுகளால், தன் பிரதேசத்தில் தன்னைத் தேடியலைந்த இந்திய இராணுவத்தை நடுங்கச் செய்தவன். இவ்வாறு யாழ். மண்ணில் இவன் பணிபற்றி சகபோராளிகள் பேசிக்கொண்டனர்.

யுத்தப் பயிற்சிக்கு முன்பே கராத்தே பயிற்சி பெற்றிருந்தான் மணியம். இதை அவனது செயலும், உடலமைப்பும் காட்டியது. நடை, உடற்கட்டு அனைத்திலும் ஒரு ' விறுத்தம் ' இருந்தது. மணலாற்றுக்கு ஆர். பி. ஜி. பயிற்சி பெறுவதற்காக வந்தபோதுதான், இவனின் திறமையை நேரில் காணும் சந்தர்ப்பம் கிடைத்தது.

நாவற்கேணியில் இந்திய இராணுவத்தின் தாக்குதலை முறியடிக்க நடந்து கொண்டிருந்த சண்டையில் மணியம் காயப்பட்டு விட்டதாகவும், அவனைத் தூக்கி வரும்படியும் எமக்குக் கட்டளை பிறப்பிக்கப்பட்டது. ஒரு சில வீரர்

க்ளைக்கொண்டே இந்தியப் படையின் பல்லாயிரக்கணக்கான துருப்புக்களைத் தடுத்து நிறுத்திச் சண்டை செய்த வரலாறு, மணலாற்றுக் காட்டுக்கு உண்டு. அந்தளவுக்கு துணிவும், நம்பிக்கையும், விவேகமும், தியாகமும், உறுதியும் கொண்ட வீரர்களை உருவாக்கித் தந்தார் தலைவர்.

மணியம் நிலையெடுத்துக் கிடந்த இடத்தை மிகச் சிரமத்துடன் சென்றடைந்தோம். பின்னே சென்று அவன் தோளைத் தொட்டுத் திருப்ப முனைந்தோம். தலை சரிந்து என் கைகளில் முட்டியது. மணியம் ......! என்று மெல்ல அழைத்துப் பார்த்தேன். எப்படி அவன் பேசுவான் ...? ☆

வீரஜனனம் :
10. 01. 1968

வீரமரணம் :
02. 03. 1989



# லெப். குகேந்திரன்

( இந்திய மோதல் )
( குருகுலசிங்கம் அரசரட்ணம் )
ஆசிகுளம்,
வவுனியா.

வசீகரமுள்ள முகம் குகேந்திரனுக்கு. இவனின் முகத்தைப் பார்த்தால் எவருக்கும் எந்தக் கோபமும் அடங்கிவிடும். இவன் ஏதாவது சொன்னால் அதை மறுக்காமல் செய்யவேண்டும் போல இருக்கும். தலைவரின் முகத்தை அண்மையிலிருந்து, பார்த்துத் தண்டனை பெறாமலே திருந்தியவர்கள் எம்மில் பலர். அதுபோன்று வழிகாட்டும் வசீகரம் இவனிடமும் இருந்தது; வளர்ப்பு அவருடையதுதானே !

குகேந்திரனின் சொந்தமண் ஆசிகுளம். தேசவிரோதக் கும்பல்களின் அடைக்கலமாய் இருக்கும் வவுனியாக் கிராமங்களில் இதுவும் ஒன்று. சாக்கடையில் மலர்ந்த தாமரை இவன். என்றோ ஒருநாள் அக்கிராமத்தின் அழுக்கு அகற்றப்படுவதைக் கண்டு இவன் அமைதிகொள்வான்.

அன்பாய், அமைதியாய், இனிமையாய் பேசும் குகேந்திரன் சாந்தமே வடிவானவன். இந்திய இராணுவ முற்றுகைக்குள் மணலாறு அகப்பட்டுக் கிடந்தபோது, பொறுமையாக - விவேகத்துடன் - செயற்பட்டு போராட்ட வளர்ச்சிக்குத் தம்மை அர்ப்பணித்தவர்களின் வரிசையில், தன்பெயரையும் பதித்துக்கொண்டான்.

காட்டிற்கு வந்த ஆரம்ப நாட்களில் பாதுகாப்பான பாசறைகள் கிடையாது. பொருட்களைச் சேமித்து வைக்கும் களஞ்சியம் கிடையாது. மரக் கெவருக்குள் பரண் அமைத்து, 'உலண்டி' கட்டி கீழேயிருந்து சாமான்களை இழுத்துப் பரனில் அடுக்கிவிடுவோம். குகேந்திரன் இந்தப் பணியைப் பொறுமையுடன் செய்வான். கீழே ஒரு சிறிய கடதாசி துண்டுகூட விடாமல் கிண்டிப் புதைத்துவிடுவான். காலடிச்சுவடுகளை 'அலம்பலால்' பரவி, சருகுகளைத் தூவிவிடுவான். எதிரிக்கு தடயங்கள் கிடைக்காமல் பாதுகாப்பதில் நிதானமாக இருந்தான். அதனால்தான் அன்று இந்திய இராணுவத்தின் கண்களிலிருந்து நாமெல்லாம் தப்பித்துக்கொள்ள முடிந்தது. நாங்கள் அமைத்த பரண்களைக் கண்டுகொள்ள இயலாமல், அந்த மரங்களுக்குக் கீழாகவே எத்தனை தடவைகள் இந்தியப் படையினர் சென்றிருக்கிறார்கள் !

இதற்கெல்லாம், குகேந்திரனைப் போன்ற பொறுப்புணர்ச்சியுள்ள போராளிகளின் செயற்பாடுகள்தான் காரணம். காட்டில் நாங்கள் நடந்து செல்லும்போது குகேந்திரன் பின்னாலே நின்று அடிச்சுவடுகளை அழித்தழித்து, சருகுகள் தூவிக்கொண்டே வருவான்.

குகேந்திரனின் மரணம் மேஜர் கமலுடன் நிகழ்ந்துபோனது. இந்திய இராணுவம் காட்டில் நுழைவதைத் தடுத்து நிறுத்திய அச்சண்டை, வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்ததொன்று. விழிகள் மூடிக்கிடந்தபோதும், மகிழ்வுடன் கருணை நிறைந்த அவனது ஒளி குன்றாத முகம்...... !

☆

வீரப்பிறப்பு :
20. 10. 1966

வீரச்சாவு:
28. 08. 1989



# லெப். கிருஷ்ணா

( இந்திய மோதல் )

( சுப்பையா இராசதுரை )

மடுக்குளம்,

வவுனியா.

இரண்டு மைல்கள் இடைவெளி - அதற்குள் இரண்டு இராணுவ முகாங்கள்; அவற்றுக்கிடையில் அடிக்கடி ரோந்து. இதனூடாகச் சாமான்களை ஆற்றங்கரைக்குக் கொண்டுசெல்ல வேண்டும். ஆற்றில் நிற்கும் படகில் சாமான்களை ஏற்ற, அரை மைல் தூரம் சேற்றில் நடக்கவேண்டும். இராணுவத்தினர் வந்தால் தப்புவது கடினம். அபாயத்தின் நடுவே அர்த்தமுள்ள தியாகப்பணி; எத்துணைவேகம், என்ன துணிவு !

வீதியின் இருமருங்கும் கடலைப் பிலவு - மழைக்காலம்; கும்மிருட்டு. கடலைச் செடிகள் தான் கிருஷ்ணாவின் கவசம். அவனது விழிகள் இருட்டினைக் கிழித்துக்கொண்டு கூர்மையாக நோக்கின. இமைக்கக்கூட முடியாத விழிப்பு. கிருஷ்ணாவுடன் துணைக்கு இன்னுமொரு போராளி. அவனுக்கு வயது சற்றுக்குறைவு; அதனால் பொறுப்புணர்ச்சி கொஞ்சம் குறைவாகவேயிருந்தது. இவனைக் காவலுக்கு நிறுத்துவதை விட, தானே விழித்திருப்பது நல்லதென கிருஷ்ணா உணர்ந்துகொண்டான். தன்னை நம்பி எவ்வளவு பொருட்கள்...... ஏற்றுவோர்......படகு......சற்றுக் கண் அயர்ந்தால் போதும், அத்தனையும் முடிந்த கதையாகிவிடும்.

இப்படி எத்தனை இரவுகள் கிருஷ்ணா கண்விழித்திருக்கின்றான்! வாய் முட்டும் தண்ணீரில், மழையில் நனைந்தபடி......எத்தனை தடவைகள் படகினைத் தள்ளிச் சென்றிருப்பான்! அவனின் அயராத கடமையுணர்வுதான், மணலாற்றை மட்டுமன்றி போராட்ட வரலாற்றையே நம்பிக்கையோடு வளர வைத்தது.

கறுப்பு நிறம், கட்டையான தோற்றம், சுறுசுறுப்புமிக்க நடை நீண்ட நாட்கள் சவரம் செய்யப்படாமல் வளர்ந்திருந்த தாடி......களைப்பு மறந்த உழைப்பு...... என்ன தியாகம்......! என்ன அர்ப்பணிப்பு......!

கிருஷ்ணா சிலகாலம் பாசறை ஒன்றுக்குப் பொறுப்பாக இருந்தான். ஒருநாள் திடீரென, பயிற்சிக்காக வந்தவர்களில் இருநூற்றைம்பது பேர் இவனது பாசறைக்கு அனுப்பப்பட்டனர். பசிக்களையுடன் அவர்கள் வந்திருந்தனர். அவர்களின் பசியை உடனே ஆற்றவேண்டும்; கிருஷ்ணா வேகமாக இயங்கினான். சில மணி நேரந்தான். அனைவரின் பசிக்கும் சோறு கொடுத்தான். எத்துணை வேகம்! மற்றவர்களை நம்பி இருக்காத செயற்பாடு. இவ்வளவு வேகமாகச் சமையல் செய்ய எவராலும் முடியாது.

கிருஷ்ணா விரைவில் தன் மரணத்தை எதிர்பார்த்தவன்தான். ஏனெனில், நாளாந்தப் பணியே மரணத்துடன் விளையாடுவதுதான்! வழமைபோலவே அன்றும் உணவுப் பொருட்களைக் கொண்டு வந்து சேர்க்கும் பணி நடந்து கொண்டிருந்தது. தற்செயலாக இந்திய ரோந்து அணி எதிர்ப்படுகிறது. சாதுரியமாகச் சண்டை செய்து தப்பித்துக்கொள்ள வேண்டும். இல்லையேல், அடுத்தநாள் அந்தப் பாதையால் சாமான் கொண்டுசெல்ல முடியாது. அந்த மரண விளையாட்டில் கிருஷ்ணாவின் தியாகவரிகள்......... முற்றுப்பெறாத தொடர்கதையாய்.........!

☆

**வீரச்சாவு :**
**24.05 1988**




# குட்டி

( இந்திய மோதல் )
முல்லைத்தீவு.

கற்பனைக்கெட்டாத - நெஞ்சுக்குப் புலப்படாத - ரத்தவரிகள் பல ஈழ மண்ணில் பதியப்படுகின்றன. ஏன் வந்தோம்? யாரைச் சுடுகின்றோம்? எதற்காகச் சுடுகிறோம் என்பதைப் புரிந்துகொள்ளாத இந்தியச் சிப்பாய்களுக்கும், அவர்களின் துப்பாக்கிகளில் இருந்துவந்த ஆயிரக்கணக்கான ரவைகளுக்கும் முகம் கொடுத்து, விடுதலைப் போரினைக் காத்து வளர்க்கவேண்டிய இக்கட்டான நிலையினைக் கருத்திற்கொண்டு, அதற்காக உயிர் கொடுத்த வீரர்கள் பலர் செய்யமுடியாத தியாகம் ஒன்றினைச்செய்து செத்துமடிந்தவர்களில், குட்டியை மறக்க முடியாது. எண்ணியெடுத்த சில வீரர்களுடன், மணலாற்றுக் காட்டில் வரலாறு ஆரம்பமாகியது. பாசறையில் இருந்து சற்றுத்தொலைவில் முற்காப்புக்கு காவல் பணிக்காய் மேஜர் அரியும், கப். கைலனும் சென்றிருந்தனர். உலகத்து வெளியின் - காட்டுக் கரையொன்றின் அருகில், காவற் பணியில் நின்றான் குட்டி. தடயங்கள் சிலவற்றின் வழியே இந்தியப் படைகள் இடைவெளியால் நுழைந்து விட்டனர். குட்டியின் துப்பாக்கி இயங்கத் தொடங்கியது. நூற்றுக்கு மேற்பட்ட இந்தியப் படையின் துப்பாக்கிகளை எதிர்த்து, குட்டியின் ஒரேயொரு துப்பாக்கி மட்டும் இயங்கிக்கொண்டிருந்தது. பின்வாங்குவதென்ற சிந்தனைக்கு இடமிருக்கவில்லை.

சரமாரியான துப்பாக்கிச் சத்தம் கேட்டு அரியும், கைலனும் ஓடிவந்து கொண்டிருந்தனர். குட்டியின் துப்பாக்கி ரவைகள் தீர்ந்துகொண்டிருந்தன; ஒரேயொரு ரவைமட்டும் எஞ்சியிருந்தது. குட்டி அதனை வைத்துக்கொண்டான்.

கண்முன்னே பல இராணுவத்தின் சடலங்கள் கிடப்பது அவனது கண்களுக்குத் தெரிந்தது. ஆனால் பங்கருக்குள் இருந்து வெளியே ஏறமுடியாது; துப்பாக்கிக் குண்டுகள் வந்துகொண்டிருந்தன. தன்னிடமிருந்த 'கிரனேட்டு'க்களை ஒவ் வொன்றாக எடுத்து வீசினான். அதுவும் தீர்ந்துபோது. உயிருடன் பிடிபடக் கூடாது; குட்டி ஒருகணம் சிந்தித்தான். அடுத்த கணம் அவனது துப்பாக்கி அவன் தலையை நோக்கி திரும்பிய கடைசி ரவை ...அவனது விரல்கள் வில் லினை அழுத்துகின்றது ... ''டுமீல்'' அரியும், கைலனும் இளைக்க இளைக்க ஓடிவந்தனர். தாக்குதலை நடத்திக் கொண்டே குட்டியின் பங்கரை அண்மித் தனர் - அந்தோ.. ... இரத்த வெள்ளத்துள் குட்டி குளித்துக் கிடந்தான்! ☆

வீரச்சாவு:
24. 05. 1988




# 2ஆம் லெப். விக்கி

( இந்திய மோதல் )

( மேகவர்ணசாமி சிறீகிருஷ்ணன் )

நெடிய காடு,

வல்வெட்டித்துறை.

**வி**டுதலைப் புலிகளின் ஆரம்பகால உறுப்பினர்களில் ஒருவன் *விக்கி.* இந்திய மண்ணில், முதலாவது படைப்பயிற்சி முகாமில் பயிற்சியினை முடித்துக் கொண்டவன். இவனின் நீண்டகாலப் போர்வாழ்வில் மணலாற்று அத்தியாயம் மட்டுமே, இங்கு புரட்டிப் பார்க்கப்படுகிறது.

நெருக்கடியான காலத்தில் - கடினமான இடத்தில் - துன்பங்களைச் சுமந்து, விடுதலைப் போரினையும் போருக்கான அணிகளையும் வளர்த்தவர்களில் விக்கியை மறக்க முடியாது. மணலாற்றுக் காடு இந்தியப் படைகளால் சுற்றிவளைக்கப்பட்டிருந்தது. இந்நிலையிலும் விக்கி தன்னுடைய நாளாந்தப் பயிற்சியை நிறுத்தவில்லை. மோட்டரைக் கையில் தூக்கிப் பிடித்துக்கொண்டு ஓடுவான்.

மணலாற்றுக் காட்டில், பாசறைகளைப் பாதுகாப்புமிக்கதாகவோ வசதிகள் நிறைந்ததாகவோ அமைக்கக் கூடியளவிற்கு, நிலைமை இருக்கவில்லை. இரவு முழுவதும் காவல் கடமையில் நிற்பதோடு, விடிந்ததும் சுற்றுப்புறங்களை நோட்டம் விட்டு - இராணுவ நடவடிக்கை இருக்கின்றதா என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். இதுவும் அவசியமான நாளாந்தப் பணியாகவேயிருந்தது.

வழமையான இப்பணியில் அன்றும் ஈடுபட்டிருந்தனர் சிலர். ஆனால், அன்றிரவு பாசறைக்கு மிக அண்மையில் இந்திய ஜவான்கள் வந்து நிலையெடுத்துக் கிடந்தனர். விக்கி எல்லாருக்கும் முன்னே சென்றுகொண்டிருந்தான். எதிர்பாராத விதமாக இந்தியப் படையின் தாக்குதல் ஆரம்பமானது. மிகமிக அருகாமையில் வைத்து இந்தியச் சிப்பாய்கள் தாக்கத் தொடங்கியதால், முன்னே சென்ற விக்கியால் தப்பிக்கொள்ள முடியவில்லை. ஆனால், இவனின் துப்பாக்கி சில கணம் இயங்கியதால், ஏனைய வீரர்கள் தப்பிக்கொள்ள முடிந்தது! ☆

வீரப்பிறப்பு :
16. 10. 1967

வீரச்சாவு :
03. 03. 1989




# மேஜர் அரி

( இந்திய மோதல் )

( காந்தலிங்கம் பிறேமசிறீ )

தாளையடி.

காட்டு வாழ்க்கை பசுமையானது. அந்தப் பசுமையான நினைவுகளில், அரி அண்ணனுடன் வாழ்ந்த வாழ்க்கை துன்பச்சுவை நிறைந்தது. வானைத்தொடும் உயர்ந்த - அடர்ந்த மணலாற்றுக் காட்டில், ஒவ்வொரு அடியினையும் நிதானமாக எடுத்துவைக்க வேண்டிய காலத்தில் - விழிகளை இமைக்கமறந்து பணிபுரிய வேண்டிய நேரத்தில்தான் - அரியண்ணனோடு வாழுகின்ற பாக்கியம் கிடைத்தது. அதற்கு முன், அவர் களத்திலே பயிற்சி பெற்றதையும், தலைவருடன் நின்றதையும், யாழ்ப்பாணத்தில் இந்தியக் களம் கண்டதையும் பிறர் சொல்லக் கேள்விப்பட்டேன்.

நேற்று நடந்து முடிந்ததுபோல் மனதில் நிற்கும் அந்தநாட்கள்...... தெரியாத காடு, ஆனால் தெரிந்த - பழக்கப்பட்ட - காடுபோல் ஜி- 3 துப்பாக்கியுடன் ஓய்வின்றி நடந்த போது, எங்களால் நடக்கமுடியாது என்பதை வெளிப்படையாக சொல்லமுடியாமல், கண்கலங்க, கால்உளைய அவர் பின்னே நடந்தோம். அவரது வழிகாட்டல் எங்களை எந்தளவுக்கு வளர்த்துவிட்டது என்பதை நினைத்துப் பார்க்கும்போது, நெஞ்சு அடைத்துக்கொண்டு வரும்.

ஒரு 'ரொபி'க் கடதாசியைக்கூட நிலத்தில் போட விடமாட்டார். அதுகூட எதிரிக்குத் தடயமாகி விடுமென்று அடிக்கடி எடுத்துச் சொல்லுவார். தலைவரையும் எமது இலட்சியப் போரையும் காக்கவேண்டிய மிகப்

பெரும் பொறுப்பு எங்களுக்கு உண்டு என்ற உண்மையை, ஒவ்வொரு கண மும் நினைவில் பதியவைத்துக்கொள்வார். தான்தோன்றித்தனமாக ஒரு கடதாசித்துண்டைக் கசக்கி எறிந்தபோதெல்லாம், ஈவு இரக்கமின்றித் தண்டனை தந்த அந்த நாட்களை எண்ணிப் பார்க்கிறேன்...... பொறுப்புமிக்க அவரின் இறுக்கமான கட்டுப்பாடு எம்மையெல்லாம் எந்தளவுக்கு மனிதனாக்கியது என்பதை நினைக்கும் போதெல்லாம், அவரின் சமாதிக்கு அருகே சென்று, சிலகணம் கண்மூடி மௌனிக்கிறேன்.

அரியண்ணன் தூங்கியதை நான் கண்டதில்லை; அவரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்த பொறுப்பு அந்தளவிற்குச் சுமை நிறைந்தது. சாவோடு விளையாடும் வேவுப்பணியின் பொறுப்பு; உணவுப்பொருட்களைக் காட்டிற்குக் கொண்டுவந்து சேர்க்கும் பொறுப்பு. இருபதினாயிரத்துக்கு மேற்பட்ட இந்தியப் படைகள் காட்டினைச் சுற்றியிருக்க, அவர்களின் அசைவுகளை வேவு, பார்த்து, எந்த இடத்தில் பலவீனம் உண்டு என்பதைக் கணித்து, அந்த இடத்தினூடாகப் பொருட்களை உள்ளே கொண்டுவரவேண்டும். இக்கட்டான - சிக்கல்நிறைந்த - இந்தப் பணியை அரியண்ணனால்தான் செய்யமுடியும். எப்படி அவர் தூங்க முடியும்......? அவர் தூங்கியதை என்னால் எப்படிக் காண முடியாதிருந்ததோ அதேபோன்றுதான், அவர் விழித்தெழுவதையும் கண்டதில்லை. அவர் தூங்கும்நேரம் எனக்கு மட்டுமல்ல, எவருக்குமே தெரியாது. அவர் தூங்குவதுண்டா......? என்ற கேள்விக்கு இன்று கூட என்னால் விடைகாண முடியவில்லை. தலைவன் தன்னைப் போல் வளர்த்தெடுத்த ஒரு அதிதப்பிறவி இவர்......

நாயாற்றுக்கும், கொக்கிளாய்க்கும் இடைப்பட்ட கடற்கரைப் பிரதேசம். இந்திய இராணுவ ரோந்து அணி ஒன்றைத் தாக்குவதற்காக, ஒன்பது நாட்களாக நிலையெடுத்துக் கிடந்தோம். தாக்குதலணிக்கு அரியண்ணனே பொறுப்பு. அந்த ஒன்பது நாளும், நிலையை விட்டு அசையக்கூட அவர் விட்டதில்லை. குழையல் சோறுடன் குளிப்பின்றிக் கிடந்த அந்த நாட்களை எப்படி மறக்கமுடியும்......?

அரியண்ணனின் போராட்ட வாழ்விலிருந்து நான் கற்றுக்கொண்ட அனுபவங்கள் பல. வெற்றிலைக்கேணி கிராமத்திலிருந்த தனது வீட்டுக்கு, ஒருதடவை இவர் சென்றிருந்தார். பெற்றபிள்ளையிடம் தாய் எதையோவெல்லாம் எதிர்பார்க்கும் இன்றைய காலத்தில், அரியண்ணனின் தாய், இவரிடம் வீரத்தை மட்டுமே எதிர்பார்த்து நின்றாள். ''அம்மா நான் செத்தாலும், என்ர துப்பாக்கியைத் தூக்க தம்பியை அனுப்பிப் போடுங்கோ'' என்று தாயிடம் அவர் வேண்டிக்கொண்ட அந்தநாள், இன்னும் பசுமையாக நெஞ்சில் நின்றது! இன்று அரியண்ணனின் துப்பாக்கியோடு நிற்கும் அவரின் தம்பியைக் காணும்போதெல்லாம், என்னையறியாமல் பொங்கிவரும் கண்ணீரைத் துடைத்துக்கொள்கின்றேன்!

அரியண்ணனது தியாகத்தின் ஆழம் காணமுடியாதது. முடிவற்றுத் தொடரும் அவர் நினைவுகளை எழுத்தில் காட்ட எனக்கு வல்லமை இல்லை. அவரை வளர்த்த தலைவனால் மட்டுந்தான் அவரது வல்லமையை வரைந்து கொள்ள முடியும். எட்டமுடியாத ஒரு சிகரத்தை எட்டிப்பார்க்க முயன்ற போது வரைந்துகொண்ட வரிகளே இவை. எண்ணச்சுமைகளையும் எழுத முடியாத அனுபவங்களையும் தந்து, இந்தியப் படையின் 'செக்மேற் - 02' நடவடிக்கையை முறியடித்து நிரந்தர ஓய்வு பெற்று, அவர் கண்மூடிய நாள்......

☆

பிறப்பு:
04. 06. 1961

வீரச்சாவு:
15. 07. 1989



## அசோக்

( இந்திய மோதல் )
( க. அசோக்குமார் )
செம்மலை.

பயிற்சிக்காய்ப் புறப்பட்ட அசோக், பயிற்சிபெறும் முன்னரே சாவினைத் தழுவிக்கொண்டான். ஆனாலும் அவன் பணியின் எச்சம் மறக்க முடியாதது. இந்திய இராணுவத்தின் கண்களைச் சுற்றிவிட்டு உணவுப் பொருட்களைச் சுமந்து காட்டுக்கு அனுப்பும் பணியை, தன் கிராமத்தில் இருந்தே செய்து கொண்டான். ஒற்றைமாட்டு ரயர் வண்டியுடனும் கரச்சி வெளிச் சேற்றுடனும் அசோக் மல்லுக்கட்டிய நாட்கள் எத்தனை!

'ஒப்பரேசன் பாஸ்' எனும் சிறப்பு நடவடிக்கைக்காக, 'பரா மிலிற்றரி' துருப்புக்கள், மணலாற்றின் அனைத்து இந்திய படைமுகாம்களிலும் இறக்கப் பட்டிருந்தன. ''கறுப்புப்பட்டிக்காரர் பொல்லாதவர்கள்'' என்று மக்கள் பேசிக் கொண்டனர். ஆனாலும் உணவுப் பொருட்களைக் காட்டுக்கு அனுப்பும் பணி நிறுத்தப்படவில்லை. அசோக் உணவுப் பொருட்களை ஏற்றிக் கொண்டு, ஒற்றைமாட்டு வண்டியில் சென்றுகொண்டிருந்தான். இரவு ஒன்பது மணி. ஆற்றங்கரையில் நின்ற படகில் கொண்டுசென்ற பொருட்களை ஏற்றிவிட்டுத் திரும்பிக்கொண்டிருந்தான். இதற்கிடையில் வண்டி சென்ற பாதையில் 'பராத் துருப்புக்கள்' வந்து பதுங்கிக்கொண்டனர். வண்டிச் சத்தம் கேட்டதும் அவர் களின் துப்பாக்கிகள் இயங்கத் தொடங்கின. வண்டியை விட்டு இறங்கி ஓடத் தொடங்கினான் அசோக். மிக அண்மையில் இருந்து வந்த துப்பாக்கிக் குண்டு அவனுடலில் பாய்ந்தது. கழுத்தில் தனக்கு 'சயனைட்' இல்லை என்பது அவ

னுக்குத் தெரியும். இராணுவத்தின் கையில் அகப்பட்டுவிடக் கூடாதென்பதற்காக நீண்டதூரம் ஓடினான்; இனிமேல் ஓட அவனுடலில் குருதியில்லை. மறைப்பொன்றில் மெல்லப் படுத்துக்கொண்டான். அவனது கண்கள் சாவை அணைத்துக்கொண்டன! ☆



வீரப்பிறப்பு:
16. 03. 1955

வீரச்சாவு:
06. 08. 1988




# லெப். சோமேஸ்

( இந்திய மோதல் )
( நடராசா காந்தகுமார் )
பலாலி,
யாழ்ப்பாணம்.

**வி**டுதலைப் போராட்டத்தில் சொந்த மாவட்டத்திலும் மாவட்டத்துக்கு வெளியேயும் பணிசெய்தவன் சோமேஸ். இந்திய மண்ணில் விடுதலைப் போருக் கான பயிற்சியைப் பெற்று, தமிழ் நாட்டில் தங்கியிருந்து, விடுதலைப் புலி களின் மாணவர் அமைப்புக்கான செயற்திட்டங்களில் ஈடுபட்டான். சில மாதங் கள் மட்டுமே அங்கு பணி செய்துவிட்டு சொந்த மண்ணுக்குத் திரும்பினான்.

கடற்காற்றின் சுகம்பெற்ற மயிலிட்டிக் கிராமமே இவனது பிறந்த மண். அந்தக் கிராமத்தின் அருகே இருக்கும் பலாலி இராணுவ முகாமும், அங்கிருந்து சிங்களப் படைகள் செய்த அட்டகாசமும் சோமேசின் மனதில் ஆழமாகப் பதிந்தவை. ஆதலால் இலங்கைப் படைக்கெதிரான முதல் சண்டையைக் கட்டு வனில் சந்திக்கும் பேறு கிடைத்தது. அந்தச் சண்டையில் காலில் காயத்தை யும் சுமந்துகொண்டான்.

இந்திய இராணுவம் ஈழத்தில் கால்பதித்து விடுதலைப் போரை நசுக்க முற்பட்ட காலத்தில்தான், மணலாற்றுக் காட்டிற்கு இவனும் வந்திருந்தான். மணலாற்று வாழ்வில்தான், இவனது குண இயல்புகளையும் ஆற்றல்களையும் முழுமையாகப் புரிந்துகொள்வதற்கான வாய்ப்புக் கிடைத்தது.

யாருக்காகவும் எதையும் செய்துகொடுக்க, எந்தநேரமும் தயாராக இருப்பவன் சோமேஸ். தானும் தானிருக்கும் சூழலும் குதூகலமாக - மகிழ்ச்சியாக - இருக்க வேண்டுமென்ற ஆசை இவனுக்கு நிறையவுண்டு. தன் சக தோழருக்கு உணவு குழைத்துக் கையிற் கொடுத்துச் சாப்பிடுவதில் நிறைய மகிழ்வைக் காண்பான். எந்தநேரமும் சுவாரஸ்யமாகக் கதைத்து மகிழ்வதும், கலகலப்பாகப் பேசுவதுமே இவனது இயல்பான குணங்கள்.

மணலாற்றுக் காட்டில் இந்திய இராணுவம் முகாமிட்டபோது, அதனைத் தாக்கி அழிக்கச் சினங்கொண்டு பாய்ந்த புலிகளின் அணியில் சோமேசும் பங்கெடுத்தான். மணலாற்றில் இந்தியப் படைமுகாம் மீதான முதற்பாய்ச்சல் இது. இந்த வீரத்தில் விழுதாகிவிட்டான் சோமேஸ். பல வீரப்புதல்வர்களை மண்ணுக்குத் தந்த மயிலிட்டிக் கிராமம் சோமேசை மறக்காது, மயிலிட்டிக் கிராமம் மறந்தாலும் மணலாறு மறக்காது. ☆

பிறப்பு:
1968. 07. 18

வீரச்சாவு:
06. 08. 1988



## 2 ஆம் லெப். விக்ரர்

(இந்திய மோதல்)
( ஞானராசா விக்டோறியன் )
திருநகர்,
கிளிநொச்சி.

சுருண்டகேசம், மகிழ்ச்சி குன்றாத அமைதியான முகம், இனிமையோடு பழகும் சுபாவம். விக்ரர் எங்கள் இதயத்தோடு ஒன்றிப்போன வீரன். தலைவனைக் காத்துவிடவேண்டும். அவரால்தான் எம்மினம் விடுதலையைப் பெற முடியும் என்பதைத் தெளிவாக - தீர்க்கமாக - தெரிந்துகொண்டவன் விக்ரர். அதனால்தான் இந்தியப் படைக்கு காட்டில் முறையான அடிகொடுக்கவேண்டும் என்பதில் முழுவீச்சாகச் செயற்பட்டான்.

காட்டில், ஆரம்பகால வாழ்வில் நாட்டுக்காக உயிர்கொடுத்தவர்கள்தான் இன்றைய விடிவுக்கான அத்திவாரங்கள். அவர்களின் உயிர்த்தியாகந்தான் எமது தலைவனையும், அவர் வளர்த்த தளபதிகள் பலரையும், போராளிகளையும் எமக்குக் காத்துத் தந்தது. கெரில்லா போர்முறைகளை எம் போர் வீரர்கள் நன்கு கற்றிருந்தாலும், முன்பின் தெரியாத பெருங்காட்டில் தம் போர் அனுபவங்களை எடுத்த எடுப்பில் வளர்த்துக்கொள்வது கடினமானது. கடினமான இந்தப்பணியில் நிறைவினைத் தந்தவன் விக்ரர். திசைகாட்டியுடன் காட்டில் எந்தத்திசைக்கும் வழிகாட்டும் திறமை விக்ரருக்கு இருந்தது. இத் திறமை மணலாற்றுக் காட்டின் ஆரம்பகால வாழ்விற்குப் பெரிதும் உதவிற்று. ஆனாலும் அவனது திறமை, நீண்டகாலம் எமக்குப் பயன்பட முடியாமற் போயிற்று.

எமது தற்காலிக பாசறை ஒன்றினுள் இந்திய இராணுவம் நுழைய முற்பட்ட சமயம், கடும் சண்டை மூண்டது. நீண்ட - மூர்க்கத்தனமான - சண்டையைவிட, புத்திசாலித்தனமான - சாதுரியமான - சண்டையினையே நாம் செய்யவேண்டியிருந்ததால், அப்பாசறையிலிருந்து பின்வாங்கினோம். அந்த இடத்தில் நிரந்தர முகாமொன்றை இந்தியப் படையினர் அமைக்க முயன்றபோது, அதைத் தடுக்கவேண்டிய அவசியமும் ஏற்பட்டது. இதனால் அம்முகாம்மீது மீண்டும் திடீர்த் தாக்குதலொன்றினைத் தொடுத்தோம்; எமது இலக்கு நிறைவேறியது. படையினர் அங்கு நிரந்தரமாக இருக்கும் எண்ணத்தைக் கைவிட்டுச் சென்றனர். இந்த இலக்கை நிறைவேற்றிய சண்டையில் தான் விக்ரர் தன்சாவை அணைத்துக்கொண்டான். சோமேசோடு தன்னையும் இந்த மண்ணுக்குக் கொடுத்தான் விக்ரர். ☆

வீரப்பிறப்பு :
28. 05. 1969

வீரச்சாவு :
11. 03. 1988




# யோகேஸ்

(இந்திய மோதல்)
( பிரான்சிஸ் மனோகரன் )
பெரியபுல்லுமலை,
மட்டக்களப்பு.

மட்டக்களப்பிலிருந்து மணலாற்றுக்கு வந்தவன் யோகேஸ். பெற்ற தாயை மறந்து, உடன் பிறந்த உறவுகளை மறந்து, பிறந்த மண்ணையும் மறந்து, ''தமிழீழம் எமது தேசம்'' என்ற தேசியப் பற்றினுள் ஊறிய வீரர்கள் எமது வீரர்கள். இவர்களினுள்ளும் தென்தமிழீழத்திலிருந்து விடுதலைக் களத்தில் காலடி பதித்த வீரர்கள், சிங்களக் காடையரின் துன்பங்களை நாளும் சுமந்தவர்கள்; கோழையாய் வாழ்ந்து மடிவதைவிட வீரத்தோடு வீழ்வதே மேல் எனக் கொண்டவர்கள். யோகேஸ் இதற்கு விதிவிலக்கல்ல.

யோகேஸ் என்றதும் அவனது கறுத்த இருண்ட உருவமும், நிமிர்ந்த தோற்றமும், நடையும் கண்முன் வருகின்றன. காட்டில் சில மாதங்களே அவனுடன் பழகினோம். அதற்கிடையில் அவன் எம்மிடம் பிரியாவிடை பெற்றுவிட்டான். ஒரு சில மாதங்கள் வாழ்ந்தாலும் ஒவ்வொரு நாளையும் அர்த்தமுள்ளதாக, பயனுள்ளதாகப் பயன்படுத்தியவன் யோகேஸ். அவன் ஓய்வாக இருந்த நாட்கள் என்று சொல்வதைவிட, ஓய்வாக இருந்த நிமிடங்கள் மிக அரிது. காலமும் நேரமும் உணர்ந்து செயற்பட்ட வீரன். தனிமையை விரும்பாது எங்களுடன் கூடியிருந்து மகிழ்வதையே விரும்பியவன். எங்களுடன் கூடியிருக்கும்போது எம்மையறியாமலே தன்னுடன் எம்மையும் இயங்கவைத்துவிடுவான். காட்டில் வாழ்ந்த ஆரம்பத் தோழர்கள் பலர் இன்று இல்லை; ஆயிரம் வந்து மறைந்தாலும், எங்கள் மரணம் வரையும் அவர்களுடன் வாழ்ந்த அந்தக் காட்டுவாழ்வு மறக்க முடியாதது; மனதிலிருந்து அழிக்க முடியாதது!

☆

பிறப்பு:
27.03.1968

வீரச்சாவு:
29.06.1989




# மேஜர் றஞ்சன்

(இந்திய மோதல்)
(இராசதுரை சுரேன்)
பன்னாலை,
யாழ்ப்பாணம்.

விவேகம் படைத்தவர்கள், வீரசாதனைகள் படைத்தவர்கள் என்று நாம் போற்றிப் புகழும் தளபதிகளோடு உயர்ந்த நிலையில் வைக்க வேண்டியவன் மேஜர் றஞ்சன். மணலாற்றுக் காட்டில் தலைவனைக் காத்துநின்ற போராளிகளை வளர்த்து, சாதனைகள் படைத்த இவனது வீரவாழ்வைத் தமிழ் மக்கள் அறிந் திருக்க முடியாது.

தன்னை அழகுபடுத்திக்கொள்ள வேண்டும், தன் நலனை வளர்த்துக் காத்துக்கொள்ள வேண்டுமென்பதில் சிறிதளவேனும் அக்கறை காட்டிக்கொள்ளா தவன் றஞ்சன். ஆனால், காட்டிற்குப் புதிதாக வந்து சேரும் வீரர்களின் நலன் களைப் பேணிக்காப்பதில் கருத்தாக இருந்து செயற்பட்ட கர்மவீரன். தன்னு டைய பிள்ளைகள் போல, தன்னுடைய தம்பியர்கள் போல அவர்களுக்கு முடிவெட்டி, குளிப்பாட்டி, நல்ல உணவும் உடையும் கொடுத்து, அவர்களுடைய மகிழ்வில் தன்னுடைய நிறைவைக் கண்டான். சாறத்தினை மடித்துக் கட்டிக் கொண்டு, ஓய்வின்றி எந்த நிமிடமும் ஏதோ ஒரு பணியைச் செய்துகொண்டி ருந்தவன். அவனது செயலில் போராட்ட வாழ்வின் பாடங்களை நாம் கற்றுக் கொண்டோம். சண்டை செய்யும் முறைகளை அவனிடமிருந்தே கற்றுக் கொண் டோம். சொன்னதைச் சொன்னபடி நிறைவேற்றி தலைவனின் மனதில் ஆழமாக வேரோடிய றஞ்சனை, இலகுவில் மறந்துவிட முடியுமா? மறக்முடியாத அவன் பேர்வாழ்வில் சில நிகழ்வுகள் மட்டும் இங்கே, வரிகளாக உருவெடுக்கின்றன.

மணலாற்றுக் காட்டில் இந்திய இராணுவத்தின் முற்றுகைத் தாக்குதல்கள் பல நடந்ததைத் தமிழீழ மக்கள் அறிவர். ''கொடியைப் பிடித்தால் வெடிக்கிறது, செடியைப் பிடித்தால் வெடிக்கிறது, மரத்தைப் பிடித்தால் வெடிக்கிறது, ஓடும் திசையெல்லாம் துப்பாக்கிக் குண்டு வருகின்றது'' என்றெல்லாம் இந்தியப் படைகள் வாய்விட்டுச் சொன்ன சண்டைகள் பல, இங்கு நடந்தன. இத்தகைய சண்டைகளிலெல்லாம் முன்னணியில் நின்று செயற்பட்டவன் றஞ்சன். காட்டில் இந்திய இராணுவத்துடனான சண்டைகளில் முதலாவது பிறண் எல்.எம்.ஜி துப்பாக்கியையும், முதல் 'கால்கஸ்ரோ'வினையும் பெற்றுவந்த மறவன் றஞ்சனே தான்.

'செக்மேற் - 02' என்ற இந்திய இராணுவ முற்றுகைத் தாக்குதல் தொடங்கியபோது, நாவற்கேணி வெட்டையில் கடும் சண்டை ஏற்பட்டிருந்தது. முன்னே 'பிறண்' துப்பாக்கியுடன் வந்த இந்திய சிப்பாய், எம் வீரர்களின் !இலக்கில் வீழ்த்தப்பட்டான். அவனிடமிருந்த 'பிறண்' துப்பாக்கியை எடுக்க வேண்டும். பாதுகாப்பு எதுவுமற்ற வெளி. றஞ்சன் தனது சாறத்தை உயர்த்தி மடித்துக் கட்டினான். கையிலிருந்த இரண்டு கைக்குண்டுகளை மளமளவென எதிரியை நோக்கி வீசினான். அந்த இடைவெளிக்குள் 'பிறண்' இருந்த இடத்தை அடைந்து விட்டான். அன்றைய அந்த நிகழ்வை நினைத்துப் பார்க்கும்போது இன்றும் ரோமங்கள் குத்திட்டு நிற்கும். இத்தகைய அபாரத் துணிச்சலை அவனிடமிருந்து தான் நாம் கற்றுக்கொண்டோம்.

மணலாற்றுக் காட்டினை அண்டிய கிராமத்தில் குறிப்பிட்ட சில வீரர்களுடன் நின்று, உணவுப் பொருட்களை அனுப்பிய நாட்களை நினைத்துப் பார்க்கிறேன். ஒவ்வொரு நாளும் இந்திய இராணுவத்துடன் கலைபடுவதும், அடிபடுவதும், படகுச் சாமான் எரிபடுவதுமாக இருந்தும்கூட தன் இலக்கினை நிறைவேற்றிக் கொண்டிருந்தான். அந்த நாளில்தான் 'கால்கஸ்ரோவினைப்' பெற்றுக் கொடுத்த சண்டைக்கு அடித்தளமிட்டான். நாயாற்று இராணுவ முகாமிற்கும், நாயாற்றுக்கு முன்னே இருமைல் தொலைவில் அமைந்திருந்த இராணுவ முகாமிற்குமிடையே தினமும் ரோந்து புரியும் இராணுவ அணியை, தானே வேவு பார்த்துக்கொண்டான். ஒருபுறம் பெருங்கடலும், மறுபுறம் நாயாற்றுச் சிறுகடலும், நடுவே ஒரு சிறிய நிலப்பரப்புமாக இருந்த ஆபத்தான இடம். தாக்கி விட்டு தரைவழியாகத் தப்பமுடியாது. ஆபத்தை எதிர்கொண்டு வெற்றி காண்பதில், புலிகள் விருப்பும் திறமையும் கொண்டவர்களென்பதை, றஞ்சனின் இச் சண்டை தெளிவாகப் புலப்படுத்தும்.

இத் தாக்குதலில் இரண்டு இலக்குகளை றஞ்சன் நிறைவேற்ற வேண்டியிருந்தது. 'கால்கஸ்ரோவைக்' கைப்பற்றுவது முதல் நோக்கு; இரண்டாவது நோக்கு, ஆகக்கூடுதலான சிப்பாய்களைக் கொல்லுவது. சண்டைக்கு தலைவரிடம் அனுமதி பெற்றுக்கொண்டான். சண்டைக்குரிய நாள் வந்தது. தாக்குதலுக்குப் புறப்படும் போது, ''கால்கஸ்ரோ வரும் - இல்லாட்டி றஞ்சனின்ர உடல்தான் வரும்'' என்று வீரம்பேசி, வீறாப்புடன் புறப்பட்டான்.

குறிப்பிட்ட நாளில் சண்டை தொடங்கியது. தலைவர்கூட இச்சண்டையில் நேரடித் தொடர்பை ஏற்படுத்திக்கொண்டார். நெருப்புடன் விளையாடி வெற்றி காணும் தன் வீரப் புதல்வர்களைக் காத்துவிட வேண்டுமென்பதில்,

அவர் கவனமாக இருந்தார். கடுமையான சண்டை. தன் இலக்கை நிறை வேற்றும் முனைப்பில் எதிரி முன் பாய்ந்து, சுடத்தொடங்கினான் றஞ்சன். பதினேழுக்கு மேற்பட்ட சிப்பாய்கள் வீழ்ந்தனர்; அவர்களின் ஆயுதங்களும் அள்ளப்பட்டன; 'கால்கஸ்ரோ'வும் கைப்பற்றப்பட்டது. 'கால்கஸ்ரோ'வை அணைத்தபடி கிடந்த றஞ்சன் மட்டும்.....!

சிலகாலம் மட்டுமே, மணலாற்றுக் காட்டினை அண்டியிருந்த அந்தக் கிராம மக்களுடன் றஞ்சன் பழகியிருந்தான். ஆனால், படகில் 'கால்கஸ்ரோ' வுடன் வந்த அவனது உடலைப் பார்த்தபோது அந்த மக்கள் துடித்த துடிப் பும், விட்ட கண்ணீரும் இன்னும் கண்முன்னே நிற்கிறது. இத்தகைய தூய உறவினை அவனால் எப்படி வளர்க்கமுடிந்தது? அவன் இலக்குத் தவறாது தலைவனுக்குப் பெருமை தேடிக் கொடுத்த வீரன் அல்லவா! காட்டின் காவல னாய் - தலைவனைக் காக்கும் கவசமாய் - நின்ற காவிய புருசனல்லவா! காலத் தால் அழியாத அவன் வீரத்தை மணலாறு தன் நெஞ்சில் சுமக்கிறது. ☆

வீரப்பிறப்பு:
06. 07. 1973

வீரச்சாவு:
29. 06. 1989




# நிசாம்

(நாயாற்றில் இந்தியப்படையுடனான மோதல்)
(யோகநாதசாமி தமிழ்ச்செல்வன்)
கட்டைபறிச்சான்,
திருமலை.

மூதூர் சேனையூர்க் கிராமம். இதுதான் நிசாம் என்ற விடுதலைக் குழந்தையை ஈன்று தந்த மண். குறும்புத்தனம் நிறைந்த குழந்தையாக இருக்கும்போதே தாயை இழந்துவிட்டான்; ஆனால் தாய் மண்ணினை இழந்துவிட விரும்பவில்லை. தானே குழந்தை. இந்நிலையில் தன் தங்கை கூலிவேலைக்குச் சென்று வயிறு நிரப்ப வேண்டியிருந்த நிலையை அவனால் ஏற்றுக்கொள்ளமுடியுமா? இதைச் சகித்துக்கொள்ள முடியாதபோதுதான் விடுதலை தேடி ஓடினான் நிசாம்.

மூதூர்ப் பிரதேசத்தில் இந்திய இராணுவக் கெடுபிடியால் உணவின்றிக் கிடந்த போராளிகளுக்கு உணவளித்த வீரன் இவன். வீட்டில்தான் இவனால் பசியாற்ற முடியவில்லை; ஆனால், காட்டில் நின்ற வீரர்களுக்கு இவனே உணவு கொண்டுவந்து கொடுத்து பசியாற்றினான். சிறியவனாக இருந்ததால் இந்திய ஜவான்கள் இவனது நடத்தையைச் சந்தேகிக்கவில்லை. இந்த வாய்ப்பினைப் பயன்படுத்தி துணிவுடன் செயற்பட்டான். இவ்வாறுதான் இவனது மூதூர் வாழ்வு ஆரம்பமாயிற்று. மூதூர்ப் பிரதேசத்தில் ஒலிக்கின்ற 'வோக்கி ரோக்கி' களிலெல்லாம் நிசாமின் மழலைக்குரல் ஒலிக்கும். 'மன்மதக்குஞ்சு' என்றுகூட போராளிகள் இவனுக்குப் பட்டப்பெயர் சூட்டியிருந்தனர்; அந்தளவிற்குத் துடிப்பும், செயலும், திறமையும்கொண்ட குழந்தை இவன்.

மணலாற்றுக் காட்டிற்கு வந்தபின், மிதிவெடி வைக்கும் பயிற்சியில் தேர்ச்சி பெற்று விளங்கினான். காட்டிற்கு உணவுப் பொருட்கள் அனுப்பும் அணியில் ஒருவனாக காட்டுக்கண்மையிலிருந்த கிராமமொன்றில் நின்றான். அந்த நாட்களில் ஒருநாள் நடந்த நிகழ்வொன்று பசுமையாய் நெஞ்சில் நிற்கிறது. தனக்கு ஒரு மணிக்கூடும் 'ரௌசரும்' தரவேண்டுமென, பொறுப்பாளரிடம் விடாப்பிடியாகக் கேட்டுநின்றான். அவனது பிடிவாதம் அன்பண்ணனுக்கு எட்டிவிட்டது. சிறிய தடி ஒன்று எடுத்து, இடுப்பிற்குக் கீழ் நல்ல அடி கொடுத்தார். குழந்தை தானே! அடிவாங்கிய பின்னும் அவற்றை வாங்கித் தரும்படி அன்பண்ணனிடமே கேட்டழுதான். அடுத்த நாள் காலையிலேயே ஒரு புதிய மணிக்கூடும், 'ரௌசரும்' கொண்டுவந்து கொடுத்தார் அன்பண்ணன். அவனடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. இது நடந்த சில நாட்களில்தான் மேஜர் றஞ்சன் மரணித்த சண்டை நடைபெற்றது. இச் சண்டைக்கு நிசாமும் சென்றிருந்தான். புது மணிக்கூடும் கட்டி, 'ரௌசரும்' அணிந்துகொண்டு சண்டைக்குப் புறப்பட்ட அவனது உருவம், அப்படியே கண்ணில் நிற்கிறது. நிசாமின் மிதிவெடிப் பயிற்சியும் அவனது சிறந்த தேர்ச்சியும் இச்சண்டைக்குத் தேவையாக இருந்தன. தமிழீழத்தின் இளம் சந்ததிகள் எதிரிகளைத் துணிவுடன் அழிக்கும் என்பதற்கு, நிசாமின் போர் வரலாறு சான்று தரும்.

சண்டை நடந்துகொண்டிருக்கும்போது, ஓடி ஓடி ஆயுதங்களை அள்ளிப் படகில் ஏற்றிக்கொண்டிருந்தான் நிசாம். ஏற்றிவிட்டு, புறப்படுவதற்காகப் படகில் ஏறியபோதுதான் எதிரியின் குண்டு ஒன்று படகினையும் துளைத்து, நிசாமின் தொண்டையினையும் பதம் பார்த்தது. றஞ்சனின் சாதனையில் நிசாமுக்கும் பங்குண்டு. ஏனெனில், அன்று நிசாமின் கால் துப்பாக்கிக் குண்டைத் தாங்காதிருந்தால், பெற்றோல் ராங்கியைக் குண்டு துளைத்திருக்கும்; படகு தீப்பிடித்திருக்கும்; படகிலிருந்த ஆயுதங்களையும், வீரர்களையும் இழந்திருப்போம். தாக்குதலை முடித்து வெற்றியுடன் திரும்பினோம். நிசாமைக் காப்பாற்றிவிடலாமென இறுதிவரை நம்பினோம். குழந்தையல்லவா? குருதிப்பெருக்கு...... அவனால் ஈடுகொடுக்க முடியவில்லை. பிஞ்சுவிழிகள் உறங்கிக் கொண்டன. காட்டினையும் தலைவனையும் காத்துத் தந்த வரலாற்றில், நிசாம் வாழ்கின்றான். காடும் நாடும் காத்த சிறுவனாய் இதயமெல்லாம் நிறைந்து நிற்கின்றான்! ☆

பிறப்பு:
08. 09. 1969

வீரச்சாவு:
29. 06. 1989




# 2 ஆம் லெப். குமரன்

( இந்திய மோதல் )
( முருகுப்பிள்ளை சம்பந்தர் )
சிவன் கோயிலடி,
திருமலை.

அமைதி என்றால் குமரன் - அடக்கமென்றால் குமரன் - அன்பென்றால் குமரன். பசுமையும் கருணையும் நிறைந்த அவன் முகம், இன்றும் கண்ணில் அப்படியே நிழலாடுகிறது. குமரனுக்கு மற்றவர்களை நோகடிக்கத் தெரியாது; இல்லாதது பொல்லாதது கூறி மற்றவர்களை மாட்டிவைக்கும் பழக்கமும் கிடையாது. மொத்தத்தில் அவன் ஒரு பசு; ஆனால், எதிரியை அழிப்பதில் புலி.

காட்டுக்குத் தேவையான பொருட்களை அனுப்பும் பணியில், தன் போராட்ட வாழ்வின் பெரும்பகுதியைக் கழித்தான். மணலாற்றுக்கு வெளியே அமைந்த சிறிய கிராமமொன்றில் தங்கியிருந்து, இந்திய இராணுவத்தைச் சுற்றி விளையாடி, சாதுரியமாகப் பொருட்களைக் காட்டுக்கு அனுப்பிக் கொண்டிருந்தனர். கடினமானதும் ஆபத்து நிறைந்ததுமான அக்காரியத்தை விளையாட்டாக - ஆனால் நிதானமாக பொறுப்புணர்வுடன் செய்துகொண்டிருந்தவர்களில் குமரனின் பங்கு மறக்க முடியாதது.

குமரனுடன் நண்டு சுட்டுத் தின்ற அந்தநாள் இன்றும் பசுமையாக நெஞ்சில் நிற்கிறது. நாயாற்றுக் கடல் நீரேரியில் மிகப் பெரிய நண்டொன்றை எப்படிப் பிடித்தால் அது கடிக்காதோ அதைப்போல - பிடித்தான். நண்டு பிடித்த அனுபவசாலி போலிருந்தது அவனுடைய இச்செயல்!

நண்டு பிடித்தாகிவிட்டது. அதை எவ்வாறு சாப்பிடுவதென்பது பெரும் பிரச்சினையாயிற்று. பொரித்தால் எண்ணெயுடன் வரும் பொரியல் வாசனை இந்திய ஜவான்களுக்குத் தடயமாகிவிடும்; கறி சமைத்தால் அடுப்புப் புகை எழும்பும். இதனால், சமைக்கும் பொறுப்பினையும் குமரனே ஏற்றான். நண்டைச் சுட்டுவிட்டு சதைகளைத் தனியாக்கினான்; பின்னர் சதைகளை ஒரு சட்டியில் போட்டு 'வறை'யாக்கினான்; சோறினை அதனுள் போட்டு கிண்டினான். கூடியிருந்து சாப்பிட்டோம். என்ன சுவை! குமரன் என்றதும் 'நண்டு வறை' ஞாபகத்தில் எழும்.

குமரனை நாம் இழந்தது மேஜர் றஞ்சன் மரணித்த நாயாற்றுச் சண்டையிலாகும், அச்சண்டையில் பதினேழுக்கு மேற்பட்ட ஆயுதங்களை வாரிச்சுருட்டினர்; நவீன 'கால்கஸ்ரோ' வினை முதன் முதல் கைப்பற்றிய பெருமையுடன், மேஜர் றஞ்சனோடு மரணத்தைத் தழுவிக்கொண்டான்.

தன்னைத் தூய்மையாக வைத்திருந்து - தான் இருக்குமிடத்தையும் தூய்மையாக வைத்திருந்து - தளபதிகளின் அன்புக்குப் பாத்திரமாகி நின்ற குமரனை மணலாறு மறக்காது!

☆

பிறப்பு:
07. 02. 1969

வீரச்சாவு:
01. 01. 1990



# கப். முரளி

(முயல்குத்தி இந்தியச் சண்டை)
(பெரியதம்பி பிறேம்குமார்)
4ஆம் கட்டை, பல்லாய்,
பூநகரி.

இயக்கத்தின் ஆரம்பகாலத்தில் ஆர். பி. ஜி. வைத்திருந்தவர்கள் ஒரு சிலர் மட்டுமே; அதனைக் குறிதவறாது இயக்கும் வல்லமையும் சிலரிடமே இருந்தது. அந்தச் சிலரில் முரளியும் ஒருவன். அதுவும் தலைவரால் அனுமதிக்கப்பட்ட ஆர். பி. ஜி. இயக்குநர்.

மன்னாரில் காஸ்ரோ என்ற பெயரில் தன் விடுதலைப் போராட்ட வரலாற்றை ஆரம்பித்தான். அதேநேரத்தில் மக்களுடன் பழகும் அரசியல் வேலைகளிலும், இராணுவ நடவடிக்கைகளிலும் செயற்படுமளவிற்கு விவேக முடையவனாக இருந்தான். காஸ்ரோ, இலங்கை இராணுவத்திற்கெதிராக மேற்கொள்ளப்பட்ட தாக்குதல் ஒன்றில் விழுப்புண் பெற்றுக்கொண்டான்.

மணலாற்றுக் காட்டிற்குத் தலைவர் வந்திருந்த காலத்தில் காஸ்ரோவும் வந்திருந்தான். காட்டில் அவன் பெயர் முரளி என மாற்றப்பட்டது. இவனின் கண்கள் எந்தநேரமும் சிவந்தேயிருக்கும். இதனால் ''கஞ்சா'' என்ற பட்டப் பெயரால் தோழர்கள் அழைத்துக்கொண்டனர். இந்திய இராணுவத்தின் முற்று கைக்கு மணலாற்றுக் காடு உட்பட்டிருந்த போது, இரவு பகல் ஓய்வின்றி, இயக்க நலன்களைப் பாதுகாப்பதில் கண்ணும் கருத்துமாய் இருந்தவன் முரளி. கேணல் பஸ்கியுட்பட நூற்றுக் கணக்கான இந்திய ஜவான்களின் உயிர்களை

யும் கால்களையும் பறித்துக்கொண்ட சண்டையில், முரளியின் பங்கும் மறக்க முடியாதது. காடும், காட்டின் முக்கியத்துவமும் நின்று நிலைக்கக் கண்துஞ் சாது உழைத்தவன் முரளி. காட்டில், முதலில் இவனது ஆர். பி. ஜி. இயங் கியது இலங்கை இராணுவத்திற்கெதிரான சண்டையொன்றில்தான். மணலாறு பிரதான வீதியில் உழவு இயந்திரத்தில் சென்றுகொண்டிருந்த இலங்கைப் படையின் அணியை, மேஜர் செல்வராசா மாஸ்ரரின் தலைமையிலான அணி திடீரெனத் தாக்குதல் நடத்தி அழித்தது. அச் சண்டையில் உழவு இயந்திரத் தைக் குறிவைத்துத் தகர்த்தது இவனது ஆர். பி. ஜி.

உயிர் போகக்கூடிய சண்டைகளிலெல்லாம் தப்பிக்கொண்ட முரளி, இந்தியப் படை ஈழமண்ணைவிட்டு வெளியேறிக்கொண்டிருந்த இறுதி நாட் களில், சாவினைத் தழுவிக்கொள்ளவேண்டியதாயிற்று. ஆனாலும், கோடிக் கணக்கில் பெறுமதியான இராணுவத் தளபாடங்களைக் கைப்பற்றிய பெறுமதி மிக்க சண்டையிலேயே, முரளி தன்னைக் கொடுத்துக்கொண்டான்.

முயல்குத்தியின் தேசவிரோதக் கும்பல்கள் மீதும், இந்தியப் படைகள் மீதும் பெரியளவிலான தாக்குதல் ஒன்று தொடுக்கப்பட்டது. பல நூற்றுக் கணக்கான படைகளும் தேசவிரோதிகளும் அழிந்துபோன இச்சண்டைதான், முரளிக்குச் சமாதியாயிற்று !

☆

பிறப்பு:
21. 06. 1967

வீரச்சாவு:
01. 01. 1990




# மேஜர் அகத்தியர்

( முயல்குத்தி இந்தியச் சண்டை )
( செல்லத்துரை ஹெக்ஸ்பேட் புவினோராஜ் )
கோட்டைக்கல்லாறு,
மட்டக்களப்பு.

அகத்தியருடைய விடுதலைப் போராட்ட வரலாற்றில் பெரும் பகுதி, தென் தமிழீழத்தில் மட்டக்களப்பில் முடிந்துபோனது. இந்திய மண்ணில் ஐந்தாவது படைப்பயிற்சிப் பாசறையில், யுத்தப் பயிற்சியையும் இராணுவக் கல்வியையும் கற்றுக்கொண்டு மட்டக்களப்புக்குத் திரும்பினான். அன்றிலிருந்து மணலாற்றுக்குத் திரும்பும் வரை, மட்டக்களப்பில் இலங்கை இராணுவத்திற்கெதிரான பல சண்டைகளை வழிநடத்தினான்.

மா வெள்ளை நிறம், முறுக்கேறிய உடல்; விவேகம், தியாகம் எல்லாமே இவனிடமிருந்தது. அகத்தியரின் இயல்பான தோற்றமும் தளம்பாத மன உறுதியும் எவரையும் இலகுவில் கவரச்செய்துவிடும். இவ் வசீகரத்தன்மையால் போராளிகளின் மனங்களைத் தொட்டு நின்றான். மணலாற்றுக்கு வரும்போது, எழுபத்தைந்து வீரர்கள் அடங்கிய அணியொன்றுடனேயே வந்தான். பொறுப்புணர்வுள்ள அகத்தியரின் நடத்தைக் கோலங்களைத் தலைவர்கூட கணித்துக்கொண்டார்.

மணலாற்றுக்கு வந்த புதிய புலிவீரருக்குப் பயிற்சிகொடுக்கும் ஆசிரியராகவும், ‘கொமாண்டோ’ பயிற்சி ஆசிரியராகவும் திகழ்ந்தான். இந்திய நெருக்கடிக் காலங்களில் சாமான் சுமந்ததும் ...உணவுக்காய் அலைந்ததும் ....

தண்ணீர் தேடிக் கிணறு தோண்டியதும் மறக்க முடியாத துன்ப நிகழ்வுகள் அத்தனையையும் தாங்கி விடுதலையை வளர்த்த அந்த நாட்கள்தான், அகத்தியரின் போராட்ட வாழ்வில் பெறுமதியான காலங்கள். மணலாற்றுக் காட்டுக்குள் உணவுப் பொருட்களைக் கொண்டுசெல்லும் சிக்கலான பணிக்கு, அணியொன்று மணலாற்றுக் கிராமமொன்றில் நிறுத்தப்பட்டிருந்தது. பொருட்களைக் கடத்தும் பாதையில் காவற்பணிக்கு விடப்பட்ட வீரர்கள் சற்றுத் தூங்கியிருக்கவேண்டும்; தொடர்ச்சியான நித்திரை விழிப்பு அவர்களை அயர வைத்தது. அந்த நேரத்துள், இந்தியப் படைகள் அவர்களை சுற்றிவளைத்துக்கொண்டன. இருபோராளிகளுடன் துப்பாக்கியையும் கைப்பற்றிக்கொண்டனர். 'பிறண் எல்.எம்.ஜி' பறிகொடுக்கப்பட்டதால் இழந்த அந்த துப்பாக்கியை எதிரியிடமே அடித்துப் பெறவேண்டுமென்பதற்காக, அகத்தியர் தலைமையில் அணியொன்று காட்டிலிருந்து கிராமத்துள் நுழைந்தது.

முயற்சிக்கு மேல் முயற்சி செய்தும் தாக்குதலுக்கு வாய்ப்பு கிடைக்காததால், ஏமாற்றத்துடன் மீண்டும் காட்டுக்குத் திரும்பினான். காட்டில் இந்தியச் சிப்பாய்களின் நடவடிக்கைகளிலெல்லாம் அகத்தியரும் கலந்துகொண்டான். இறுதியாக முயல்குத்தியில் நடைபெற்ற பெருஞ்சண்டையில், பெறுமதிமிக்க சாவினைத் தழுவிக்கொண்டான்!

☆

பிறப்பு:
24. 10. 1971

வீரச்சாவு:
02. 09. 1989



# 2ஆம் லெப். லுக்மன்

(இந்திய மோதல்)
(இராமலிங்கம் இரவீந்திரன்)
சின்னக்கரிசல்,
மட்டக்களப்பு.

மட்டக்களப்பு சின்னக்கரிசல் கிராமத்தில் பிறந்து, மணலாற்றின் புகழ் காத்து மறைந்தவன் லுக்மன். அடக்கம், விசுவாசம், தன்னம்பிக்கை, சகித்துக் கொள்ளும் தன்மை அனைத்தும் நிறைந்த ஒரு போராளி. எந்நேரமும் இரா ணுவத்திற்கு அடிக்க வேண்டுமென்ற துடிப்புடையவன். காட்டுக்கு உணவுப் பொருட்களை அனுப்ப வெளியே செயற்பட்ட பொறுப்பு மிக்க அணியில், சகிப் புத்தன்மையோடு ஈடுபட்டான். இரவு முழுவதும் உணவுப் பொருட்கள் சுமப் பதும், மணலில் - ஆற்றில் - நடப்பதும், ஓய்வின்றி நடந்துகொண்டிருக்கும் போது விடிந்தால் வீடொன்றில் எந்தவித நடமாட்டமும் இன்றி ஒதுங்கி விடு வோம்.

ஒருநாள், நாம் பதுங்கியிருந்த வீட்டினூடாக இந்திய இராணுவத்தினர் அணியணியாகச் சென்றுகொண்டிருந்தனர். நாயாறு பிரதான வீதியில் ஒன்ப தாவது மைல் கல்லில், புதிய மினிமுகாம் அமைக்கப்பட்ட நாள் அது. அத னால் ஒவ்வொரு இராணுவத்தின் உடலிலும் பெருஞ்சுமைகள். வீட்டிற்குள் தட் டித் தவறி ஒரு அடிவைத்தாலும் நிலைமை மோசமாகிவிடும். வீட்டில் இருந்து சில யார் தூரத்தில் சென்றுகொண்டிருந்த அவ்வணியைத் தாக்கினால், பெறு மதி மிக்க பல ஆயுதங்களைக் கைப்பற்றலாம். ஆனால், அதைவிடப் பாரதூர

மான சில பிரச்சினைகளையும் பின் விளைவுகளையும் எதிர்நோக்கவேண்டிவரும் என்பதால், மூச்சினைக்கூட மெதுவாக விட்டுக் கொண்டிருந்தோம். ரஜீவன் மட்டும் பொறுப்பாளரின் அருகிலிருந்து, ''அடிப்பமண்ணோய், நிறைய ஆயு தங்களோட போறாங்கள். இதைவிட்டால் வேறு நல்ல சந்தர்ப்பம் கிடைக்கா தண்ணோய்'' எனப் பொறுமையின்றித் தொல்லை கொடுத்தான். ஆனால் அன்றைய பொறுமைதான், பின்னைய பல வேலைத்திட்டங்கள் குழப்பமின்றி நடை பெற வழிவகுத்தது.

நாயாறு - முல்லைத்தீவு பிரதான வீதியில்,, 5ஆவது மைல் கல்லில், அற்றி மரணித்த சண்டையில் லுக்மன் காயப்பட்டான். இதனால் சிலமாதங்கள் இந் தியா சென்று சிகிச்சை பெற்று வரவேண்டியிருந்தது. லுக்மனின் மரணம், பெருந்தெருக்கள் திணைக்களச்சந்தியில் அமைந்திருந்த மினிமுகாம் தாக்குதலி லேயே நிகழ்ந்தது. காலமுணர்ந்து விடுதலைப் போர் வளர்த்த வீரர்களின் வரி சையில், லுக்மனின் சமாதியும் கம்பீரமாய் நிற்கிறது! ☆

பிறப்பு:
07. 12. 1970

வீரச்சாவு:
02. 09. 1989




# லெப். ரஜீவன்

(இந்திய மோதல்)

(தங்கராசா சுதாகரன்)

அச்சுவேலி.

"விடி விடியென ஆமி வருவான் கவனமாய் இருங்கோ" எனப் பொறுப்பாளர் எச்சரிக்கை செய்தார். உணவுப்பொருட்களைச் சுமந்த களைப்பில் கடற்கரை மணலினுள் கால்களைப் புதைத்துக் கொண்டு படுத்தோம். அனைவரும் 'இம்மை மறுமை' தெரியாத நித்திரை. பொறுப்பாளர் மட்டும் அடிக்கடி இருட்டினூடே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார். சரியாக விடிந்திருக்காது, பொறுப்பாளர் சொல்லியது நடந்தது. இந்திய இராணுவத்தினர் மிக அருகில் வந்துவிட்டனர்; சண்டை தொடங்கியது.

உயரமும் உடம்பும் முறுக்கேறிய தசைகளும் விறுத்தமான நடையும் கொண்ட ரஜீவனின் ஜி.3 துப்பாக்கி துரிதமாக - ஆனால் குறிதப்பாமல் - இயங்கிக் கொண்டிருந்தது. மிக அருகில் வைத்தே தாக்கியதால், துப்பாக்கிக் குண்டுகள் இராணுவ உடல்களைத் தூக்கி எறிந்தன. இதனைக் கண்ட மற்றைய ஜவான்கள் தலைதெறித்தோடினர். ரஜீவனின் அன்றைய சண்டைத் திறன் தான் அனைத்துத் தோழர்களையும் காத்தது.

ரஜீவன் பண்பும், பணிவும், குழந்தையுள்ளமும் கொண்ட போர்வீரன். அதனால், பொறுப்பாளருக்கு அவன் மீது தனியன்பிருந்தது. ரஜீவன் ஒரு நாள் பல்லுக்கொதியினால் சாப்பிட முடியாது வருந்தினான்; இதனால் அவனுக்கு

'ஹோர்லிக்ஸ்' பால்மாவினை வாங்கிக் கொடுத்திருந்தார். ரஜீவன் அதைத் தன்தோழர்களுக்கெல்லாம் பகிர்ந்து கொடுத்து ஒரேநாளில் முடித்துவிட்டான். இதனை அறிந்த பொறுப்பாளர், ''உன்னை இனி வெளியே கூட்டிச்செல்வ தில்லை; இதுதான் உனக்குத் தண்டனை'' எனக் கூறிச்சென்று விட்டார். ரஜீவனுக்கு அதைவிடப் பெரிய தண்டனை இருக்கவில்லை. நேரடியாகப் பொறுப்பாளரிடம் மன்றாடிக் கேட்கவும் பயம். இதனால் தன் சகதோழன் ஒருவனிடம், ''மச்சான் அன்பண்ணையிட்ட சொல்லு - இன்னுமொரு ஹோர்லிக்ஸ் போத்தல் வாங்கித் தந்தால் ஒருவருக்கும் கொடுக்காமல் குடிப்பேன்'' என்று சொன்னான்.

அன்பும், பணிவும், துணிவும், மிக்க ஜீவனை நாம் இழந்தது முல்லைத் தீவுப் பெருந்தெருக்கள் சந்தியில் இருந்த இந்தியப் படை யினி முகாம் தாக்குதலில். முறுக்கேறிய தசை நார்களும் விறுத்தமான நடையும் கொண்ட அந்த வீரன் வீழ்ந்து கிடந்தது, கண்ணில் பசுமையாய் - நிழலாய் நிற்கிறது! ☆

பிறப்பு:
26.08.1971

வீரச்சாவு:
02.09.1989




# 2ஆம் லெப். வரோதயன்

(முல்லை இந்திய மினிமுகாம் தாக்குதல்)

( பாலசிங்கம் யோகேஸ்வரன் )

கல்மடு,

வவுனியா.

வன்னிப் பிரதேசத்தில் கல்மடுக் கிராமத்தில் பிறந்தவன் வரோதயன். வவுனியாக் காட்டில் பயிற்சி முடித்த ஒரு மாத காலத்திலேயே மணலாற்றுக் காட்டுக்கு வந்துவிட்டான். வரோதயனுக்கு மிகப் பெருத்த சரீரம் இருந்ததால், தடியன் என்று அனைவரும் அழைத்துக் கொண்டனர். உடல் பருத்திருந்ததே ஒழிய வன்னி மண்ணுக்குரிய வீரம் சற்றும் குறையவேயில்லை.

காட்டில் அவன் செய்யாத வேலையே இல்லை. ஒரு தடவை காட்டில் கிணறு வெட்டும்போது உள்ளே இறங்கிவிட்டு மேலே ஏறமுடியாது நின்றான். அந்தளவிற்கு அவன் உடற் பருமன் இருந்தது. இயலாது என்று சொல்லாமல், கொடுத்த வேலையைக் குறித்த நேரத்துக்குள்ளாகவே செய்துவிடுவான். கல்மடுக் கிராமத்திலேயே பிறந்து வளர்ந்ததனால் கடல் இவனுக்கு தெரியாது. மணலாற்றுக்கு வந்த புதிதில் உயர்ந்த மரங்களில் ஏறி நின்று கடலினைப் பார்ப்பான். மாதங்கள் சில கழிந்தபின் கடற்கரையிலேயே காவல் கடமைக்கு நிற்கவேண்டிய நிலை ஏற்பட்டது; அப்போது வரோதயனின் மகிழ்ச்சிக்கு அளவிருக்கவில்லை!

வரோதயன் மணலாற்றில், இந்திய இராணுவத்திற்கெதிரான தாக்குதல்கள் பலவற்றில் பங்குகொண்டான். முல்லைத்தீவுப் பெருந்தெருக்கள் சந்தியில் அமைந்திருந்த இந்திய இராணுவ மினிமுகாமைத் தாக்கிய சண்டையில், வரோதயன் மண்ணில் சரிந்தான்!

☆

'ஹயசேன' என்ற பெயருடன்
இலங்கைப் படைகள் மேற்கொண்ட
நடவடிக்கையினை முறியடிக்க
உயிர்கொடுத்தவர்கள்.

பிறப்பு:
15.04.1971

வீரச்சாவு:
15.07.1991




# கப்டன் பசிலன்

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)
(சந்திரசேகரம் விமலநாதன்)
கொக்குத்தொடுவாய்,
மணலாறு.

தன் பிறந்த மண் அந்நியன் பிடிக்குள் போய்க்கொண்டிருப்பதைக் காணப் பொறுக்காமல், அதை மீட்டுவிடும் முயற்சியில் உயிர்கொடுத்த உத்தமன் பசிலன்.

மணலாற்றுக் காட்டையும் கடலையும் தொட்டுநிற்கும் கொக்குத்தொடுவாய்க் கிராமம், இவனது பிறந்த மண். தளபதிகள் பலரை வளர்க்க தளமும் களமும் தந்த மணலாற்றிலே எல்லை வரையவந்த எதிரிக்கு வாலறுத்து ஓட்டிவிடலாமென்ற சினத்துடன், களத்துக்குப் புறப்பட்டான்.

படிப்புக்கு முற்றுப்புள்ளியிட்டு, இந்திய இராணுவத்தின் கண்ணைச் சுற்றிவிட்டுப் போராளிகளுக்கு உணவு கொண்டுசென்று கொடுக்கும் பணியில், தீவிரமாக இறங்கினான்.

தளபதிகளில் ஒருவனாக இருக்கும் இவனது அண்ணன் ஒருநாள் தற்செயலாக இவனைச் சந்தித்தான். "டேய் இஞ்ச வா; தெருவழிய அங்கு இஞ்ச பாஞ்சுதிரிஞ்சு வீணாய் சாகாமல், போய் ஒழுங்காய் பயிற்சி எடுத்து அடிபடு" என்று கூற, அண்ணனின் சொற்கேட்ட அடுத்த நாளே பயிற்சிக்குப் புறப்பட்டுவிட்டான் பசிலன். மீண்டும் ஒருமுறை தம்பியை பயிற்சிக்களத்தில் சந்தித்தான் அந்த அண்ணன்.

"உனக்கு ஏன் பசிலன் என்று பெயர் வச்சிருக்கு தெரியுமோ? தலைவருக்கு விசுவாசமாய் இருந்து, சாதனையள் புரிந்து, தகுதியுள்ள போராளியளை உருவாக்கிவிட்டுச் செத்து மடிஞ்சவர் பசிலன் அண்ணன். நீயும் அவற்ற பேருக்குக் களங்கமில்லாமல், அவரைப்போல சாதனையள் செய்து தலைவரின் நல்மதிப்பைப் பெறோணும் எண்டுதான் இந்தப் பெயரை வச்சிருக்கு. விளங்குதோ......?" என்று, தம்பியை நிதானத்துக்குத் திருப்பிவிட்டுச் சென்றான். பசிலன் பயிற்சி முடித்தான். எடுத்த எடுப்பில் ஆர். பி. ஜி. உதவியாளனாகினான். களங்கள் சில கண்டிருப்பான்; ஆர். பி. ஜி. அவன் தோளுக்கே மாறியது.

எதையுமே மனதில் ஒளித்துக்கொள்ளாத திறந்த மனம்; இந்த வெள்ளை மனதால் விசேட தளபதியின் அன்புக்கு ஆளானான். கண்டிப்பும், அன்பும், திறமையும் நிறைந்த தளபதியின் வழிநடத்தலில் தன்னை வளர்த்துக்கொண்டான். ஒருகாலத்தில் மாவட்டப் பொறுப்பினை அவனிடம் கொடுத்துவிடலாம் என்று சொல்லிச் சொல்லியே வளர்க்கப்பட்டான்.

1991 ஆம் ஆண்டு ஆனித் திங்கள் 25 ஆம் நாள், தன் முதற் தாக்குதலைச் சந்தித்தான் பசிலன். கப். சுபாசின் தலைமையில் ரோந்துசென்ற இராணுவ அணியொன்றின்மீது, அதிரடித் தாக்குதல் ஒன்று நடந்தது. பத்தொன்பதுக்கு மேற்பட்ட சிப்பாய்களைக் கொன்றொழித்து, அவர்களின் ஆயுதங்களையும் அள்ளிய இச்சண்டை தான் பசிலனின் முதற் சண்டை.

தான் பிறந்த மண்ணில் நீண்ட நாட்கள் சண்டை செய்ய அவன் கொடுத்துவைக்கவில்லை. ஆனையிறவுப் பெரும்போர் நடந்து கொண்டிருந்த காலத்தில், மணலாற்றையும் கைப்பற்றி விடும் நோக்கில், 'ஹயசேன - 01' என்ற நடவடிக்கையில் இராணுவம் இறங்கியது.

இராணுவம் முன்னேற முயற்சிக்கலாமென முற்கூட்டியே தெரிந்த காரணத்தால், தன் அணியைத் தயார்நிலையில் வைத்துவிட்டு, மேஜர் வீமனைச் சந்திக்கப் பாசறைக்கு வந்துகொண்டிருந்தான். வந்த சில நிமிடங்களில், துப்பாக்கிச் சத்தங்கள் பெருமளவில் கேட்கத் தொடங்கியது; பாதிவழியில் மீண்டும் திரும்பி இடத்துக்கு ஓடினான்.

மண்கிண்டி முகாமிலிருந்து முன்னேறிய ஆயிரக்கணக்கான இராணுவத்தினருடன் கடும்சண்டை நடந்துகொண்டிருந்தது. ஆத்திரமும் ஆவேசமும் மேலிட, வந்த வேகத்திலேயே சண்டையில் இறங்கினான். காலங்கள் சிலசமயம் எதிரிக்குச் சாதகமாகிவிடுவதுண்டு. பசிலனும், அவனுடன் பதினொரு வீரர்களும் மண்ணுக்குத் தம்மை அர்ப்பணித்துக்கொண்டனர். ☆

வீரப்பிறப்பு:
10. 10. 1974

வீரச்சாவு:
15. 07. 1991




## றிங்ஸ்

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)
(மகாவிஷ்ணு திருமாலழகன்)
2 ஆம் வட்டாரம்,
குச்சவெளி.

வளர்த்தியாலும் வயதாலும் குறைந்தவன் றிங்ஸ். குழந்தை உள்ளம்; குழந்தைத்தனத்திற்கு ஏற்றதாகவே அவனிடம் குறும்புத்தனமும் இருந்தது. குறும்பையும், குழப்படியையும் தெரிந்துதான் செய்கின்றானோ அல்லது தெரியாமல்தான் செய்கின்றானோ என்பதைக் கண்டு பிடிக்க முடியாது. ஏனெனில், அடிக்கடி தன் குறும்புத்தனங்களுக்காகத் தளபதியிடம் தண்டனை பெற்றுக் கொண்டான்; ஆனால் திருந்தியதாக இல்லை. இறக்கும்வரை இவன் குறும்புக்காரனாகவே இருந்தான். றிங்ஸின் மரணம் பெறுமதியானது. பொறுப்புமிக்க, ஆபத்துமிக்க, துணிச்சல்மிக்க சண்டையான ' ஹயசேன - 01 ' என்ற இராணுவ நடவடிக்கையை முறியடித்து, வளர்த்த மண்ணுக்குப் பெருமை சேர்த்துக் கொண்டவன் றிங்ஸ். மரணித்துக் கிடந்த அவன் முகத்தில்கூட குறும்புத்தனம் தவழ்ந்தது.

நெஞ்சில் வேதனை எழுந்து நிற்கிறது! 

பிறப்பு:
12. 06. 1971

வீரச்சாவு:
16. 07. 1991




# கனகசபாபதி

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)
( பாண்டியன் நாகேந்திரம் )
கள்ளப்பாடு,
முல்லைத்தீவு.

முல்லைத்தீவின் கரையோரக் கிராமம் கள்ளப்பாடு. கடற் தொழில் அந்தக் கிராமத்தின் மூலவருமானம். கடல்வளம் நிறைய இருந்தது; ஆனால் அதைக் கரைக்குக் கொண்டுவரும் வளம் மட்டும் கனகசபாபதியின் குடும்பத்துக்கு இல்லை. இரவு பகல் பாராது கடலிலே தொழிலுக்குச் சென்றான்.

வறுமையும் ஆக்கிரமிப்பும் அதிகரித்தபோது, களத்துக்கு விரைந்தான். களம் அவனின் உணர்வுக்குத் தளம் கொடுத்தது. மணலாற்றுக்கு மிக அண்மையில் இருந்த கிராமம் கள்ளப்பாடு. ஆகையினால், இவனின் தாய் இவனை அடிக்கடி வந்து பார்த்துக்கொண்டாள். வரும்போது, எல்லாப் போராளிகளுக்கும் ஏதாவது சாப்பாட்டுப் பொருட்களைச் செய்துகொண்டே வந்தாள்.

கனகசபாபதி அதிகமாய் எல்லாருடனும் ‘அளவளப்பாக’ பேசிக்கொள்ளமாட்டான். தேவை ஏற்படும்போது மட்டும் அளவோடு பேசிக்கொள்வான். இளமையில் இருந்தே ஓய்வின்றி உழைத்ததால் உடல் உறுதி அதிகமிருந்தது; உடல் உறுதிபோலவே உள உறுதியுமிருந்தது. ஆனால், சண்டைகள் பல செய்யமட்டும் வாய்ப்பு அதிகம் கிடைக்கவில்லை.

மணலாற்று மண், விடுதலையில் பற்றுக்கொண்ட கனகசபாபதியின் உள்ளத்தையும் உறுதியாக்கியது. அவன் தன் வீரத்தை நிலைநிறுத்தி, தனது மரணத்தை அர்த்தமாக்கிக்கொண்டான். 'ஹயசேன - 01' என்ற இராணுவ நடவடிக்கையை முறியடித்தபோது, வெற்றிக்களிப்போடு அமைதி பெற்றுக் கொண்டான்! ☆

பிறப்பு:
15.05.1972

வீரச்சாவு:
16.07.1991




# தியாகலிங்கம் - குட்டி

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)
(நாகலிங்கம் ஜெயலிங்கம்)
சுழிபுரம்,
மூளாய்.

வீட்டில் கடைக்குட்டி; செயலில் மிகச்சுட்டி. சிலகாலம் 'புளொட்' நாசகாரக்கும்பலின் நம்பிக்கைமிக்க கிராமமாக இருந்தது சுழிபுரம். குட்டியின் பிறந்தகமும் அங்கு தானுண்டு. வசதியுள்ள குடும்பம், செல்வப்பிள்ளை; செல்லப்பிள்ளையும்கூட. ''கிராமத்தில் இருந்தால் இயக்கத்துக்குப் போய்விடுவான்'' என்று பெற்றோர் அஞ்சினர். ஒரு செல்வந்தர் வீட்டில் இருக்கக்கூடிய அச்சந்தான்.

பணம் அவனைக் கொழும்புக்குப் படிக்க அனுப்பியது. மண்ணை நேசிப்பவன் எங்கிருந்தாலென்ன, அவனது சிந்தனை மண்ணைப் பற்றியே சுற்றும். குட்டி கொழும்பிலிருந்து தமிழீழத்துக்கு வந்தான்; வந்தவுடன் தாய் தந்தையரின் அடுத்த முயற்சி ஆரம்பமானது. வெளிநாட்டுக்கு அனுப்பிவிடவேண்டும் -அதற்கான முயற்சிகள் தொடங்கின. குட்டியோ 'தமிழீழப் பயணத்துக்கு' விசா எடுத்துவிட்டான்.

மணலாற்றில் அவனது படைப்பயிற்சி ஆரம்பமானது. ''வயரிங், மெக்கானிக்'' ஆகிய துறைகளில் அவனுக்கு நல்ல தேர்ச்சியிருந்தது; விடுதலைப் பணிக்கு இதன் தேவையும் அதிகமிருந்தது. திறமைகள் பயன்படுத்தப்பட

வேண்டும். குட்டியின் பணி நிறைய வேண்டியிருந்தபோது, தமிழீழத் தாயோ அவனை வேண்டி நின்றாள்.

ஆனையிறவுச் சமருக்குச் சென்று திரும்பியதும் 'ஹய சேன - 01' என்ற இராணுவ நடவடிக்கையை முறியடிக்கும் சண்டை ஆரம்பமானது. சண்டையில் வெற்றி கிட்டியபோது, குட்டியை தமிழீழத் தாய் அணைத்துக் கொண்டாள். மகனின் தியாகம், பெற்றவர்கள் நெஞ்சைத் தொட்டுவிட்டது; இன்று அவர்களும் விடுதலைப் பணியை நெஞ்சில் சுமக்கிறார்கள்! ☆

பிறப்பு:
30. 09. 1972

வீரச்சாவு:
15. 07. 1991




# ஜெயசீலன்

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)
(புஸ்பராசா அரியவிக்கினராசா)
சந்திவெளி,
மொறக்கொட்டாஞ்சேனை.

மட்டக்களப்பு சந்திவெளிக் கிராமம் ஜெயசீலனின் பிறந்த மண்: துட்டனுக்குத் துட்டன்; நல்லவனுக்கு நல்லவன். இதுதான் ஜெயசீலனின் குண இயல்பு. பயிற்சிக் காலத்தில், பயிற்சிகளில் சின்னக் குறையுமின்றி ஒழுங்காக செய்துமுடித்தான், மற்றவர்களின் துன்பத்தைக் கண்டு பொறுத்துக்கொள்ள மாட்டான். சாமான்கள் தூக்கிவரும்போது தூக்கமுடியாமல் துன்பப்படும் போராளியிடமிருந்து அதனை வாங்கிச் சுமந்துவருவான். எவ்வளவு பாரமான சுமையாக இருந்தாலும் அதற்காகச் சலித்துக்கொள்ளமாட்டான்.

ஜெயசீலனிடம் மற்றவர்களை விட பிரத்தியேகமான - வித்தியாசமான குணமொன்று இருந்தது. தனக்கென ஏதாவது பணி தரப்பட்டால், அதைச் செய்து முடிக்கும்வரை எவருடனும் பேசமாட்டான்; பணியிலேயே கண்ணுங் கருத்துமாக இருப்பான். செய்து முடித்தபின்புதான் வாயிலிருந்து வார்த்தைகள் வெளிவரும்.

'டோலக்' வாசிப்பது இவனுக்குக் கைவந்த கலை. பாசறைகளிலே ஏதாவது நிகழ்ச்சிகள் நடந்தால், தாளம் போடத் தொடங்கிவிடுவான். பயிற்சி முடித்த காலத்திலிருந்து சண்டைக்குச் செல்லும் வாய்ப்பு அதிகம் இவனுக்குக்

கிடைக்கவில்லை. 'ஹயசேன - 01' என்ற, சிங்களப் படையின் நடவடிக்கை தான் இவன் கண்ட முதல் களம்.

மணலாற்றுக் காட்டின் வளர்ப்பாய் - அதன் பாதுகாப்புத் தூண்களாய் - நின்று மாணித்த மட்டக்களப்பு வீரர்கள் கொஞ்சமல்ல; இவர்கள் மணலாற்றின் வரலாற்றோடு பின்னிப் பிணைந்தவர்கள். ஜெயசீலனின் மரணத்தின் பின்னேயும் பெருமதிமிக்க வரலாறு உண்டு. நெருக்கடி மிகுந்த இக்கட்டானகாலத்தில், குறைந்த வீரர்கள் நின்று, பெரியதொரு இராணுவ நடவடிக்கையை முறியடித்துக் காடு காத்த வரலாறு அந்த வரலாறு. மூச்சுவிடும் கல்லறை அவன் வீரவரலாற்றின் நிலைக்கல்! ☆

பிறப்பு:
24. 06. 1975

வீரச்சாவு:
15. 07. 1991




# குசேலன்

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)
(டேவிற் சுரேஸ்)
மாமாங்க கொலனி,
மட்டக்களப்பு.

காட்டின் நடுவே பாசறை ஒன்றில், 'நீதி தேவதை' என்ற பெயரோடு ஒரு பெண்ணின் சிலை நிற்கிறது. குசேலனின் கைவண்ணத்தில் உருவானது அந்தச் சிலை. சிலைகள் வடிப்பதில் குசேலன் வல்லவன்; கலைத்தெய்வம் அவனுள் உறைந்து கிடந்தாள். சிலை மட்டுமன்றி நாடகக்கலையும் அவனிடம் இருந்தது.

தனக்கிட்ட பணியைச் சரியாகச் செய்து முடிக்கும்வரை, நிதானமாகச் செயற்படுவான். பணியை முடித்ததும் விளையாட்டுப் புத்தி தலைதூக்கிவிடும். பயிற்சிக் காலத்தில் தன் திறமைகளை நன்கு வெளிப்படுத்தினான். பயிற்சி முடிந்து ஓய்வாக இருக்கும்போது, தேசவிரோதக் கும்பல்களின் அட்டகாசங்கள் பற்றியும் அதனால் பட்ட துயரங்கள் பற்றியும் சொல்லத் தொடங்கிவிடுவான்; அவர்கள் மீது ஆறாத கோபம் இவனுக்கிருந்ததை இது எடுத்துக் காட்டியது.

குசேலன் நேரடியாகச் சண்டைகளில் பங்கெடுத்தமை அரிது. சில சண்டைகளுக்கு, உதவி வழங்கும் அணியில் ஒருவனாகச் சென்றதுண்டு. நீதிதேவதை இவனுக்கு வரைந்த இறுதி வரிகள் பெறுமதிமிக்கவை.

'ஹயசேன - 01' என்ற, சிங்களப் படையின் நடவடிக்கையை முறியடிக்க அணிகள் வகுக்கப்பட்டன. சண்டைக்குச் செல்லும் முன்னர் பிள்ளையார் சிலை ஒன்றினைச் செய்து,அதனைத் தலையில் தூக்கிவைத்து,பின் நீதிதேவதை எனப் பெயரிட்டுச் செய்த சிலையினைச் சுற்றிச் சுற்றி ஆடினான். ''பிள்ளை யாரப்பா! இதுதான் கடைசிஆட்டம்'' என்று சொல்லிவிட்டுச் சென்றான். சொன்னது போலவே அவனின் ஆட்டமும் நின்றுபோனது. இன்றும் நீதி தேவதை என்ற பெயரோடு நிற்கும் அவனின் சிலை, அவனை நினைவுறுத்திக் கொண்டு நிற்கிறது! ☆

பிறப்பு:
11. 08. 1973

வீரச்சாவு:
15. 07. 1991




# 2ஆம் லெப். ராஜேந்திரம்

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)
(முத்து அந்தோனிமுத்து)
மயிலங்காடு,
ஏழாலை.

தோற்றத்தில் செந்தில் போல் இருந்ததால் போராளிகள் அனைவரும் செந்தில் என்றே இவனை அழைத்தனர். குட்டையான தோற்றமாக இருந்தாலும் உடலில் வலிமை அதிகமிருந்தது. மணலாற்றில் பங்கெடுத்த சண்டைகளில் மட்டுமன்றி, மணலாற்றுக்கு வெளியே நடைபெற்ற சண்டைகளிலும் பிறண் எல், எம். ஜி துப்பாக்கியைக் குறிதப்பாது இயக்கும் மனோ வலிமையும், உடல்வலிமையும் இருந்தது.

ராஜேந்திரம் பொறுப்புணர்ச்சியுள்ள ஒரு போராளி. சொல்லும் பணியை ஒழுங்காகச் செய்துமுடிக்கும் பண்பு இவனிடமிருந்தது. சினந்து பேசவோ கோபித்துப் பேசவோ விரும்பாதவன். இவனது மரணம் மணலாற்றுக்கு மட்டும் பெருமை சேர்க்கவில்லை; அவன் பிறந்த கிராமத்துக்கும் புகழ் சேர்த்தது.

ஆனையிறவுச் சமருக்குப் பல அணிகள் மணலாற்றிலிருந்து புறப்பட்ட போது, சிங்களப் படைகள் 'ஹயசேன - 01' நடவடிக்கையொன்றை மணலாற்றில் மேற்கொண்டன. இந்நடவடிக்கையை துணிந்து நின்று முறியடித்து, காடு காக்க உயிர்கொடுத்த வீரர்களில் தன்னையும் இணைத்துக்

கொண்டான். உயிர் எல்லாருக்கும் உன்னதமான பொருள்தான்; ஆனால், தகுந்த காலத்தில் - தகுந்த செயலுக்காய் - அர்ப்பணிக்கும்போது அதன் பெறுமதி மதிக்கமுடியாத அளவிற்கு மலையாய் உயர்ந்துவிடுகிறது. ராஜேந்திரத்தின் உயிரும் காலமலையின் சிகரமாய் அமைந்துபோனது......!

☆



பிறப்பு:
12.06.1968

வீரச்சாவு:
15.06.1991




# கப்டன் மனோ

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)
( கோணலிங்கம் சிறீதரன் )
2ஆம் வட்டாரம்,
குச்சவெளி.

குச்சவெளிக் கிராமத்தில் க. பொ. த. உயர்தர வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான். படிப்பில் கெட்டிக்காரன். முற்கோபம் சற்று அதிகம். குச்சவெளியில் இலங்கைப் பொலிஸ் படையின் முகாம் புலிகளால் வெற்றி கரமாகத் தாக்கி அழிக்கப்பட்ட சம்பவம், மனோவின் உணர்வுகளைத் தொட்டது.

திருக்கோணமலையில் பயிற்சிகளை முடித்துக்கொண்டு, இலங்கை இரா ணுவத்திற்கெதிரான நடவடிக்கைகளில் இறங்கினான். இந்தியப் படைகள் தமிழீழத்துக்கு வந்தபோதும், அவர்களுக்கெதிரான தாக்குதல்களில் கிழக் கின் பலபகுதிகளிலும் பங்குகொண்டான். கிழக்கிலிருந்து மணலாற்றுக்கு வந்த அணியில் மனோவும் வந்திருந்தான்.

மணலாற்றில் தன் பணியை களஞ்சியப் பொறுப்புடன் தொடங்கி னான். களஞ்சியப் பொறுப்பில் அவனது கடமையும் கண்ணியமும், நிதிப் பொறுப்புக்கு அவனை மாற்றின. நிதியில் அவன் நிலை உறுதியாகவும் சீரா கவும் இருந்தது; சில மாதங்களில் பாசறை ஒன்றின் பொறுப்பாளனாகி னான்.

மேஜர் அரவிந்தன் முல்லைத்தீவு முற்றுகைத் தாக்குதலில் ஈடுபட்டி ருந்த காலத்தில், காட்டின் முழுமையான பொறுப்பும் தற்காலிகமாக அவ னிடம் ஒப்படைக்கப்பட்டது. ஆளுமைத்திறனும், நிர்வாகத் திறமையும், இயக்க விசுவாசமும் இவனுக்கு அதிகளவில் இருந்ததால், இப் பொறுப் பினையும் பொறுப்புணர்ச்சியோடு செய்து முடித்தான்.

'இரண்டாவது ஈழப்போர்' தொடங்கிய காலத்தில், கிழக்கில் பல தமிழ்க் கிராமங்களின் மக்கள் இடம்பெயர்ந்தனர். சிங்களத்தின் தீக்கு பல வீடுகள் இரையாகின; உயிரைக் காக்க ஓடிவந்த மக்களில் குச்சவெளி மக்க ளும் அடங்கினர்.

இடம்பெயர்ந்த மக்களைப் பார்வையிடச் செம்மலைக் கிராமத்துக்குச் சென்றான் மனோ. அங்கே தன் தாயினையும் சகோதரங்களையும் காணும் வாய்ப்புக் கிடைத்தது. தனக்கு அடுத்துப் பிறந்த தம்பியை இயக்கத்தில் இணைந்துகொள்ளும்படி கேட்டுக்கொண்டான்; அண்ணன் அனுமதிக்குக் காத்திருந்தவன்போல் அவன், அடுத்தநாளே காட்டில் பயிற்சிக்குப் புறப் பட்டுவிட்டான்.

மனோ மணலாற்றுக் காட்டினை நன்கு நேசித்தான். தலைவனைக் காத்த மண்; களங்கள் கண்ட மண் என்ற உணர்வு அவனுள் ஆழமாக ஊன்றியிருந்தது. எதிரி காட்டிற்குள் அடியெடுத்து வைப்பதைக் கண்டால் எரிமலையாய் நிற்பான்; காட்டை இழக்க அவன் தயாராயில்லை.

ஆனையிறவுச் சமருக்கு, சிறப்புத் தளபதி, மணலாற்று அணிகள் பலவற்றை வழிநடத்திச் சென்றிருந்தார்; தன் நம்பிக்கை மிக்க - தெரிந் தெடுக்கப்பட்ட - வீரர்களின் சில அணிகளைத் தளபதி வீமனின் கையில் ஒப்படைத்துச் சென்றார். வீமன் உறங்குவானா? விழிப்புடன் இருந்தான். எதிர்பார்த்தது போலவே சிங்களப் படையணி ஒன்று காட்டில் நுழைய எத்தனித்தது. மனோ, பசிலன், இளங்கோ என அனுபவம் மிக்க வீரர் களை வீமன் களமுனைக்கு அனுப்பினான்; வேறொரு முக்கிய திசையில், தானும் சில வீரர்களுடன் பதுங்கிக் கிடந்தான். சண்டை தொடங்கியது; கடுமையான சண்டை. ஆயிரக்கணக்கான சிங்களப் படைகளை, எண்ணி யெடுத்த வீரர்கள் அடித்துத் துரத்தத் தொடங்கினர். சிங்களப் படைகளின் முயற்சி முளையிலேயே கிள்ளப்பட்டது. ஆனால் மனோ......? வீரத்தின் நடுகல்லாய்......காட்டினைக் காத்த பெருமையுடன் கண்மூடிக் கிடந்தான்!

☆

பிறப்பு:
21. 02. 1972

வீரச்சாவு:
15. 07. 1991



# லெஸ்ரன்

**(இலங்கை இராணுவத்துடனான மோதல்)**
**(அருளம்பலம் தவக்குமார்)**
**மானிப்பாய் மேற்கு, மானிப்பாய்.**

லெஸ்ரனின் போராட்ட வாழ்வு குறுகிய காலமே. பயிற்சிக்கு வந்து நின்றவன், பயிற்சிக்கு முன்னரே மருத்துவப் பிரிவினருக்கு ஆர்வமுடன் பல உதவிகளைச் செய்யத் தொடங்கினான். மருத்துவத்துறையில் அவனுக்கிருந்த ஆர்வத்தை மணலாற்றின் சிறப்புத் தளபதி கவனித்துக்கொண்டார்.

ஒவ்வொரு போராளியின் அசைவுகளையும், அவர்களின் உள்ளங்களையும், வீட்டு நிலைமையினையும் அளவிட்டு வைத்துக்கொள்ள அந்தத் தளபதியின் கண்களும் நெஞ்சும் தவறியதில்லை; தலைவரின் சரியான வளர்ப்பு.

லெஸ்ரனை மருத்துவப் பிரிவிலேயே இணைத்துவிட வேண்டுமென்பதை மனத்தில் வரிந்து கொண்டார். ஆங்கில அறிவு, அமைதியான முகம், இனிமையான பேச்சு, பண்பான நடத்தை எல்லாவற்றிலும் லெஸ்ரன் உயர்ந்து நின்றான்.

பயிற்சி முடிந்ததும் பணி ஆரம்பமானது. தன் மருத்துவத் திறனை எடுத்த எடுப்பிலேயே சகபோராளி ஒருவனைக் காப்பாற்றியதன்மூலம் நிலைநிறுத்திக்கொண்டான். வெடி விபத்தில் காயமுற்ற ஒரு போராளியை, தனித்து

நின்று சிகிச்சை செய்து காப்பாற்றிக் கொண்டுவந்து சேர்த்தான்; அனுபவமுள்ள ஒரு மருத்துவனின் துணிவும் செயலும்.

லெஸ்ரனை முழுமையான வைத்தியப் படிப்புக்கு அனுப்பியெடுக்க விரும்பினார் சிறப்புத் தளபதி; ஆனையிறவுச் சமரிலிருந்து திரும்பியதும் அவனை யாழ். அனுப்பி தரமிக்க வைத்தியனாக்க வேண்டும் என நினைத்துக் கொண்டு சென்றார். நினைத்தொன்று நடந்தொன்று. அவர் திரும்பி வந்தவேளை லெஸ்ரன் இந்த மண்ணில் இல்லை. பெரும் இராணுவ நடவடிக்கை ஒன்றினை முறியடித்தஇறுமாப்புடன் கண்மூடிக் கிடந்தான் லெஸ்ரன்!

☆

பிறப்பு:
03. 01. 1972

வீரச்சாவு:
16. 07. 1991



## கப். இளங்கோ

**(இலங்கை இராணுவத்துடனான மோதல்)**
**( கனகராசா ஜெயந்தன் )**
**கம்பர்மலை,**
**வல்வெட்டித்துறை.**

இளங்கோ! இவன் போராளிகளின் தெய்வம். சண்டை நடந்துகொண்டிருக்கும்போதே துப்பாக்கிக் குண்டுகளுக்கும் எறிகணைகளுக்கும் நடுவே புகுந்து காயமுற்ற போராளிகளை உடனுக்குடன் சிகிச்சைக்குட்படுத்தி, தேவையற்ற மரணங்களைத் தடுத்தவன். ''உயிர்காப்பான் தோழன்'' என்ற உண்மையினால், அனைத்துப் போராளிகளின் மனதிலும் நிறைந்து நின்றான்.

கம்பர்மலைக் கிராமத்திலிருந்து புறப்பட்டு, 1988இல் களத்திலேயே பயிற்சியை முடித்தான். பயிற்சி முடித்த காலத்திலிருந்தே மருத்துவப் பிரிவில் இருந்து - தன் சுகதுக்கங்களை மறந்து - போராளிகளின் நலத்துக்காய் உழைத்தான். 'தாயைப்போல பிள்ளை' என்ற முதுமொழி இவனுக்குப் பொருத்தமானது; ஏனெனில், இளங்கோவின் அம்மா ஒரு மருத்துவத்தாதி.

அன்பு, பரிவு, கருணை என்பவற்றுடன் துணிவும் நிறைந்தவனாய் இருந்தான் இளங்கோ. காட்டில் எங்கெல்லாம் சண்டை நடந்ததோ அங்கெல்லாம், இளங்கோவின் மருத்துவ அணியும் நின்றது.

ஒரு போராளி சற்று அதிகநேரம் தூங்கினால் கூட, தலையைத் தொட்டுப்பார்த்து, ''என்ன உடம்பு சரியில்லையா?'' என்று அன்போடு கேட்கும் கருணையுள்ளம் நிறைந்தவன் இவன்.

இளங்கோவின் மருத்துவப் பாசறைக்குள் செல்லும்போது, கால்கள் தாமாகவே பாதணிகளைக் கழற்றிக்கொள்ளும்; அந்தளவிற்கு தனது பாசறை யைச் சுத்தமாக வைத்துக்கொள்வான்.

பல ஆண்டுகளாக மருத்துவப் பணியில் இருக்கும் தன்னை எங்காவது கரும்புலியாக விடும்படி, சிறப்புத்தளபதியிடம் ஒருநாள் வேண்டிக்கொண்டான். ''நீ இப்பவும் கரும்புலியாய்த் தானேடாப்பா செயற்படுறாய்; சண்டையென் றால் புகுந்துபோய் முன்னால நிற்கிறாய் - பேந்து புதிதாய் என்ன கரும்புலி?'' என்று பதில்கூறி, அவனின் வேண்டுதலுக்கு முற்றுப்புள்ளி வைத்தார் தளபதி. இளங்கோவின் துணிவுமிக்க பணி மணலாற்றுக்குத் தேவையென்பது, தளபதிக்கு நன்கு தெரியும்.

ஆனையிறவுப் பெரும்போருக்குச் சென்று திரும்பிய பின்னர், விடுமுறை யில் வீட்டுக்கு அனுப்பப்பட்டான். வீட்டுக்குப் போய்வந்தபின் சில நாட்களாக, ''நான் செத்தாலும் என்ர தம்பிய இயக்கத்துக்கு எடுத்துப் போடணும்'' என்று சகபோராளிகளிடம் அடிக்கடி சொல்லிக்கொண்டான்.

வீடு சென்றுவந்து சரியாக ஒரு வாரம் இருக்கும், மணலாற்றில் 'ஹய சேன - 01' என்ற, சிங்களப் படையின் படையெடுப்பை முறியடிக்கவேண்டி யிருந்தது. நெருக்கடி மிக்க காலம்; பொறுப்பை உணர்ந்து போர்க்களம் புகுந் தான் இளங்கோ. சண்டை ஒரே நாளில் முறியடிக்கப்பட்டது. ஆனால் இளங்கோ......? தன்னைத் தூக்கிவந்து சிகிச்சை செய்ய எவருக்கும் இடம் கொடுக்காமலே மரணித்தான்.

தான் செத்தால் தன்தம்பியை இயக்கத்துக்கு எடுத்துவிட வேண்டுமென தனது தினக்குறிப்பிலும் எழுதி வைத்தான். அவனது ஆசைபோல், போராளி கள் கேட்காமலே, அண்ணனின் உடலைக் கண்ட மறுதினமே அவன் தம்பி போர்முனைக்குப் புறப்பட்டுவிட்டான்! ☆

பிறப்பு:
31. 03. 1969

வீரச்சாவு:
15. 07. 1991



# லெப். குஞ்சன்

( இலங்கை இராணுவத்துடனான மோதல் )
(மனுவேல் சந்திரகுமார்)
இருதயபுரம்,
மூதூர்.

**1989** ஆம் ஆண்டில், விடுதலைப் போராட்டத்தில் தன்னை இணைத்துக்கொண்டான் குஞ்சன். மூதூரில் பயிற்சிப் பாசறைக்குச் செல்லும்போது, நண்பர்கள் சிலரையும் தன்னுடன் கூட்டிச்சென்றான். இருதயபுரம் சிறிய கிராமமாயினும், பெறுமதியான வீரர்கள் பலரை விடுதலைக்கு ஈன்று கொடுத்த பெருமையோடு நிற்கிறது.

பயிற்சியை கிழக்கிலேயே முடித்துக்கொண்டு மணலாற்றில் கால்பதித்தான். வந்தகாலம் தொடங்கி பல மாதங்களாக, அவசியம் மிக்க வேவுப் பிரிவில் பணிபுரிந்தான். மட்டக்களப்பில் பிறந்திருந்தாலும் மணலாற்றின் ஒவ்வொரு அங்குல மண்ணையும் அறியுமளவிற்கு, தன்னை வளர்த்துக் கொண்டான்.

தொழில்நுட்பத் திறமைகள் இவனிடம் மிகுதியாக இருந்தன. மிதி வெடிகள், ரைபிள் கிரனேட்டுகள் தயாரிப்பதில் வல்லமை பெற்றான். விடுதலைப் போரின் வளர்ச்சிக்குக் கிடைத்த அருமைமிக்க திறமைசாலிகளில் ஒருவன் இவன். இரவு பகல் பாராது, தன் கடமைகளில் கருத்தாக இருந்தான்.

ஆனையிறவுச் சமர் நடந்துகொண்டிருந்த சமகாலத்தில் மணலாற்றிலும் 'ஹயசேன - 01' என்ற இராணுவ நடவடிக்கையை, சிங்கள தேசம் மேற்கொண்டது. ஆனையிறவுச் சமருக்கு புலிகளின் அணிகள் மணலாற்றிலிருந்து புறப்படுவதைத் தடுப்பதற்காகவே, அரசு இத்தகைய நடவடிக்கைகளில் இறங்கியது. கப்டன் மனோ, கப்டன் பசிலன் போன்ற வலிமைபடைத்த பொறுப்பாளர்களின் தலைமையிலான அணிகள், இந்நடவடிக்கையை ஒரேநாளில் முறியடித்தன. இச்சண்டையில் தன் அணியையும் வழிநடத்தி, காடுகாத்து மரணித்தான் குஞ்சன். காலமுணர்ந்து காடுகாத்த மைந்தர்களில் இவனும் மறக்கமுடியாதவன்! ☆



பிறப்பு:
20. 07. 1970

வீரச்சாவு:
15. 07. 1991



## 2ஆம் லெப். பாபு

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)

(அரசரட்ணம் மனோகரன்)

மாங்கேணி,

வாழைச்சேனை.

பயிற்சி முடிந்தவுடன் ஆயுதம் கிடைப்பது அரிது; கிடைத்தாலும் கனரக ஆயுதம் கிடைப்பது அரிது. அதற்கென சில சிறப்புத் தகைமைகள் வேண்டும். பாபு இத்தகைமைகளைக் கொண்டிருந்தான். மட்டக்களப்பிலேயே படைப்பயிற்சி முடித்து, பயிற்சியின் சிறப்பினால் ' பிறண் ' துப்பாக்கியையும் பெற்றுக்கொண்டான், மணலாற்றில் பாதங்கள் பதியும்போது தோளில் ' பிறண் எல். எம். ஜி ' இருந்தது.

பாபு கொடுத்துவைத்தவன்; அவனது குடும்பமே விடுதலையின் பின்னால் நின்றது. விடுதலையை நேசித்த அவனது குடும்பத்தின் சோக வரலாறு யாரையும் புண்படுத்தும்.

இயக்கத்துக்கு உதவி செய்வதாகக் கூறி, இவனின் தாய் தந்தையர், கைக்குழந்தையுடன் அவனின் தமக்கையார் அனைவரையும் இந்திய ஓநாய்கள் இருட்டுச் சிறைக்குள் அடைத்துவைத்தனர். ' தாய்மண்ணை நேசித்தால் குற்றம் ' என்ற நிலையில், எப்படிச் சுதந்திரமாக இருக்க முடியும்? பாபுவின் மனம் எரிமலையானது. அப்போதுதான் அவன் கைகள் ஆயுதத்தைத் தூக்கின. ' தாயின் சேலை தண்ணீரில் போகும்போது, தரையில் தலைப்

பாகையுடன் நின்று தர்மமா பேசமுடியும்?' பாபுவின் துப்பாக்கி நெருப்பைக் கக்கியது; துப்பாக்கியின் முனையில்தான் தர்மம் குடியிருப்பதை உணர்ந்துகொண்டான்.

'நானும் தாயின் வயிற்றில் பிறந்தவன்தான்; என்னுடலில் ஓடுவதும் அம்மாவின் ரத்தந்தான்' எனக்கூறி, பாபுவின் தம்பியும் மணலாற்று பயிற்சிக்களத்தில் வந்து குதித்தான். வீட்டுக் கஷ்டத்தைக் கருதிய மணலாற்று சிறப்புத் தளபதி, ஒருவனை வீட்டுக்குச் செல்லும்படி பணித்தார். இருவரும் பிடிவாதமாக மறுத்தனர். அந்தநேரம் பாபுவின் வீட்டில் அடுத்த சோகம் நிகழ்கிறது. தாய், தந்தை, அக்கா, தங்கை அனைவரும் சிங்களப் படையால் கால் வேறு தலை வேறாய்த் துண்டாடப்பட்ட செய்தி கிடைக்கிறது. எழுதமுடியாத, சொல்லமுடியாத துயரங்கள். பாபுவின் நெஞ்சு தணியுமா? அவன் கண்கள் மூடுமா......? பாபு இவற்றைக் கனவாக நினைத்து மறக்க முயன்றான். பாட்டுப் பாடி, ஆட்டம் போட்டு தன் சகபோராளிகளை மகிழ்வித்தான்; போராளிகளின் மகிழ்வில் வீட்டின் சோகங்களை மறந்து விட முயன்றான்.

அன்பும், மரியாதையும், அமைதியும் அவனோடு கூடப்பிறந்த குடும்பச் சொத்து. உறங்கிக் கிடந்த அவன் அமைதிக்குள் குமுறிக் கொண்டிருந்த எரிமலையொன்றை யாரால் புரிந்துகொள்ள முடியும்?

''காட்டுக்குள் எதிரி நுழைந்தான்'' என்று கேட்டதும் எரிமலை வெடித்தது. அவன் தன்னை மறந்தான். மாறி மாறி, பிறண் துப்பாக்கியின் 'மகசீனில்' குண்டுகளை நிரப்பிக் கொடுத்துக் கொண்டிருந்தது அவன் கரம். முதல் குண்டு கையை - முழங்கையை - முறித்தது; அவன் ஓயவில்லை. இரண்டாவது குண்டு வயிற்றைத் துளைத்தது; பாபு சோரவில்லை. அடுத்த குண்டு மார்பிலே...... நிலத்தில் சரிந்தான் பாபு. கண்கள் மூடின. கைகள்......? குண்டு நிரம்பிய மகசீனை இறுகப் பிடித்திருந்தன......! ☆

பிறப்பு:
11. 10. 1969

வீரச்சாவு:
16. 07. 1991




# மேஜர் வீமன்

( இலங்கை இராணுவத்துடனான மோதல் )
(சோலை விக்கினேஸ்வரன்)
சகாயமேடை,
மன்னார்.

பெயராலும், செயலாலும் புகழை நிலைநிறுத்தியவீரன் வீமன். கதாயுதத்தால் அதர்மத்துக்கு அடிகொடுத்து பாரதயுத்தத்தை முடித்துவைத்த வீமனை எம் நிஜவாழ்வில் தோழனாய், துணிவூட்டும் வீரனாய்......கடமை வீரனாய்...... ஒழுக்கத்தின் காவலனாய்ப் பெற்றிருந்தோம்.

இனிமையாகப் பேசி, சினக்காமல் அரவணைத்து, ஒன்றாகச் சாப்பிட்டு, ஒன்றாகப் படுத்துறங்கி, மனமார வெற்றிகளைத் தேடித்தந்து, முடிவில் நெஞ்சு கனக்க வேதனையைச் சுமக்கவிட்டு சிலையாகிப் போய்விட்ட அந்த மறவனுக்கு, பேனாமுனை வரலாறொன்றை வரைந்து கொள்ள முனைகிறது.

முறுக்கேறிய உடலும், ராஜநடையும், கம்பீரமான தோற்றமும் கொண்ட வீமனைப்பற்றி எழுதுவதா......?நெஞ்சை நோகடிக்காது, தன்னையே உதாரணம் காட்டி, அன்பான பேச்சால் அரவணைத்து, கடமையை எங்களுக்குக் கற்றுத் தந்த வீமனைப்பற்றி எழுதுவதா......?

தலைவனின் உயிர்காத்து, விடுதலையை விரிவாக்கி, தமிழீழத்தின் இதயமாய் நிற்கும் மணலாற்றுக் காட்டில் அவன் வைத்திருந்த ஆழமான பற்றினை

எழுதுவதா..... ?ஒரேயொரு நாள் மேடை ஏறி, ஒரேயொரு வசனம் பேசி, அந்த ஒரேயொரு வசனத்தால் மணலாற்று மக்களின் நெஞ்சில் மலையாய் உயர்ந்து கொண்டதை நினைத்துப் பார்க்கிறேன் ....

ரத்தம் காயுமுன் அடுத்தடுத்து அவன் கண்ட யுத்தமுனைகளை நினைத்துப்பார்க்கிறேன் ....

எல்லாரும் வாகனத்தில் சென்று, காட்டின் பாசறைகளைச் சுற்றிப் பார்ப்பார்கள். காட்டின் தளபதியாய் உன்னை நியமித்தபோதும் விறுக்குவிறுக்கென கால்நடையாகவே சென்று, பாசறைகளையும் வீரர்களின் நலனையும் கவனித்துக்கொண்டாய். கால்கடுக்க உன்பின்னே நாம் ஓடி ஓடிவந்த அந்த நாட்கள்...... ''சாறம் கிழிந்துவிட்டது, துவாய் பிரிந்துவிட்டது '' என்று நாம் உன்னிடம் வந்து முறைப்பட்டோம். கிழியக்கிழிய, தைத்துத் தைத்து உடுக்கும் உன் சாறத்தையும் - கழுவிக்கழுவி நூலற்றுப்போன உன் துவாயினையும் - காட்டி, ''என்ரையை விட உது புதிசாய்க் கிடக்குதிடாப்பா'' என்று சொல்லி எம்மை வாயடைக்கவைத்து, பொறுப்புணர்ச்சியைக் கற்றுத் தந்தாயே ..... அந்தநாட்கள் எவ்வளவு இனிமையானவை! ஆனால் எங்களை நீ பட்டினி கிடக்க விட்டதில்லை. கறி இல்லை என்று சொல்ல இடம்வைக்காமல், மிருகங்களைச் சுட்டுத்தந்துவிடுவாய். உனக்கில்லையென்றாலும் மற்றவர்க்குப் பகிர்ந்துகொடுத்துவிடுவாய். உன்னுடைய அந்த உயர்ந்த பண்பை நினைத்துப் பார்க்கிறேன்......

பறவைகளிடத்தும் விலங்குகளிடத்தும் கூட நீ பற்று வைத்திருந்தாய். கரடியைக் கூட மனிதனோடு பழகும்படி வளர்த்தவனல்லவா நீ! உன் வைர நெஞ்சிலும் இத்தனை கருணையிருந்ததை எவரும் அறியமாட்டார்கள்.

நீ கண்ட களங்கள் வரிசைப்படுத்த முடியாதவை. சண்டைமுனையில் உன் வீரவிளையாட்டை எழுதத் தொடங்கினால், அதுவே முடிக்க முடியாத ஒரு வரலாறாகிவிடும். எல்லாருக்கும் எழுதும் அந்த வரலாற்றை உனக்கும் எழுதுவதைவிட, உன் நினைவுகளின் சில அத்தியாயங்களை மட்டுமே இங்கு புரட்டிப் பார்க்கின்றேன்.

உன் மரணம் எமது சிறப்புத் தளபதியைக்கூட கண்கலங்கவைத்தது உனக்குத் தெரியாது. ஆனையிறவுச் சமருக்குச் செல்லும்போது, காட்டின் பொறுப்பை உன்னிடம் ஒப்படைத்தார். காட்டின் பெருமையினையும், பெறுமதியையும் முழுமையாக உணர்ந்த பொறுப்புமிக்க வீரன் நீ என்பது, அவருக்குத் தெரியும். அவரது நம்பிக்கையைக் காத்த அந்த இறுதி நாட்களை நினைத்துப் பார்க்கிறேன்....

''மச்சான் பாண்டியன், அன்பண்ணனும் இல்லையிடாப்பா...... காடு கவனம்..... காட்டை விட்டுவிடக் கூடாது'' என்று கூறிக்கொண்டே சண்டைமுனைநோக்கி துப்பாக்கியோடு ஓடிக்கொண்டிருந்தாயே! ''எதிரி காட்டிற்குள் நுழைய நீ என்ன செய்துகொண்டிருந்தாய்? '' என்று அன்பண்ணன் கேட்டுவிடக் கூடாதென்பதற்காக,புயலாய் மாறிச் சண்டை செய்துகொண்டிருந்த உன் மார்பில் குண்டுபட்டு......மலைபோல் வீழ்ந்து கிடந்த உன் உடல்......உனக்

காக நான் எதை எழுதுவது......?வார்த்தைகளைத் தேடுகின்றேன். உன் தியாகத்தை எழுத தமிழில் சொற்களைத் தேடமுடியவில்லையே! மன்னார் மண்ணில் உன்னைப் பெற்றுத்தந்த உன்தாயைப் புகழ என்வாய் வார்த்தைகளைத் தேடுகிறது. வீரத்தாய்......வணங்காத இந்த மண்ணுக்கு உன்னைத் தந்த தமிழீழத் தாயவள்.. ... எங்கள்நெஞ்சு உங்களைச் சுமக்கும்......! ☆



பிறப்பு:
22.09.1969

வீரச்சாவு:
16.07.1991




# ராமராஜ்

( இலங்கை இராணுவத்துடனான மோதல் )
( பேரின்பம் கணேசமூர்த்தி )
காந்திபுரம்,
பழுகாமம்.

**வீ**ட்டுக்கு மூத்தபிள்ளை ராமராஜ். நான்கு சகோதரிகளுக்கு அண்ணனாய்ப் பிறந்தான். ''பொறுப்புக்களை நினைத்திருந்தால் என்றோ ஒருநாள் சிங்களப் படையின் பலிக்கடாவாகவேண்டிவரும்'' என்று கருதி மண்ணின் விடிவுக்கு உயிர் கொடுக்க புறப்பட்டான்.

தன்னோடு கூடித்திரியும் நண்பர்களிடம், ''மச்சான் எங்கட காந்தி புரம் கிராமத்தில ஒரேயொருவன்தான் மச்சான் இயக்கத்தில இருக்கிறான்; அவனும் ஒரு நோயாளி. அவனே துணிஞ்சு இறங்கியிருக்கிறானெண்டால் நினைச்சுப்பார்க்க வெக்கமாய் கிடக்குது. நாங்கள் ஏன் போகக்கூடாது?'' எனக் கூறினான். அடுத்தநாளே நண்பர்கள் பலர் கூடினர். மட்டக்களப்பில் பாசறை ஒன்றினைத் தேடி அடைந்தனர். மட்டக்களப்புக் காட்டில் பயிற்சி யின்றி நீண்டநாட்கள் இருந்தபோது, ராமராஜ் கவலையடைந்தான். ''இப் பிடியே கொஞ்ச நாளைக்கு இருந்தால் வீட்டுக்குப் போற எண்ணந்தான் வரும்'' என்று சலிப்புடன் சொல்லிக்கொண்டான்.

வாரங்கள் சில சென்றன. ஒருநாள் பொறுப்பாளர் வந்து, ''மண லாறு செல்ல விரும்புவோர் கையை உயர்த்துங்கள்'' என்றார். தலைவர்

இருக்கும் இடம் என்பதால் அனைவரும் உயர்த்தினார்கள். மணலாற்றுப் பயணம் ஆரம்பமானது. வரும்பாதையில் ஏற்பட்ட துன்பங்களையெல்லாம் மறந்து, மணலாற்றில் பயிற்சியை முடித்தான் ராமராஜ். ஆனையிறவுச் சமர் அவனது முதற்களம். ஆனையிறவு சென்று சண்டைக்கு இறங்குமுன்னரே மணலாற்றுக்குத் திரும்பவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

மணலாற்றில் ' ஹயசேன - 02 ' என்ற இராணுவ நடவடிக்கையை முறியடிக்க வேண்டியிருந்தது. வந்தகளை மாறாமல் மேஜர் வீமனுடன் களம் புகுந்தான். தமிழீழத் தாய் அவனை இருகரம் நீட்டி அழைத்துக்கொண்டாள்!

☆

பிறப்பு :
12. 07. 1972

வீரச்சாவு :
16. 07. 1991




# கப், கிளாஸ்நிக்கோவ்

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)
(பேரின்பராசா ஜீவானந்தராசா)
மேன்காமம்,
மூதூர்.

கிழக்குப் போரின் முதல் நிலக்கண்ணித் தாக்குதல் - ஏழு சிப்பாய்களைப் பலிகொண்ட தாக்குதல். இந்தப் புகழ்மிகு தாக்குதலின் தளம் கட்டைபறிச்சான் கிராமம். கிளாஸ்நிக்கோவின் பிறந்தமண் இது. முத்துச் சிப்பி போல், இவனுள் மறைந்து கிடந்த உயர்குணங்கள் பல.

வறுமை இவனின் குடும்பச் சொத்து, அமைதியும், சாந்தமும் இயற்கையாய் இவனுக்குக் கிடைத்த செல்வம். பொருட்செல்வம் சேர்த்துவைக்க எமக்கென்று மண்வேண்டும் என நினைத்து ஆறுகளையும், சேறுகளையும், காடுகளையும் தாண்டி - மணலாற்றில் தலைவனுக்கு அருகே வந்தடைந்தான். பயிற்சி முடித்தான்; பண்பால் உயர்ந்தான்.

இன்றும் மணலாற்று சிறப்புத் தளபதியாக இருப்பவரின் கீழ் அன்றும் இருந்து களங்கண்டவன். கோட்டை, பரந்தன், மண்டைதீவு, வவுனியா எனப் பல களங்களைச் சந்தித்தவன். பரந்தனில் நடைபெற்ற சண்டையில், கப். பிரபாவின் (பெண்புலி) உடல் எதிரி கையில் அகப்படாமல் துணிந்து மீட்டுவந்தான்; சுபாஸ் அந்தப் பணியில் நெஞ்சில் காயமும் சுமந்தான்.

ஏ்தையும் சமாளித்து நிர்வகிக்கும் திறமையும் அனுபவமும் தனியொரு அணியின் பொறுப்பாளனாக இவனை மாற்றியது. கப். சுபாஸ் மரணித்த சண்டை, ஆனையிறவுச் சமர் என்பவற்றுக்குத் தன் அணியைச் சரியாக வழி நடத்திச் சண்டை செய்தான். மணலாற்றுக் காட்டில் சிங்களப் படையைத் தாக்கி, முதன்முதல் 81 எல். எம். ஜி எடுத்த சண்டையிலும் இவனது சாதனை அபாரமானது.

ஆனையிறவுச் சண்டையில் நிற்கும் காலத்தில், மணலாற்றில் காட்டினைக் கைப்பற்றும் நோக்கில் படையெடுப்பொன்று நிகழ்வதை அறிந்து, தன் அணியுடன் புயலாய்த் திரும்பினான். பசி, களை, தாகம், நித்திரை அனைத்தையும் கடந்து மணலாறு அவன் நெஞ்சில் உயர்ந்து நின்றது. வந்த அடுத்த கணமே மேஜர் வீமனுடன் சண்டைக்குப் புறப்பட்டான். எதிரியின் எண்ணம் அழிக்கப்பட்டது. முடிவில், கிளாஸ்நிக்கோவின் புகழும் உடலும் திரும்பியது! ☆

பிறப்பு :
13.05.1974

வீரச்சாவு :
16.07.1991



# சூரன்

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)
(சிவலிங்கம் குமார்)
**கிருஷ்ணர் கோவிலடி,**
**கிரான்.**

சூரனின் கிராமம் கிரான். கிரானில் அவன் பாதம் படாத இடமில்லை. சிறிய வயதில் இருந்தே பசுமாடுகளுடன் பழகினான். பெரிய மாட்டுப் பண்ணை யொன்றை வைத்திருக்குமளவிற்கு அவனின் அனுபவம் வளர்ந்திருந்தது. கிராமத்தில் அவனுக்கென சிநேகிதர்கள் கிடையாது. சிநேகிதத்திற்கு நேரமும் இருக்கவில்லை; அதை அவன் விரும்பவும் இல்லை. விடுதலைப்போருக்காய் புறப்பட்டபோது, வாழைச்சேனையில் இருந்து மணலாற்றுக்கு, காட்டுவழியால் சேறும் ஆறும் கடந்து நடந்து செல்லவேண்டிவருமென அவன் நினைக்கவில்லை. ஆனால் மாடுகளுடன் நடந்து பழகியவனுக்கு, அது பெரும் சலிப்பைக்கொடுக்க வில்லை.

மணலாற்றுக் காட்டுக்கு வந்து பயிற்சியை முடித்ததும்,காய்ச்சல் அவனைப் பிடித்துக்கொண்டது. காய்ச்சல் குணமாகிய போதும் ஆனையிறவுச் சமருக்குச் செல்ல அவனுக்கு அனுமதி கிடைக்கவில்லை. சிறப்புத் தளபதியிடம் தானும் ஆனையிறவுச் சமருக்குச் செல்லவேண்டுமென பல தடவைகள் கேட்டும் பலன் கிடைக்கவில்லை. இது சூரனைப் பெரிதும் பாதித்திருந்தது.

சண்டைக்கான அவனது ஆசை நிறைவேறும் வாய்ப்பு சிலநாட்களிலேயே கிடைத்தது. 'ஹயசேன - 02' என்ற சிங்களப்படை நடவடிக்கையை முறியடிக்க மேஜர் வீமனுடன் புறப்பட்டான். சிங்களப் படையின் சிந்தனையை முளையிலேயே கிள்ளி எறிந்து காடு காத்த பெருமை இவனுக்குண்டு. சூரன் தன் உயிரை இந்த மண்ணுக்காய் அழித்துக்கொண்டான். இவனின் அண்ணன் லெப். கலீமும் இந்த மண்ணிற்காகத்தான் தன்னுயிரை அர்ப்பணித்தான். 'அண்ணன் காட்டிய வழியில்தான் தம்பி' என்ற பெருமையையும் ஏற்படுத்திக்கொண்டான் சூரன்!

☆

பிறப்பு :
25. 07. 1973

வீரச்சாவு :
16. 07. 1991




# லெப். நிக்சன்

( இலங்கை இராணுவத்துடனான மோதல் )
( ஜெயபாலன் அன்னராசா )
புதுக்குடியிருப்பு,
முல்லைத்தீவு.

முல்லை மாவட்டத்தில் புதுக்குடியிருப்பு பிரதேசத்தைத் தன் பிறந்தமண் ணாக்கிக் கொண்டவன் நிக்சன். தேசபக்தியாலும் விடுதலை உணர்வாலும் உயர்ந்து நின்றவனுக்கு, மணலாறு தலைசாய்க்கிறது.

போர்க்குணம் நிறைந்தவன் இவன்; இதனால் தாக்குதலணியொன்றுக்குப் பொறுப்பாக நியமிக்கப்பட்டான். எந்த நேரமும் சண்டைகளைப் பற்றியும், இரா ணுவத்தை அழிப்பது பற்றியுமே பேசிக்கொண்டிருப்பான். தன் துப்பாக்கியை, குழந்தையொன்றினைப் பராமரிப்பதுபோல் பராமரித்துக்கொள்வான். அதில் எவரும் கை போடுவதை விரும்பமாட்டான். எத்தனையோ உயிர்களைக் கொடுத்து எடுத்த சொத்து; எத்தனையோ உயிர்களைக் காக்கப்போகும் பொக்கிசம் அது என்பதை, நிக்சன் நன்கு உணர்ந்தவன்.

முல்லைத்தீவு இராணுவ முகாமை முற்றுகையிட்டு நடாத்திய தாக்குதல், மண்டைதீவுச்சண்டை, கப். சுபாஸ் மரணித்த மணலாற்றுச் சண்டையென அவன் செய்த சண்டைக்களங்கள் பற்றிச் சொல்லிக் கொண்டே போகலாம். சண்டைக் குச் செல்லும்போதும் படுத்துறங்கும் போதும், தன் தலையிலிருந்து தொப்பி யைக் கழற்றமாட்டான்; எப்போதுமே அது அவன் தலையிலிருக்கும்.

ஆனையிறவுச் சமருக்கு தன் அணியுடன் புறப்பட்டவன், ஒரு நாள் மட்டுமே அச்சமரில் பங்கெடுத்தான். அதற்கிடையில் மணலாற்றுக்குத் திரும்பவேண்டியதாயிற்று. மணலாற்றில் மிகப்பெரிய இராணுவ நடவடிக்கையொன்றுக்கு சிங்களப்படைகள் தயாராவதை அறிந்தபின், அவனால் எப்படி அங்கு நிற்க முடியும்? இரவோடு இரவாக மணலாற்றுக்கு வந்து சேர்ந்தான். வந்த களை மாறு முன்னரே எதிரியை எதிர் கொள்ளப் புறப்பட்டான். இராணுவத்தின் திட்டம் முளையில் கிள்ளப்படவேண்டுமென்ற ஆவேசம், அவனிடம் காணப்பட்டது.

சண்டை தொடங்கி விட்டது. நிக்சனின் குதூகலக்குரல் 'வோக்கி ரோக்கியில்' ஒலித்துக்கொண்டிருக்கிறது. சில நிமிடங்கள் சென்றன. அவனது குரலில் அவசரம் தெரிந்தது. ''அன்பண்ணோய் .... நிறைய ஆயுதங்கள் எடுக்கலாம்; பலர் காயமடைந்துவிட்டார்கள்;ரெண்டு ஏ.கே.எல்.எம்.ஜி எடுத்துவிட்டேன்; உதவி அவசியம் தேவை; விரைவில் உதவி கிடைப்பது நல்லது'' என்று வேண்டிக்கொண்டிருந்தான். உதவியணி விரைந்தது. உதவி கிட்டும்போது, நிக்சன் எட்டாத தூரம் சென்றிருந்தான். மேஜர் வீமனுடன் இணைந்த வீரர்களில் ஒருவனாய்...... அதே தொப்பியுடன்......சிரித்த முகத்தோடு .....! ☆

பிறப்பு:
01. 01. 1972

வீரச்சாவு
16. 07. 19



## 2ஆம் லெப். யோகராசா

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)
(கந்தையா நாகேந்திரன்)
திக்கோடை,
மட்டக்களப்பு.

ஒரு புலிவீரனின் சண்டையை விட, மறைந்து வாழவேண்டிய காலத்தில் ஏற்பட்ட இன்னல்கள்தான் அதிகமானது. அவர்கள் அனுபவித்த இன்னல்கள்தான் தமிழீழ விடுதலைப் போரின் ஆழமான அத்திவாரங்கள். கிழக்கு, மணலாற்றுக்கு அர்ப்பணித்த போர்வீரர்கள் ஒவ்வொருவரின் பின்னேயும், உள்ளத்தைத் தொடும் வரலாறுகள் உண்டு.

சிங்களவர்களின் காடைத்தனங்களைக் கண்டவர்கள் - இராணுவ மிருகத்தனங்களுக்கு உட்பட்டவர்கள் - விடுதலையை விரும்பிய குற்றத்துக்காய் தாய் தந்தையைக்கூட இழந்தவர்கள் - இத்தகைய பின்புல உந்தல்களால் வெடித்துக் கிளம்பிய போர்வீரன்தான் யோகராசாவும்.

வெல்லாவெளி நெடியவெட்டை கிராமத்தில் இருந்து மணலாற்றுக் காட்டுக்கு நடந்து வந்த இருபது நாள் காட்டுப் பயணம், இவனின் போராட்ட வாழ்வில் மறக்க முடியாத தடங்கள். மட்டக்களப்பில் பயிற்சிப் பாசறையை முடித்துக்கொண்டாலும், மணலாற்றுக் காட்டுக்கு வந்தபின்னர்தான் 'கொமாண்டோ' அதிரடிப் பயிற்சியை முடித்துக்கொண்டான்,

சின்னவயதில் காட்டில் வேட்டைக்கு சென்று பழக்கப்பட்டவன் இவன். நடந்து நடந்தே உரமேறிய பாதங்கள். இயற்கையான காட்டு அனுபவமும் துணிவும் இருந்ததால், இங்கே வேவுப் பிரிவில் அவன் பணி தொடர்ந்தது.

ஆனையிறவுச் சமருக்குச் சென்று திரும்பிவந்ததும், அடுத்த சண்டை மணலாற்றில் காத்துக் கிடந்தது. '' ஹயசேன - 02 '' என்ற இராணுவ நடவடிக்கையை முறியடிக்கும் சண்டை ஆரம்பமானது. மணலாற்றுக் காட்டில் நிறைந்த பற்றுக்கொண்டிருந்ததனால், குறைந்த எண்ணிக்கையுடைய வீரர்களே இந்நடவடிக்கையை முறியடித்தனர். இந் நடவடிக்கையில் தம்மை அர்ப்பணித்த பன்னிரு வேங்கைகளில், யோகராசாவும் தன்னை ஒருவனாக்கிக் கொண்டான்.

☆

பிறப்பு: 02.05.1975

வீரச்சாவு: 16.07.1991



# மூர்த்தி

( இலங்கை இராணுவத்துடனான மோதல் )

( தம்பிராசா அனிதராசா )

வராத்துப்பளை,

பருத்தித்துறை.

கற்கோவளம், வடமராட்சியில் வறுமைமிக்க கிராமம். வறுமைக்கு மூர்த்தியின் குடிசை விதிவிலக்கல்ல. 1989 இல் விடுதலைப் பயணத்தில் அடி யெடுத்து வைத்த மூர்த்திக்கு, சண்டைகள் செய்வதற்குச் சந்தர்ப்பம் கிடைத் தது குறைவு.

மூர்த்தியின் மரணத்தின் பின்னே ஒரு விசித்திரமான கதையிருந்தது. இவன் பயிற்சி முடித்த காலத்திலிருந்து 'ரைபிள் கிரனேட்' செய்யும் பிரி விலேயே செயற்பட்டு வந்தான். முல்லைத்தீவு இராணுவ முகாமை முற்றுகை யிட்டு நடத்திய சண்டையில் வீரமரணத்தைத் தழுவியவர்களின் பெயர் களில், மூர்த்தியின் பெயரும் தவறுதலாக இடம் பெற்றிருந்தது. 'தான் செத்ததாகவே இருக்கட்டும்; உயிருடன் இருப்பது தாய்க்குத் தெரியாமலிருக் கட்டும்' என மூர்த்தியும் வேண்டிக் கொண்டான்.

இளமையில் தந்தையை இழந்தவன் மூர்த்தி; இயற்கை அவன் தாயின் ஒரு கண்ணையும் பறித்திருந்தது. இவையெல்லாம் மூர்த்தியின் இளமைக்கால ஆறாத துயரங்கள். கற்கோவளத்தில் மூர்த்தியின் வீட்டில் உறவினர் அழுது கொண்டிருந்தனர்; இவனது மரணச்செய்தியைப் பத்திரிகையில் பார்த்திருந்

தனர். இழவுவீடு நடந்து கிரியைகளும் முடிந்துபோயின. இவை எதுவும் மணலாற்றில் இருந்த எமக்குத் தெரியாது. ஓராண்டு மறைந்துபோயிற்று.

மணலாற்றில் நடந்த சண்டையில் மேஜர் வீமனுடன் மூர்த்தியும் மரணித்தான். மூர்த்தியின் உடல் கற்கோவளம் சென்றது; எம் வீரர்கள் சிலரும் உடன்சென்றனர்.

" என்ர பிள்ளை இறந்து ஒருவருசமாச்சு, நீங்கள் வேறு யாருடையதோ உடலைக் கொண்டுவந்திட்டியள் " என்று அவனின் தாய் கூறினாள். பெட்டியைப் பார்க்கக் கூட மறுத்துவிட்டாள். உண்மையை அந்தத் தாய்க்கு விளங்க வைப்பது பெரும்பாடாயிற்று. நீண்ட நேரத்தின் பின்னர் பெட்டியைத் திறந்து பார்த்தாள். மகனின் அழகிய முகம்.......!

☆

பிறப்பு:
14. 07. 1974

வீரச்சாவு:
16. 07. 1991




# 2ஆம் லெப். கௌரிதரன்

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)
(யோகராசா மகேந்திரன்)
கோபாலபுரம்,
நிலாவெளி.

இயற்கை அழகு பொலியும் திருமலையில், பசும் வயல்வெளிகள் மத்தியில் அமைந்தது கோபாலபுரம் கிராமம். உல்லாசப் பயணிகளின் உள்ளத்தைக் கவர்ந்த அந்தக் கிராமத்தில் பிறந்தவன் கௌரிதரன். ''ஆத்தா'' என்று எல்லாரும் செல்லமாக அழைக்க வளர்ந்தவன். ஆனால், அவன் பதின்மூன்றாவது வயதை எட்டும்போது தந்தை நெருங்கமுடியாத தூரத்துக்குச் சென்றுவிட்டார்; நெறிப்படுத்தி அவனை அன்பாக வளர்த்த அம்மாவும் பிரிந்து சென்றாள்.

கௌரிதரனை, இந்த மண்ணுக்கு வளர்த்துத் தந்தவள் அவனது பாட்டிதான். 1989 ஆம் ஆண்டு, திருமலையில் பயிற்சி பெற்றான். பயிற்சி பெற்ற அணியில், வயது குறைந்தவராய் நின்றவர்கள் மூவர். பயிற்சிக் காலத்தில் இவர்களின் பாசறை, பன்னிரண்டு நாட்கள் இந்திய இராணுவத்தின் முற்றுகைக்குள்ளானது. இம்முற்றுகையினின்றும் தப்பியவர்களில் கௌரிதரனும் ஒருவன்.

பயிற்சி முடிந்தபோது திருமலைத் தளபதி அனைவரையும் வரிசையாக நிற்க வைத்து, ''தலைவர் இருக்குமிடத்துக்குச் செல்ல விரும்புவோர்

கையை உயர்த்துங்கள்'' என்றார். யாருக்குத்தான் மனமிருக்காது? அனை வரின் கரங்களும் உயர்ந்தன. மணலாறு நோக்கிய நடைப்பயணம் ஆரம்ப மானது; இரவும் பகலும் ஓய்வின்றி நடந்தபின் இம்மண்ணில் கால்பதிந்தது.

இரண்டு ஆண்டுகால போராட்ட வாழ்வு அவனுக்கு மணலாற்றில் கிடைத்தது. அவற்றில் அவன் பெற்ற அனுபவங்கள் பல. இறுதிச் சண் டைக்குச் செல்லும்போது, ''மச்சான் சண்டைக்குப் போறன்; தற்செயலாய் நான் செத்திட்டால், புது வரிஉடுப்பை எனக்குப் போட்டுவிட்டிடு.'' என் றான். மனிதர்களுக்கு என்னென்னவோ ஆசைகளெல்லாம் இருக்க, இந்தத் தேசத்தின் சொத்துக்கு இருந்த ஆசை எந்தளவு உன்னதமானது......! சொல்லி விட்டுப் புறப்பட்ட சிலமணி நேரங்களில் எல்லாம் சண்டை ஆரம்பமானது. 'ஹயசேன - 02' என்ற இந்த இராணுவ நடவடிக்கையில் வீமனுடன் ஒரு வனாய்......!

☆

பிறப்பு :
27. 08. 1971

வீரச்சாவு :
20. 07. 1991




# லெப். பிரதாப்

( இலங்கை இராணுவத்துடனான மோதல் )
( சண்முகம் முரளீதரன் )
செங்கலடி,
மட்டக்களப்பு.

நெஞ்சுரமுள்ள தமிழர்கள்; வெட்டினாலும் சுட்டாலும் சுற்றிச் சுற்றி, தம் மண்ணைவிட்டு ஓடாது நின்ற வலிமை படைத்த தமிழர்கள். அவர்கள் யாருமல்ல, கிழக்குத் தமிழர்கள். வீட்டுக்கு 'ரெண்டு மூண்டென்று' வெளி நாட்டுக்குப் பிள்ளைகளை அனுப்புவோர் இருக்கின்ற நிலையில், விடுதலைப் போருக்கு இரண்டு மூன்று பேரை ஒவ்வொரு வீட்டிலும், அனுப்பிய மண் மட்டக்களப்பு. பெற்றபிள்ளைகளைப் போருக்கு வாழ்த்தி அனுப்பி, தமிழனின் வீரத்தை நிலை நிறுத்தும் பண்புள்ள மண்ணில் பிறந்தவன் பிரதாப்.

மட்டக்களப்பில் இலங்கை இராணுவத்திற்கெதிரான கரந்தடித்தாக்கு தல்கள்; இந்திய இராணுவத்திற்கெதிரான சண்டைமுனைகள்; தேசவிரோதக் கும்பல்களை அழிக்கும் நடவடிக்கைகள் - இவற்றிலெல்லாம் பங்கெடுத் தவன் பிரதாப். மணலாற்றுக்கு வரும்போது போரால் உரமேறிய தன் தோள்களில் எல்.எம்.ஜி துப்பாக்கியைச் சுமந்து கொண்டே வந்தான்; மண லாறும் அவன் போர்க்குணத்தை வளர்த்தது.

மேஜர் வீமனுடன் மாங்குளம் இராணுவ முகாம்தகர்ப்புக்குச் சென்றான். முல்லைத்தீவு இராணுவத்தை முற்றுகைக்குள் வைத்துத்தாக்கிய காலத்தில், முன்

னேறிச் சென்று கம்பிச் சுருள்களுக்குள் சிக்குண்டு திரும்ப முடியாதிருந்த தள பதி ஒருவரை, பிரதாப் கப். அக்பருடன் சேர்ந்து நின்று காப்பாற்றினான். இவர்கள் இருவரும் தனித்துநின்று செய்த துணிச்சல்மிக்கதும் அபாயகரமானது மான சண்டையினால், முக்கிய தளபதி ஒருவரை இந்த மண்ணுக்குக் காத்துத் தந்தனர்.

பிரதாப் சண்டையிட்டுக்கொண்டு நிற்கும் போதும் சரி சண்டைக்குச் செல்லும்போதும் சரி, அவன் வாயிலிருந்து அடிக்கடிவரும் வார்த்தையொன்று உண்டு.

''முருகா பிள்ளையாரே, ஆமி ஓடித்தப்பிறாங்கள்; முருகா பிள்ளை யாரே விடாதேங்கோடா அவங்களை''; ''முருகா பிள்ளையாரே எல்.எம்.ஜி துப்பாக்கி ஒண்டு கிடக்குதடா - முருகா பிள்ளையாரே அதை எப்பிடியும் எடுத் துப் போடணும்'' என்று, எதற்கெடுத்தாலும் - சண்டையில் ஆயுதங்களை அள் ளும் போதும் இதனைச் சொல்லிக்கொள்வான். இதனால் சகபோராளிகள் இவனை ''முருகா பிள்ளையாரே'' என்றே கூப்பிட்டுக் கொள்வார்கள்.

பிரதாப் தன் இறுதிப் பயணத்தில் மேஜர் வீமனுடன் இணைந்து கொண்டான். ''எங்கட இடத்திலே வச்சு எங்களுக்கு அடிக்க வெளிக்கிட்டான்; ஒரு அடிகூட காட்டுக்குள்ள இவன் வைக்கவிடக்கூடாது; பிரிக்க விட்டியளோ பட்டினி போட்டு எல்லாரையும் சாகவைப்பன்'' என்று தோழர்களுக்குச் சொல்லிப் புறப்பட்டான். எதிரி ஓடினான்; ஆனால், பிரதாப் திரும்பவே யில்லை......!

☆

பிறப்பு :
25. 08. 1970

வீரச்சாவு :
21. 07. 1991



## கப். நியூட்டன்

( இலங்கை இராணுவத்துடனான மோதல் )
( அந்தோனி செபமாலை )
முதலைக்குத்தி,
உயிலங்குளம்.

மன்னாரிலிருந்து மணலாறு நோக்கி விடுதலைப் புலிகளின் அணியொன்று, கப். காண்டீபனின் தலைமையில் புறப்பட்டது, சிறப்பு அதிரடிப் பயிற்சி பெறு வதற்காகச் சென்ற அந்த அணியில் நியூட்டன் சென்றிருந்தான். நடைப்பயணம். நீண்டதூரம். இடையிடையே இந்திய இராணுவத்துடன் மோதல். இவற்றை யெல்லாம் சகித்து மணலாற்றுக் காட்டினை வந்தடைந்த அணியில் அரைப் பங்கினரே இருந்தனர். ஏனையோர் மீண்டும் மன்னாரிலுள்ள தம் பாசறைக்கே திரும்பி விட்டனர். உறுதியோடு வந்து காட்டில் நின்று, கடினமான பயிற்சி யைப் பெற்று, களங்கள் பல கண்டு மனதில் நிறைந்து நின்றவர்களில் நியூட் டனும் ஒருவன்.

அமைதி, அழகு, சுத்தம் ஆகிய மூன்று அம்சங்களும் நியூட்டனிடம் நிறைந்திருந்தன. தன்னுடைய துப்பாக்கியையும் தன்னைப்போலவே அழகாக வும், சுத்தமாகவும் வைத்திருப்பான். சகதோழர்களோடு முரண்பட்டு நிற்ப தோ, அன்றி அவர்களுடன் வீண் தர்க்கம் புரிவதோ, வம்பு செய்வதோ இவனிடம் கிடையாது. அமைதியாகவே இருந்து கொள்வான்; ஆனால் யாரா யினும் தகாத வேலைகளில் ஈடுபட்டால் மட்டும் கோபம், பொத்துக்கொண்டு வரும்.

நியூட்டனிடமிருந்த நிறைவான குணங்கள் அவனது விரைவான வளர்ச்சிக்குத் தளமிட்டன. மாங்குளம் முகாம் தகர்ப்பு, முல்லைத்தீவு இராணுவ முகாம் மீதான முற்றுகைத் தாக்குதல் என, மணலாற்றுக்கு வெளியே நடந்த மிகப் பெரும் சண்டைகளில் பங்கெடுத்து, தன்னுடைய திறமையை வளர்த்துக் கொண்டான். சண்டையில் தன் அணியைச் சரியாக வழிநடத்தும் பொறுப் புணர்ச்சி மிக்க பொறுப்பாளனாய் ருந்ததால், அன்பண்ணனின் நம்பிக்கைக்கும் அன்புக்கும் உரியவனானான்.

ஆனையிறவுப் பெருஞ்சமர் நடந்துகொண்டிருந்த காலத்தில், மணலாற்றுக் காட்டில் நுழைந்துவிடத் துடித்த சிங்களப் படைகளுக்குத் தகுந்த பாடம் புகட்டிய சண்டையில்தான், நியூட்டனை இழந்தோம். காட்டு யுத்தத்திற்கென வெளிநாடுகளில் விசேட பயிற்சி பெற்று வந்த சிங்களப் படையதிகாரி கேணல் கெட்டியாராய்ச்சியைச் செயலிழக்க வைத்து, 'ஹயசேன - 02' என்னும் நடவடிக்கைக்கு முற்றுப்புள்ளியிட்ட சண்டையில் நியூட்டன் கண்மூடிக்கொண்டான். தான் காயமுற்று மரணித்தாலும் தன் அணியிலுள்ள வீரர்களை இழக்கக்கூடாதென்பதில் கண்ணுங்கருத்துமாக இருந்த நல்ல நண்பனை, நாம் இழந்துவிட்டோம்.

☆

பிறப்பு :
21.07.1973

வீரச்சாவு:
16.10.1991



## 2ஆம் லெப். நிசாந்தன்

( இலங்கை இராணுவத்துடனான மோதல் )
(நாகநாதன் புலேந்திரன்)
பாண்டியன்குளம்,
வவுனிக்குளம்.

லெப். கேணல் கிரேசியின் அணியில் நின்று, தான் பிறந்த மண்ணான கிளி நொச்சியில் இந்தியப்படைக்கெதிரான களங்கள் கண்டவன் நிசாந்தன்.

1990 இல், மணலாற்றில் அவனது பிஞ்சுப் பாதங்கள் பதிந்தன. வயதில் சிறியவனாக இருந்த காரணத்தால், சிலகாலம் தொலைத்தொடர்பு சாதனப் பகுதியில் பணிபுரிந்தான். சுறுசுறுப்பு மிக்கவனாதலால் சிறப்புத் தளபதியின் அன்பையும் பெற்றுக்கொண்டான்.

'மின்னல்' சண்டைதான் நிசாந்தன் காட்டில் சந்தித்த முதற்களம். இச் சண்டையில் இறுதிவரை நின்று தனது சாதுரியத்தைக் காட்டியதால், வேவுப் பிரிவில் இணைக்கப்பட்டான்; வேவுப் பிரிவில் தன் பணியை நீடிக்கும் முன்னரே மரணத்தைத் தழுவிக் கொண்டான். ஐப்பசித் திங்கள் 16ஆம் நாள், 1991 ஆம் ஆண்டு, கோட்டக்கேணியில் இலங்கைப் படையுடனான மோதல் இவன் வரலாற்றைப் பதிவுசெய்துகொண்டது.

☆

| பிறப்பு: | வீரச்சாவு: |
|---|---|
| 23. 03. 1972 | 20. 07. 1991 |




# 2ஆம் லெப். செல்வன்

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)

(செல்வராசா சத்தியசீலன்)

**தாமரைக்குளம்,**

**அடம்பன்.**

ஈழமண்ணை விடுவிக்கவேண்டும் என்ற உணர்வு தமிழ் மக்கள் மனதில் இருந்தாலும், அதன் விடுதலைக்குக் குடும்பமாகவே தங்களை அர்ப்பணிக்கத் துணிந்தவர்கள் மிகச் சிலரே. செல்வன் பாக்கியசாலி; விடுதலையை விரும்பி அதற்காகத் தங்களாலான அர்ப்பணிப்பைச் செய்ய நினைத்த தாய் தந்தையருக்கு மகனாய்ப் பிறந்தான்.

முந்தித் தவமிருந்து முந்நூறு நாள் சுமந்து பெற்ற இரு புதல்வர்களை இந்த மண்ணின் விடிவுக்கு விளக்காக்கிய போதும் தளராது நிற்கும் அந்தப் பெற்றோரின் தியாகங்களை இதுவரை உணராத பல குடும்பங்கள், பார்த்துக் கற்றுக் கொள்ள வேண்டியவை நிறையவே உண்டு.

மன்னாரில் லெப். கேணல் விக்ரருடன் நின்று சிங்களப் படையின் தலைக் கனத்தை அடக்கி, அவர்களின் ஆயுதங்களையும் உடல்களையும் அள்ளிவந்த சண்டையில், செல்வனின் அண்ணனான 2ஆம் லெப். றோம் விக்ரருடன் வீரச் சாவைத் தழுவிக்கொண்டான்.

அண்ணனின் பணி பாதி வழியில் நின்றுவிட்டபோதும், அந்தப்பாதி வழியில் தன் பாதங்களைப் பதிக்கப் புறப்பட்டவன் செல்வன்.

மன்னாரில் பத்தாவது படைப்பயிற்சிப் பாசறையில் பயிற்சிகளை முடித்துக்கொண்டு, தலைவரைக் காத்த மண்ணுக்கு வந்தான். காடு அவன் வீரத்துக்கு விளைநிலமானது. சண்டைகள் பல செய்தான். கப். சுபாஸ் தலைமையில் சென்று இராணுவ அணியொன்றைத் தாக்கி ஆயுதங்கள், பலவற்றை வாரிச் சுருட்டிவந்த சண்டையில் செல்வன் விழுப்புண் ஏந்தினான்.

காயம்பட்ட புலியாய் காட்டில் நின்றான். அலையலையாய் புலிகளின் அணிகள் பலவற்றை வளர்த்து மண்மீட்புக்குத் தந்த மணலாற்றைக் கைப்பற்ற, சிங்களம் 'மின்னல்' என்ற பெரும் படையெடுப்பினை மேற்கொண்டு மின்னல் வேகத்திலேயே தப்பி ஓடியது.

தன் தோல்வியை மூடி மறைக்க அதே ஆண்டு ஐப்பசித் திங்கள் 16ஆம் நாள், 'மின்னல் - 02' எனப் பெயர் சூட்டி, கொக்குத்தொடுவாய் மீது படையெடுத்தது. செல்வனின் அடங்காத் தமிழ்ப்பற்றும் வீரமும் இச்சண்டையில் வெளிப்பட்டபோதும், தன் பயணத்தையும் முடித்துக்கொண்டான். மணலாற்றைக் காக்க மன்னார் மண்ணும் தன் மைந்தர்கள் பலரைத் தத்தம் கொடுத்து நிற்கிறது. தமிழீழவரலாற்று ஏட்டில் இம் மண்ணுக்கும் பெரும்பகுதி உண்டு.

☆

வேவுப்படை வீரர்களில் இவனும் ஒருவன். 1991 இல், மண்கிண்டி இராணுவ முகாமைத் தகர்ப்பதற்கான வேவு முழுமையாகப் பார்க்கப்பட்டிருந்தது. இத் தாக்குதலுக்குத் தேவையான இராணுவ முகாமின் அமைப்பினைத் தெளிவாக வேவு பார்த்துக் கொடுத்த அணியில், ஞானி துணிச்சலோடு செயற்பட்டான்.

மணலாற்றுக் காட்டிற்கு வந்த காலத்திலிருந்து அவன் வெளியே சென்றதில்லை; காடே அவனுக்கு நாடும் வீடும். இதனை அவன் துன்பமாகக் கருதவில்லை. காட்டில் ஒவ்வொரு அங்குல நிலமும் வேவுபார்ப்பதற்காக இவனது பாதங்கள் பதிந்தன. இன்று மணலாற்றுக் காட்டில் இருக்கின்ற வேவுப் படையணியினர், இவன் போன்ற வேவு வீரர்களின் வழிகாட்டலில்தான் வளர்ந்தார்கள். காட்டையே தம் வீடாகக் கருதியதால்தான், காட்டினைக் கைப்பற்ற நினைத்த சிங்களப்படைகளின் சிந்தனையைக் கிள்ளி எறிந்த சண்டையில் மண்ணை அணைத்துக்கொண்டான்.

☆

பிறப்பு:
30.06.1971

வீரச்சாவு:
15.07.1991



# லெப். ஞானி

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)
(தம்பிராசா சிவநாதன்)
கொத்தி ஒழுங்கை,
திருமலை.

திருக்கோணமலை எங்களின் வளம் மிகுந்த பிரதேசந்தான்; ஆனால், கண் முன்னாலேயே சிங்களவர்களைக் கொண்டு வந்து அரசு குடியமர்த்திக்கொண்டது. அது மட்டுமல்ல, தமிழர்கள் தங்கள் சொந்த மண்ணில் சுதந்திரமாக நடமாடமுடியாமல் அடாவடித்தனங்களிலும் சிங்களவர் ஈடுபட்டனர். படிப்படியான இவ்வாக்கிரமிப்பு தீ வைப்பு, பாலியல் வன்முறை, வாள்வெட்டு, கொலை என்றெல்லாம் விஸ்வரூபம் எடுத்தது. 'இத்தகைய ஒரு சூழலில் வாழ்வதைவிட, என்றோ ஒரு நாள் எம் மக்களாவது தம் மண்ணில் சுதந்திரமாக நடமாடவேண்டும்; அத்தகைய ஒரு விடுதலைக்கு என்னை முழுமையாக அர்ப்பணிக்கவேண்டும்' என்ற உயர்வான சிந்தனையோடு களத்திலே கால்பதித்தவன் ஞானி.

கஷ்டத்தையும், துன்பத்தையும் சகித்துக்கொள்ளும் மனோபக்குவம் ஞானியிடம் மிகுந்திருந்தது. ஞானியின் தோற்றத்தைப் பார்ப்பவர்கள் அவன் ஒரு அப்பாவி, துணிவற்றவன் என்றே எடைபோட்டுக்கொள்வார்கள். ஆனால் அவனிடம் அளவுக்கு மீறிய துணிவு இருந்தது. அதனால் தான் காட்டிற்கு வந்த காலந் தொடங்கி இறுதிவரை, இராணுவ முகாங்களை வேவு பார்க்கும் பணியில் செயற்பட்டான். மேஜர் ஞானியின் சிறந்த வழிகாட்டலில் உருவாகிய

பிறப்பு :
18. 01. 1973

வீரச்சாவு :
16. 07. 1991



# கட்டப்பொம்மன்

(இலங்கை இராணுவத்துடனான மோதல்)
(மரியாம்பிள்ளை பற்றிமாராஜன்)
தாழைத்துறை,
நெடுந்தீவு.

சகபோராளிகளுக்கு அரசியல் விளக்கம் கொடுப்பதில் வல்லவன் கட்டப் பொம்மன். அரசியலில் தெளிந்த ஞானமுடையவன் போல் மணித்தியாலக் கணக்கில் விளக்கம் கொடுத்துக்கொண்டிருப்பான்; இடையில் யாராவது தன் கருத்துக்கு மறுப்புக் கருத்துத் தெரிவித்தால், அதற்காகக் கோபிக்கவோ சலிப் படையவோ மாட்டன். நீயும் சொல்வது சரி; நானும் சொன்னது சரி என்ற பாணியில் சமாளித்துவிடுவான்.

கட்டப்பொம்மனிடம் தனிப்பட்ட சிறந்த இயல்புகளிருந்தன. சாப்பாட்டு வேளைகளில் சிலசமயம், இவனுக்கு இல்லாமலே சகபோராளிகள் சாப்பிட்டுவிடு வார்கள். இப்படியான சந்தர்ப்பங்களில் அதனைப் பெரிதுபடுத்தாமல், பொறு மையாக இருந்து விடுவான். வயதுக்கு மூத்தவர்கள் சொல்வதை அல்லது பொறுப்பாளர்கள் சொல்வதையே சகபோராளிகள் தட்டிக்கழிக்காமல் செய்வது இயல்பு. ஆனால் கட்டப்பொம்மன், தன்னிலும் சிறியவர்கள் கேட்பதைக்கூட செய்து கொடுத்துவிடுவான். இதனால், அனைவருமே இவனுடன் நெருக்கமான உறவினை வைத்துக்கொள்வர்.

ஒரேயொருநாள் கட்டப்பொம்மன் அழுததைக் கண்டிருக்கிறேன். ஆனை யிறவுப் பெருஞ்சமருக்குச் செல்ல தாக்குதலுக்கான அணிகள் பிரிக்கப்பட்டன.

அச்சமயம், திடீரென மணலாறு செல்லவேண்டிய தேவை ஏற்பட்டது; மண லாற்றுக்குத் திரும்பிச் செல்ல வேண்டிய அணியில் கட்டப்பொம்மனும் தெரி வானான். 'அரசியற் கட்டப்பொம்மனுக்கு' சண்டை சரிவராது என்று, மற்ற வர்களும் கிண்டலாகச் சொன்னார்கள். கட்டப்பொம்மன் வெம்பி வெம்பி அழத்தொடங்கினான். ஆனையிறவிலிருந்து திரும்பிய அணிக்கு மணலாற்றில் பெரும் சண்டை காத்திருந்தது. கட்டப்பொம்மன் மன நிறைவோடு சண்டை செய்தான். சண்டையில் இரண்டு கைகளிலும் காயம் ஏற்பட்டு, கைகள் முறிந்து விட்டன. தன் துப்பாக்கியைக் கைவிட்டுவிடக் கூடாதென்ற முயற்சியில் வேகமாக ஓடிவந்தான்; அவனுடைய முயற்சி நிறைவேறியது. ஆனால், உயிர்மட்டும்... காற்றோடு கலந்து போனது! ☆

பிறப்பு :
29. 12. 1974

வீரச்சாவு :
17. 07. 1991



# கோபு

( மணலாற்று வெடிவிபத்து )
(வெற்றிவேல் வசந்தன்)
சிவன்கோவிலடி வீதி,
பருத்தித்துறை.

மிதிவெடிப் பயிற்சி பெற்ற சிறந்த வீரன் கோபு. காட்டின் மகிமையை அவனுக்கு விளக்க வேண்டிய அவசியமிருக்கவில்லை. ''காடுதான் எம் தலைவனைக் காத்துத் தந்தது. காட்டில் நாங்கள் இருக்கோணும்; இல்லையென்றால் ஆமி இருக்கோணும். யார் இருக்கிறதென்பதை நீங்களே முடிவு செய்யுங்கோ'' என்று அன்பண்ணன் சொல்லும் வார்த்தை, அவனது மனதில் நன்கு பதிந்திருந்தது. தலைவரைக் காத்துத் தந்த காடு என்ற உணர்வு, எம் வீரர்கள் அனைவரையும் புதிய வேகத்துடன் செயற்படத் தூண்டியது.

காட்டில் மிதிவெடி தயாரிக்கும் தங்ககத்தை விட்டு கோபு எங்குமே செல்லமாட்டான்; செல்வதற்கு அவனுக்கு நேரம் இருப்பதில்லை. எதிரிக்கு எதிராக நாம் பெறும் வெற்றிக்கு, எமது ஒவ்வொரு படைப்பிரிவினதும் முழுமையான செயற்பாடும் தியாகமுமே காரணமாக இருக்கின்றது. ஆனையிறவுப் பெருஞ் சமருக்காக காட்டிலிருந்து பல அணிகள் புறப்பட்டுச் சென்றபோதும், காட்டின் காவலராய் தெரிந்தெடுக்கப்பட்ட வீரர்கள் பலர் நிறுத்தப்பட்டிருந்தனர். தவறான கணிப்புடன் 'ஹயசேன' என்று பெயர் சூட்டிக்கொண்டு, ஆயிரக்கணக்கான படையினர் காட்டில் இறங்கினர். வெவ்வேறு முனைகளிலிருந்தும் புகுவதற்கு முற்பட்டு முடியாது திரும்பிய படையினருக்கு, காட்டுச் சண்டை புரியாத

புதிராகவே இருந்தது. சிங்களப் படைகளின் இந்த நடவடிக்கையை முறியடிக்க, மிதிவெடிகளை வேகமாகப் புதைத்தவன் கோபு. ஆனால் நடவடிக்கையைமுறி யடித்து வெற்றி காணும் நிலையில், தற்செயலாக மிதிவெடி வெடித்ததில் கோபு மண்ணை அணைத்துக்கொண்டான். இவனது நீண்டபணி எமக்குத் தேவைப்பட்டிருந்த போதும், தமிழன்னை அவனை விரைந்து அழைத்துக் கொண்டாள்!

☆

பிறப்பு :
12. 11. 1967

வீரச்சாவு:
20.07.1991




## 2ஆம் லெப். இலக்கியன்

( ஆ. க. லெ. )
(கதிர்காமு தவேந்திரராஜா)
அரியாலை கிழக்கு,
அரியாலை.

இலக்கியனின் போர்முனை வாழ்வு சுருக்கமானது. யாழ். மாவட்டத்தில் இருந்து மணலாற்றுக்கு வந்து பயிற்சி முடித்திருந்தாலும், காடு அவன் போர்க் கலைக்கு வாய்ப்புக் கொடுக்குமுன்னே சுதந்திர வீரனாகிவிட்டான். இலக்கியன் வித்தியாசமான பண்புடையவன். எவரோடும் வம்பு வாதுக்குச் செல்ல மாட்டான்; அமைதியாக இருந்து கொள்வான். எந்தப் பணியினையும் நிதான மாகச் செய்து முடித்துவிடுவான். சிறு தவறுகூடச் செய்தறிய மாட்டான்; தவ றுக்குத் தண்டனை என்று இவன் பெற்றது கிடையாது.

பயிற்சி முடித்த சில மாதங்களுக்குள்ளாகவே தனது மாவட்டத்தில் பெரும் சமரொன்றில் பங்குபெற வாய்ப்புக் கிடைத்தது. மேஜர் சதாத்தின் அணியில் ஒருவனாக, ஆனையிறவுச் சமருக்குச் சென்றான். 'ஏன் என்னுடலில் குண்டுபட வில்லை; ஏன் என் உடலை செல் துண்டு துளைக்கவில்லை; ஏன் என் தலை யில் விமானக்குண்டு விழத் தவறியது?' என்று, எமது எந்தப் போர்வீரனைக் கேட்டாலும் அதிசயத்தோடு சொல்வார்கள். புலியின் பாய்ச்சல் எப்படிப்பட் டது என்பதை எதிரிக்குப் புரியவைத்த அச்சமரில்தான் இலக்கியன் காவிய மானான். பிறந்த மண்ணுக்காக உயிர் கொடுத்த பெருமை அவனுக்குண்டு!

☆

பிறப்பு :
17. 03. 1972

வீரச்சாவு :
17. 07. 1991




# ராமன்

(ஆ. க. வெ.)
( சக்திவேல் ஸ்ரீபாலகிருஷ்ணன் )
திருவில்,
வல்வெட்டித்துறை.

திருவில் என்றதும் கண்ணில் தெரிவது உயர்ந்த தூபி; நெஞ்சில் எரிவது அந்த நிகழ்வின் வடுக்கள். வல்வெட்டித்துறையில் வயல் வெளிகளுடன்கூடிய திருவிலில்தான் ராமனின் வறிய குடிசை அமைந்துள்ளது.

தலைவரின் பிறந்தகம் என்பதற்காக, பழிவாங்கும் நோக்குடன், வல்வெட்டித்துறைமீது எதிரிப்படைகள் காலத்திற்குக் காலம் கட்டவிழ்த்து விட்டுவரும் வன்முறைகள் கொஞ்சநஞ்சமல்ல, 'ஒப்பரேசன் லிபரேசன்,' வல்வைக் கடலில் பறிக்கப்பட்ட லெப். கேணல் புலேந்திரன், லெப். கேணல் குமரப்பா உள்ளிட்ட பன்னிரு வேங்கைகளின் வீரகாவியம், இந்திய இராணுவத்தால் கட்டவிழ்த்து விடப்பட்ட வல்வைப் படுகொலைகள்...... எத்தனை துன்பங்கள்!

காலத்துக்குக் காலம் ஏற்பட்ட வன்முறைகள் ராமனின் மனதைப் பெரிதும் தாக்கின. அவனின் வியாபாரம் நின்று வீட்டில் வறுமை தலையெடுத்தது. இதனால் தன் விடுதலை உணர்வுக்குக் கட்டுப்போட்டு, வீட்டுக்கஷ்டத்தை நீக்குவதற்காக நாளும் பொழுதும் உழைத்தான். ஓய்வுநேரம் கிடைத்தால், காயமுற்ற போராளிகளைப் பராமரிக்கச் செல்வது, சண்டைக் காலங்களில் உணவு சேகரித்து அனுப்புவது போன்ற உதவிப் பணிகளில் ஈடுபட்டான். இவையெல்

லாம் அவனின் மனதுக்கு ஆறுதல் கொடுக்கவில்லை. 88 இல் நடந்த 'வல்வைப் படுகொலைகள்' ராமனின் நெஞ்சைப் பிளந்தபோதும், அவன் தன் உணர்வுகளுக்குக் கட்டுப்போட்டுக்கொண்டான். யாழ். நல்லூர் கோவில் முன்றலில் திலீபன் அணு அணுவாய்ச் செத்துக் கொண்டு போவதைப் பார்க்கச் சென்றவனின் மனதில், வீட்டின் சிந்தனை தேய்பிறையானது; விடுதலைத் தீ வளர்பிறையானது. மணலாற்றுக்காட்டில் பயிற்சிக்காகப் புறப்பட்டான். பயிற்சிக்காலத்திலும் பயிற்சி முடிந்த காலத்திலும், செத்துக்கொண்டே இருந்த திலீபனே கண்ணில் தெரிந்தான்.

வீட்டில் பொறுப்புள்ள மகனாய் வளர்ந்ததால், இயக்கத்தின் நலன் காப்பதிலும் பொறுப்புடன் வளரத் தொடங்கினான். பொறுப்பாளர்களின் விருப்பத்துக்குரியவனாகிவரும் காலத்தில், ஆனையிறவுப் பெருஞ் சமர் தொடங்கியிருந்தது.

மணலாற்றில் இருந்து பல அணிகள் ஆனையிறவுக் களம் நோக்கிப் புறப்பட்டன. ''அண்ணா, பயிற்சி எடுத்த காலத்தில் இருந்து என்னை ஒரு சண்டைக்கும் அனுப்பேல்ல; இந்தச் சண்டைக்காவது என்னையும் அனுப்புங்கோ'' என்று கெஞ்சி வேண்டினான். அனுமதியும் கிடைத்தது. கட்டைக்காட்டில் நகர்ந்த சிங்களப் படையுடன் கடுஞ்சண்டை நடந்தது. ராமன் தன் திறமையைக் காட்டினான். ஆனால், அவன் உயிர் மணலாற்றுக்குத் திரும்பவேயில்லை! ☆

பிறப்பு:
08. 05. 1969

வீரச்சாவு:
27. 07. 1991



## 2ஆம் லெப். மயில்வாகனம்

( ஆ. க. வெ. )
(சின்னத்தம்பி சந்திரலிங்கம்)
பழைய தோட்டம்,
வல்வெட்டி,
வல்வெட்டித்துறை.

கடற்கரை மணலில் கட்டுமரத்தின் மீது இருந்துகொண்டு கடலை வெறிக்கப் பார்த்தான் மயில்வாகனம். பாறைக் கற்களில் வந்து மோதி மோதி அலைகள் சிதறிக் கொண்டிருந்தன. கரையைத் தொட நினைத்த அலைகள் தொடும்போதே சிதறி மறைந்துபோயின. மயில்வாகனத்தின் மனம் வெறுமையாக இருந்தது. என்றோ ஒருநாள் வீட்டின் வறுமையை நீக்கி விடலாமென நினைத்தான். ஆனால் அது முடியாத காரியமாகவேயிருந்தது. அன்று கடலடித்த காசு அன்றுடனேயே முடிந்துபோனது. அதையும் தடுப்பதாய் இலங்கைப் படைகளின் கடல் தொல்லைகள் பெருகின.

மயில்வாகனம் ஒரு முடிவுக்கு வந்தான்.

மண் விடுதலை முதலில் வேண்டுமென்ற முடிவுடன், விடுதலைப் போராட்டத்தில் தன்னை இணைத்துக்கொண்டான். 86 ஆம் ஆண்டு, யாழ்ப் பாணத்திலேயே பயிற்சியை முடித்துக்கொண்டான். 87 இல் இந்திய இராணுவத்தின் கெடுபிடிகளில் மயில்வாகனம் கைதானான். காங்கேசன்துறையில் அமைந்திருந்த சிறையினுள் தள்ளப்பட்டபோது, தான் மீண்டும் வருவேனென அவன் நினைக்கவில்லை. இடையில் ஒருநாள் தப்பி ஓட முற்பட்டு, துப்பாக்கிச் சூட்டுக்கு இலக்காகினான்.

இல்லாத நிலையில் இந்திய இராணுவம் எம் மண்ணிலிருந்து வெளியேறுவதற்கு சில மாதங்களின் முன், மயில்வாகனம் விடுதலையாகி வெளியே வந்தான்; வெளியே வந்ததும் மீண்டும் களத்தில் குதித்தான். விடுதலையின் பின் சில நாட்களுக்குள்ளேயே மணலாற்றுக் காட்டிற்கு வந்து பயிற்சிப் பாசறையில் பயிற்சியை முடித்துக்கொண்டான். இந்திய இராணுவத்தினர் மண்ணில் இருந்து வெளியேறிய ஒரு சில மாதங்களில், 'இரண்டாவது ஈழப்போர்' தொடங்கியது. முல்லைத்தீவு இராணுவ முகாமைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கும் சண்டையில், மயில்வாகனமும் பங்குகொண்டான். அதன் பின்னே சண்டைக்குச் செல்லும் வாய்ப்பு அவனுக்கு அதிகம் கிடைக்காது போயிற்று.

ஆனையிறவுப் பெரும்போர் தொடங்கியபோது, மணலாற்றிலிருந்து புறப்பட்ட கொமாண்டோ அதிரடிப் படையணியில் மயில்வாகனமும் இடம் பெற்றான். முகாமைத் தகர்க்க வாகனத்துடன் இறங்கிய அணியில் மயில்வாகனமும் சென்றான்; அவன் பயணமும் அதனுடன் முடிந்துபோனது!

☆

பிறப்பு:
05. 10. 1971

வீரச்சாவு:
27. 07. 1991



## கப்டன் நிறையன்
(ஆ. க. வெ.)
(விதுரன் ராமமூர்த்தி)
இலுப்பையடிச்சேனை,
பன்குடாவெளி.

நிறையன் ஒரு விசித்திரமான பிறவி. தவறுக்காக வருந்தித் திருந்திய மனிதர்களில் இவனும் ஒருவன். செய்யக்கூடாத தொழிலொன்றைச் செய்து, இயற்கையின் தண்டனையாய் காலில் சிறு குறைபாட்டை ஏற்படுத்திக்கொண்டவன். இவற்றை எல்லாம் விபரமாக எழுதினால் ஒரு வரலாறே உருவாகும். அவன் திருவிளையாடலில் சிலவற்றைத் தொட்டுப் பார்ப்போம்.

இலுப்பையடிச்சேனை.

நிறையன் பிறந்த இடம் இது. எந்தநேரமும் வண்டி மாட்டுடன் நிறையனைக் கிராமத்தில் காணலாம். காட்டுக்குச் சென்று தடைசெய்யப்பட்ட மரங்களை அரிவது, களவாக ஏற்றிச்சென்று விற்பது - இதுதான் இவனின் நாளாந்தத் தொழில். இவனைத் தடுக்கவும் திருத்தவும் எடுத்த முயற்சிகள் கொஞ்சமல்ல. எமது இயக்கம்கூட இவனைப் பலதடவைகள் பிடித்துத் தண்டித்து, எச்சரிக்கை செய்ததுண்டு; ஆனால் அவன் திருந்திய பாடில்லை. ஒருநாள் கள்ளமாக மரமேற்றி வரும் போது வண்டியிலிருந்து தவறி விழுந்தான். பாரத்துடன் வந்த வண்டிச் சில்லு தொடைக்கு மேலால் ஏறிவிட்டது. கால் முறிவு கண்டது. முறிவு வைத்தியம் நீண்டநாள் நடந்

தது. பயன் பாதியாக முடிந்தது. தாண்டித் தாண்டியே அவனால் நடக்க முடிந்தது. கால் முடமானபோது மனம் நேரானது; திருந்திய மனிதனாய் போர்க்களம் குதித்தான். மட்டக்களப்பில் பதினோராவது பாசறையில் பயிற்சியை முடித்தான். காலில்தான் குறையிருந்தது; பயிற்சியிலும் பொறுப்புணர்ச்சியிலும் நிறைவிருந்ததால், எடுத்த எடுப்பில் எல். எம். ஜி. துப்பாக்கியை இயக்கும் பேறு கிடைத்தது.

மணலாற்றுக்கு வரும்போது எல். எம். ஜி. துப்பாக்கியுடனேயே வந்தான். காட்டில் தன் திறமையால் ஜி. பி. எம். ஜி. துப்பாக்கி இயக்குநன் ஆனான். ஓய்வுநேரங்களில் நிறையனுடன் பழகிய நாட்கள் மறக்க முடியாதவை.

மட்டக்களப்பு மாந்திரிகமென்று சொல்லியும் - பேய், பில்லி, சாமி என்று சொல்லியும் சக போராளிகளை வெருட்டுவான். காட்டுக்கோழிக்கு, முயலுக்குப் பொறிவைக்க நண்பர்களைக் கூட்டிச் செல்வான். சிலசமயங்களில் குடிக்கக் கொண்டு வரும் இளநீரை வெட்டி தலையில் ஊறவிட்டு முழுகுவான்.

'' ஏன் மச்சான் குடிக்கிறோக்கு இளநீ இல்லை, நீ என்னடா எண்டால் தலேல ஊத்தி முழுகிறாய்'' என்று சொன்னால், '' இளநி ஊத்தி முழுகினா மச்சான் குளிர்மையாய் இருக்கும்; பேய், பில்லி, மந்திரமெல்லாம் நினைவில நிக்கும்'' எனப் பதில் சொல்லிவிட்டுச் சிரிப்பான்.

நிறையனின் சாவு ஆ. க. வெ. சமரில் நிகழ்ந்துபோனது. வீராவேசமாக முகாமுக்குள் பாய்ந்த புலிகளில் ஒருவனாக நிறையனின் போராட்ட வாழ்வு நிறைவுபெற்றது. நிறையன் மறைந்தாலும் அவன் நினைவுகள் மறக்க முடியாதவை!

☆

பிறப்பு:
30. 06. 1972

வீரச்சாவு:
05. 08. 1991




# 2ஆம் லெப். நாராயணன்

(ஆ.க.வெ.)
( நாகராசா யோகலிங்கம் )
**கற்கோவளம்,**
பருத்தித்துறை.

நாராயணனின் பிறந்தமண் கற்கோவளம். இவனின் தாய் தந்தையரின் பிறந்தகம் மலையகம். தோட்டத்துரைமார் ஒரு புறமும் அட்டைகள் ஒருபுறமும் ரத்தத்தை உறிஞ்ச, சிங்கள தேசத்தின் பொருளாதாரத்தைக் காத்த முது கெலும்புகள். இந்த ஒடுக்குமுறையில் கருக்கொண்ட புலிதான் நாராயணன். நாராயணனின் வீரவரலாற்றில் ஒரு சோகக்கதையுண்டு. களத்திலே பயிற்சி முடித்த நாராயணன் அரசியல் பிரிவுக்கான பயிற்சி வகுப்புக்களையும் முடித்தான்.

மணலாற்றில் கலை, பண்பாட்டினை வளர்க்கும் மக்கள் பணியில் இறங்கினான். கற்கோவளம் கிராமம் நாராயணனின் அன்பை, பண்பை அறியாமலிருக்கலாம்; மணலாற்று மக்கள் அவனின் அன்பான, பண்பான பணியை நேசித்தனர். அவனது குழந்தைபோன்ற பேச்சுமொழியால் மக்கள் மனங்களில் நிலைத்தான்.

அரசியலை விரும்பி அவன் களம் செல்லவில்லை; ஆனாலும் இயக்கமிட்ட பணியைக் கொஞ்சம்கூட பழுதின்றி விசுவாசமாகவே செய்தான். சண்டைக்குச் செல்லவேண்டுமென்ற தன் ஆசையை விசேட தளபதியிடம் வெளியிட்டான். அவன் விருப்பத்தைத் தடுக்காது ஆனையிறவுச் சமருக்குச் செல்ல அனுமதி

கொடுத்தார். மகிழ்ச்சியோடு சென்ற நாராயணனை மணலாற்று மக்கள் பின்னர் காணவேயில்லை; மணலாற்று மக்கள் மட்டுமல்ல அவனைப் பெற்றதாயும் காண முடியாதவாறு காற்றுடன் கலந்துவிட்டான்.

கற்கோவளத்திலிருந்த தாய்க்கு, மகன் இறந்த செய்தி தெரிந்திருக்க வில்லை. உறவினர்களெல்லாம் இந்தியாவுக்குச் சென்றுவிட, களத்தில் நிற்கும் தன் பிள்ளையை நினைத்து தாய்மட்டும் நின்றுவிட்டாள். பெற்ற வயிறல்லவா? கற்கோவளத்திற்கு லீவில் சென்றிருந்த சமயம், நாராயணனின் தாய் என்னைக் கண்டதும் ஓடிவந்தாள். ''தம்பி என்ரை மகன் சுகமாய் இருக்கிறானோ, நீங்கள் திரும்பிப் போகேக்க அவனுக்கு ஒரு கடிதமும், பலகாரங்களும் தரலாம். மறக்காமல் கொண்டுபோய்க் குடுத்துவிடுங்கோ'' என்றாள்.

நான் தடுமாறிப் போனேன். நாராயணன் வீழ்ந்து விதையாகியதை எப் படி அந்தத் தாயிடம் சொல்வது......?

திரும்ப, மணலாற்றுக்கு நான் செல்லும்போது, கடிதத்துடனும் பலகாரத்து டனும் ஓடிவந்தாள்.

நான் மௌனமாகி நின்றேன்.

மகனுக்காய் மண்ணில் நிற்கும் அந்தத் தாய்......உழைத்து உழைத்து ஓடாய்ப்போன உடல். குழிவிழுந்த கண்கள். ஒருதடவை அந்தத் தாயை ஏற இறங்க நோக்கினேன், ''அம்மா......! நாராயணன் ஆனையிறவு சண்டையில...... போய்......''சொல்லி முடிக்குமுன்னே மயக்கமுற்று மண்ணில் வீழ்ந்து கிடந் தாள் அந்தத் தாய். யாருமற்ற அநாதையாய்...... கண்ணீர் ஆறாய் ஓட. எதிரிக்கு வணங்காத மணலாற்று மண், அந்த வீரத்தாயின் முன் என்றும் தலைவணங்கி நிற்குமென்பது மட்டும் உறுதி. மண்ணும் நாமும் உள்ளவரை அந்த வீரத்தாய் அநாதையல்ல! ☆

பிறப்பு:
24. 01. 1971

வீரச்சாவு:
27. 07. 1991



# லெப். வர்மன்

(ஆ. க. வெ.)
(சுந்தரமூர்த்தி பாஸ்கரமூர்த்தி)
பேச்சியம்மன் வீதி,
வாழைச்சேனை.

கிழக்கிலே மண்ணை நேசித்த குற்றத்திற்காய் வீதியெங்கும் பாய்ந்தோடிய குருதி கொஞ்சமல்ல. இலங்கைச் சிப்பாய்களால்தான் அப்பாவித் தமிழர்களின் கண்ணீர் பெருகியது என்று சொல்லியிருந்தபோது, இந்திய தேசம் தன் ஜவான்களை அனுப்பியது. தேச பிதாக்கள் வந்துவிட்டார்கள் என்று நினைத்த வேளை அந்த ஓநாய்களின் வேட்டைப்பற்கள் வெளியே தெரியத் தொடங்கின. மீண்டும் கிழக்கில் குருதியாறு. சொந்தமண்ணிலேயே ஓநாய்களுக்குப் பின்னே அலைந்த தேசவிரோத நரிக்கூட்டங்களின் தொல்லைகள்...... வர்மனின் நெஞ்சு பொறுக்கவில்லை. புலிக்களம் புகுந்தான். தான் பிறந்த வாழைச்சேனையிலும், மட்டக்களப்பின் பல பகுதிகளிலும், இந்தியப் படைகளுடனும் தேசத்துரோகிகளுடனுமான சண்டைகள் பலவற்றில் பங்குகொண்டான்.

88இன் இறுதியில் மணலாற்றுக்கு அடியெடுத்து வைத்தான். 'இரண்டாவது ஈழப்போர்' தொடங்கியதும், மணலாற்றின் எல்லையோரங்களிலிருந்து, சிங்களப் படைகளின் நகர்வுகளைத் தடுக்கும் காவல் பணியில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்டான். மணலாற்றில் வளர்ந்த அனைத்துப்போராளிகளையும் சிறந்த தியாகமும், துணிவும், விவேகமும் கொண்டவர்களாய் மாற்றியமைக்க வேண்டுமென்ற தன் உள்ளக்கிடக்கையை, அடிக்கடி சொல்லிக்கொள்வான்.

ஓய்வு நேரங்களில் தன் அணியில் இருக்கும் போராளிகளை மகிழ்விக்க, இனிமையான பாடல்களைப் பாடிக்கொண்டிருப்பான்; மறைந்துவிட்ட வீரர்களின் தியாகங்களை மனமுருகக் கூறிக்கொள்வான்.

ஆனையிறவுப் பெருஞ்சமருக்கு அணியொன்றை வழிநடத்திச் சென்றவன், வீரவரிகளை அங்கே வரைந்துவிட்டு மரணித்துக்கொண்டான். ☆



பிறப்பு:
10.11. 1971

வீரச்சாவு:
05. 08. 1991



## லெப். மாமன்னன்

(ஆ. க. வெ.)
(அம்பலவாணர் பரமேஸ்வரன்)
களபூமி,
காரைநகர்.

தீங்களை வளர்த்த தளபதியின் கண்ணில் நீர் வரும்படி சாவை அணைத்துக்கொள்ளும் பாக்கியம், எல்லாருக்கும் கிடைக்காது. அவ்வாறு சாவினை அணைத்துக்கொண்டவன் மாமன்னன். வஞ்சகமற்ற மனத்தால் அனைவரின் நெஞ்சிலும் நிலைத்தவன். ஆனால் ஆனையிறவுச் சமருக்குத் தன் போராளிகள் அணியை வழிநடத்திச் சென்றவன், வந்திலன். குணத்திலும் களத்திலும் மாமன்னனாய்த் துலங்கிய அவனின் பணி, மண் விடுதலைக்கு அதிகம் வேண்டிக் கிடந்த போதும், தமிழீழத் தாய் அவனைத் தன்னிடம் அழைத்துக்கொண்டாள்.

☆

பிறப்பு:
05. 05. 1970

வீரச்சாவு:
19. 07. 1991




# லெப். ராஜேந்தர்

(ஆ.க.வெ.)
( பொன்னுத்துரை லோகேஸ்வடின் )
வேப்பங்குளம்,
அடம்பன்.

லெப். ரவியப்பாவுடன் மன்னாரில் அரசியல் பிரிவில் பணிசெய்து, அவனுடனேயே காட்டுக்கு வந்தான் ராஜேந்தர். காட்டில் இருந்த காலத்தில், மேஜர் சங்கருடன் சாம்பன்குள மினிமுகாம் தாக்குதலுக்குச் சென்று சண்டையில் தன் திறமையைக் காட்டினான். நீண்ட நாட்கள் கொக்கிளாய் படை முகாமினைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கும் காவல் கடமையில் இருந்தான்.

சண்டையின் முழுத் திறமையினையும் வெளிப்படுத்த ஆனையிறவுச் சமர் களமமைத்துக் கொடுத்தது. புல்லாவெளியில் இராணுவத்தின் முன்னேற்றத்தைத் தடுக்க தான் எடுத்த பயிற்சியின் அனைத்து முறைகளையும் பயன்படுத்திக்கொண்டிருந்தான். நடுவெளியில் நெற்றியில் எதிரியின் குண்டு துளைக்க, மரணத்தைத் தழுவிக்கொண்டான். ராஜேந்தரின் உடலை மீட்டெடுக்க பல திசையாலும் எம் போராளிகள் சண்டையில் இறங்கினர். ராஜேந்தருக்காக உயிர் கொடுத்த வீரர்கள் எத்தனை! அந்தளவிற்கு, எம் வீரர்களின் தியாகம் உயர்ந்து நிற்கிறது! ☆

பிறப்பு:
24. 04. 1971

வீரச்சாவு:
19.07.1991



# லெப். றொபின்சன்

(ஆ.க.வெ.)
( திருமேனிப்பிள்ளை கருபாகரன் )
அரசடி வீதி,
கொக்கட்டிச்சோலை.

அன்றும் இன்றும் விடுதலைப் போராட்டத்தில் விடுதலைப் புலிகளின் பின்னே நிற்கின்ற கிராமங்களில் கொக்கட்டிச்சோலையும் ஒன்று. றொபின்சனின் பிறந்தகம் அந்த உறுதிமிக்க கிராமத்தில்தானுண்டு. றொபின்சன் ஒழுக்கத்தாலும், சுத்தத்தினாலும், நிர்வாகத் திறமையாலும் போராளிகளின் மனதில் நிலைத்துக் கொண்டவன். கொடுக்கும் பணியைப் பொறுப்புணர்ச்சியுடன் செய்து முடித்து விடுவான். பாசறையினை எந்தநேரமும் சுத்தமாக வைத்திருப்பான். தன்னுடையது என இல்லாது, யாருடைய உடைகளாயினும் அலங்கோலமாய்ப் போட்டுக் கிடந்தால், அவற்றை எடுத்து மடித்து சுத்தமாகப் போட்டுவிடும் பண்பு அதிகம் இவனிடம் இருந்தது. தனிமையை விரும்பாது போராளிகளுடன் சிரித்து மகிழ்ந்துகொண்டிருப்பான். கிழக்கில் பிறந்து, மணலாற்றில் வளர்ந்து, ஆனையிறவுச் சமரில் தன் அர்ப்பணிப்பால் உயர்வு பெற்றவன் றொபின்சன். ☆

வீரச்சாவு:
05. 08. 1991




# 2ஆம் லெப். சீலன்

(ஆ. க. வெ.)
(வெங்கடாசலம் சிவானந்தன்)
புளியடிச்சோலை,
மூதூர்.

சீலன் பிறந்து வளர்ந்தமண் மூதூர் புளியடிச்சோலைக் கிராமம். ஒரு காலத்தில் கிழக்கில் புலிகளின் கட்டுப்பாட்டுப் பிரதேசம் என்று சொல்லுமள விற்கு, மக்களாதரவு நிறைந்திருந்த மண். ஆரம்பகாலப் போராளிகள் பலரைக் களத்துக்கு அனுப்பி ஈழப்போரை வளர்த்த மூதூர், சீலனை மறக்காது.

சீலன் மணலாற்றுக் காட்டில் ஐந்தாவது பயிற்சிப் பாசறையில் யுத்தப் பயிற்சிகளைப் பெற்றான். பயிற்சியின் பின், மிதிவெடி வைக்கும் அணியில் அவனின் பணி நீண்ட நாட்களிருந்தது. விடுதலைப் போரின் வெற்றியில், காட்டினைக் காத்த பெருமையில், மிதி வெடியின் பங்கு பாதியுண்டு. இந்திய இராணுவத்தினை மட்டுமன்றி இலங்கைச் சிப்பாய்களையும் கிலிபிடித்து - கால் பறித்து - ஓடவைத்த இப்பணியில், சீலனின் போராட்ட வாழ்வின் பெரும்பகுதி கழிந்தது.

ஆனையிறவுச் சமருக்கு மணலாற்றிலிருந்து புறப்பட்டுச் சென்ற மிதிவெடி அணியில் சீலனும் பயணமானான். பெருமதி மிக்கவனாய்ப் புறப்பட்டு, விடியு முன் வீரனா வீழ்ந்துவிட்ட சீலனின் மிதிவெடிகள், பெரும் எண்ணிக்கையிலான இராணுவத்தின் உயிர்களையும் கால்களையும் காவுகொண்டிருக்கும் என்பதில் ஐயமில்லை!

☆

பிறப்பு:
18. 03. 1970

வீரச்சாவு:
21. 07. 1991




# லெப். கருணா

(ஆ. க. லெ.)
(நடராசா குகேந்திரன்)
வெடிவைத்த கல்,
நெடுங்கேணி,
மணலாறு.

மணலாற்றுக் காட்டின் தென்மேற்குப் பகுதியில் அமைந்திருக்கும் தமிழ்க் கிராமங்களில், வெடிவைத்தகல் என்ற இக்கிராமமே கருணாவின் சொந்தக் கிராமம். 1985 இல் சிங்களக் குடியேற்றத்துக்கு டொலர், கென்ற்பாம் இலக்கானபோது இக்கிராமத்திலிருந்த தமிழ் மக்களும் விரட்டியடிக்கப்பட்டனர். கொடிது கொடிது வறுமை கொடிது; அதனிலும் கொடிது இளமையில் வறுமை. கருணா பிறந்த நாளிலிருந்து வறுமையினையே அறிந்திருந்தான்.

கருணாவின் கிராமத்தில் பள்ளிக்கூடம் இல்லை - பள்ளிக்கூடம் இருந்தாலும் வாத்தியார் வருவதில்லை! இதனால் காட்டினைப் படிப்பதுதான் அவனது கல்வி, நாயுடன் உடும்பு வேட்டைக்குப்போவதும், காடுகாடாய் அலைந்து தேனெடுத்து வருவதும் இவனின் தொழிலாயமைந்தது. குழந்தையிலிருந்து காடடிபட்டதால் பெருங்காட்டின் நடுவே நின்றாலும் கண்ணாலே திசைகாட்டி கரையேறும் அனுபவத்தில் வளர்ச்சி பெற்றான்.

முரட்டுத்தன்மையும், அசட்டுத்துணிவும், காட்டுக்கல்வியும் பின்னாளில் விடுதலைப் போருக்கு பெரிதும் துணையாகும் என்று அவன் நினைத்ததில்லை.

போர்க்களத்தில், அதுவும் மணலாற்றுக் காட்டில் கருணா நின்றபோது காட்டுப்பாதைகள் அமைப்பதற்கும், மூடை மூடையாய் சாமான்களைச் சுமந்து வருவதற்கும் எந்தளவிற்குத் துணைநின்றானென்பதை, வரிகளால் எழுதமுடியாது. வேவுப் பிரிவிலிருந்து வேவு பார்க்கச் சென்றபோதெல்லாம், இந்திய இராணுவ துப்பாக்கிக்குண்டுகளுக்கு எத்தனை தடவைகள் தப்பி வந்திருப்பான்! இந்திய இராணுவ நெருக்கடியின் ஆரம்பகாலத்தில் பாதைகளற்ற காட்டில் - சாமான் சாக்குகளைச் சுமந்துகொண்டு இவன் முன்னே செல்ல, இவனை நம்பி எத்தனை போராளிகள் இவனின் பின்னே சென்றிருப்பர்! இறுதியில் தலைவரிடம் அனுமதி பெற்று, காட்டில் ஒரு பாதையை அமைக்கத் திசை காட்டியவன் கருணா.

கருணாவிடம் சுயமாக இருந்த இயல்பு, தன் பொருளில் ஒருவரின் கையும் படக்கூடாது என்பது. அதேவேளை பிறர்பொருளைத் தானும் தொடவோ விரும்பவோ மாட்டான். கிராமியத்தின் சாயலைக் காட்டும் முறுக்கேறிய பலம் மிக்க உடற்கட்டு.

கருணா பங்குகொண்ட களங்கள் பெரும் வெற்றியுடன்தான் முடிந்திருக்கின்றன.

மேஜர் சங்கர் தலைமையில் நடந்த சாம்பன்குள மினிமுகாம் தகர்ப்பு -

கப்டன் சுபாஸ் தலைமையில் நடந்த இராணுவ ரோந்து அணி மீதான அதிரடித்தாக்குதல் -

என்று வரிசைப்படுத்திச் சொல்லிக் கொண்டே போகலாம்.

மரபுவழிப் போருக்கும் புலிகள் சளைத்தவர்களல்ல என்பதை நிலைநாட்டிய போர், ஆனையிறவுப் பெரும்போர். புலிகள் பதுங்கியிருந்து தாக்கிவிட்டு மறைந்து போகும் சிறு குழுக்களல்ல என்பதை நிரூபிக்க நடத்தியபோர் இது. ''எதிரி தன் சாவு அர்த்தமற்றது என்று நினைப்பது மட்டுமன்றி, அதுவே உண்மையுமென்பதை - அர்த்தமுள்ள எம் வீரர்களின் தியாகத்தால் நிலைநிறுத்திக் காட்டியது'' இப்போர்.

ஆனையிறவுச் சமரில் இணைந்துகொள்ள மணலாறு வளர்த்த புதல்வர்கள் அலையலையாய்ப் புறப்பட்டனர். ஆனையிறவு, புல்லாவெளி, கட்டைக்காடு என பல இடங்களிலும் எதிரிக்குள் புகுந்தனர். எதிரியை நிலைகலங்க வைத்த அச்சமரில், முப்பது முத்துக்களை வித்தாக விதைத்துத் திரும்பின மணலாற்றிலிருந்து சென்ற அணிகள். அந்த முப்பது முத்துக்களில் ஒரு முத்தாய் லெப். கருணாவும் உதிர்ந்து போனான்! ☆

பிறப்பு:
17. 08. 1971

வீரச்சாவு:
17. 07. 1991



# லெப். ரவியப்பா

(ஆ. க. வெ.)
(பாலசுப்பிரமணியம் உருத்திரன்)
சிலாவத்துறை,
மன்னார்.

பருத்த உடல்; இதனால், செயலில் சற்று வேகம் குறைவு. ஆனால் சண்டையில் விவேகம் அதிகம். எந்தவொரு சிக்கலான விடயத்தையும் இலகுவாக மற்றவர்களுக்கு விளங்கப்படுத்தும் ஆற்றல், ரவியப்பாவிடம் அதிகமாக இருந்தது. இராணுவ தந்திரோபாயங்களையும் உலகப் பொதுவிடயங்களையும் தன் தோழர்களுக்குத் தெளிவாகச் சொல்லிக் கொடுப்பான்.

ரவியப்பாவின் விடுதலைப் போராட்ட வரலாறு, அவன் பிறந்த மண்ணான மன்னாரிலேயே ஆரம்பமாகியது. பிரதேச அரசியல் பொறுப்பாளனாகச் சிலகாலம் பணிசெய்து, மணலாற்றுக்கு வந்தான்.

மணலாற்றில் பல மாதங்களாக மேஜர் சங்கரின் அணியில் இருந்தான். கொக்கிளாய் இராணுவத்தைக் கட்டுப்பாட்டில் வைத்திருந்த காப்பரணில் காவல் கடமையில் நின்று, தன் நம்பிக்கையை வலுப்படுத்திக் காட்டியவன். இறுதியில், ஆனையிறவுச் சமரில் தன் தியாகத்தை நிலைநிறுத்தி மரணித்துக் கொண்டான்.

☆

பிறப்பு:
14. 12. 1974

வீரச்சாவு:
17.07.1991



# ரமேஸ்

( ஆ. க. வெ. )
(சின்னத்துரை சுபேசன்)
அளவெட்டி வடக்கு,
அளவெட்டி.

மணலாற்றுக் காட்டில் பத்தாவது பயிற்சிப் பாசறையில் போர்க்காலக் கல்வியையும், யுத்தப் பயிற்சியையும் பெற்றுக்கொண்டான் ரமேஸ். மெக்கானிக், வயறிங் ஆகிய வேலைகளில் இவனிடம் சிறப்புத் தேர்ச்சியிருந்தமையால், பயிற்சி முடிந்ததும், இராணுவத் தளபாடம் உற்பத்திசெய்யும் கடைச்சல் பட்டறையில் பணிக்காக அமர்த்தப்பட்டான். ஆறு மாதங்கள் இப்பணியில் முழுமையாகச் செயற்பட்டான்.

ரமேசின் வரலாற்று வரிகளை ஓரிரு சம்பவங்களாலேயே நெஞ்சில் பதித்துக்கொள்ளலாம். சாவுகள் சாதனையோடு அமைவதையே எம் வீரர்கள் என்றும் விரும்புவதுண்டு. ஒரு சிலரது சாவு அபார சாதனைகளோடு அமைந்துவிடுகிறது ரமேசின் சாவு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த சமரில் தான் நிகழ்ந்தது. ஆனால், மாறுபட்ட வரலாறாக - நெஞ்சை நெருடும் வரலாறாக - அமைந்தது. எல்லாருக்கும் கிடைக்காத பேறு ஒரே சமரில், ஒரே வீட்டில், அண்ணன் பின் தம்பி அடுத்தடுத்து உயிர்கொடுத்த தியாக வரலாறு ...முதல் நாள் யுத்தமுனையில் அண்ணனின் சாவினைக் களத்தில் நின்றே அறிகிறான் ரமேஸ். அந்தத் துயரை நெஞ்சில் சுமந்துகொண்டே எதிரிக்குள் புகுந்தவனின் துப்பாக்கி, சும்மாவா கிடந்திருக்கும்? 'உடன் பிறந்தவன் நான் உன்னுடனேயே வருகிறேன்' என்று எண்ணிவிட்டான் போலும்! ஆம், அண்ணனைத் தேடி......
☆

பிறப்பு:
06. 12. 1968

வீரச்சாவு:
27. 07. 1991



# லெப். சபா

(ஆ.க.வெ.)

(மாரிமுத்து பத்மநாதன்)

**பள்ளக்கால்,**

**குண்டசாலை,**

**கண்டி.**

சிங்களத்தின் தலைநகரமான கொழும்பு, சபாவுக்கு தண்ணி பட்ட பாடம். காலை விடிந்து இரவு படுக்கைக்குப் போகும் வரை, அவனது முதுகு மூடைகளைச் சுமந்துகொண்டேயிருக்கும். சபாவின் முதுகு ஒரு சுமைதாங்கி. கொழும்பு நாகரிகத்தில் சொன்னால், அவனொரு 'நாட்டாமை.' புதுமையாகவும் கேள்விக்குறியாகவும் இருக்கலாம் - சபாவின் உண்மை வாழ்வு அதுதான். திருமணமாகியதால், பிறரிடம் பல்லிளித்து வாழ்க்கையைக் கொண்டு நடத்தாமல், மூடை தூக்கியாவது கௌரவமாக வாழத்தலைப்பட்டவன். நித்திரையின்றி மூடை அடித்த நாட்கள் பல, அவன் வாழ்வில் உண்டு.

சபாவின் இல்லறவாழ்வு பாதியில் முடிந்துபோனது மனைவி பாதி வழியில் இவ்வுலக வாழ்வை நீத்துக்கொண்டாள்; சபாவின் வாழ்க்கையில் பாதிப் பகுதி முடிந்துபோனது. மீதிப் பகுதியை நாட்டுக்காகக் கழிக்க நினைத்தான்; அதனால், வேறு திருமணம் செய்து கொள்ள விரும்பவில்லை. தனது கடந்து போன வாழ்க்கை இருண்ட கனவாகத் தெரிந்தது. அந்தக் கனவு அத்தியாயங்களைப் புரட்டிப்பார்க்க விரும்பவில்லை. தொடர்ந்து அடிமை வேலை செய்வதும் அவனை மனவிரக்திக்குத் தள்ளியது. முடிவு......?

பிறந்த மண்ணுக்குப் பணிசெய்து பாதிவாழ்வை முடித்துக்கொள்ள விரும்பி, விடுதலைப் போரில் தன்னை இணைத்துக்கொண்டான். நகரத்தில் நின்றவன், நடுக்காட்டில் விடுதலை வாழ்வினைத் தொடங்கினான். கொழும்பு நகரை விட மணலாற்றுக்காடு அவனுக்குப் புனித பூமியாய்த் தெரிந்தது.

முல்லைத்தீவு இராணுவ முகாம் தாக்குதல்-

சாம்பன் குளம் மினிமுகாம் தகர்ப்பு -

இவை இரண்டும் சபாவின் திறமைகளை அளவிட்ட சண்டைகள். 'டாஸ்-1' துப்பாக்கியுடன் முதலில் சண்டைக்குச் சென்று, பின் ஜி 3 துப்பாக்கிதான் வேண்டுமென்று கூறி அதனைப்பெற்று, சிலகாலங்களின் பின் எல்.எம்.ஜி. துப்பாக்கியே வேணும் என்று கேட்டு, அதனையும் பெற்றுக்கொண்டான்.

கொழும்பு நகரில் நின்றதனால் சிங்களம் அவனுக்கு அத்துபடி. ஓய்வு நேரங்களில், நாயாற்றுக் கடலில் கட்டுமரம் வலித்துச்சென்று வலை வீசி விட்டு மீன்பிடித்து வருவான். காற்றும் கடல் கொந்தளிப்பும் அதிகமாக இருந்தாலும் அதனைப் பொருட்படுத்தாமல், துணிந்து கட்டுமரத்தை வலித்துக்கொண்டு, கடல்மேல் சென்றுவிடுவான். ஆபத்து நிறைந்த இத்தொழில் அவனுக்கு விளையாட்டாக இருந்தது. நாயாற்றுக்கடலுக்கும் கடல் நீரேரிக்கும் கதை சொல்லும் வலுவிருந்தால், இவனது வரலாற்றைச் சொல்லிக்கொண்டேயிருக்கும்.

வாகன அதிரடி 'கொமாண்டோ' பயிற்சி முடித்த சபா, ஆனையிறவு முகாம் தகர்ப்புக்காய்ப் புறப்பட்டான்; ஆனால் மீண்டு வரவில்லை. அவனுக்காய் அடித்து ஓயும் நாயாற்றுக் கடலலைகள், அவன் பெயரைச் சொல்லிக் கொண்டேயிருக்கின்றன !

☆

பிறப்பு : 03. 12. 1971

வீரச்சாவு: 13. 07. 1991



# லெப். லோகி

(ஆ. க. வெ.)
(வேலாயுதம் சிவகுமார்)
1 ஆம் கட்டை,
புலோலி கிழக்கு,
பருத்தித்துறை.

புலோலியில் பிறந்த புலி காட்டிலே வளர்ந்தது என்று சொல்வதைவிட, காடு வளர்த்தது என்று கூறலாம்.

லோகி படித்தவன். வெற்றியிலும் சிரிப்பு, தோல்வியிலும் சிரிப்பு; எந்த நேரமும் சிரித்த முகம். கோப நரம்புகளே அவனுக்குக் கிடையாது. ஆனால் விளையாட்டுப் புத்தி அதிகம்; இதனால், பொறுப்புணர்ச்சி சற்று குறைவாகவே இருந்தது.

பாடசாலையில் படித்த காலத்திலும் இத்தகைய இயல்பே இவனிடமிருந்தது. பாடசாலை விளையாட்டுப் போட்டிகளில் ஓட்டவீரனாயிருந்து சான்றிதழ்களை அள்ளிக் குவித்தவன். இதே திறமை பாசறைப் பயிற்சிக் காலத்திலும் இவனிடமிருந்தது. பிற்காலத்தில், சண்டையிடும் திறமைக்கு இது உதவியாக அமையுமென்று அவன் நினைத்திருக்க மாட்டான்.

ஆனையிறவுப் பெருஞ்சமருக்குப் புறப்பட அணிகள் வகுக்கப்பட்டன. லோகியும் ஒரு அணிக்குப் பொறுப்பாளனானான். பிறந்த மண்ணில் சமர்செய்

யப் போகின்றோம் என்ற உணர்வு, அவனை மகிழ்ச்சிக் கடலில் தள்ளியது. காட்டில் வளர்ந்த புல், வெறும் வெளியில் சமருக்குப் புறப்பட்டது.

கண்ணுக்கெட்டிய தூரங்களில் ஒன்றாய் நிற்கும் சிறிய 'கொட்டணை மரப்பற்றைகள்' தான் மறைக்கும் கவசம். நிலையெடுத்து சண்டைசெய்யும் உணர்வு வீரர்களிடம் இருக்கவில்லை. எதிரிக்குள் பாய்ந்து புகுந்து அவனைச் சிதறடிக்க வேண்டும். இதுவே அனைத்து வீரர்களின் மனதிலும் ஓங்கி நின்றது.

லோகி கட்டைக்காட்டில் தன் அணியுடன் யுத்தகளம் புகுந்தான். கடுஞ் சமர். காயமடைந்த வீரர்களை ஓடிஓடிச் சுமந்து கொண்டு வந்தான். முடிவில் தன் உடலையும் சுமக்க வைத்துவிட்டான்! ☆

பிறப்பு :
. 04. 1975

வீரச்சாவு :
05. 08. 1991



# 2 ஆம் லெப். சபேசன்

(ஆ. க. வெ.)
(தர்மரெட்ணம் திருத்தணி)
கங்குவேலி,
மூதூர்,
திருமலை.

விடுதலையை நேசிக்கும் இடத்தில், விடுதலையை விரும்பும் தாய் தந்தையர்க்குப் பிறந்த குழந்தைகளுக்கு, சுதந்திரத்தைப் பற்றிக் கற்றுக்கொடுக்க வேண்டியதில்லை. மானத்தைக் காக்க விரும்பிய சபேசனுக்கு, தான் குழந்தை என்பதைச் சிந்திக்க நேரமிருக்கவில்லை; சிந்திக்க விரும்பவும் இல்லை. பாம்பின் குட்டிக்கு விஷமில்லையா......?மூதூர் கங்குவேலிக் கிராமத்தில் பிறந்தான் சபேசன்.

கங்குவேலிக் என்ற கிராமத்தினைச் சுற்றி சிங்களக் குடியேற்றக் கிராமங்கள் அமைக்கப்பட்டிருந்தன. தெகிவத்த எனும் சிங்களக் கிராமம் ஒருபுறமும், நிலாப்பள என்ற சிங்களக் கிராமம் மறுபுறமும் அமைந்திருந்தன. திரும்பிய திசையெல்லாம் சிங்களத்தின் ஆக்கிரமிப்பு வாய் அகலப் பிளந்து கிடந்தது. பிறப்பில் இருந்தே நசுக்கப்பட்ட உணர்வு வெடித்துக் கிளம்பியதில் வியப்பில்லை. அவனது பிறந்த குடிசை எத்தனை தடவை சிங்களக்காடையரால் தீ வைத்து கொளுத்தப்பட்டதென்பது அவனுக்குத்தான் புரியும்! கண் முன்னே எரிந்த நெருப்பு அவன் நெஞ்சில் மூண்டதை, சிங்களதேசம் அறியாது. அதைப் புரிய வைக்கவேண்டிய அவசியம் இல்லை. காலம் கடந்த கதை. பழிக்குப்பழி - இதில்

தான் எம் சுதந்திரத்தை மீட்கலாமென உணர்ந்து, 1989 இல் மணலாற்றுக் காட்டுக்கு வந்தவர்களில் ஒருவனாய் நின்றவன் சபேசன்.

முழுமையான படைப் பயிற்சியை முடித்துக்கொண்டு மருத்துவப் பிரிவில் செயற்படத் தொடங்கினான். மேஜர் வீமனுடன் மாங்குளச் சண்டைக்கு சென்றது, அவனது போர்ப்பணியின் முதலனுபவமாகியது. அடுத்து, மிகப் பெரும் யுத்த முனையில் அவனது பணி தொடர்ந்தது. ஆனையிறவுச் சமரில், கட்டைக் காட்டில் முன்னேறி வந்துகொண்டிருந்த சிங்களப் படைகளைச் சிதைக்கும் சண்டை, அகோரமாக நடந்துகொண்டிருந்தது.

சபேசனின் கண்களில், பற்றியெரியும் தன் குடிசைதான் தெரிந்தது. அக்கினித் தாண்டவம் ஆடத் தொடங்கினான். அதிவேகப் பணி, வயதை மீறிய பாய்ச்சல், எதிரி நிலைகுலைந்தான். ஆனால் சபேசனோ தன் தியாகத்திற்கு நிலை எடுத்துக்கொண்டான். அவனது உடலை மீட்டெடுக்க நடத்திய சண்டை பற்றி இன்றிருக்கும் போராளிகளிடம் கேட்டால் புரியும். சபேசன் குழந்தைதான்; ஆனால் அவன் மனம் துணிவு கொண்ட இரும்புப்பாறை. அவன் சமாதி கருங்கல்லாய் இன்று எழுந்து நிற்கிறது! ☆

பிறப்பு:
04. 05. 1969

வீரச்சாவு:
21. 07. 1991



## 2 ஆம் லெப். கந்தன்

(ஆ. க. வெ.)
( பாலசிங்கம் பரமேஸ் )
3 ஆம் குறுக்குத்தெரு,
பருத்தித்துறை.

மணலாற்றில் பயிற்சி முடித்த கந்தன் தன் பிறந்த மண்ணில் களம் காண யாழ். புறப்பட்டான். யாழ்ப்பாணத்தில் சில மாதங்கள் கந்தன் நின்றிருப்பான். அங்கு நிற்பது அவனுக்கு மனமகிழ்ச்சியைக் கொடுக்கவில்லை. தன்னை வளர்த்து ஆளாக்கிய மணலாற்றிலேதான் சண்டையிட்டு மடியவேண்டுமென விரும்பினான்; இதனால், மீண்டும் மணலாற்றுக்கே திரும்பினான்.

குறும்புத்தனமும் துடியாட்டமும் நிறைந்திருந்த கந்தன், கரும்புலியாகத் தன்னைப் பதிவுசெய்து கொண்டான். இதனால் கரும்புலிக்கான சில பயிற்சிகளையும் பெற்றான்.

காட்டில் உயரமான குன்றில் இருந்து குதிக்கும் பயிற்சியொன்று நடைபெற்றது. மன உறுதியையும், துணிவினையும் பரீட்சிப்பதே இப்பயிற்சியின் நோக்கம். கரும்புலியாகத் தன்னைப் பதிவுசெய்து கொண்டாலும் அவனது மனதில் சற்றுப்பயம் இருக்கவே செய்தது; இருந்தாலும் இவ்வுயரத்தில் இருந்து குதித்து, தன் உறுதியை நிலைநிறுத்திக்கொண்டான்.

சாம்பன்குள மினிமுகாம் தகர்ப்பு.

மணலாற்றில் முதன்முதல் 81 எல்.எம்.ஜி. துப்பாக்கியை எதிரியிடம் இருந்து கைப்பற்றிய சண்டை.

முல்லைத்தீவு இராணுவமுகாம் முற்றுகைத் தாக்குதல் எனப் பல பெரும் சண்டைகளைச் சந்தித்த அனுபவமுள்ள போர் வீரன். மேஜர் சதாத்தின் அணியில் ஒருவனாய் ஆனையிறவுச் சமருக்குச் சென்றான். மணலாற்று மண்ணுக்கு உயிர்கொடுக்க விரும்பியவன், தன் மண்ணிலேயே வரலாற்றை எழுதிக்கொண்டான்! ☆



பிறப்பு :
15. 06. 1970

வீரச்சாவு :
27. 07. 1991



# 2 ஆம் லெப். ஜெயந்திரன்

( ஆ. க. வெ. )

( கந்தப்பன் தவராசா )

12 ஆம் வட்டாரம்,
குருமண்வெளி,
களுவாஞ்சிக்குடி.

மட்டக்களப்பில் குருமண்வெளிக் கிராமத்தில் பிறந்தவன் ஜெயந்திரன். *1978* இல் மட்டக்களப்பில் வீசிய சூறாவளியில் இவனது வாழ்க்கையும் சிக்குண்டது. தாயோடும் தந்தையோடும் துள்ளி விளையாடும் வயதில், வெள்ளம் வந்து அவர்களை அள்ளிச் சென்றுவிட்டது. இவனை வளர்த்து இந்த மண்ணுக்கு அளித்தவள் இவனது அம்மம்மா.

இந்திய இராணுவத்தினரின் நெருக்கடியான காலத்தில் இவனும் கைது செய்யப்பட்டான். ஒன்றும் அறியாத இவனை நையப் புடைத்தார்கள். சும்மா இருந்தவனுக்கு சுதந்திர உணர்வை ஊட்டினர் என்றே சொல்லலாம்! ஜெயந்திரனின் மனதில் வஞ்சப்புயல் மூண்டது. *89* ஆம் ஆண்டு விடுதலைப் போரில் தன்னை இணைத்துக்கொண்டான்.

ஜெயந்திரனின் இளவயதில் இருந்தே ' மோட்டர் மெக்கானிக் வேலைகளை நன்கு பயின்றான். பயிற்சிக்காக மணலாற்றுக்கு வந்தபோது, தன்னுடன் வந்த நண்பர்களுக்கு, தனக்கு ' மோட்டர் மெக்கானிக் - ட்றைவிங் ' எல்லாம் தெரியுமெனச் சொல்லிவிட வேண்டாமென வேண்டிக்கொண்டான்.

இதனை வெளிப்படுத்தினால், தன்னைச் சண்டைக்கு விடாமல் இந்த வேலைகளுக்கே விட்டுவிடுவார்கள் என்ற பயம் அவனுக்கு. இதை அவன் தன் மரணம் வரை வெளிக்காட்டவேயில்லை. பயிற்சிக்காலத்தில் தன் இளமைக் கதைகளையும், சூறாவளியின் கொடுமையினையும் சொல்லிக்கொண்டிருப்பான். சூறாவளியின் கொடுமை ஆழமாக அவனுள்ளத்தில் பதிந்திருந்ததை, அவனின் கதைகளால் உணர முடிந்தது. தான் பிறந்த மண்ணில் அடிபட்டுச் சாகவேண்டும் என்ற விருப்பும் அவனிடம் அதிகமாகவேயிருந்தது. மணலாறு தன் போராற்றலை வளர்த்ததால் காட்டின் மீது அதிக பற்று ஏற்பட்டது. கப். சுபாஸ் மரணித்த - இராணுவ வழிமறிப்புத் தாக்குதல்தான் இவனது முதற்சண்டை; இதில் இவன் தன் திறமைகளைக் காட்டத் தவறவில்லை.

ஆனையிறவுச் சண்டைக்குச் சென்றசமயம் இருட்டில் என்னைத் தேடிக் கண்டுபிடித்து, '' மச்சான் நான் போறன், உள்ள இறங்கிறதால திரும்பி வர மாட்டன் என்று நினைக்கிறன் '' என்று சொல்லியபோது, '' போறன் - என்று ஏன் சொல்லுகிறாய், பேரட்டுவாறன் என்று சொல்லு '' என நான் சொல்ல, '' திரும்பி வருவதாயிருந்தால் தான் மச்சான் போட்டுவாறன் எண்டு சொல்லலாம் '' என்று சொல்லிவிட்டுச் சென்றான். சென்றவன் தான்; திரும்பவேயில்லை!

☆

பிறப்பு:
11. 04. 1972

வீரச்சாவு:
23. 07. 1991



## மனோ

( ஆ. க. வெ. )
(தியாகராசா மகேந்திரன்)
பனங்காடு,
அக்கரைப்பற்று.

வசதியான குடும்பம். அக்கரைப்பற்றில் பெரும் கடையொன்றைத் தந்தை வைத்திருந்தார். பனங்காட்டுக் கிராமத்தில்தான் இவர்களின் சொந்த வீடுண்டு. கடையில் தந்தைக்கு உதவியாக நின்றான் மனோ. வசதிகள் இருந்தாலும் மனோவின் உள்ளத்தில் சுதந்திரத் தீ பற்றிக்கொண்டது; புறப்பட்டு விட்டான். மகனைத் திருப்பிப் பெற்றுவிட முயற்சி செய்தனர். முடிவு தோல்வியாயிற்று; அதனால் மகன் வழியை அவர்களும் பற்றினர்.

மனோ அம்பாறையில் போர்ப் பயிற்சியை ஆரம்பித்தான். அவன் பயிற்சி பெற்றுக்கொண்டிருந்த பாசறை, இராணுவ சுற்றி வளைப்புக்குள்ளாகியது. இதனால், பயிற்சி இடையில் நின்று விட்டது. ஆனால் பயிற்சி பெறும்போதே, அம்பாறை பொலிஸ் நிலையம் தாக்கிக் கைப்பற்றப்பட்ட சண்டையில் பங்கெடுத்தான் மனோ. பின்னர் அம்பாறையில் இருந்து கிரானுக்குப் புறப்பட்டு, அங்கிருந்து மணலாற்றை வந்தடைந்தான். மீண்டும் பயிற்சி ஆரம்பமானது. மணலாற்றுக் காட்டில் பதினோராவது பயிற்சிப் பாசறையில் பயிற்சியை முடித்துக்கொண்டான். பயிற்சி முடிந்ததுமே கடைச்சல் பட்டறையில் உதவிப் பணிகளுக்காக நியமிக்கப்பட்டான். அதனால், மணலாற்றுச் சண்டைகளில் கலந்து கொள்ளும் சந்தர்ப்பம் கிடைக்காது போய்விட்டது.

கப். சுபாஸ் மரணித்த இராணுவத்தின் மீதான அதிரடித் தாக்குதலில் முதல் பங்கெடுத்தான். அடுத்தகளம் ஆனையிறவுப் பெருஞ்சமர். ஆனையிறவுச் சண்டையில் பல சிப்பாய்களை அழித்தான். பல நாட்களாக உயிரை வெறுத்துச் சண்டை செய்தான். சமர் முடிவு நாள் நெருங்கும் போது இவன் கதையும் முடிந்துபோய்விட்டது. வரலாறு அவன் வரிகளை வரைந்துகொண்டிருக்கிறது!

☆

பிறப்பு :
19. 08. 1975

வீரச்சாவு:
30. 07. 1991



# 2 ஆம் லெப். நரேஸ்

( ஆ.க.வெ. )

( சபாரெட்ணம் சிவபாதம் )

கரவெட்டி மேற்கு,

கரவெட்டி.

ஐந்து சகோதரிகளுக்கு அடுத்ததாகப் பிறந்த ஒரு ஆண்குழந்தை *நரேஸ்*. சகோதர பாக்கியம் கிடைத்திருந்தபோதும் வீட்டில் சாப்பாட்டுப் பாக்கியத்தில் வறுமையே இருந்தது. தான் பிறந்த கரவெட்டிக் கிராமத்தில் இருந்து 89ஆம் ஆண்டில் மணலாற்றுக்கு வந்து யுத்தப் பயிற்சிகளைப் பெற்றுக்கொண்டான். அத்திவாரமே வறுமையோடு இருந்ததால், வாட்டசாட்டமான தோற்றமுடன் வளர முடியவில்லை. ஆனால் வெள்ளை நிறமும் வெள்ளை மனமும் கொண்டவனாக இருந்தான்.

*மேஜர் சங்கரின்* தலைமையில் நடைபெற்ற சாம்பன்குள மினிமுகாம் தகர்ப்பில் விழிப்புடன் செயற்பட்டான். மற்றும் மாங்குள இராணுவ முகாம் தகர்ப்பு, முல்லைத்தீவு இராணுவ முகாம் முற்றுகைத் தாக்குதல் என பல சண்டைகளுக்குச் சென்று, யுத்த அனுபவத்தைப் பெற்றுக்கொண்டான். *மேஜர் சதாத்தின்* அணியில், அனுபவம் மிக்க வீரனாய் ஆனையிறவுப் பெருஞ்சமருக்குச் சென்றான். தன்மகன் ஆனையிறவுக் களத்தில் நிற்பதைக் கேள்வியுற்ற தாய், அவனைப் பார்க்க ஓடி வந்தாள். யுத்தமுனையில் அவன் நின்றதனால் அவளது முயற்சி வீணாயிற்று. தன்னருகில் வந்த பிள்ளையைப் பார்க்க முடியவில்லையே என்ற ஆறாத்துயருடன் திரும்பினாள் அத்தாய். வீட்டுக்குச் சென்றதுமே செய்தி வந்தது. போர் வீரனாய் துப்பாக்கியோடு நின்ற தன் குழந்தையைக் காணத் துடித்த அந்தத் தாயின் கடைசி ஆசைகூட நிறைவேறாது போனபோது...... ! ☆

பிறப்பு
1971

வீரச்சாவு:
05. 08. 1991



## 2ஆம் லெப். சில்வா

( ஆ. க. வெ. புல்லாவெளி )
( தங்கவேல் நாகராசா )
மடுறோட்,
கூழாங்குளம்,
மன்னார்.

மன்னாரிலிருந்து மணலாற்றுக்கு கொமாண்டோ பயிற்சி பெற வந்தவர்களில் சில்வாவும் இடம்பெற்றிருந்தான். கொமாண்டோப் பயிற்சி முடித்த பின்னர் மேஜர் சங்கரின் அணியில் நீண்டநாட்கள் இருந்தான்.

சில்வா நித்திரைக்கு கும்பகர்ணன்; பார்த்துக் கொண்டிருக்க கண்மூடுவான். முக்கியமான நேரங்களில் இவனைக் காவற்கடமைக்கு விடுவதைப் பொறுப்பாளர் தவிர்த்துக்கொள்வார். என்னதான் தண்டனை கொடுத்த போதும், நித்திராதேவியை அவனிடமிருந்து அடித்து விரட்ட முடியவில்லை. முன்னிரவுக் காவற் கடமையில் இவனது பெயர் முதலாவதாக இருக்கும்.

பாசறையில் பகல்வேளையில் தோழர்களுடன் ஓயாமல் கதைத்துக் கொண்டிருப்பான்; சேட்டைகள் செய்துகொண்டிருப்பான். சில்வாவைக் கண்டதும் "சொறிச் சில்வா வாறான்ரா" என தோழர்கள் கிண்டலாகக் கூறுவார்கள். அந்தளவுக்கு இவன் தொல்லை அதிகம்.

ஆனையிறவுச் சமரில் புல்லாவெளிச் சண்டைக்கு நிலை எடுத்துக் கிடந்த போது, தன் நிலையினின்றும் எழுந்து வந்தான். "மச்சான் இண்டைக்கு

ஒரு கை பார்த்துத்தான் சாகிறது; நல்லாய் பைம்பலடிச்சுப் போட்டு சாகுவம்'' என்று சொல்லிவிட்டு நீண்டநேரம் பேசிக் கொண்டிருந்தான்.

சண்டை தொடங்கியது. எதிரிகளைக் குறிவைத்து வேட்டுக்களைத் தீர்த்துக்கொண்டிருந்தான். எம்முடன் நின்ற ஒவ்வொரு போராளியும் ஏதோ ஒருவகையில் தம்மை எம் மனதில் பதியவைத்துவிட்டு மரணித்து விடுகின்றனர். சில்வாவும் இச்சண்டையில் தன்முடிவை எழுதிக்கொண்டான். அவனில்லாதபோது அவனின் நிழல் எம்மைத் தொடர்கிறது; அவன் நிழலை நாமும் தொடர்கின்றோம்!

☆

பிறப்பு:
09. 10. 1975

வீரச்சாவு:
23. 07. 1991



# கைலன்

( ஆ. க. வெ. )
( இராமலிங்கம் பிறைசூடி )
வண்ணையார் வீதி,
களுவாஞ்சிக்குடி.

**வ**யது சிறிது; வயதுக்கேற்ப தோற்றமும் சிறிது, சுருங்கச் சொன்னால் குழந்தை. எத்தனையோ இளைஞர்கள் இன்னும் உணராமல், உணர்ந்தும் உறுதியில்லாமல் இருக்கும்போது - உணர்வோடு, பொறுப்புணர்வோடு, சகிப் புத்தன்மையோடு நாடு காக்கப் புறப்பட்ட குழந்தைகளில் ஒருவனாய்......

துப்பாக்கியில் ஏற்பட்ட கவர்ச்சியினால்தான் இவர்கள் இணைகின்றார் களெனப் பலர் பேசிக்கொள்வது, எமக்குத் தெரியாமலிருக்கவில்லை. இப்ப டிப் பேசுபவர்கள் தான் கோழைகள். தம் இயலாமையை மூடிமறைக்க அவர் கள் பேசுகின்ற வசனங்கள்தான் இவை. நுளம்புக்கடி, உண்ணிக்கடி.... பனி ......வெயில்......மழை..... இவற்றை எல்லாம் தாங்கும் சகிப்புத்தன்மை... தியாக உணர்வு...... இவையும் கவர்ச்சியா? சாவைத் தெரிந்துகொண்டே தம் உயிரை மண்ணுக்காய்க் கொடுக்கத் துணிவது கவர்ச்சியா?

கைலன் குழந்தைதான். ஐந்து குண்டுவீச்சு விமானங்களுக்கிடையில், இரண்டு 'கெலிக்கொப்ரர்' களுக்கிடையில், மழைபோன்ற எறிகணைகளுக்கு நடுவே, வெட்டைவெளியில் ஓடி ஓடிச் சென்று காயப்பட்ட வீரர்களைத் தன் னந்தனியாகத் தூக்கிவந்து சிகிச்சை கொடுத்தானே......

காயப்பட்ட போராளிகளுக்கு அருகில் இருந்து அவர்களை அன்போடு பராமரித்து, சுவைமிக்க உணவு சமைத்துக் கொடுத்து, தன் மருத்துவப் பணியைச் சரியாகச் செய்து முடித்த இந்தக் குழந்தையின் தியாகத்தை, எதில் அடக்குவது......?

ஆனையிறவுப் பாதையால் மக்கள் செல்வதற்கு வழிபிறக்கும் என்று நினைத்துக்கொண்டே இறந்துபோன கைலனை - அவனின் சுதந்திர உணர்வை, தியாகத்தை மணலாறு நெஞ்சில் சுமக்கும்; அவனுக்காய் ஒரு வரலாறே எழுதும்! ☆

பிறப்பு:
19. 08. 1973

வீரச்சாவு:
23. 07. 1991



# சிவமூர்த்தி

( ஆ. க. வெ. )

( மகாலிங்கம் சதீஸ்வரன் )

**2ஆம் வட்டாரம்,**

**புங்குடுதீவு.**

**நி**த்திரை விழிப்பதென்றால் கடினம்; நடப்பதென்றால் கடினம்; இவை இரண்டோடும் பாரம் சுமப்பது அதைவிடக் கடினம். சுமந்தபின் சும்மா யிருக்க முடியுமா.....? சமையல் செய்யவேண்டும். இத்தனை கடுமையான பாதை களைக் கடந்து வந்ததுதான் எமது விடுதலைப் போர். அந்தப் பாதையில் நடந்தவர்களில் ஒருவனே சிவமூர்த்தி.

யாழ்ப்பாணத்தில் தீவுப் பிரதேசத்தைப் பிறப்பிடமாகக் கொண்டவன் இவன். மணலாற்றில் பயிற்சியை முடித்தபின், முதலும் முடிவுமாகச் சந் தித்த களம் ஆனையிறவு சமர்க்களம், சண்டை ஒன்றுதான்; ஆனால் சரித் திரம் படைத்த சமர். வரலாற்றுப் பதிவுமிக்க மரணம்.

சிவமூர்த்தி சகபோராளிகளுடன் சிரித்துப் பேசியது குறைவு. அரசியல் ஞானம் சற்று அதிகமாக இருந்ததால், எந்தநேரமும் போராளி களுக்கு அரசியல் விளக்கம் கொடுத்துக்கொண்டேயிருப்பான். இதனால் இவ னைப் பண்டிதர் என்று கிண்டலாக அழைப்பார்கள். சிவமூர்த்தி இதனைப் பொருட்படுத்தவும் மாட்டான்; கோபிக்கவும் மாட்டான்.

இவன் சமையல்செய்தால் அதன் சுவையே தனிச்சுவை. சிவமூர்த்தி யின் சமையலுக்காய் தோழர்கள் தவம் கிடப்பார்கள். ஓய்வுநேரம் கிடைத்து விட்டால் மீன்பிடிக்கச் சென்றுவிடுவான்; மீன்பிடிப்பதென்றால் அளவற்ற சந்தோசம் இவனுக்கு,

காலம் காத்திருப்பதில்லை. ஆனையிறவுப் பெருஞ் சமர் வந்தது. சென் றன மணலாற்றிலிருந்து பல அணிகள்; வெற்றிக்கு வித்தாய் வீழ்ந்தன பல உயிர்கள்; வெற்றி எம் பக்கம் இருந்தது. ஆனால், சிவமூர்த்தி எம்மைவிட் டுத் தொலைதூரம் சென்றுவிட்டான்!

☆

பிறப்பு :
02. 05. 1970

வீரச்சாவு:
23. 07. 1991




# 2ஆம் லெப். ஜெயந்தன் (ஜெயா)

( ஆ. க. வெ. )

( செல்லையா நடராசா )

காயங்காடு,
செங்கலடி,
மட்டக்களப்பு.

குருமண்வெளிக்கிராமம். குடிசைவீடு. தன்னைப்பெற்ற தாய் தந்தை யாரென்பது தெரியாமலே வளர்ந்தான் ஜெயந்தன். தாய், பெற்ற வீட்டிலேயே தத்துக் கொடுத்துவிட்டு மறைந்துவிட்டாள். தமக்கையின் அரவணைப்பில் மூன்று வயதை எட்டினான்; தந்தையின் மடியில் விளையாடும் இந்த வயதில் தந்தையைப் பிரிந்தான்

அறிவுதெரிந்து செயற்படும் வயதில், இந்திய ஜவான்களினதும் தேசவிரோதிகளினதும் தொல்லை அதிகரிக்கத் தொடங்கியது. இதனால் சுதந்திரம் தேடி களத்தில் கால்பதித்தான். பயிற்சி முடித்தகையுடன் களத்தில் பாய்ந்தான். தாய்ப்பால் குடிக்கவில்லை என்றாலும் வீரத்தில் சற்றும் குறைவிருக்கவில்லை. மனமார இந்திய ஜவான்களையும் தேசவிரோத கும்பல்களையும் சுட்டுத்தள்ளினான்.

1990இல் மணலாறு அவனை வரவேற்றது. மணலாற்றுக்கு வரும்போது இந்தியப் படை, வேட்டைமுடித்து நாடு திரும்பியது. இலங்கையரசுடன் புயல்மறைந்த அமைதி உடன்பாடொன்று நடைமுறைக்கு வந்தது. சிலமாத

காலம் அது நீடித்தது. அக்காலத்தில் "தாடியண்ணோய், நான் வீட்டுக்குப் போகப்போறன்: அக்காதான் என்னை வளர்த்தவர். அவ சரியாய் கஸ்ரப் படுவா. திரும்பவும் சண்டை தொடங்கினால் நிட்சயமாய் மணலாற்றுக்கு வருவன்" எனக் கேட்டுக்கொண்டான். அவனின் உறுதியைச் சொல்லில் அவதானித்த அவர், ஜெயந்தனுக்கு அனுமதி கொடுத்தார். ஜெயந்தன் குருமண்வெளிக் கிராமத்தை அடைந்தான்.

மாதங்கள் சில சென்றன. 'இரண்டாவது ஈழப்போர்' ஆரம்பமானது. ஜெயந்தனின் மணலாறு விஜயம் மீண்டும் நடந்தது! சொல்லுக்கு அரிச்சந்திரன்தான் 'புதிய பயிற்சிப் பாசறையில் மீண்டும் பயிற்சி முடித்தான்.

மேஜர் வீமனுடன் மாங்குளம் இராணுவ முகாம் தகர்ப்புக்குச் சென்று வந்தான். அடுத்த களம் ஆனையிறவு - 'வேக்கிள் கொமாண்டோ' முறையில் முகாமுக்குள் புகுந்தனர். ஜெயமங்களம் கேட்டது. ஆனால் ஜெயந்தன்...?

☆

பிறப்பு:
01 -11. 1973

வீரச்சாவு:
17. 07. 1991




# 2ஆம் லெப். பாரதி

(ஆ. க. வெ.)
( சின்னத்தம்பி சாந்தகுமார் )
செல்வபுரம்,
முறிகண்டி.

பயிற்சியை முடித்துக்கொண்டு மணலாற்றுக்கு வந்திருந்தான். மக்களோடு பழகவேண்டும். புதியமுகங்கள். இராணுவத்தை அடித்துத் துரத்தவேண்டும் என்று புறப்பட்டவனை, மக்களோடு பழகி விடுதலைப்போரின் விளக்கத்தைக் கொடுக்கும்படி அனுப்பியது பாரதிக்குச் சற்று வேதனையாகத்தான் இருந்தது. இருந்தாலும், இயக்கம் இட்ட பணியை முழுமனதோடு செய்யச் சித்தம் கொண்டான்.

முன்பின் பழக்கமற்ற மணலாற்று மக்களோடு, ஒரு சில மாதத்திற்குள் நெருங்கிய உறவை வளர்த்துக்கொண்டான். சிரித்துச் சிரித்துப் பேசியே மக்கள் மனங்களில் நிலைத்தான். கிளிநொச்சியில் பிறந்து வளர்ந்த பாரதிக்கு கடலும், கடற்கரை மணலும் புதியது. தொம்பி மணலில் கால்களைப் புதைத்து நிற்பதில் கொள்ளை ஆசை. ஒரு நாள், கடற்கரை மணலில் கிடந்த படகொன்றில் ஏறிநின்று கடலை நோக்கி, ''ஓ சுறாமீன்களே .. ஓ திருக்கைகளே! இப்போது நான் பேசுவது உங்களுக்குப் புரிகிறதா''? என்று ஜோக்காகப் பேசினான். ''என்ன மச்சான் மீனிலையும் சாதி பிரிச்சுப் பேசிறாய்'' எனக் கேட்க, ''மன்னித்துக் கொள்ளு மச்சான்'' என்று அவன் சொன்னதை நினைத்துப்பார்க்கிறோம்.

மென்மையான மனம் படைத்தவன் பாரதி. அதனால் தவறுக்காக மனம் நொந்து கொள்ளும் இயல்பு அதிகமிருந்தது. அந்த மென்மையான மனதிற்குள் ஒளிந்து கிடந்த ஆழமான விடுதலைப் பற்றினை, ஆனையிறவுச் சண்டையின் போது அவதானிக்க முடிந்தது.

''என்ன மச்சான், பாரதி முடிஞ்சிட்டானோ?'' எனச் சகதோழன் கேட்பது, கால் சிதைந்துபோய்க் கிடந்த பாரதியின் காதில் விழுந்தது. ''இல்ல மச்சான், உயிரோட தான் கிடக்கிறன்'' என்று பாரதியின் குரல் வந்தது.

குண்டு மழைக்கு நடுவே, பாரதியை எப்படியாவது காப்பாற்றிவிட வேண்டுமென்ற உணர்வு ஏற்பட்டது. அவனைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டேன். ''மச்சான் நான் தப்பமாட்டன்ரா, என்னோட மினைக்கடாமல் முகாமுக்குள்ளே பாய்ஞ்சு அடிமச்சான்'', - அவனது உறுதியான வார்த்தை நெஞ்சைப் பிளந்தது. 'சாகப்போறன் மச்சான், தண்ணி கொஞ்சம் குடிக்கிறோக்குத் தா. வரேக்க துஷ்யந்தன் சொன்னவன், நீ இந்தச் சண்டையில் திரும்பி வரமாட்டாய் ' என்று. சொன்னமாதிரியே நடந்து போச்சு. அவனிட்ட மறந்திடாமல் சொல்லிப்போடு'' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது, அவனது இமைகள் மெல்ல மூடிக்கொண்டிருந்தன. பாரதியின் உயிர் பறந்துகொண்டிருப்பதை உணர்ந்தபோது, அவனைத் தோளில் இருந்து இறக்கி மெதுவாகக் கிடத்தினேன்.

☆

பிறப்பு:
01. 02. 1972

வீரச்சாவு:
20. 07. 1991



## லெப். ராகுலன்

(ஆ. க. வெ.)

( வேலாயுதம் ஜெயரூபன் )

மாவடி வீதி,

வாழைச்சேனை.

தலைவருடன் நின்று வளர்ந்த புலி. தவறுக்காய் தண்டனை பெற்று, திருந்திக்கொள்ள காட்டிற்கு அனுப்பப்பட்ட புலி. ''திறமையால் தவறைத்திருத்தி அண்ணனே தன்வாயால் என்னை அழைக்கும் வரை ஓயமாட்டேன்'' என்று கூறிச் செயற்பட்டான் ராகுலன்.

தான் இயக்கத்திற்குப் பலதடவைகள் வரமுயன்றும் முடியாதுபோன பழையநாட்களையும், பயிற்சிக்கு கருணாவிடம் சென்று பயிற்சி பெறும் காலத்திலேயே பலமுறை இராணுவத் தாக்குதலுக்குட்பட்ட நாட்களையும், மட்டக் களப்பில்தான் சென்ற எண்ணற்ற களங்களையும் பலமுறை மீட்டுப் பார்த்துக் கொண்டான். அவற்றை எல்லாம் பெரும் கதைபோல சகபோராளிகளுக்குச் சொல்லிக்கொண்டிருப்பான்.

தலைவருடன் நிற்கின்ற பாக்கியம் கிடைத்ததும் அவர் தனக்குச் சொன்ன அறிவுரைகளும் மறக்கமுடியாதவை என்பதையும் சொல்லிக்கொள்வான். தலைவரிடம் பெற்ற அறிவுரைகளை சகபோராளிகளுக்குச் சொல்லிக்கொண்டேயிருப்பான்; அதில் அவன் அளவற்ற திருப்தியைக் கண்டான்.

ஜி.3 துப்பாக்கியை எடுத்த எடுப்பிலேயே இலக்குத் தவறாமல் இயக்கும் பலமும், திடமும் இவனிடமிருந்தது. நெஞ்சு நிமிர்த்தி நடக்கும் ராஜநடை அவனது மனோபலத்தினை எடுத்துக்காட்டும். ராகுலன் அனுபவமுள்ள போர் வீரன். அவன் தன் திறமைகளை வளர்த்த களங்கள் இங்கே புரட்டிப்பார்க்கப் படவில்லை. மணலாற்றில் அவன் வாழ்ந்த காலத்தின் சில அத்தியாயங்கள் மட்டுமே புரட்டிப் பார்க்கப்படுகின்றன. மணலாற்றில் நின்று ராகுலன் புறப் பட்ட களம் ஆனையிறவு 'ஆகாய கடல் வெளி'ப்போர். இந்தப் போரில் நெஞ்சு நிமிர்த்தி நின்று அடிபட்டதும், குண்டுபட்டு மலைபோல் சரிந்ததும் நெஞ்சினில் அழியாத கோலம்! ☆

பிறப்பு:
13. 10. 1973

வீரச்சாவு:
20. 07. 1991



## கில்பேட்

(ஆ. க. வெ.)
( மயில்வாகனம் விஜயகுமார் )
செல்வநாயகபுரம்,
திருமலை.

பார்த்த கண்ணெல்லாம் பசுமைவெளி. வளமான தமிழ்மண். மேஜர் சங்கை
யும் பல வீரரையும் மணலாற்றுக்காய்த் தந்த மண். இன்று தமிழ் மக்களில்
பெரும்பகுதியை இழந்து, சிங்களத்தின் வேட்டைப்பற்களில் கிழிபட்டுக் கிடக்கும்
மண். சோழமன்னன் குளக்கோட்டன் வரலாற்றோடு நிமிர்ந்து நிற்கும் கோணே
சர் ஆலயத்தையும் கொண்ட மண். அந்தத் தம்பலகாமம் தந்த புதல்வன்தான்
கில்பேட்.

சாப்பாட்டிற்கு முந்துவோர் உளர்; சண்டைக்கு முந்துவோர் உளர்;
வேலைக்கு முந்துவோர் உளர்; இவையனைத்திற்கும் பிந்துவோரும் சிலருளர்.
ஆனால் கில்பேட் மூன்றிலுமே முன்னுக்கு நிற்பான். எந்த வேலையினையும்
தானே முதலில் செய்யவேண்டுமெனத் துடிப்பான். மற்றவர்கள் செய்துவிட்டால்,
அதில் ஏதாவது குறைகண்டு பிடிக்காவிட்டால் அவனுக்கு நித்திரையே வராது.
ஏதேனும் பணியைத் தன்னிடம் ஒப்படைக்காது வேறுயாரிடமாவது ஒப்படைத்து
விட்டால், ''என்னில் நம்பிக்கையில்லையா? நானென்ன செய்யமாட்டேனென
நினைத்துவிட்டீர்களா?'' என்று உடனேயே கேட்டுவிடுவான். மனதுக்குள் ஒளித்
துக்கொண்டு புறுபுறுக்கமாட்டான்; வெளிப்படையாகவே எதையும் சொல்லி
விடும் திறந்த மனம்.

சண்டைக்குச் செல்லவேண்டுமென ஆர்வமாய் நின்றவனுக்கு அந்தப்பணி கிடைப்பது அரிது. போர்த்தளபாடங்களை உற்பத்தி செய்யும் கடைச்சல் பட்டறையிலேயே இவனது தொடர்ச்சியான பணி இருந்தது. எப்படியோ ஒரு விதமாக ஆனையிறவுச் சமருக்குச் செல்ல அனுமதி பெற்றுவிட்டான். ஆனால் அச்சமரில் அவனின் விடுதலைப் பணிக்கு முடிவு கிடைக்குமென நான் நம்பவில்லை. விடுதலையின் பாதையில், வெற்றிக்காய்ப் பலவீரர்களை விழுங்கிய அக்களம் கில்பேட்டையும் விழுங்கிக்கொண்டது!

☆

பிறப்பு:
06. 01. 1973

வீரச்சாவு:
05. 08. 1991



# ககாரின்

( ஆ.க வெ. )

( செல்வராசா ரெட்ணகாந்தன் )

ஐயங்கேணி,

ஏறாவூர்.

ஆட்காட்டியென தோழர்கள் கிண்டல் செய்யுமளவிற்கு ககாரின் கொழுத்த தோற்றமுடையவன். மெல்லிய கால்களும் அளவுக்கதிகமான உயரமும் கொண்ட ககாரினது உள்ளமும் உயர்ந்ததாகவே காணப்பட்டது. துடிதுடிப்புமிக்க செயற்பாடுகள் இளமையிலிருந்தே இவனிடம் வளர்ந்தன. ஏறாவூரில் பிறந்த தனக்கு மணலாற்றில் சாவு வருமென இவன் நினைத்திருக்கவில்லை. காலத்தின் தேவை வாழ்வினைத் தீர்மானித்தது.

பாசறைகளில் வாழ்ந்த காலத்தில் தோழர்கள் சண்டைபோட்டால், அவர்களைச் சமாதானப்படுத்துவதில் முனைப்பாக இருப்பான். அவர்கள் சமாதானமாகாவிடில் சமாதானமாகும்வரை தான் சாப்பிடாமல் இருப்பான். அவனுக்காகப் போராளிகள் கோபத்தை மறந்த நாட்கள் எத்தனை,......! தான் சாப்பிடும்போது அனைவருக்கும் கொடுத்துச் சாப்பிடுவான். அதில் அவன் கண்ட இன்பம்தான் எத்துணையானது ....!

காட்டில் ககாரின் அமைத்த பாசறைகள் எத்தனை! மேசன்வேலை தெரிந்திருந்ததனால், பாசறைகள் அமைப்பதற்கு அவனது திறமை பெரிதும் உதவியாயிற்று. காட்டில் தண்ணீர் எடுப்பதற்காகக் கிணறுகள் வெட்டியபோது, இரு

தடவைகள் தவறிக் கிணற்றில் விழுந்திருக்கின்றான். அப்போது இவன் கால் கைகள் காயப்படவோ முறியவோ இல்லை. ஆனையிறவுப் பெருஞ் சமர்தான் சுகாரினின் விடுதலைக்குத் தளமாயிற்று. சாவுகள் சரித்திரத்தோடு நிறைவாக கொடுத்துவைக்கவேண்டும்; அந்த வகையில், சுகாரின் கொடுத்துவைத்தவன்!



பிறப்பு:
10. 11. 1971

வீரச்சாவு:
05. 08 1991



## லெப். பீற்றர்

(ஆ.க.வெ.)
( நாகநாயகர் ஜெயராஜ் )
பருத்தித்துறை வீதி,
யாழ்ப்பாணம்.

முத்திரைச்சந்தி சங்கிலியன் சிலை கம்பீரமாக நிற்குமிடம். தமிழன் வீரம் என்றும் குறைவுபடாது என்று காட்டி நிற்கும் அவனின் சிலைகண்டு துணிந்தவர்கள் மிகச் சிலர். பீற்றரின் நெஞ்சில் இது பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியிருந்தது. இனத்தின் மானம்காக்கத் துணிந்தவனுக்கே சிற்பியின் கைகூட சிலை வடிக்கிறது என்ற உண்மையைப் பீற்றர் உணர்ந்தபோது, விடுதலைப் போரில் குதித்தான்.

பீற்றரின் தந்தையும் தமையன்மாரும் கைதேர்ந்த மெக்கானிக்குகள். வாகனங்கள் திருத்தும் 'காலை' ஒன்றினை இவர்கள் வைத்திருந்தனர். தந்தையுடனும் தமையனுடனும் சிறுவயதிலிருந்தே நின்றதால், பீற்றரும் இத்தொழிலை நன்கு கற்றறிந்தான். யாழ். மண்ணை விட்டு மணலாற்றிற்கு வந்து பத்தாவது படையணியில் பயிற்சியை முடித்தான். வாகனங்கள் பழுது பார்க்கும் திறமை மிகுதியாக இருந்ததால், கடைச்சற் பட்டறையில் பணிக்காக அமர்த்தப்பட்டான். நீண்டநாட்கள் இத்துறையில் இயங்கினான். தன்னிடமுள்ள திறமைகள் அனைத்தையும் மற்றவர்க்குச் சொல்லிக்கொடுப்பதில் பின்னிற்கமாட்டான் பீற்றர். வேலைசெய்துகொண்டிருக்கும்போது மற்றவர்கள் சோர்ந்தாலும் இவன் சோர்வு களைப்பின்றி வேலை செய்வான். அத்துடன், மற்றவர்கள் சோர்ந்து விடாமல்

புத்திசொல்லியும் சிரிப்பூட்டியும் கதைகள் சொல்லியும் உற்சாகப்படுத்திக்கொண்டிருப்பான்.

கடைச்சல் பட்டறையிலுள்ள பெரிய இஞ்சின்கள் அனைத்தையும் தானே கழற்றிச் சரிபார்த்துப் பூட்டுவான். இவனுக்குச் சண்டையென்று முதலில் கிடைத்தது; ஆனயிறவுச் சமர். தன்னுடைய மண்ணின் விடுதலைக்காக ஆனையிறவுச் சமரிலேயே உயிர் கொடுத்தான் பீற்றர்! ☆

பிறப்பு:
22. 09. 1973

வீரச்சாவு:
02. 09. 1991



# கப். கண்ணன்

( மின்னல் )
( தங்கசாமி கேசவன் )
ஆண்டான்குளம்,
அடம்பன்,
மன்னார்.

மன்னார் பெற்ற மைந்தனான கண்ணனை மணலாற்றுக் காட்டின் பத்தாவது பயிற்சிப் பாசறையில் சந்திக்கின்றேன். அவனைச் சந்தித்த நாளினை நினைத்துப் பார்க்கிறேன் - அவனோடு பழகிய நாட்களை அசைபோட்டுப் பார்க்கிறேன் - அந்த இனிய நாட்கள் திரும்பி வராதா என ஏங்குகின்றேன்.

அவன் சென்றது எம் தலைவன் காட்டிய வழிதான். அந்த வழியில் அவனைத் தேடித்தான் நானும் செல்கின்றேன். ஆனாலும் அவன் நினைவுகள் என்னைச் சுடுகின்றன. பயிற்சிக் காலத்தில் இருந்து ஒராண்டுக்கு மேலாகப் பிரியாது ஒரே அணியில் இருந்தோம். நட்பின் உரிமையால், "டேய் கழுதை என்னடா செய்யிறாய்?" என்றே கதையைத் தொடங்கிக்கொள்வோம்.

ஒராண்டுக்குப் பின், இரண்டு மாதங்கள் முல்லைத்தீவுச் சண்டைக்குச் சென்றிருந்தேன். அதுதான் அவனை நான் பிரிந்த நாள். பின்னர் காட்டில் அவனை நான் சந்திக்கவேயில்லை. அந்தக் கொடிய நாட்களுக்காய் நான் வருந்திக்கொண்டேன்.

ஆனையிறவுப் பெரும்போருக்குச் செல்வதற்காக அணிகள் பிரிக்கப்பட்ட போதுதான் கண்ணனைக் கண்டேன். எம்மை மறந்து கட்டிப்பிடித்து மகிழ்ச்சியைப் பகிர்ந்தோம். அன்று ஒரேதட்டில் இருவரும் சாப்பிட்டோம். சில மாதங்களின் பின் அவனைச் சந்தித்த இந்தநாளில், அவன் ஒரு அணிக்குப் பொறுப்பாளனாக வந்திருப்பானென்ன நான் நினைத்துக்கூடப் பார்த்ததில்லை. அவன் வளர்ச்சியில் அவனைவிட அளவற்ற மகிழ்ச்சியை நான் அடைந்து கொண்டேன்.

ஆனையிறவுச் சமர்முடிந்து காட்டிற்கு வந்திருந்த காலத்தில், நாயாற்றுக் கடல்நீரேரியில் நண்டுபிடித்து, எனக்கெனக் கூறி என் முகாமுக்கு அனுப்பி விடுவான். அத்தகைய என் இனிய நண்பனைப் பிரித்த அந்தச் சண்டை ஆரம்பமானது. 'ஒப்பறேசன் மின்னல்' என்ற பெரும் இராணுவப் படையெடுப்பு, காட்டினைக் கைப்பற்றும் நோக்கில் நடைபெற்றது. "காடென்ன எதிரியின் சொந்த வீடென்ற நினைப்போ! எங்களின்ர காட்டுக்கு வந்து எங்களுக்கு வாலாட்டவோ? வாலை ஒட்ட நறுக்கி விட்டுத்தான் அடுத்த வேலை, காட்டுநினைப்பே இனி வராமல் இருக்கச் செய்யிறம்" என்று கூறிப் புறப்பட்டான். வாலறுந்து எதிரிகள் ஓடினர். மகிழ்ச்சியோடு திரும்பிய போராளிகளில் கண்ணனைத் தேடினேன். கண்ணன்......? ☆

பிறப்பு :
14. 08. 1972

வீரச்சாவு :
05. 09. 1991



# சஞ்சித்குமார்

(மின்னல்)

(நல்லதம்பி பாலகுமார்)

3ஆம் வட்டாரம்,

புங்குடுதீவு.

சஞ்சித்குமார் யாழ். மண்ணிலிருந்து யுத்தப்பயிற்சி பெற மணலாற்றிற்கு வந்தான். பத்தாவது பயிற்சிப் பாசறையில் போர்க்கலையும், கல்வியும் பயின்றான். தச்சுத்தொழில் நன்கு தெரிந்திருந்ததால் போர்த்தளபாடம் உற்பத்தி செய்யும் கடைச்சல் பட்டறையில் பணிக்காக அமர்த்தப்பட்டான்.

போராளிகளுடன் சகசமாகப் பழகுவதிலும் கொடுக்கும் பணியைத் திறம்பட முடிப்பதிலும் சஞ்சித்குமார் வல்லவனாயிருந்தான். எந்த வேலையைக் கொடுத்தாலும் அதனை நேர்த்தியாகச் செய்துவிடுவான். இப்பணியில் ஆறு மாதங்கள் தொடர்ச்சியாகச் செயற்பட்டான்.

யுத்தமுனையென முதலில் புறப்பட்டது ஆனையிறவுப் பெருஞ்சமருக்கே. இச்சமரில் இறுதிவரை நின்று போரிட்டான், ஆனையிறவுப் பெரும் போருக்குப் பின் மணலாற்றுக் காட்டில் பெரும் களம் ஒன்றினைச் சந்தித்துக் கொண்டான். யுத்தத்தின் வடுக்கள் மாறாத போதும், களைப்போ சலிப்போ எம் வீரர்களைத் தாக்கியதில்லை. அடுத்தடுத்து எத்தனை சண்டைகள் வந்தாலும் ஆவலுடன் பாய்ந்து செல்வர். புரியாத - சிந்தனைக்கு எட்டாத தியாகம்!

"ஒப்பரேசன் மின்னல்" என்ற பெயரோடு காட்டில் நுழைய முற்பட்டது சிங்களப் படை. காடென்ன அவர்களின் சொந்த வீடா? புலி வாழ்ந்த குகையென்பது அவர்களுக்கு புரியவில்லை! புலிக்குகைக்குள் நுழைய முற்பட்டால் கதி என்னவாகும் என்பதை நுழைந்த பிற்பாடே உணர்ந்தனர். அங்கு பலியானவர் போக எஞ்சி நின்றோர் தப்பி ஓடினர். மின்னலைக் கிழித்த புலிப்பாய்ச்சலில் தான் சஞ்சித்குமாரின் சாவு சரித்திரமாகியது. சாவுக்கு அர்த்தம் கற்பித்தவனுக்காய் சமாதி கண்டு, அதன்முன் தலைசாய்த்து நிற்கிறது இந்த வணங்காத மண்! ☆

வீரச்சாவு:
16. 09. 1991




# காவியநாயகன்

( மின்னல் )
( மணியம் சிவஞானம் )
கொக்குத்தொடுவாய்,
மணலாறு.

தமிழீழ காவியத்தில் கதாபாத்திரங்கள் ஒன்று இரண்டல்ல. பல ஆயிரங்கள். காவியநாயகன் அதில் ஒரு துளி. சின்னக் குழந்தைக்கு ஒரு காவியத்தில் எத்தனை வரிகள் வரையப்படுகின்றன. இவனுக்கு மட்டுமல்ல இவன் குடும்பத்திற்கே தமிழீழமண் ஒரு காலத்தில் வரலாறு வரையும். ஏனெனில், இவனது தந்தை ஒரு துணைப்படை வீரன்; துப்பாக்கியோடு அவ்வப்போது களத்தில் நிற்பவர். இவனின் அண்ணன் ஒரு புலிவீரன்; அவன் போர்முனையில் நிற்பவன். மூத்தவரிலிருந்து சாவு தொடர்வதுதான் முன்னொரு கால வரலாறு; இன்று, குழந்தையிலிருந்து தொடர்வதுதான் தமிழீழ வரலாறு. அது சாதாரண வரலாறல்ல; வீரவரலாறு.

மணலாற்று கிராமங்களில் ஒன்றாக இன்று மக்களை இழந்து சிங்களப் படையின் கால்களுக்குள் சிக்குண்டு கிடக்கும் - கொக்குத்தொடுவாய் கிராமந்தான் காவியநாயகனின் பிறந்த மண். சொந்தமண்ணில் சிங்களப் படை தங்கள் கால்களைப் பதித்தது, அவன் நெஞ்சை ஏறி மிதித்தது போலிருந்தது. பிஞ்சுக்கரங்களால் அந்த வஞ்சகக் கூட்டத்திற்கு ஏதேனும் செய்துவிடத் துடித்தான். மணலாறு எதிரிக்கு மண்டியிடாத மண் என்ப

தைத் தன் சின்னக்கைகளால் உணர்த்தி விடத் துடித்து, யுத்தப்பயிற்சி யைப் பெற்றுக்கொண்டான்.

காவியநாயகன் குழந்தையல்லவா? அதனால் அவனிடம், குழந்தைக் கேற்ற குறும்புத்தனம் நிறைய இருந்தது. ஆனால் சிங்களப்படை 'மின்னல்' எனக் கூறிக்கொண்டு காட்டில் புகுந்து விளையாட முற்பட்டபோது, அவன் நெஞ்சு நெருப்பாய் மாறியது. 'இது நான் பிறந்த மண்; என் பாதம் பதிந்தகாடு; நீ உள்ளே வருவதாயின் என் உடலின் மேலால்தான் வர முடியும்' என்று சினத்துடன் யுத்தமுனை நின்றான். அவன் பிஞ்சுக்கரம் ஓய்ந்தபோது வஞ்சக நரிகள் காட்டிலிருந்து தப்பி ஓடின. ☆

பிறப்பு:
21. 08. 1970

வீரச்சாவு:
02. 09. 1991



# கவாஸ்கர்

( மின்னல் )

(கனகசபை சுமித்திரன்)

சிறுப்பிட்டி மத்தி,

நீர்வேலி.

யாழ். மண்ணில் நீர்வேலி கிராமத்திலிருந்து களம் நோக்கி வந்தவன் கவாஸ்கர். அவனது பயிற்சித்தளம் மணலாற்றில் அமைந்தது. காட்டில் பதின்மூன்றாவது படையணியில் பயிற்சியை முடித்துக்கொண்டான். பயிற்சிக் காலத்தின்போது கவாஸ்கர் பெரும் சிரமத்தை அனுபவித்தான். தொடர்ச்சியான பயிற்சியினைச் செய்யமுடியாது, ஒரு நிமிட ஆறுதல் தரும்படி பயிற்சி ஆசிரியரிடம் கேட்டுக்கொள்வான். பயிற்சி முடியும்வரையும் இவ்வாறு ஒவ்வொரு நாளும் கேட்பான். இதனால், இவனை சகபோராளிகள் "ஒரு நிமிடம்" என கிண்டலாகக் கூப்பிடத்தொடங்கினர்; கவாஸ்கர் இதைப் பெரிதுபடுத்தவில்லை.

பயிற்சிக்குப் பின்னும் அவனுக்கு நித்திரை சத்துராதியாக இருந்தது. பாசறைகளில் காவற்கடமைக்கு விட்டால், நின்ற நிலையிலேயே தூங்குவான். சகதோழர்கள் தண்ணீர் எடுத்துவந்து தலையில் ஊற்றுவார்கள். ஆனாலும் நித்திராதேவி அவனை விட்டுப் போனதில்லை. எதையும் பொறுத்துக்கொள்ளும் கவாஸ்கருக்கு, தன்னை யாரும் தொடர்ந்து கேலிசெய்தால் பிடிக்காது.

கவாஸ்கர் முதல் சண்டையிலேயே சாவினைத் தழுவிக்கொண்டான். ஆனாலும் காடுகாத்த பெறுமதிமிக்க 'மின்னல்' சண்டையில், மண்ணின் பெருமையினை - மண்ணின் மகிமையினை - காக்க உயிர் கொடுத்தோன் என்ற அழியாப்புகழைப் பெற்றுக்கொண்டான்.

☆

பிறப்பு:
21. 09. 1974

வீரச்சாவு:
16. 09. 1991



## பிரதீப்

( மின்னல் )
( பத்மநாதன் லட்சுமணன் )
பேச்சியம்மன் கோவிலடி,
4 ஆம் கட்டை,
கோப்பாய்.

**சா**வினைக் கழுத்தில் சுமப்பவர்கள் எம் வீரர்கள். சாவுக்கு அஞ்சாத அவர்களின் நெஞ்சுறுதிதான் தமிழீழத்திற்கான அடிக்கல்லாய் நிற்கிறது. ஈழத்தின் பலமான அத்திவாரமாய்ப் போன வீரர்கள் பல்லாயிரம் பேர். ஆனாலும் சிலரின் சாவு நெஞ்சைக் கீறி நிலைத்து நிற்கிறது. கண்ணில் நிற்கும் சாவில் பிரதீப்பின் சாவும் ஒன்று.

யாழ்ப்பாணத்தில் இந்திய - புலிகள் யுத்தத்தின் பெருங் களங்களாய் அமைந்த இடங்களில் கோப்பாயும் ஒன்று. காயமுற்ற போராளிகளோடு தலைவர் வெளியே மாணலாற்றிற்கு வர வழியமைத்த பெருமை, இந்த மண்ணுக்கு உண்டு. இந்த மண்ணிலிருந்து மணலாற்றிற்கு வந்தவன் தான் பிரதீப்.

எந்த வேலை சொன்னாலும் தட்டிக்கழிக்காமல் செய்து வரும் பிரதீப், எந்தநேரமும் அமைதியாகவே இருப்பான். தானும் தன்பாடுமாக இருப்பதையே விரும்புமிவன், எவரையும் துன்புறுத்தியதும் கோபித்ததும் கிடையாது. “ வெள்ளைப்புட்டு ” என பட்டப் பெயர் சூட்டுமளவிற்கு நிறமாக இருந்தான். மணலாற்றுக் காட்டில், பத்தாவது படையணியில் பயிற்சியை முடித்தபின்,

முல்லைத்தீவு இராணுவத்தைக் காக்க வட்டுவாகலில் தரையிறக்கப்பட்ட இரா ணுவத்துடனான சண்டையில், போர் அனுபவத்தைத் தொடக்கினான். கப்டன் சுபாஸ் தலைமையில் நடைபெற்ற இராணுவ வழிமறிப்புத் தாக்குதலிலும், ஆனையிறவுச் சமரிலும் அனுபவம் மிக்க வீரனாய் நின்றான். காட்டில் நடை பெற்ற 'மின்னலில்' தான் நெஞ்சில் நிற்கும் இவன் சாவு நிகழ்கிறது.

விமானங்கள் பாசறையைச் சுற்றி தாறுமாறாக 'நேபாம்' குண்டுகளை வீசிக்கொண்டிருந்தன. எறிகணைகள் நான்கு திசைகளிலிருந்தும் வந்து விழுந்து கொண்டிருந்தன. விமானக் குண்டு வீச்சிற்கு நிலை எடுத்துக்கொள்வதற்காக 'பங்கரை' நோக்கி ஓடினான் பிரதீப்.

அதற்கிடையில் அருகே குண்டு வீழ்ந்து வெடித்தது. பிரதீப்பின் உடலில் தீப்பற்றிக்கொண்டது. காடே தீப்பற்றி எரிந்தபோது உடல் தீப்பற்ற நேரமா பிடிக்கும்......? பிரதீப்பின் உடல் சுவாலை விட்டெரிந்தது. சுற்றிச் சுற்றிஓடி னான்; உருண்டான். அருகே நின்ற தோழர்கள் மரக்குழைகளை முறித்து அடித்து அணைக்க முற்பட்டனர். சொற்பநேரந்தான்...... அதற்குள் எல்லாம் நடந்து முடிந்து விட்டது. கண் முன்னாலேயே கருகிச் சுருண்டான் பிரதீப். கொடிய நிகழ்வு...... கண்முன்னாலேயே அவன் உயிரைக் காப்பாற்ற முடியாது தடுமாறி நின்ற அந்த நாள் ..... பிரதீப்...... அவனைப் பற்றிய நெருப்பு எம் நெஞ்சில் எப்படி மறையும்......?

☆

பிறப்பு:
11. 10. 1972

வீரச்சாவு:
02. 09. 1991




# கோவிந்தன்

**( மின்னல் )**

**( சிவலிங்கம் தெய்வேந்திரன் )**

**விநாயகபுரம்,**

**திருக்கோயில்.**

அம்பாறை மாவட்டத்தில் 'விநாயகபுரம்' கிராமம் கோவிந்தனை மறந்தாலும், மணலாற்றுக் காடும் மக்களும் மறக்கமாட்டார்கள். வீட்டிலும் கிராமத்திலும் இவன் செய்த குறும்புத்தனங்கள் கொஞ்சமல்ல. காட்டில், அமைதியான நற்பண்புள்ள ஓர் போர்வீரன்.

விடுதலைப் போருக்கான பயிற்சி பெறுவதற்கு அம்பாறையிலேயே இணைந்துகொண்டாலும் பயிற்சியை, மணலாற்றில், பன்னிரண்டாவது படையணியிலேயே முடித்துக்கொண்டான். ஆனால், பயிற்சிக்கு முந்தியே களுவாஞ்சிக்குடி பொலிஸ் நிலைய தாக்குதலிற்குச் சென்றிருந்தான்.

மணலாற்றில் பயிற்சி முடிந்திருந்தாலும் நோயாளி போல் இவனது முழந்தாள்கள் நடக்கும்போது தட்டுப்படும். தோழர்கள் இதற்காகக் கிண்டல் செய்தால் மனம் நொந்து அழுதுவிடுவான். மென்மையான மனம் படைத்தவன் கோவிந்தனென்பதை இச்செயல் வெளிப்படுத்தியது. காட்டுப்போரில் பெரியதும் எதிரியின் எண்ணத்தை நிலைகுலைய வைத்ததுமான 'மின்னல்' நடவடிக்கையில்தான், கோவிந்தன் தன் உதிரத்தால் மண்ணைத் தூய்மையாக்கினான். காட்டின் கரையோர முற்காப்புப் பாசறையான 'சுகந்தன் பாசறை'யில் மின்ன

லின் தெறிப்புக்கள் ஆரம்பமானபோது, 'மின்னல்' என்ன முழக்கத்தையே எம்மால் முறியடித்துவிடமுடியும் என்பதைக் காட்டிய ஆரம்பநாள் சண்டையில் கண்ணன் மரணித்துவிட......அவனது உடலையும் துப்பாக்கியையும் மீட்டுக்கொண்டு பின்னோக்கி நகர்ந்தான். எதிரியைச் சுடவிடாது தனது துப்பாக்கியை இயக்கியபடியே வீழ்ந்த காட்சி, இன்றும் கண்ணில் நிழலாய்த் தெரிகிறது !

☆

வீரச்சாவு:
16. 09. 1991




# வாணன்

( மின்னல் )
( ஆறுமுகம் கணேசமூர்த்தி )
19, மாவடிச்சேனை,
மூதூர்.

வாணனின் தியாகத்தை எழுதுவதா? அன்றி அவன் வீட்டின் வறுமையை எழுதுவதா? வீடிழந்து, மண்ணிழந்து, சொத்துக்களனைத்தையும் இழந்து நிர்க்கதியாய் நிற்கும் அவன் குடும்பத்தைப் பற்றி எழுதுவதா? அவனுக்காய் எழுதப்படும் சிலவரிகள் இன்னும் உணராமலிருக்கும் இளைஞர்களை உணர வைக்குமானால், அது ஒன்றே வாணனின் இலட்சியப் பயிருக்கு வார்க்கப்படுகின்ற நீராகும்.

வாணன் இளமையில் தந்தையைப் பறிகொடுத்தவன். தந்தையொடு கல்வி போகும் என்பார்கள்; வாணனுக்கு அதுமட்டும் கல்விக்குத் தடையாகவில்லை. 'கொடிது கொடிது வறுமை கொடிது; அதனிலும் கொடிது இளமையில் வறுமை' என்ற ஒளவை வாக்கும் வாணனின் பள்ளிவாழ்வில் விளையாடியது. இவை அனைத்தையும் மீறி இந்தியப் படைகளின் தொல்லை, தேசவிரோதக் கும்பல்களின் மிரட்டல், சிங்களப் படைகளின் கண்மூடித்தனமான இன அழிப்பு இவற்றிற்கு நடுவே பள்ளிப்படிப்பு ஒரு கேடா? பிறந்தமண்ணில் சுதந்திரமாய் மூச்சு விடவாவது உரிமை வேண்டாமா? வாணன் அதைத் தேடித்தான் களம் புகுந்தான்.

1991இல் 'இரண்டாவது ஈழப்போர்' ஆரம்பமானது. கிழக்குத் தமிழர் களின் வீடுகள் தீயில் அழிந்தன; கொலைத் தாண்டவம் தலை விரித்தாடியது; சிங்களக் காடையருடன் முஸ்லிம் துரோகிகளும் தமிழ் மக்களை வெட்டித் தள்ளினர். இக் காடைத்தனத்திற்கு மூதூர்ப் பிரதேசம் விதிவிலக்காக இருக்க வில்லை. தமிழர்கள் கண்போன போக்கில், கையில் கிடைத்த பொருளுடன் ஓடினர். வாணனின் அம்மாவும் சகோதரர்களும் உயிர் தப்பி முல்லை மாவட் டத்திற்கு வந்து சேர்ந்தனர்.

வாணன் ஆனையிறவுப் பெரும் போரிற்குச் சென்று வந்திருந்தான். கடைசிவரை நின்று எதிரியை அழித்தவன் தன்னுடன் வந்த பலரைக் களத் தில் பறிகொடுத்தபோது, தன் உடலில் ஏன் குண்டுபடவில்லை என்பது இவ னுக்குக் கேள்விக்குறியாகவே இருந்தது. யுத்தத்திற்கு வந்தபின் தாயைப் பார்க்கும் சந்தர்ப்பம் இவனுக்குக் கிடைக்கவில்லை. இதனால்தான் தமிழ்த் தாய் இவனைக் காத்துநின்றாள்போலும்!

ஆனையிறவுச் சமருக்குப் பின், புதுக்குடியிருப்பு பிரதேசத்தில் வந்திருக் கும் தன் தாய் சகோதரங்களைப் பார்க்கச் சென்றான். வீடும் சொத்தும் முன்போல் இல்லாவிடினும், சுதந்திரமாய் - பயமின்றி - அவர்கள் வாழ்வது இவன் மனதிற்குப் பெரும் ஆறுதலாக இருந்தது. சிலநாட்களில் காட்டிற்குத் திரும்பினான். தாயைப் பார்த்த சில நாளில் அவன் உயிர் நிம்மதியாய்ப் பிரிந்தது. காட்டைப் பிடிக்கும் இராணுவத்தின் மிகப்பெரும் 'மின்னல்' நட வடிக்கையில், தன்னை வளர்த்த மண்ணுக்காய் செவ்வரிகளை எழுதிக்கொண் டான் வாணன்! ☆

பிறப்பு :
06. 11. 1973

வீரச்சாவு :
06. 09. 1991



## 2 ஆம் லெப். பிரேம்குமார்

(கந்தையா தயாபரன்)
கரவெட்டி மத்தி,
யாழ்ப்பாணம்.

சில்லுவண்டில்......வக்குட்ஸ்...... செல்லமாக எம் தோழர்கள் அழைக்கும் குழந்தை குமார். மண்வாசனை என்ற சொல்லுக்கு இலக்கணமானவன், தலைவர் பிறந்து தவழ்ந்து விளையாடிய மண்ணின் அருகேதான் இவனது பிறந்த மண்ணும்.

தலைவரைக் காத்து, பல ஆயிரம் வீரர்களை வளர்த்தமண் மணலாறு. இந்தமண்ணில்தான் குமார் தன்னையும் வளர்த்து வீரச்சுவடுகளைப் பதித்துக் கொண்டான். எப்படியும் வாழலாம் என்று எண்ணாமல் இப்படித்தான் வாழ வேண்டுமென்பதை உறுதிப்படுத்திக்கொண்டு மணலாற்றுக்கு ஓடிவந்தான். குழந்தை வயதுக்கேற்ப குழப்படி, செல்லமாக வளர்ந்தவன். பயிற்சியிலும், பயிற்சிக்குப் பின்னும், அவன் செல்லைப்பிள்ளைதான்; ஆனால் வயதுக்குமீறிய போர்க்குணம். பயிற்சியை முடித்ததும் மிதிவெடி நுட்பத்தைக் கற்றுக்கொண் டான்; அதே பணியில் தன் அனுபவத் திறனை வளர்த்துக் கொண்டான். அவ னது மிதிவெடியில் கால்கொடுத்த இராணுவத்தினர் பலர்.

'மின்னல்' சண்டையில் தானும் சிங்கள தேசத்திற்குப் பாடம் புகட்ட வேண்டுமென்று விரும்பினான். தளபதியிடம் அனுமதி பெற்று புலிவிளையாட் டில் இறங்கினான். ஓடி ஓடி மிதிவெடிகளை 'வைத்துக் கொண்டிருந்தான். எதிரி கால்முறிந்து விழுவதைக் கண்டு கை கொட்டிச் சிரித்தான். ஆயினும், ''ஆத்தாத் தூங்கி வேலை'' என்று கிராமியத் தமிழில் சொல்லும் செயலில் எதிரி இறங்கினான். எறிகணைகள் பல திசையாலும் வந்து வீழ்ந்தன. பிரேம் குமாரின் கரங்கள் ஓய்ந்து ஓய்வுபெற்றன......! ☆

பிறப்பு:
11. 08. 1967

வீரச்சாவு:
16. 09. 1991



# 2 ஆம் லெப். கந்தசாமி

( மின்னல் )

(வேலுப்பிள்ளை மகேந்திரன்)

வடக்குத் தெரு,

கற்கோவளம்,

பருத்தித்துறை.

கடல்வளம் பெருகிய பருத்தித்துறையில் கற்கோவளம் ஒரு சிறிய கிராமம் தான். எருப்பொறுக்கி விற்றும், காலை முதல் மாலை வரை கூலிவேலை செய்தும் வாழ்கின்ற ஏழைக்குடும்பங்கள் நிறைந்த கிராமம்.

ஒருபுறம் உயர்ந்தவரும், வசதி படைத்தவரும், கல்விவசதி நிறைந்த வரும்......இன்னொரு புறம் தாழ்த்தப்பட்டவரும், வறுமை நிறைந்தோரும் கல்வி கற்க வழியற்றோரும்...... இதுதான் யாழ்ப்பாணத்தின் ஒரு பகுதியான வடம ராட்சி. இங்கு கற்கோவளம் கிராமம் இரண்டாவது பிரிவில் அடங்குவது.

கந்தசாமி வறுமையில் பிறந்தான்; வறுமையில் வளர்ந்தான்; பள்ளிக் குச்செல்ல வழியில்லை. தொழில் கற்றான். குழந்தையில் இருந்து உடலைக் கசக்கி தொழில் புரிந்ததால், பொறுமை, வலிமை, சகிப்புத்தன்மை, சுறுசுறுப்பு எல்லாமே அவனிடமிருந்தன. மணலாற்றுக்கு வந்து பயிற்சி பெற்ற காலத்தி லும், பயிற்சியை முடித்திருந்த காலத்திலும் இதேபண்புகள் இவனைப் பொறுப் புள்ள போராளியாக்கின.

மணலாற்றில் நடந்த சண்டைகள் பலவற்றில் பங்குகொண்டான். கிளி நொச்சி சிங்களப்படைமுகாமை விட்டு இராணுவத்தினர் ஓடியபோது, பரந்த

ணில் அவர்களுக்கு அடிகொடுக்கும் சண்டையில் ஈடுபட்டிருந்த சமயம், எதிர் பாராத வெடிவிபத்தில் காயமுற்று யாழ். சென்று சிகிச்சை பெற்றான். 'மின்னல்' தாக்குதல் அவனின் இறுதிப்பயணமாகியது. 19 நாட்களாக எதிரிக்கு அடி கொடுத்து வீரமரணத்தைத் தழுவிக்கொண்டான். தன் விடுதலையுணர்வால் கற்கோவளம் மக்களைத் தட்டி எழுப்பிய வீரமறவன் கந்தசாமி! ☆



பிறப்பு:
1974

வீரச்சாவு:
16. 09. 1991



# கப்டன் வில்மட்

(மின்னல்)

(கணபதிப்பிள்ளை எதிர்மன்னசிங்கம்)

எருவில்,

களுவாஞ்சிக்குடி.

எதிரியின் குருதி ஆறு பாய்ந்த மணலாற்றில் மனம்தொட்ட சண்டை செய்து, 'மின்னல்' நடவடிக்கையில் வீரனாய்ப் போனவன் வில்மட். இரத்தத்தால் சிவந்த பூமியான மட்டக்களப்பில் பிறந்த குழந்தை இவன்.

மணலாற்றில் ஐந்தாவது படைப்பயிற்சிப்பாசறையில், வீரத்தினையும் திறமையினையும் கட்டி வளர்த்தபோது, தளபதியின் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டான். பயிற்சி முடித்தபோது அவரின் மெய்க்காப்பு அணியில் இருந்து கொண்டே, தலைமைத்துவப் பயிற்சியை பெற்றுக்கொண்டான் தளபதி பத்து அடி பாய்ந்தால், இன்னும் இரண்டடி கூடப் பாயவேண்டும் என்ற சிந்தை உள்ளவன். அதனால், தளபதியின் வழிகாட்டலில் பல அதிரடித்தாக்குதல்களில் பங்குகொண்டான்.

முற்கோபம் அதிகம் இருந்தாலும், அந்தக் கோபமும் நியாயமானகாரணங்களுக்காகவே வெளிப்பட்டது. சொன்னதை உடனே செய்யும் பண்பினைத் தளபதியிடம் இருந்து அனுபவத்தில் பெற்று வளர்ந்ததால், தனக்கெனப் பொறுப்புக்கள் கொடுக்கப்பட்டபோது, தன் அணியில் இருப்போரையும் அவ்வாறே வளர்க்கமுற்பட்டான். சொன்னதைச் சொன்னபடியே கேட்டுச்செய்யாதபோதெல்லாம், இவனது கோபம் வெளிப்பட்டது.

மணலாறு சந்தித்த வரலாறு கண்டபோர், 'மின்னல்' ஆகும். காடு காக்கப் பலியாகிய முதற் புலிகளுடன் மகானும் தன்னை இணைத்துக்கொண்டான். மகானின் பிறண் துப்பாக்கி இயங்கிய வேகந்தான் எதிரியின் மனப் பலத்தை உடைத்தெறிந்தது. காட்டைக் கைப்பற்றி புலிகளை விரட்டவோ, காட்டைக் குண்டுகளால் எரித்து புலிகளை அழிக்கவோ முடியாதென்ற உண்மையை உணரவைத்த மகானாய் அவன் மரணம் முடிந்துபோனது. வலிமை மிக்க அவன் கரங்கள் ஓய்வு பெற்றாலும், ஆத்மா அளவற்ற மகிழ்வில் இருக்குமென்பது மட்டும உண்மை ! ☆

பிறப்பு:
07. 07. 1966

வீரச்சாவு:
17. 09. 1991



## மகான்

( மின்னல் )
( முருகுப்பிள்ளை தியாகராசா )
18, பிரப்பங்குளம் வீதி,
**வண்ணார்பண்ணை.**
**யாழ்ப்பாணம்.**

சுவையான பலகாரங்களைக் காணும்போதெல்லாம் மகானின் ஞாபகம் நெஞ்சில் எழும். சுவையான உணவு சமைப்பதிலும் பலகாரங்கள் சுடுவதிலும் இவன் மகானேதான். ஓவியங்கள் வரைவதில் வல்லவன். பனையோலைகளி லும் தென்னை ஓலைகளிலும் அழகிய உருவங்கள் செய்வான். மொத்தத்தில் இவன் சகலதுறையிலும் வல்லவன் என்று சொல்லலாம்.

இந்திய இராணுவத்தினராலும் தேசவிரோதிகளாலும் பல தடவைகளில் கைதாகி, சித்திரவதைக்குள்ளாகிய இவன், விடுதலையை விரும்பிய காரணத் திற்காய் இரண்டுவருடம் சிறைவாழ்க்கையினையும் அனுபவித்தான். சிறை யிலிருந்து வெளியேறிய சில நாட்களிலேயே போருக்குப் புறப்பட்டுவந்தான். மணலாற்றில், ஒன்பதாவது படைப்பயிற்சி அணியில் பயிற்சியை முடித்துக் கொண்டவன். பிறண் எல். எம். ஜி. துப்பாக்கியுடன், நித்திகைக்குளப் பிர தேசத்தில் அவனே பாசறையில் நின்றான். இவனது போராட்ட வாழ்வின் பெரும்பகுதி இப்பாசறையிலேயே மறைந்துபோனது.

வீரச்சாவு:
17. 09. 1991



# குகநேசன்

**( மின்னல் )**

**( ஆறுமுகம் ராசன் )**

**சித்தாண்டி,**

**மொறக்கொட்டாஞ்சேனை.**

மட்டக்களப்பு சித்தாண்டி. கிராமத்திலிருந்து மணலாற்றுக் காட்டிற்கு நடந்துவந்த நாட்கள்தான், குகநேசனின் போராட்ட வாழ்வில் கடினமான காலம். திருமலைத் துறைமுகம், திருமலை - கொழும்பு பிரதானவீதி ஆகிய இடங்களிலும் இராணுவத்தின் தாக்குதலுக்குள்ளாகித் தப்பிவந்தது, பயிற்சிக்கு முன் கிடைத்த அனுபவம்.

மணலாற்றில் பதினோராவது அணியில் பயிற்சி முடித்த குகநேசன், கடைச்சல் பட்டறையில் பணிக்காக அமர்த்தப்பட்டான். எதிலும் நிதானத்துடன் நடந்துகொள்ளும் இவனுக்கு கடைச்சல் பணி பொருத்தமானதொன்றுதான். நிதானத்திற்கேற்ற திறமையும் இவனிடம் இருந்தது. அதிகமாக அலட்டிக்கொள்ள விரும்பாத இவனுக்கு அதிக பகடியும் பிடிக்காது.

''அண்ணன் எவ்வழியோ தம்பியும் அவ்வழி'' என்பதுதான் பழமொழி. ஆனால் குகநேசனைப் பொறுத்தவரை இது எதிர்மாறாக நடந்தது. தம்பி விடுதலைப்போருக்குச் சென்றது தனக்கு மானப்பிரச்சினையென்று கூறி, தானும் விடுதலைப் போரில் குதித்தான். ஆனால் தம்பி புயலாய்க் களம் காண, அண்ணன் குகநேசனோ சாவிலும் தம்பியை முந்திக்கொண்டான்.

குகநேசன் இருபெரும் யுத்தமுனைகளைச் சந்தித்தான். ஒன்று ஆனை யிறவுப் பெருஞ்சமர்; அடுத்தது மணலாற்றில் நடைபெற்ற 'ஒப்பறேசன் மின்னல்'. சிங்கள தேசத்தின் படைபலம் அனைத்தும் ஒருமுகமாகத் திருப்பப்பட்டு மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் இவை. ஆனையிறவுச் சமரில் இறுதி வரை மின்னலாய்ச் செயற்பட்டவன், அந்த வீரத்தோடு மணலாற்றில் 'மின்னல்' தாக்குதலில் காடு காக்கப் புயலாய் மாறினான். மின்னலை அள்ளிச் சென்ற புயலில், குகநேசனையும் இயற்கை அன்னை அழைத்துக்கொண்டாள்.

☆

பிறப்பு :
17. 06. 1972

வீரச்சாவு :
02. 09. 1991



## பரணி

( மின்னல் )
(பரஞ்சோதி புவனேஸ்வரன்)
கோபாலபுரம்,
நிலாவெளி.

பரணியின் தந்தை ஒரு தச்சுத்தொழிலாளி. மரங்கள் அரிவதும் தளபாடங்கள் செய்வதும்தான் அவனது ஓயாத பணி. தந்தையின் திறமை தனயனுக்கு இருப்பதில் வியப்பு இருக்கமுடியாது. குச்சவெளிக்காட்டில் எங்கெங்கு நல்ல மரங்களுண்டு எனத் தேடிப்பிடிப்பதற்காக, காடுமுழுவதும் பரணி அலைந்தான். இதனால், குச்சவெளிக் காடு அவனுக்குக் காடுபோல் தெரியவில்லை. இளம் வயதில் இருந்தே தந்தையுடன் காடுசென்று வந்ததால் காட்டு அனுபவம் அவனிடம் நிறையவே வளர்ந்திருந்தது. அது பிற்காலத்தில் தன்னைக் காப்பதற்கு எந்தளவு துணையாயிற்று என்பதைப் போராட்டகாலத்தில் உணர்ந்து கொண்டான்.

கும்புறுப்பிட்டியில் பயிற்சிப்பாசறை ஒன்றில் களத்துக்கான பயிற்சியை எடுத்துக்கொண்டிருந்தபோது, அப்பயிற்சிப்பாசறை இந்திய இராணுவத்தால் சுற்றிவளைக்கப்பட்டது. முற்றுகையில் இருந்து காட்டுக்குத் தப்பியோடிய போது, பரணியே வழிகாட்டியாக மாறினான். அந்தநாளில் பரணியின் வழி காட்டலே போராளிகள் பலரின் உயிரைக் காத்தது.

1989ஆம் ஆண்டு மணலாற்றுக் காட்டுக்கு வந்த பரணி, அதிரடிப்பயிற்சிகளை முடித்துக்கொண்டான். காடு அவனுக்கு துன்பமாக அமையவில்லை.

இயக்கத்தில் விசுவாசமாய் - தலைவனின் சிறந்த வளர்ப்பாய் - சண்டைகளில் சாதனைகள் செய்யத் தொடங்கினான். கிளிநொச்சி படைமுகாம் மீதான தாக்குதல், பரந்தனில் தப்பியோடிக்கொண்டிருந்த இலங்கைப்படையுடனான சண்டை, முல்லைத்தீவு சிங்களப்படை முகாம் மீதான முற்றுகைத் தாக்குதல் என்பவற்றில் எல்லாம் கனரக இலகு இயந்திரத் துப்பாக்கியுடன் நின்று சண்டை செய்தான். தலைவனைக் காத்தளித்த காட்டினை தன் தாயினும் மேலாக நேசித்த வில்மட், 'மின்னல்' தாக்குதலில் இராணுவம் சதீஸ் முகாம் வரை முன்னேறியபோது, தன்னை மறந்து காட்டினைக்காக்க முற்பட்டான். காடு எங்களின் இரும்புக்கவசம் என்பதை உணர்த்திய அச்சண்டையில்தான், வில்மட் வீரமரணத்தைத் தழுவிக்கொண்டான்.

வில்மட்டினை என்றும் மறக்கமுடியாத இரண்டு வீரச்செயல்கள் உண்டு. 1990ஆம் ஆண்டின் இறுதியில், மணலாற்றுக் காட்டின் மீது முதன்முதல் குண்டுவீச வந்த அவ்ரோ விமானம் வில்மட்டின் துப்பாக்கி சூட்டுக்கு இலக்கானது. குண்டுபட்டு புகை கக்கியவிமானம், ஏற்றிவந்த பீப்பாய் குண்டுகள் அனைத்தையும் கடலில் தள்ளிவிட்டு, விரைந்து சென்றது.

இன்னுமோர் சம்பவம், நாயாற்றின் பிரதானவீதியில் நடந்தது. விசேட தளபதி தனது மொட்டை ஜீப் வண்டியில் சென்று கொண்டிருந்தார். கெலிக்கொப்ரர் ஒன்று ஜீப்பைப் பின்தொடர்ந்து, தாக்குவதற்காகப் பதிந்தது. ஜீப்பின் பின்னே இருந்த வில்மட் இதனைக் கண்டுவிட்டான். சடுதியாக அவனின் இலகு இயந்திரத் துப்பாக்கி இயங்கியது. குண்டுபட்ட கெலிக்கொப்ரர் உயர எழுந்து சென்றது. இல்லையேல் அன்று மணலாற்று மண், தங்களின் சிறப்புத் தளபதியை இழந்திருக்கலாம். தன் நிதானத்தாலும், அவதானத்தாலும் வில்மட் எல்லோர் மனதிலும் நிறைந்து நிற்கின்றான்!

☆

அனுபவம் அவனது விடுதலைப் பணிக்கு வழிகாட்டியது. ஆபத்தும், அலைச்சலும், அவசியமுமான வேவுப்பணியில் இணைக்கப்பட்டான். பரணி காட்டில் ஒரு இடத்துக்கு ஒருமுறை சென்றால் போதும், அந்த இடத்தையும் இடக் குறிப்பையும் மறக்கவே மாட்டான். எப்பொழுது வேண்டுமானாலும் குறிப்பிட்ட இடத்திற்கு, திசைகாட்டியின் உதவி இல்லாமலே போய்ச் சேருவான்.

காட்டினைக் கைப்பற்ற நினைத்த இலங்கை இராணுவ 'மின்னல்' நடவடிக்கையின்போது, எம் படையணிகளைக் காட்டில் வழிநடத்திச் சென்றசமயம், எதிரியின் செல்வீச்சுக்கு இலக்காகி மரணத்தைத் தழுவிக்கொண்டான். ☆

பிறப்பு:
01. 06. 1970

வீரச்சாவு:
02. 09. 1991



# லெப். இந்திரன்

(மின்னல்)
(மரியதாஸ் மரியலூயிஸ்)
8ஆம் வட்டாரம்,
சாம்பல்தீவு,
திருமலை.

இந்திரன் தன் பதினாறாவது பிராயத்தில் விடுதலைப் போருக்கு தன்னைத் தயாராக்கிக்கொண்டான். சாம்பல்தீவுக் கிராமத்தில் இருந்து புறப்பட்டு பயிற்சிக்களம் சென்றான்.

பயிற்சி முடித்து துப்பாக்கி பிடிப்பதற்கே அனுபவங்கள் தேவை! ஆனால், இந்திரன் பயிற்சி பெறும் போதே துப்பாக்கி ஏந்தவேண்டிய நெருக்கடியான நிலைகள் ஏற்பட்டன.

இவன் பயிற்சி பெற்ற பாசறை, பலமுறை இந்திய இராணுவ சுற்றி வளைப்புக்குள்ளானது. அப்போதெல்லாம் இந்திரனுக்கு 303 ரக துப்பாக்கி வழங்கப்பட்டது.

மணலாற்றுக்கு வந்தகாலத்தில் இதைப்பற்றி அடிக்கடி சொல்லுவான். 'ஓமர்முக்தாரின்' ஞாபகம்தான் தனக்கு நினைவு வருமென்று சொல்லிச் சிரிப்பான். மணலாற்றுக்கு வந்ததும் மிதிவெடி சம்பந்தமான பயிற்சியைச் சிலகாலம் பெற்று, அதன் பின் மிதிவெடி செய்யும் பணியில் ஈடுபட்டான்.

சோர்வற்ற உழைப்பும் உற்சாகமும், கொடுத்த பணியை கச்சிதமாய் முடிக்கும் பண்பும், பிறர்க்குதவும் மனப்பாங்கும் இவனின் வளர்ச்சிக்கு அடிகோலின. மிதிவெடி செய்யும் முகாமிற்குப் பொறுப்பாக நீண்ட நாட்கள் இருந்தவன்.

'ஒப்பறேசன் மின்னல்' நடவடிக்கை ஆரம்பமான காலத்தில் இந்திரனின் தலைமையிலான அணி 'சுகந்தனில்' வைத்து இராணுவத்துடன் கடுஞ்சண்டையில் ஈடுபட்டது. அன்றைய சண்டையில் இராணுவத்தினர் பின் வாங்கி ஓடினர். சண்டை முடிந்த அன்று மாலை, ''ஆமி கத்திக் கத்தி ஓடுறான் மச்சான். காட்டுக்குள்ளே வாறதண்டா நாங்களேன் இஞ்ச இருக்க வேணும். சேட்டையா விடுறார்'' என்று கூறிச் சிரித்தான். மணலாற்றுக் காட்டில் அவன் வைத்திருந்த பற்றினை இவனின் வார்த்தைகள் கோடிட்டுக் காட்டின. மீண்டும் மறுநாள் சண்டை ஆரம்பமாகியது. 'சுகந்தன் பாசறையில் சண்டை கடுமையாக நடைபெற்றுக்கொண்டிருந்தது. காலை பத்து மணிவரை இந்திரனின் குரல் 'வோக்கி ரோக்கியில்' ஒலித்துக்கொண்டிருந்தது. அதன்பின்......!

☆

பிறப்பு:
02. 10. 1969

வீரச்சாவு:
16. 09. 1991



# ஈஸ்வரன்

( மின்னல் )
(புஸ்பராசா கஜேந்திரன்)
சித்தங்கேணி,
வட்டுக்கோட்டை.

தமிழர்களின் தலைவிதியை, தமிழர்கள் ஒருகாலத்தில் கூடித் தீர்மானித்த வட்டுக்கோட்டை ஈஸ்வரன் பிறந்தமண். மணலாற்றில், பதினோராவது பயிற்சிப் பாசறையில் தனது பயிற்சியை முடித்துக் கொண்டான். மிதிவெடி பற்றிய நுட்பத்தில் அதிக ஆர்வமுடனிருந்ததால், அப்பணியிலேயே முழுமையாகத் தன்னை ஈடுபடுத்திக்கொண்டான்.

எதிரியின் முன்னேற்றத்தைத் தடுக்கும் புலிகளின் இம் மிதிவெடித்திறனுக்கு, உலகின் மிகப்பெரிய இராணுவங்களில் ஒன்றான இந்திய இராணுவமே கதிகலங்கியது.

' சிலோன் தியேட்டர்ஸ் ' இராணுவ முகாமுக்கு அருகே, ஒரு தடவை மிதிவெடி வைக்கும்போது, எதிரி கண்டு சுடத்தொடங்கினான். ஈஸ்வரன் பதற்றப்படவில்லை. துப்பாக்கிக் குண்டுகளுக்கு உச்சி, வைத்த மிதிவெடிகளை மூடிமறைத்துவிட்டுத் திரும்பினான்.

ஆனையிறவுச் சமர் நடந்தகாலத்தில், இரவு பகலாக இப்பணியில் ஈடுபட்டான். எந்தநேரமும் சுறுசுறுப்புடன் செயற்படும் ஈஸ்வரன் பாட்டுப் பாடுவதிலும் வல்லவன்; புதிதுபுதிதாகத் தானே இயற்றிப் பாடல்களைப் பாடுவான். இறுதியில், ஒருமாத காலமாக நடந்த ' மின்னல் ' நடவடிக்கையில் இராணுவ முன்னேற்றத்தைத் தடுக்க மிதிவெடி வைத்துக் கொண்டிருக்கையில், செல்வீச்சில் மரணத்தைத் தழுவினான். ☆

பிறப்பு:
08. 1972

வீரச்சாவு:
02. 09. 1991



# நடேசதேவன்

( மின்னல் )
(தும்பிராசா ஏரம்பமூர்த்தி)
காந்திபுரம்,
திருப்பழுகாமம்,
மட்டக்களப்பு.

மட்டக்களப்பில் காந்திபுரம் கிராமத்தில் இருந்து மணலாற்றுக்கு வந்து, உயிர்தந்தவன் நடேசதேவன். பயிற்சி முடித்து சுகந்தன் பாசறைக்குச் சென்றான். சென்றதும் களம். 'ஒப்பறேசன் மின்னல்' நடவடிக்கையின் ஆரம்ப நாள். இராணுவம் நகர்வதை அவதானித்த வீரர்கள் நித்திகைக்குளக் காட்டில் நிலையெடுத்துக் கிடந்தனர்; இராணுவத்தை நெருங்கவிட்டு அடிகொடுக்க வென்று காத்திருந்தனர். எதிர்பார்த்தது ஒன்று; நடந்தது மற்றொன்று.

நாலாயிரத்துக்கு மேற்பட்ட இராணுவத்தை பத்துப் பதினைந்து பேர் எதிர்கொண்டனர். அகோரச் சண்டை, அபாரத்துணிவு. முன்னேற முடியாத இராணுவம் தரித்து நின்றது. தியாகங்களோ உயர்ந்து நின்றது. நடேசதேவன்...... றோகின்ராஜ்......என எத்தனை வீரர்கள்.... அடுத்தடுத்து......!

☆

பிறப்பு:
25. 08. 1976

வீரச்சாவு:
16. 09. 1991




## கல்கத்

( மின்னல் )
(மார்க்கண்டு மதனரூபன்)
விக்கினேஸ்வரா வீதி,
புத்தூர் கிழக்கு,
யாழ்ப்பாணம்.

'மின்னலிலிருந்து' காட்டைக் காத்த வேங்கைகளில் கல்கத்தும் ஒருவன். வீட்டில் மதனரூபன் என நாமரூபம் பெற்றவன். தாய்க்குத் தலைமகன். தங்கையொருத்திக்கும் தம்பியர் இருவருக்கும் அண்ணன் இவன். புத்தூரிலிருந்து புயலாய்க் கிளம்பிய புலியிவன். மகனின் கல்வி உயர்வை நாடிநின்றார் தந்தை. புத்தூர் கிழக்கிலிருந்து யாழ். மத்திய கல்லூரிக்கு கல்விபயில அனுப்பப்பட்டான். தந்தை அவன் கல்வி உயர்வைத் தேட, அவனோ நாட்டு விடுதலையைத் தேடி ஓடினான். உலகமறியாத கட்டுப்பாட்டுடன் தந்தை தன்னை வளர்க்க முற்படுவது அவனைச் சினத்துக்குள்ளாக்கியது. அதனையும் மீறி புலிக்களத்தில் புகுந்தான்.

1990 ஆம் ஆண்டு தைத்திங்களில் மணலாற்றில் பயிற்சியினை முடித்து, மருத்துவப் பிரிவில் விடுதலை வரலாற்றை ஆரம்பித்தான். உயிர்காக்கும் உத்தமபணி; உயிரூட்டும் உன்னத பணி; தலைவிதியை நிர்ணயிக்கும் நிதான மானபணி. சலிப்பின்றி செயற்படத் தொடங்கினான் கல்கத்.

மருத்துவத் திறமையுடன் அழகியல் திறமையும் இவனிடமிருந்தது. பார்த்த காட்சியை அப்படியே உயிரோட்டமுள்ள சித்திரமாக வரைந்துவிடு

வதில் வல்லவன். மாவீரர் உருவங்களைத் தத்ரூபமாக வரைந்துவிடுவான். தான் வரையும் எந்தப் படத்திலும் இயற்கைக் காட்சி ஒன்றையும் வரைந்து கொள்வான். இயற்கைக் காட்சிகளில் இவனுக்கிருந்த ரசிகத்தன்மையை இது எடுத்துக்காட்டியது. பாசறைகளில் குப்பையில் போடும் கழிவுப் பொருட்களை எடுத்து பூ, பறவைகள், மீன் போன்ற அழகிய உருவங்கள் செய்வான். மனதில் எதையும் மூடி மறைக்கும் பண்பு இவனிடமிருந்ததில்லை: எப்படிப்பட்ட பிரச்சினையாக இருந்தாலும் நேரடியாகக் கேட்டுவிடுவான். தன் குறும்புத் தனங்கள் சிலவற்றுக்காக தண்டனைகளைக் கூட பெற்றிருக்கின்றான்.

இயக்கத்துக்கு வந்தபின் தனது பிறந்த மண்ணுக்குச் செல்லாதது அவனது மனக்குறையாக இருந்தது. மணலாற்றில் 'மின்னல்' தாக்குதலை முறியடிக்க யாழ். மண்ணிலிருந்து வந்த அணிகளில், தன் உறவினர்கள் சிலரைக் காணும் வாய்ப்புக் கிடைத்தது.

அவர்களிடமிருந்து, தாய் எழுதிய கடிதமொன்று அவனுக்குக் கிடைத்தது. "உன் இலட்சியப்பாதைக்கு நாம் தடையாக இருக்கமாட்டோம்; ஆனால் ஒருமுறையாவது எம்மை வந்து பார்த்துவிட்டுச் செல்லு. எம்மை விட்டுப் பிரிந்து இரண்டு ஆண்டுகளாகிவிட்டன; உன்னை ஒருதடவை பார்க்க ஆசையாகவுள்ளது" என்று அவனின் தாய் எழுதியிருந்தாள்.

களத்தில் நின்று கடிதம் படித்த கல்கத், "அம்மாவைக் காணும் வாய்ப்புக் கிடைத்தால் சொல்லுங்கோ, மணலாற்றைக் காக்கும் போர் நடக்கிறது; களத்தில் நிற்கிறேன்; போர் முடிந்தபின், உயிருடனிருந்தால், நிச்சயமாக உங்களை வந்து பார்ப்பேன் என்று சொன்னதாக" உறுதிமொழி கூறிவிட்டு, சண்டையில் இறங்கினான். தன்னைவிடப் பெரிய போராளிகளையெல்லாம் ஓடி ஓடித் தூக்கிவந்து சிகிச்சை கொடுத்துக்கொண்டிருந்தான். ஈற்றில் தனக்குச் சிகிச்சை கொடுக்க இடமளிக்காமலே மரணத்தைத் தழுவிக்கொண்டான். உறுதிமொழியோடு அவன் உடல் மட்டுமே பயணமானது! ☆



பிறப்பு:
27. 02. 1967

வீரச்சாவு:
02.09. 1991




# றோகின்ராஜ்

(மின்னல்)
(சின்னத்தம்பி புஸ்பராசா)
தும்பங்கேணி,
மட்டக்களப்பு.

மட்டக்களப்பில் பழுகாமம் என்ற கிராமமே றோகின்ராஜின் பிறந்தமண். இவனின் உடன்பிறப்புக்கள் ஐவர். அண்ணன் ஒருவனை இலங்கை இராணுவத்தினரும் தேசத்துரோகிகளும் பிடித்துச் சென்று வெட்டிக்கொன்றமை, இவனது உள்ளத்தில் தணலாய்க் கொதித்தது. வீட்டு வறுமையை நீக்க தும்பங்கேணி கிராமத்துக்குச் சென்று, இளைஞர் விவசாயத்திட்டத்தில் வயற் செய்கையிலிறங்கினான். தமையனை வெட்டிக் கொன்றமை அவன் மனத்தில் தினமும் எழுந்து வருத்திக்கொண்டிருந்தது.

'இரண்டாவது ஈழப்போர்' தொடங்கியபோது மட்டக்களப்பின் பல கிராமங்களில் தமிழர்கள் வெட்டிக்கொல்லப்பட்டதும், வீடுகள் சூறையாடப்பட்டு எரிக்கப்பட்டதும், பாலியல் வன்முறைக்குப் பெண்கள் ஆளானதும் இவனது விடுதலை உணர்வைத் தூண்டிவிட பயிற்சிக்கெனப் புறப்படும்போது, தாய் அவனை மன்றாடித் தடுத்தாள். ''அம்மா, முன்வைத்த காலைப் பின் வைக்கான் உங்கள் மகன் என்பது உங்களுக்குத் தெரியும்'' என்று கூறிவிட்டுப் பயணமானான். வெருகல் முகத்துவாரத்தில் இருந்து மணலாறு நோக்கி எட்டு நாட்கள் இரவு பகல் பயணம். காயமடைந்த போராளிகளையும் தூக்கிக் கொண்டு செல்லும் பாதையில், மூன்று தடவைகள் இராணுவத் தாக்குதலை

எதிர்கொள்ளவேண்டி ஏற்பட்டது. ஒரு தாக்குதலில் றோகின்ராஜும் மற்றும் சிலபேரும் காட்டில் திசைமாறிப் போய்விட்டனர். மூன்று நாட்கள் தண்ணியோ, உணவோ இன்றித் தவித்தனர். இத்தனைக்கும் சுமந்துகொண்டு வந்த போராளியைக் கைவிடாது தூக்கிக்கொண்டே அலைந்தனர். எட்டு நாட்களிலும் மூன்று முறை சாப்பிட்டிருந்தனர். இந்தப் பயணமே றோகின்ராஜின் உறுதியை நிலை நிறுத்தியதுடன், சகிப்புத்தன்மையினையும் வளர்த்திருந்தது. பயிற்சி முடித்த காலத்தில் இருந்து, எங்காவது சண்டைக்குச் சென்று சிங்கள இராணுவத்தை அழிக்க வேண்டுமென்ற மனக்குமுறலோடுதான் இருந்தான்.

உயரத்தையும், தோற்றத்தையும், பழகும் பண்பையும், கொண்டு போராளிகள் இவனை அன்னை என்றே அழைப்பார்கள். றோகின்ராஜின் ஆசையைத் தணிக்க முதற்சண்டை கிடைத்தது. 'மின்னல்' சண்டை அவனின் முதற் சண்டையாகவும், இறுதிச்சண்டையாகவும் இருக்குமென நினைத்ததில்லை. ஆனால் தன் ஆசைதீர எதிரியைத் தன் கண்முன்னே சுட்டழித்தது அவன் ஆத்மாவை அமைதிகொள்ள வைத்திருக்கும்!

☆

பிறப்பு:
21. 04. 1972

வீரச்சாவு:
16. 09. 1991



# லெப். டொமினிக்

(மின்னல்)
(நடேசன் குமரேசன்)
நீர்வேலி வடக்கு,
யாழ்ப்பாணம்.

லெப். கேணல் பொன்னம்மான், லெப். கேணல் ராதா, லெப். கேணல் திலீபன், மேஜர் காண்டீபன், மேஜர் அழகன்...... என யாழ். இந்துக்கல்லூரி தந்த புதல்வர்களின் வரிசையில் டொமினிக்கும் ஒருவனாய்...... டொமினிக்கைப் பற்றி எனக்கு அதிகம் தெரியாமல் இருக்கலாம். அவன் குடும்பநிலை பற்றி அறவே தெரியாமல் இருக்கலாம். ஆனால் அவனை விடுதலைப்போருக்கு உந்திய சக்தியை, அவனின் வீரஉணர்ச்சிகளை எனக்குப் புரியும்.

யாழ். இந்துவில் எங்கிருந்தோ வந்த நான் ஆறாம்வகுப்பில் அவனைச் சந்தித்தேன். அங்கே நண்பன் என்று நான் பழகியது டொமினிக் தான். புலமைப் பரிசில் தேர்வுதான் யாழ். இந்துவுக்கு அவனையும் என்னையும் கொண்டு வந்தது. திறமையின் அத்திவாரங்கள் அன்றே அவனுக்கிருந்தது.

''மச்சான் நாங்கள் எவ்வளவு கஷ்ரப்பட்டிருக்கிறம். எங்களைப் படிக்க வைக்க அம்மா, அப்பா எவ்வளவு கஷ்ரப்படுகுதுகள். ஆனால் ஒரு செல்லாலையோ, துப்பாக்கி ரவையாலையோ அதுகளின்ர கனவெல்லாம் சிதறிப்போகுது. இதை உணர்ந்து கொண்டும் எங்களுக்கொரு படிப்புத் தேவையா? நாங்கள் நிம்மதியாக படிக்கமுடியாவிட்டாலும் நாளைக்கு எங்கட தலைமுறையாவது துன்பப்படாமல் படிக்கோணும்'' என்று அவன் அடிக்கடி சொன்னபோது,

அதன்பொருளை நான் விளங்கிக்கொள்ள முற்படவில்லை. இந்திய ஜவான்களாலும், தேசவிரோதிகளாலும் மாணவர்கள் பலர் கொல்லப்பட்டுக்கொண்டிருக்கும்போது, ஓ / எல் பரீட்சைமுடிவுகள் வந்திருந்தன. ''என்ன, பரீட்சை முடிவைப் பார்த்தால் உயிரியல் செய்யிற பிளான்போல கிடக்குது'' எனக்கூற, ''உயிருக்கே உத்தரவாதமில்ல, உயிரியல் என்ன வேண்டிக் கிடக்கு?'' - இது அவனோடு நண்பனாயிருந்து பிரிந்தபோது கிடைத்த கடைசிவார்த்தை. அதன் பின் அவனை நான் நீண்ட நாட்கள் காணவில்லை.

மணலாற்றில் பயிற்சிக்காய் வந்து நின்றபோது, ''இவர்தான் உங்கட பயிற்சி மாஸ்ரர் டொமினிக்'' என்றனர். நிமிர்ந்து பார்த்தேன். அவனே தான்!......

''அடேய் எப்படா வந்தாய்?'' பழைய நட்பின் புதிய விசாரணை. நண்பனிடம் பயிற்சி பெற்ற பாக்கியசாலி நான். ஆனால் தியாகத்தாலும், திறமையாலும் அவன் உயர உயரச் சென்றுவிட்டான். மணலாறு ஐந்தாவது பாசறையில் பயிற்சி முடித்ததும், சலிக்காமல் பொருட்கள் சுமந்ததும், பயிற்சியின் திறமையால் ஆசிரியனாய் நின்றதும் அவனைப் பற்றி மற்றவர்கள் சொன்ன கதைகள்.

மணலாற்றில் 13ஆவது பயிற்சிப் படையணியைத் தனித்து நின்று உருவாக்கியவன் நீ.

மேஜர் சங்கர் தலைமையில் தொடங்கிய சாம்பன்குள மினிமுகாம் தகர்ப்புச் சண்டையில் இருந்து 'மின்னல்' வரை சந்திக்காத சண்டை ஏது? உனக்குத்தரப்பட்ட பணிகளில் தளபதியின் மனம் நிறைவாகாமல் செய்த பணியென்று எதுவுமுண்டா......? இல்லை. ஆனால், நீ தான் இன்று கண்முன் இல்லை; 'மின்னலில்' பறிக்கப்பட்டுவிட்டாய்! ☆

பிறப்பு:
07. 10. 1972

வீரச்சாவு:
24. 09. 1991



## 2ஆம் லெப். திலீபன்

( மின்னல் )
( ஜெகநாதன் கௌதமன் )
பெரியகல்லாறு-01,
மட்டக்களப்பு.

பெரியகல்லாறு. இதுதான் திலீபன் பிறந்த கிராமம். க. பொ. த. சாதாரணதர வகுப்புவரை மட்டக்களப்பு மத்திய கல்லூரியில் கல்விபயின்றான். இவனின் தந்தை மேசன் தொழிலில் வல்லவர். தொழில் வல்லமை இருந்தும் வறுமையின் வல்லமையே அவர்களின் வீட்டை ஆக்கிரமித்திருந்தது. வறுமையை எப்படியாவது போக்கிவிடவேண்டுமென்ற விருப்பில் திலீபனின் தாய் வெளிநாடு புறப்பட்டாள். தாயைப் பிரிந்தவன் - தாய்நாட்டை காக்கப் பயணமானான். தனக்காகத் தாய் உழைப்பதைவிட, தாய்நாட்டுக்காக தான் உழைப்பது மேலென நினைத்துப் புறப்பட்டான்.

இலகுவில் எதையும் கிரகித்துவிடும் வல்லமை இவனுக்கிருந்தது. பள்ளிப் படிப்பும் இவனின் அறிவை வளர்த்திருந்தது. மீனின் குஞ்சுக்கு நீந்தக் கற்றுக் கொடுக்கவேண்டியதில்லைத்தானே ! திலீபனும் தச்சுத்தொழில், மேசன்தொழில் என அனைத்துத் தொழிலிலும் வல்லவனாக இருந்தான்.

மணலாற்றுக் காட்டில் பயிற்சியை முடித்தான். தொழில் திறமையும் வாழ்வின் வறுமையும் பயிற்சியை இலகுவாக்கியது. பாசறைகள் பல அவன் கைவண்ணத்தில் உருவாகத் தொடங்கின. பாசறைகளில் சீமெந்து வேலை மட்டுமன்றி மரவேலைகளையும் செய்து கொண்டான்.

காட்டுக்கு வரும்போதே திலீபனின் கையில், லெனினின் தத்துவங்களடங்கிய மிகப்பெரும் புத்தகமொன்றிருந்தது. படிப்பதில் அந்தளவு ஆர்வம் அவனுக்கு.

''இந்தப் பெரிய புத்தகத்தை எப்பதான் படிச்சு முடிக்கப் போறியோ'' என்று சகபோராளிகள் கிண்டல் செய்வார்கள். திலீபனிடம் உயரிய பண்பொன்றிருந்தது. எந்த உணவுப்பண்டம் கையில் கிடைத்தாலும், அருகில் இருப்பவர்க்குப் பகிர்ந்து கொடுத்தே உண்பான். மட்டக்களப்பு மண்ணின் விருந்தோம்பல் பண்பு இது. 'மோட்டர் செல்' தாக்குதலணியின் உதவியாளனாக இருந்த காலத்தில், ''அடுத்த பொறுப்பாளன் நீதான் மச்சான்'' என்று சொன்னால் தன்னைக் கேலி செய்வதாக நினைத்துச்சிரிப்பான். உண்மையில் அவனையே பொறுப்பாக்கும் சிந்தனை தளபதியிடம் இருந்ததை அவன் நம்பியதில்லை.

திலீபனைக் காவுகொண்ட சண்டை 'மின்னல்'. லெப். கேணல் திலீபன் உயிர்நீத்த அதேதிங்களில், தன்னையும் மணலாற்றுக்கு அர்ப்பணித்துக்கொண்டான். சண்டைக்குச் செல்வதற்கு சற்று முன்னர்தான், தன்னுடன் கொண்டு வந்த லெனினின் புத்தகத்தையும் படித்து முடித்தான். புத்தகத்தின் இறுதி வரிகள் படித்து முடித்த அதேநாளில், அவனின் வரலாற்று வரிகள் பதிக்கப்படுகின்றன !

☆

பிறப்பு:
03. 11. 1970

வீரச்சாவு:
16. 10. 1991



# லெப். வசந்தன்

(மின்னல்)
( நடராசா ரவீந்திரன் )
மன்னார் வீதி,
வவுனியா.

தமிழீழ யுத்தத்தில் எல்லையோரக் கிராமங்களின் பங்குப்பணி அளவுக் கதிகமானது. சிங்களத்தின் ஆக்கிரமிப்புப் பசிக்குள் அகப்பட்டுப் போனதும் இக்கிராமங்கள்தான். வீரம்மிக்க, துணிச்சலுள்ள போராளிகள் பலரைக் களத் துக்கு அனுப்பிய மண்ணும் இவைதான். இத்தகைய வரலாற்றுப் பின்னணி யோடு அமைந்த வளம்மிகு வவுனியாவின் கிராமமொன்றிலிருந்து புறப்பட்ட வன் வசந்தன்.

பள்ளிக்குச் செல்லும் வயதில் சுண்டிவில்லுடன் குருவியடிக்க காடுகள் சுற்றியவன். குறிதவறாமல் தன் சுண்டிவில்லுக்கு இரையாக்கிய குருவிகள் பல. அந்தத் திறமையை தன் விடுதலை வரலாற்றிலும் இவன் காட்டத் தவற வில்லை. 1987ஆம் ஆண்டு, இம் மண்மீட்பு யுத்தத்துக்கான பயிற்சியை முடித் துக்கொண்டு, மருத்துவப் பிரிவில் தன்பணியைத் தொடக்கினான்.

எடுத்த எடுப்பில் குறிதவறாமல் சுடும் திறமை இவனிடமிருந்தது. சிறப் புத் தளபதியின் மனதில் இடம்பிடிக்க இது ஒரு காரணமாகியது. இதனால் அவருடன் கூட இருந்து தன்னை வளர்த்துக்கொள்ளும் பேறு கிடைத்தது. இந்திய இராணுவத்திற்கெதிரான தாக்குதல் களங்கள் இவன் வளர்ச்சியை மேலும் உரமாக்கின.

மூயல்குத்தி தேசவிரோதிகள் அழிப்பு, முல்லைத்தீவு சிங்களப் படை முகாம் தாக்குதலென்பன இவன் திறமையைப் புலப்படுத்தியதால், ஆனையிறவுச் சமருக்கு அணியொன்றை வழிநடத்திச் சென்றான்.

மணலாற்றில் 'ஹயசேன - 02' இராணுவ நடவடிக்கையினை முறியடிப்பதற்காக, ஆனையிறவுச் சமரின் பாதியில் மணலாறு திரும்பினான். இராணுவ எத்தனத்தைக் கிள்ளி எறிந்த இச்சண்டையில் பலத்த காயங்களுக்குள்ளாகினான். யாழ்ப்பாணத்தில் சிகிச்சை பெற்றுவந்த காலத்தில், மணலாற்றில் 'மின்னல்' தொடங்கியது. காயம் ஆறும் முன்னரே களத்தில் புகுந்தான். 'மின்னலை' முறியடித்த சண்டையில், இறுதிவரை தன் அணியைச் சாதுரியமாக வழிநடத்தி சண்டை செய்தான்.

கப். சுபாஸ் மரணித்த இராணுவ வழிமறித் தாக்குதலும் வசந்தனின் திறமையைப் படம்போட்டது. 'மின்னல்' தோல்வியை மூடிமறைக்க 'மின்னல்-02' நடவடிக்கையை அடுத்த மாதமே சிங்களப் படை ஆரம்பித்தது. கோட்டக்கேணியிலிருந்து கொக்குத்தொடுவாய்க்கு நகர முற்பட்ட இராணுவ அணியைத் தாக்க தனக்குச் சந்தர்ப்பம் வழங்கவில்லையென்று, குழந்தைபோல் முரண்டுபிடித்தான். சிறப்புத்தளபதி அவன் ஆசைக்குத் தடைபோட விரும்பவில்லை.

வசந்தன் தன் அணியுடன் மகிழ்ச்சி பொங்கப் புறப்பட்டான். ''இந்தச் சண்டை எனக்கு இறுதிச் சண்டையாயிருந்தாலும் இருக்கும். இதோட நான் திரும்பி வரமாட்டனெண்டுதான் நினைக்கிறன்'' என்று சொல்லிப் புறப்பட்டான். அவன் வாய்ச்சொல் போல சண்டையின் முடிவில் அவனின் உடல் மட்டுமே திரும்பியது!

☆

பிறப்பு:
04. 03. 1970

வீரச்சாவு:
17. 09. 1991



# கப்டன் பீற்றர்

(மின்னல்)
(கணபதிப்பிள்ளை அரியநாயகம்)
முனைக்காடு,
கொக்கட்டிச்சோலை.

"தாடியண்ணோய், நான் ரத்தவெள்ளத்தில கிடக்கிறன், என்ர வீட்டைக் கவனிச்சுக் கொள்ளுங்கோ. நான்தான் படிக்கேல்ல, என்ர தங்கச்சியாக்களை யாவது படிக்க வைச்சிருங்கோ".

மரணத்தின் விளிம்பில் நின்ற பீற்றரின் கடைசி வேண்டுதல் இது. சில நிமிடங்களில் அவன் உயிர் போய்விடும். தனது வீட்டுக் கஷ்டத்தை இது வரைநாளும் மனதுக்குள்ளேயே அடக்கிவைத்திருந்தவன், தான் மரணிக்கப் போவது தெரிந்ததும் தன் மனக்கிடக்கையை வெளிப்படுத்திவிட்டான்.

புனித ஆத்மாக்கள் தாம் மரணிக்கப் போவதை முன்கூட்டியே அறிந்து கொள்கின்றன. பீற்றரின் போராட்ட வாழ்விலும் அந்த உண்மை புலப்பட்டது.

கொக்கட்டிச்சோலை. இதுதான் பீற்றரின் பிறந்தமண். காலத்துக்குக் காலம் நடந்த படுகொலைகள் இவன் மனதைத் தட்டி எழுப்பியபோது, களத்தில் நுழைந்தான். அன்றும் இன்றும், மண்விடுதலையை முழுமையாக நேசிக்கும் மக்களைக் கொண்டது கொக்கட்டிச்சோலை. அந்தக் கிராமத்தில் பிறந்ததற் காகப் பெருமைப்பட்டுக்கொண்டான் பீற்றர்.

பயிற்சிக்களத்தை மட்டக்களப்பிலேயே முடித்து யுத்தகளத்தின் பாதி வாழ்வையும் அந்த மண்ணிலேயே நிறைவுசெய்துகொண்டான். இந்திய இரா ணுவத்துக்கெதிரான சண்டைகள், தேசத்துரோகிகளை அழித்தொழிக்கும் நட வடிக்கைகள் அனைத்திலும் பங்கெடுத்து, 1989 ஆம் ஆண்டில் மணலாற்றில் கால்பதித்தான்.

தச்சுத்தொழிலில் சிறப்புத்தேர்ச்சி இவனுக்கிருந்தது. இதனால் பாசறைக்குத் தேவையான தளபாடங்கள், மிதிவெடிப் பெட்டிகள் என்பன செய்வதில் முழுமையாக ஈடுபட்டான். தொடர்ந்து அப்பணியிலேயே தன்னை வைத்திருக்காது சண்டைக்குச் செல்வதற்கும் சந்தர்ப்பம் தருமாறு விசேட தளபதியிடம் வேண்டிக்கொண்டான். அவன் விருப்பம் நிறைவேற்றப்பட்டது.

கட்டைக்காட்டுக்கு ( ஆ. க. வெ. ) சென்ற அணியில் பீற்றரும் ஒருவனானான். மணலாற்றிலிருந்து தாக்குதலுக்குப் புறப்பட்ட முதற்சண்டை இது. இச்சண்டையில் விழுப்புண் ஏந்தினான். கன்னத்தின் ஒரு பகுதியால் நுழைந்த துப்பாக்கிக்குண்டு மறுமுனையால் வெளியேறிச் சென்றது; இதனால் பற்கள் அனைத்துமே சிதறிப்போயின. யாழ்ப்பாணத்தில் தீவிர சிகிச்சை பெற்றுவந்தான். சிகிச்சைக் காலத்திலேயே மணலாற்றில் 'மின்னல்' நடவடிக்கை ஆரம்பமானது.

பீற்றரின் உடல் கொதித்தது; மணலாற்றுக் காட்டில் இராணுவம் நுழைய முற்படுகிறது என்பதைக் கேட்டதும், உள்ளமும் கொதித்தது. எழுந்து நடக்கமுற்பட்டான். அதிக குருதி வெளியேறியதால் உடல் தள்ளாடியது. ஆனால் படுக்கையில் கிடக்க அவனால் முடியவில்லை. கண்ணுக்குள் மணலாறு பறிபோவதுபோல் தெரிந்தது; நெஞ்சுக்குள் அசுர பலமொன்று ஏற்படத் தொடங்கியது. அடுத்தகணமே மணலாற்றுக்குப் பயணமானான்.

''காய்ச்சல் சுகம் வந்தபின் பற்களைக் கட்டு, அதன்பின் சண்டைக்குச் செல்வதைப்பற்றிச் சிந்திக்கலாம்'' என விசேட தளபதி சொல்ல, ''சண்டைக்கு நான் போகோணும். ஆமி காட்டுக்குள்ள வந்தாப்பிறகு பல்லை என்னத்துக்கு ? இந்த உயிர்தான் என்னத்துக்கு ? சண்டைமுடிய உயிரோட இருந்தால் பல்லைக் கட்டிக்கொள்ளுறன்'' என்று ஒரேபிடியாக நின்றான் பீற்றர். நாட்டின்மீது அவன் வைத்திருக்கும் பற்று தளபதியின் நெஞ்சை நெருடியது; வேதனையோடு அவனுக்குச் சில கட்டளைகளோடு விடைகொடுத்தார்.

''உள்ளே இறங்கி அடிபடவேண்டாம்; வெளியே நின்று உதவிகளைச் செய்'' - இதுதான் பீற்றருக்குச் சொல்லப்பட்டது. மறுகணம் பீற்றர் புறப்பட்டுவிட்டான். போகும்போதே, ''தாடியண்ணோய் வீட்டில் சரியான கஷ்ரம். நான் செத்தாலும் என்ர அம்மாவும் தங்கச்சிமாரும் கஷ்ரப்படாமல் உதவி செய்துபோடுங்கோ'' என வேண்டினான். மீண்டும் குற்றுயிராய், ரத்தவெள்ளத்தில் தளபதியை சந்தித்தபோது - தன் இறுதி வார்த்தைகளை, இதயத்தில் தேங்கிக்கிடந்த உணர்வுகளை வேண்டுதலாக்கி மரணித்தான். தன் தம்பியர்களில் ஒருவனாய்க் கருதி வளர்த்த அந்தப் போராளியின் வேண்டுதல், இன்றும் தளபதியின் நெஞ்சில் நெருப்பாய்...... ! ☆

பிறப்பு:
1972

வீரச்சாவு:
03. 09. 1991



## ஜமால்

(மின்னல்)
(பவித்துரை பாலசிங்கம்)
பன்குடாவெளி,
மட்டக்களப்பு.

''கோழிப் பொறுப்பாளர்'' என்று சொன்னால், மணலாற்றிலுள்ள போராளிகளின் கண்ணில் ஜமால் தெரிவான். இத்தனைக்கும் ஜமால் ஒரு பெரும் கோழிப்பண்ணையின் சொந்தக்காரனோ அல்லது தான் பிறந்த பன்குடாவெளியில் கோழிப்பண்ணை நடத்தியவனோ, போராட்ட வாழ்வில் கோழி வளர்ப்புக்குப் பொறுப்பாக இருந்தவனுமோ அல்ல. கோழி வளர்ப்பதில் ஆர்வம் சற்று அதிகமாக அவனிடம் இருந்தது. இதனால் தனக்குக் கிடைக்கும் ஓய்வுநேரங்களில் கோழி வளர்ப்பதில்- கோழிகளைப் பராமரிப்பதில் - ஈடுபடுவான்.

காட்டுக்கோழிகளைப் பொறிவைத்துப் பிடித்தல், முயல்களைப் பொறி வைத்துப் பிடித்தல், பன்றிக்குச் சுருக்கு வைத்துப் பிடித்தல், மட்டக்களப்பிலிருந்து மணலாற்றுக்கு நடந்துவந்த பதினெட்டு நாட்கள், அந்தநாட்களில் சந்தித்த துன்பங்கள் பற்றியெல்லாம் அடிக்கடி சொல்லுவான் ஜமால். பயிற்சி முடிந்த காலத்தில் நிகழ்ச்சி ஒன்றிலே, பாட்டாகக் கூட இதனை எழுதிப் பாடினான்.

முழத்துக்கு முழம் இருந்த இந்திய இராணுவ முகாம்களைக் கடக்கும் போது ஏற்பட்ட சண்டைகள், சண்டையின் போது சிதறி ஓடி காட்டில் மாறுண்டது, சாப்பாடு தண்ணியின்றி காட்டில் பட்டினி கிடந்தது எல்லாவற்றை

யும் தன்பாட்டில் அழகாக வெளிப்படுத்தினான். ஜமால் தங்கையருடன் கூடப் பிறந்தவன்; வீட்டு வறுமையை நீக்க ஓய்வின்றி உழைத்தவன். இயக்கத்தில் இருந்த காலமெல்லாம் வீட்டின் வறுமை பற்றி அடிக்கடி பேசிக்கொள்வான். இரவில் தூங்கிக்கொண்டிருக்கும்போது வாய்பிதற்றுவான். ''தங்கச்சி வயலுக்குப் போகோணும்; மண்வெட்டியை எடுத்துக் கொண்டுவா'' என்றெல்லாம் நித்திரையில் புலம்புவான். தாய், தங்கையர் மீது அளவற்ற அன்பிருந்தும் அதற்கு மேலாக மண்விடுதலையை நேசித்தான்.

பயிற்சி நடைபெற்ற காலத்தில் அடக்கமுள்ளவனாக, அமைதியானவனாக இருந்து நல்லபெயர் வாங்கியவன். பின்னர் அவன் செய்த குழப்படிகள் சொல்லிலடங்காதவை.

ஆனையிறவுச் சமருக்கு அணிகள் புறப்படத் தயாராகும்போது ஓடிவந்தான்; நானும் செல்லவேண்டும் எனப் பிடிவாதம் பிடித்தான். சிறப்புத்தளபதி அனுமதி மறுத்துவிட புறுபுறுத்துக்கொண்டு திரும்பி வந்தான்.

''மச்சான், உவையெல்லாம் போகினம், போகட்டும்; திரும்பிவாறதுக்கிடேல இஞ்ச எங்கயாவது அடிபட்டு, ஆமி கொஞ்சப்பேரை உயிரோட பிடிச்சுக் கொண்டுவந்து வச்சிருக்கோணும். போகட்டும் பாப்பம்'' என்று வேதனையோடு சொல்லிக்கொண்டான்.

காட்டினைக் காத்த புனிதப்போரும், மிகப்பெரிய இராணுவ நடவடிக்கையுமான 'மின்னலில்' மனமாரச் சண்டைசெய்து மரணத்தை அணைத்துக் கொண்டான் ஜமால்!

☆

பிறப்பு:
08. 08. 1968

வீரச்சாவு:
16. 09. 1991



## கப். சங்கிலி

( மின்னல் )
( கதிரமலை அமரசிங்கம் )
பண்டாரியாவெளி,
கொக்கட்டிச்சோலை.

விடுதலைப் போருக்கு - அன்றும்சரி இன்றும்சரி, போராளிகள் பலரைத் தந்த கிராமங்களில் கொக்கட்டிச்சோலையும் ஒன்று. சங்கிலி பிறந்து தவழ்ந்து விளையாடிய மண்ணும் அதுதான். கொக்கட்டிச்சோலையில் ஐந்தாம் வகுப்பு வரை படித்துவிட்டால் போதும், அதுவே உயர்ந்த படிப்பு. அதன்பின் வயல் வேலைக்கு தந்தைக்கு உதவியாகப் போய்விட வேண்டியதுதான். சங்கிலியும் இந்த உயர்கல்வியைக் கற்றான்; அதன்பின் ஈழப் போரில் இணையும்வரை வயலிலும், வரம்பிலும் துள்ளித் திரிந்தான்.

கொக்கட்டிச்சோலையில் காலத்திற்குக் காலம் நடந்த படுகொலைகள் விடுதலையுணர்வை அவனுக்கு ஊட்டின. கண்முன் சிங்களப் படையால் பெண்கள் பாலியல் வன்முறைக்கு உள்ளாக்கப்பட்டு பின் வெட்டிக்கொல்லப்பட்டதும் வீடுகள் எரிக்கப்பட்டு சாம்பரானதும், ஆண்களைப்பட்டோர் அழைத்துச் செல்லப்படுவதும், சென்றபின் காணாமற் போவதும் சங்கிலியின் குழந்தை மனதில் நெருப்பை மூட்டின. அடுத்து காணாமல் போகும் பட்டியலில் தான் அடங்கிவிடக் கூடாதென்பதில், ஜாக்கிரதையாக இருந்து வந்தான். இரவுகள், நிம்மதியற்ற திடுக்கிடும் நித்திரையுடனேயே கழிந்தன. 1988 வரை சங்கிலி இதனை அனுபவித்து, இயலாத நிலையில் பயிற்சிக்குப் புறப்பட்டான்.

1988 ஆம் ஆண்டில் பயிற்சியை முடித்து, மட்டக்களப்பிலே பல இந்திய இராணுவ தாக்குதல்களிலும் தேசத்துரோகிகளின் முகாங்களைத் தேடி அழிக்கும் பணியிலும் இனங்கொண்டு செயற்பட்டான். அதே ஆண்டின் இறுதியில் மணலாற்றுக்கு வந்தான்; வந்தநாள் முதல் வாகனச் சாரதியாகவே சலிப்பின்றி பணிசெய்தான்.

சங்கிலி போராளிகளின் நெஞ்சில் மட்டுமல்ல மணலாறு மக்களின் மனங்களிலும் நிறைந்து நின்றான். மணலாற்றில் எமது இயக்க வாகனங்கள் அனைத்திற்கும் அவனே பொறுப்பாக நியமிக்கப்பட்டான். சங்கிலியோடு பழகும் ஒவ்வொரு நிமிடமும் இனிமையானது. கல்வி அறிவு குறைவாக இருந்ததால் யாருடன் கதைக்கும் போதும், நீ என்ற சொல்லைப் பயன்படுத்துவான். அவனைப் பொறுத்தவரை உயர்ந்த, அன்பான, மரியாதைச் சொல்லாகவே இதைக் கருதினான்.

சங்கிலி சாப்பிடும்போது அருகால் யார் சென்றாலும், அவரை அழைத்து, சாப்பிடுவதில் பாதியைக் கொடுத்துண்ணத் தவறமாட்டான். போராளிகள் மீது அன்புடன், பாசத்துடன் பழக சங்கிலிக்கு நிகராக யாருமே இல்லையெனலாம்.

மணலாற்றில் இருக்கும் வீதிகள் ஆண்டுக்கொருமுறை திருத்தப்படும். இந்தத் திருத்த வேலைகளைத் தானே பொறுப்பெடுத்துச் செய்வான்; தவபதி மறந்தாலும் அவன் தன் கடமையை மறந்ததில்லை.

உறக்கம் மறந்து மணலாற்று மண்ணை நேசித்து உழைத்தவன் சங்கிலி என்றால், எவரும் மறுத்துக்கூறுவதற்கில்லை. சண்டைகளில் காயமுறும் போராளிகளை உடனுக்குடன் ஏற்றிவருவதும், செலியும் பொம்மரும் துரத்திவர அவர்களின் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டு ஓடி மறைவதும், திரும்பிக் காட்டுக்குச் செல்லும்போது உணவை ஏற்றிச் செல்வதும் முக்கியமானவை; அவை செய்வதற்குக் கடினமானவை. அந்தக் கடினமான பணியைச்சங்கிலி திறம்படச் செய்தான். ஒன்று சண்டைக் காலத்தில் களத்துக்கு உணவு கொண்டு செல்வது, மற்றையது அங்கிருந்து காயமுற்ற வீரரை ஏற்றிச் சிகிச்சைக்கு உரிய நேரத்தில் அனுப்புவது. ஆபத்தான இந்த இரு பணிகளையும் நிதானமாக விவேகத்துடன், வேகமாகச் செய்தான் சங்கிலி.

இறப்பதற்கு சில கணங்களுக்கு முன்னும் காயமுற்ற போராளியைக் காப்பாற்ற வேண்டும். தலைநிமிரமுடியாமல் செல் வந்து வீழ்ந்து வெடித்துக் கொண்டிருக்கிறது. எதுவும் செய்யமுடியாத நிலை. சங்கிலிக்கு தன் உயிரை விட, காயமுற்றுத் துடிக்கும் போராளியின் உயிர் மேலாகத் தெரிந்தது. ஓடிச் சென்று தூக்கிவந்து வாகனத்தில் ஏற்றினான்; மறுகணம் பாய்ந்து ஏறி இயக்கினான் வாகனத்தை. அடுத்தகணம், அருகே செல் வீழ்ந்து வெடிக்கிறது. (ஸ்ரேரிங்கில்) தலை கவிழ்ந்தபடி கிடந்தான் சங்கிலி.

வாகனம் இரைந்து கொண்டே நின்றது!

☆

பிறப்பு :
11. 06. 1975

வீரச்சாவு :
02. 09. 1991



# செந்தூரன்

( மின்னல்)

(முருகேசு சுபாஸ்கரன்)

31, வன்னியர் வீதி,
அன்புவழிபுரம்,
திருமலை.

அன்புவழிபுரம். அழகிய தமிழ்ப் பெயர். பெயருக்கேற்ப தமிழ்க் குடிகளையும் அக்கிராமம் கொண்டிருக்கத் தவறவில்லை. ஆனால் இன்று..... சிங்கள ஆக்கிரமிப்பு வட்டத்துள் சிக்கி - அழகிழந்து - வன்முறை புரமாக மாறிப்போய்விட்டது. பொருள் பண்டமிழந்து, வீடிழந்து, பிறந்த மண்ணே அபகரிக்கப்படும்போது அதைப் பார்த்து வாழாதிருக்கின்ற இளைஞர்கள் எத்தனைபேர்! தாயைத், தங்கையைக் கதறக்கதறப் பிடித்து வன்முறைக்குட்படுத்தியபோதும் அதனைக் கண்டு உணராத ஊர்சுற்றிகள் எத்தனைபேர்!

செந்தூரன் சின்னக்குழந்தை. பன்னிரண்டு வயதுகூட நிறையவில்லை. கால்கடுக்க நடந்துகொண்டிருந்தான். மணலாறு நோக்கி நீண்டு செல்லும் காட்டுவழியில் ஒருவர் பின் ஒருவராய் நூற்றுக்கு மேற்பட்ட இளைஞர்கள். மணலாற்றினை அண்மிக்கும் போது அத்தொகை பாதியாய்க் குறைந்திருந்தது. மலைபோல் வளர்ந்திருந்த பல இளைஞர்கள் இயலாமையினால் திரும்பி விட்டனர். செந்தூரன் இயலாமையைப் பற்றிச் சிந்திக்கவில்லை. பயிற்சியை முடிப்பதும், துப்பாக்கி பிடிப்பதும், சிங்களக் காடைக்கும்பலைச் சுட்டுத் தள்ளுவதுமே கண்முன்னே தெரிந்தது. மழையினை, வெயிலினை,

குளிரினை, நுளம்புக்கடியினை அவனுடல் எப்படித் தாங்கப்போகிறது! அம்மாவின் சேலைத்தலைப்புக்குள் போர்த்திக்கொண்டு நித்திரை கொள்ளும் வயதில்.....

பொறுப்புடன் பயிற்சி முடிந்தவர்களில், குழந்தையான செந்தூரனே முகாமில் நின்றான். சண்டைகளுக்குச் செல்ல அவனது வயதும், பலமும் போதாது. சில வருடங்கள் உருண்டன. முல்லைத்தீவு முகாம் முற்றுகைக்காகப் புறப்பட்ட மணலாற்று அணியில், தன் தத்துநடையின் சுவடுகளைப் பதித்துக்கொண்டான். மணலாறு சந்தித்த மிகப்பெரும் 'மின்னல்கீற்றி' ல் செந்தூரன் துப்பாக்கி தூக்கி நின்றான். 'காட்டினுள் ஒரு அடிகூட இராணுவத்தினர் வைத்துவிடக்கூடாது; தன் சாவின் பின் தான் அவன் உள்ளே நுழையமுடியும்' என்ற வேகத்துடன் சண்டைசெய்தான். அவனது வேகம் எதிரியை ஓடவைத்தது. அவனது மூச்சோ காட்டில் கலந்துகொண்டது! ☆

பிறப்பு:
12. 12. 1972

வீரச்சாவு:
05. 09. 1991



# லெப். அப்பி

( மின்னல் )
(முத்தையா கணேஷ்)
செம்மண்தீவு,
முருங்கன்,
மன்னார்.

மன்னார் மண்ணிலிருந்து வந்து, மணலாற்றைத் தங்களின் இதய மாகக் கருதி, அதற்காக உயிர்கொடுக்கத் துணிந்தவர்களின் வரிசையில் - அப்பியின் சமாதியும் கண்ணில் எழுந்து நிற்கிறது. தமிழுக்கும் தமிழனுக்கும் விடுதலை தேவைதானென்பதை உணர்ந்து போர்க்களம் புகுந்தான். மன்னார் மண்ணில் தனது போராட்ட வாழ்வின் ஆரம்பத் தடங்களைப் பதிக்கத் தொடங்கினான். இலங்கைப் படைகளுக்குப் பீதி கொடுத்த தாக்குதல்கள் பல மன்னாரில் நடந்தன. அதிலெல்லாம் அப்பியும் பங்கெடுத்தான்.

இந்திய இராணுவம் தமிழீழத்துள் பிரவேசித்து பூச்சாண்டி காட்டிய போது, சிலமாத அமைதி நிலவியது. அபாயமான அமைதிப் போர்வைக்குள் மறைந்துகிடந்தது விசப்பற்கள். பலரைப்போலவே அப்பியும் பிரச்சினைக்குத் தீர்வு கிடைத்துவிட்டதெனக் கருதி, இயக்கத்திலிருந்து விலகிக் கொண்டான்.

கெடுபிடி தொடங்கியது. இலட்சியமற்ற பல குழுக்கள் இந்திய ஜவான்களின் வாலைப் பிடித்தன. களப்பலி ஆரம்பமாகியது. காட்டிக்கொடுப்பும்

கழுத்துவெட்டும் தலைதூக்கின. அப்பியை விட்டுவிடுவார்களா? தீவிரமாகத் தேடப்பட்டான். அப்பி தன் தவறை உணர்ந்துகொண்டான். தலைவரின் தீர்க்கதரிசனத்தைப் புரிந்துகொண்டான். திசைமாறிய தன் தீர்மானத்தைச் சீர்செய்தான்; மீண்டும் விடுதலைக்களத்தில் கால்களைப் பதித்துக்கொண் டான்.

புதிய பயிற்சி; பயிற்சி முடிந்தவுடன் மணலாற்றுப் பயணம். பயணத் தின் பாதி வழியில் நம்பிக்கை இழந்து திரும்பியவர்கள் பலர். உறுதியுடன் மணலாற்றில் கால் பதித்தவர்களில் அப்பியும் அடங்கினான்.

அப்பியின் போர்த்திறமைகளை அவன் கண்ட களங்களை வரிசைப் படுத்திக் காட்டுவதைவிட, அவனின் இறுதிக் களத்தைப் புரட்டிப் பார்த்து அளவிட்டுக் கொள்ளலாம்.

கச்சற்கொடியாறு ( கஞ்சிக்கொடியாறு ) 'மின்னல்' சண்டையின் தொடர்ச்சியாய், அன்றுகாலையும் மின்னலின் கீறல்கள் விழத் தொடங்கின.

எதிரியின் பலவீனமான நிலைகளை அறிந்து, அந்த இடத்தில் அடி கொடுத்து நிர்மூலமாக்கும் திட்டங்கள் வகுக்கப்பட்டன.

சண்டைக்கு அணிகள் தயாராகின. அப்பி தன் அணியுடன் புயல்வேகத் தில் களமிறங்கினான். சண்டை சூடு பிடித்தது. "அக்காளின்ர உடல்ல அவன்ர கை படவிடக்கூடாதடா; அடிச்சுக் கலையுங்கோடா" என்று கத் திக்கொண்டே முன்னேறினான் அப்பி.

மரணத்தை அணைத்துக்கொண்ட எம் வீரர்களின் உடல்கள், மிக வேகமாக மீட்கப்பட்டுக்கொண்டிருந்தன. அப்பியின் அதிவேகம்......துணிவு ......!

எதிரிகள் குழறிக்கொண்டே ஓடினர். ஐந்து பத்து யாருக்குள் சண்டை நடந்ததால், நேரில் அனைத்தையும் பார்க்கும் சந்தர்ப்பம் எம் வீரர்களுக் குக் கிடைத்தது. "அம்மே... மகே அம்மே ..." என்று அலறியடித்து எதி ரிகள் ஓடியமை, எம் வீரர்களின் நம்பிக்கையினையும் துணிவினையும் அதிக மாக்கியது.

மகிழ்ச்சியோடு சத்தமிட்ட அப்பியின் குரலைக் காணவில்லை.

அவன் குரல் நின்றுபோய்விட்டது......!

☆

பிறப்பு:
13. 07. 1972

வீரச்சாவு:
16. 09. 1991




# கப். காசன்

( மின்னல் )
( அல்லிராசா யோகேந்திரன் )
பள்ளிக்குடா,
பூநகரி.

மணலாற்றைக் காக்கப் பல போராளிகளின் உயிரைத் தத்தம் செய்த மன்னார் மண்ணில், பூநகரியில் பூத்தவன் காசன். மன்னார்க் காடொன்றில் பயிற்சிக்கு வந்த இளைஞர் அணியில் காசனும் வந்திருந்தான். சுத்தமாக, திட்டமிட்டு அமைக்கப்பட்ட பாசறையைப் பார்த்து, ''எங்களைப் போல பயிற்சி எடுக்க வந்த போராளிகள்தான் இவ்வளவு கஷ்ரப்பட்டு இதை அமைத் திருக்கிறார்கள்'' என்று, தன் மனத்தில் உள்ளதை வியப்புடன் வெளிப்படுத்தி னான்.

பயிற்சிக்காலத்தில் இரவு படுக்கைக்குப் போகும் போது, ''மச்சான் இது பயிற்சி முகாம். ஆமி சுத்திவளைச்சால் அலேட்டாக்கிறோக்குக் கூட ஒரு மிதி வெடியும் இல்லை; நாங்கள் தான் அலேட்டாய் சென்றி பாக்கோனும்'' ஆயு தம் இல்லையெண்டு யோசிக்காதேங்கோ ! பயிற்சிக்கு செய்த கொட்டனுகள் கிடக்குது; சமாளிக்க வேண்டியதுதான்'' என்று கிண்டலாக - ஆனால் உறுத்த லாகவே சொல்வான். காசனுக்கு பயிற்சி சுமையாகத் தெரியவில்லை. பொறுப் பாளர் கொடுக்கும் வேலைகளை விரைவாக முடித்துவிட்டு, தானாகவே சென்று, ''வேறு வேலைகள் இருந்தால் சொல்லுங்கோண்ணா'' என்று கேட்பான். விளையாட்டு நேரங்களில் விளையாட்டும், கடமை நேரங்களில் நிதானமும் அவனிடமிருந்தது.

'சென்றி'யில் நிற்போரிடம் அடிக்கடி, ''மச்சான், சென்றியை அலேட்டாய் பாருங்கோ; சென்றியை மடக்கினாஎனெண்டால் எல்லாற்ர கதையும் முடிஞ்சுது'' என்று அறிவுறுத்திவிட்டுச் செல்வான். பயிற்சி முடிந்ததும், 135 போராளிகளில் ஒருவனாய் மணலாற்றை வந்தடைந்தான். வந்ததும் வராததுமாய் புதிய முகாம் அமைக்கும் பணி கொடுக்கப்பட்டது. காசன் விடுதலையை நெஞ்சில் சுமப்பவன். இது அவனுக்குப் பெரிய வேலையாகத் தெரியவில்லை. ஒரு வாரத்தில் பாதுகாப்புமிக்க பாசறையாய் அது அமைக்கப்பட்டிருந்தது. அதே முகாமிலிருந்து 600 யார் தொலைவில், இந்திய இராணுவத்தைச் சந்திக்க நேர்ந்தது. வெளியான அந்தப் பகுதியில் காசன் முன்னேறித் தாக்கத் தொடங்கினான். சண்டை நீடித்ததால் ரவைகள் தீர்ந்துபோகும் நிலை ஏற்பட்டது. மூன்று போராளிகள் வீழ்ந்துவிட்டனர். காசன் மிகக்கடினமான முறையில் பின்வாங்கி, உதவியணிக்கு அறிவித்தான். புதிய அணி விரைந்துவந்தது. இறந்தவர்களின் உடலை மீட்க மீண்டும் சண்டை; இந்திய இராணுவத்தினர் ஓடினர். உடல்கள் மீட்கப்பட்டன. பின்னர் அச் சண்டையில் மரணித்த ஈசனின் பெயரையே அந்த முகாமுக்குச் சூட்டினார்கள்.

காசனின் திறமை அவனை ஒரு பொறுப்பாளனாக மாற்றியது. இந்திய இராணுவம் வெளியேறிய பின், இரண்டாவது ஈழப்போர் ஆரம்பமானது. மணலாற்றிலும், மணலாற்றுக்கு வெளியேயும் பல களங்களிற்குச் சென்றான் காசன். காசனின் வீரவரிகள் 'மின்னலில்' முற்றுப்பெறுகிறது. மின்னல் சண்டையின் 18ஆம் நாள் காசன், எல். 3 விமான எதிர்ப்புத் துப்பாக்கியுடன் களத்தில் நின்றான்.

''மச்சான் காட்டை விட்டிடக்கூடாதடா; அடியுங்கோடா; அடித்துக் கலையுங்கோடா'' என்று சத்தமிட்டவாறே துப்பாக்கியை இயக்கிக் கொண்டிருந்தான்.

ஓங்கி ஒலித்துக்கொண்டிருந்த அவன் குரல் எங்கே.....? மரணத்திலும் விழித்த கண் மூடாமல் கிடந்தவன் காசன். மணலாறு அவன் வீரத்திற்கு என்றும் தலைசாய்க்கும் !

☆

பிறப்பு:
16. 01. 1972

வீரச்சாவு:
23. 10. 1992



## கப்டன் மைக்கல்

**(மின்னல்)**

**(வேலையா சுரேஸ்குமார்)**
**60, சிவன் வீதி,**
**திருமலை.**

*லெப். சீலனை விடுதலைக்குத் தந்த மண்ணில் பிறந்து தவழ்ந்து, ஓடி விளையாடி வளர்ந்தவன் மைக்கல். கல்வி கற்கும் வயதில் பள்ளியில் அவனுக்கு 'நாயகன்' என்ற பட்டப்பெயர் கிடைத்தது. திருமலை இந்துக்கல்லூரியில் கல்வியில் சுட்டி; விளையாட்டுக்களில் சாதனைவீரன். வீட்டின் வறுமைதான் அவனுக்குச் சவால்.*

மைக்கலின் உடன்பிறப்புக்கள் இருவர். இருவரும் மூத்தவர்கள். தந்தை தையற் தொழிலாளி. தந்தையின் காலாடினால்தான் மற்றவர்களின் வயிறாறும்; மைக்கலின் கல்வி தொடரும். காலங்கள் உருண்டன. அண்ணன்மார் இருவரும் விடுதலைப் போரில் இணைந்துகொண்டனர். அண்ணன்மார் எவ்வழியோ தம்பியும் அவ்வழிதானே ! மைக்கலின் மனத்திலும் விடுதலை நெருப்பு மூண்டதில் வியப்பில்லை.

*1987ஆம் ஆண்டு!*

இந்தியச் சுவடுகள் தாயக மண்ணை மாசுபடுத்தத் தொடங்கிய காலத்தில், திருமலை நகரில் இனக்கலவரமொன்று வெடித்தது. காலங்காலமாய் ஒடுக்கப்பட்டுவந்த தமிழர்கள் கொதித்து எழுந்தனர். சிங்களவர்களை விரட்டி

யடிக்கும் இளைஞர் குழுவில், மைக்கல் தீவிரமாகச் செயற்பட்டான். இரவு நேரங்களில் திருமலை நகரில் மக்களைக் காக்கும் முயற்சியில் அணிதிரண்டு காவல் செய்த இளைஞர் அணியில், தானும் கலந்துகொண்டான். இதே காலப்பகுதியில் புலிகளின் சுவரொட்டிகளை நகரெங்கும் ஒட்டும்பணியில் ஈடு பட்டான்.

இந்திய ஜவான்களினதும் தேசவிரோதிகளினதும் காதுகளுக்கு இது எப் படியோ எட்டிவிட்டது. மைக்கல் கைதானான். ஒட்டிய சுவரொட்டிகளை நாக்கினால் உரித்து உண்ணும்படி பணிக்கப்பட்டபோது அவன் பட்ட துய ரத்தை, சாவுவரை அவன் மறக்கவில்லை. 89இல் விடுதலையாகி வந்தவன், நேராகப் பயிற்சிப் பாசறையினை வந்தடைந்தான். பயிற்சி முடிந்ததும், திரு மலையில் தேசத்துரோகிகளையும் இந்தியப் படைகளையும் அழிக்கும் சண்டை களில் தீவிர பங்கெடுத்தான். மணலாற்றுக்கு வந்த சிறிது காலத்திலெல்லாம் போராளிகள் மனதில் இடம்பிடித்துக்கொண்டான். கடமையில் பொறுப் புணர்வு, உடைமையில் கவனம், மற்றைய வேளையில் கனிவும் இனிமையும் நிறைந்த பேச்சு - இதனால் தளபதியின் மனதிலும் இடம்பிடித்தான்.

'இரண்டாவது ஈழப்போர்' தொடங்கியதும் மணலாற்றில் சிங்களப் படைகளுக்கெதிரான களங்கள் கண்டான். ஆனையிறவுச் சமருக்குப் புறப்பட்ட மணலாற்றுக் 'கொமாண்டோ' அணியில் புயலாய்ப் புறப்பட்டான்; காயமும் பட்டான்.

யாழ். மருத்துவமனையில் சிலகாலம் சிகிச்சை பெற்றுவரும்போது, மண லாற்றில் 'மின்னல் ஒப்பரேசன்' தொடங்கியிருந்தது. காயம் பூரணமாய்க் குணமாகாத நிலையில் போருக்குச் செல்லத் துடித்தான். யாழ்ப்பாணத்தில் இருந்து மணலாற்றுக்கு விரைந்து வந்தான். "எங்கள் இதயத்தில் கைவைக்க சிங்களவனுக்கு துணிவு வரவா !" என்று கூறி, ஆவேசமுடன் சண்டையில் இறங்கினான். பிசாசுகளின் எறிகணை ஒன்று அருகில் விழுந்து வெடிக்க, மைக்கலின் உடலெங்கும் 'செல்' துண்டுகள் பாய - மண்ணில் சரிந்தான். அவசர மாகச் சிகிச்சைக்கு அனுப்பப்பட்டான். தன்னை விடுதலையாக்கச் செயற்பட்டுக் களைத்தவனை மடியில் 'வளர்த்தி' ஆறுதல் கொடுக்க, தமிழீழத்தாய் நினைத்துவிட்டாள்.

மைக்கல், அவள் மடியில் கண்களை மூடிக்கொண்டான் ! ☆

பிறப்பு:
26. 08. 1974

வீரச்சாவு:
20. 07. 1991




# நிதி

( மின்னல் )

( காத்தமுத்து சிவகுமாரன் )

இலுப்பையடிச்சேனை,

மட்டக்களப்பு.

இலுப்பையடிச்சேனை! வயலும் வயல் சார்ந்த இடமும் கொண்ட - அழகிய - வளம் நிறைந்த கிராமம் இக்கிராமம். வளம் நிறைந்த இக்கிராமத்தில் பிறந்தும் நிதியின் வீட்டில் வறுமைதான் கொடிகட்டிப் பறந்தது. கிராமத்துக்குச் சற்றுத்தொலைவில் - கருங்கற்களைக் கட்டடத்துக்கேற்ற வகையில் பொழிந்து கொடுப்பதுதான், இக்கிராம மக்களிற் பெரும்பாலானோரின் தொழில் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் என கிராமத்தின் அனைவரையும் இவ்விடத்தில் காணலாம்.

நிதி நடந்து திரியும் வயது வந்தவுடனேயே, இங்கு வேலை செய்யும் தந்தைக்கு உணவு கொண்டு செல்வான். இதனால் இளமையிலிருந்தே இத்தொழிலைக் கற்றுக்கொள்ளப் பழகினான், பள்ளிக்காலம் கருங்கல்லுடனேயே கழிந்தது. பதினான்கு வயதுவரை இவனின் கைகள் ஓய்வின்றி கருங்கல் பொழிந்தன. உடலும், கரமும் உரமேறியதும் விடுதலைப்போருக்குப் புறப்பட்டு வந்தான்.

மணலாற்றில் பன்னிரண்டாவது படைப்பயிற்சிப் பாசறையில், பயிற்சியை முடித்துக்கொண்டான். பயிற்சி இவனுக்குக் கடினமானதாக இருக்கவில்லை.

கருங்கல்லையே தட்டிப் புரட்டியவனுக்குப் பயிற்சியின் கடினம் பெரிதாகத் தெரிந்திருக்க நியாயமும் இல்லை. ஆனால், நிதி தன்பலம் முழுவதையும் காட்டும் முன்பே, காட்டின் வரலாற்றுப் புகழ்மிக்க 'மின்னல்' தாக்குதல் முறியடிப்பில் தன்னைத் தியாகித்துக் கொண்டான். சண்டையின் ஆரம்ப நாட்களிலேயே சுகந்தன் பாசறையைக் காக்கும் பணிக்காய், தன்னை அர்ப்பணித்துக் கொண்டான் நிதி!

☆

பிறப்பு:
05. 09. 1971

வீரச்சாவு:
19. 09. 1991



# கப். இம்ரான்

( மின்னல் )

( தில்லையம்பலப்பிள்ளை ஜெகதீசன் )

துறைநீலாவணை,

மட்டக்களப்பு.

இம்ரானின் இளமைக்காலம் துன்பங்கள் நிறைந்ததொன்று. அறிவு தெரியும் முன்னே பெற்றதாயை இழந்துவிட்டான். வறுமையின் குடிசையில் வயிறு நிரப்பும் போராட்டம் தினமும் நடந்தது. தந்தையுடன் இரவு முழுவதும் கடலுக்கு மீன்பிடிக்கச் சென்று, காலையில் பள்ளிசெல்ல வேண்டி யிருந்தது. வீட்டில் வறுமையிருந்தாலும் சுதந்திர உணர்வில் வறுமை இருக்க வில்லை. வறிய அவன் குடிசையில் புலிவீரருக்கு உணவும், உதவியும் குறை வின்றிக் கிடைத்தன. விடுதலைக்குப் பின்னே நின்றவர்களை எப்போதும் துரோகிகளின் கண்கள் வட்டமிடத் தவறுவதில்லை.

துறைநீலாவணைக் கிராமம் சிங்களப்படைகளால் சுற்றிவளைக்கப்பட்டது. கிழக்கின் வழமையான பொதுமக்கள் கைது ஆரம்பமானது. சுதந்திரத்தை விரும்பினர் என்ற குற்றத்துக்காக இம்ரான், இம்ரானின் அக்கா, தந்தை ஆகிய மூவரும் கைதாகினர். 1986 இல் இவர்கள் மூவரும் பூசா இராணுவச் சிறைக்கு அனுப்பப்பட்டனர். இம்ரான் சித்திரவதைக்கு மத்தியிலும் பூசாவில், தன் க. பொ. த. சாதாரணதர வகுப்பு கல்வியைப் பயின்றுகொண்டே இருந் தான். 1990ஆம் ஆண்டு இந்தியப்படைகள் வெளியேறி, இடைக்கால ஒப்பந்த மொன்று ஏற்பட்டது. இவ் ஒப்பந்தத்தில் சிறையில் இருந்து வெளியே வந்தது இம்ரானின் குடும்பம்.

வெளியே வந்த இம்ரான் க. பொ. த. உயர்தர வகுப்பில் கல்வி பயில்வதற்கு இணைந்தான். கல்வியில் அவன் மனம் இணைய மறுத்தது. இதனால் விடுதலை உணர்வை மனத்தில் இணைத்துப் புறப்பட்டான். மணலாற்றுக்கு பயிற்சிக்கு வந்திருந்த இம்ரானைச் சுற்றி எந்த நேரமும் ஒரு கூட்டம் இருக்கும். இம்ரானுக்கு விடுதலைப் போராட்டத்தின் ஆரம்பகாலப் போராளிகளையும் அவர்கள் பட்ட துயரங்கள் பற்றியும் நன்கு தெரியுமாதலால், அவற்றைக் கதைபோல் சுவையாகச் சொல்லிக்கொண்டிருப்பான்.

இம்ரானிடம் மேலதிக திறமைகள் பல இருந்தன. பயிற்சிக்காலத்திலும், பயிற்சிக்குப் பின்னரும், காவற்கடமையில் நிற்பவர்களை அடிக்கடி சென்று பார்த்து உசார்ப்படுத்திக்கொள்வான். திசையறிகருவியைப் பயன்படுத்தும் தெளிவான அறிவிருந்ததால், அதுபற்றிய அறிவை சகதோழர்களுக்குக் கற்றுக் கொடுப்பதில் ஊக்கமாக இருப்பான். ஓய்வுநேரம் கிடைப்பது அரிது; கிடைத்தாலும் கவிதைகள் எழுதுவான். கவிதை எழுதும் ஆற்றல் இவனிடம் நிறையவேயிருந்தது. பயிற்சி முடிந்த கையுடன் மோட்டர் தாக்குதலணியில் சேர்க்கப்பட்டான் இம்ரான். அறிவும் திறமையும் அதிகமிருந்த காரணத்தினால், மோட்டர் தாக்குதல் பற்றிய சிறப்புப் படிப்பிற்காக யாழ். அனுப்பப்பட்டான். இம்ரான் மோட்டரைப் பற்றி எழுதிய பயன்மிகு புத்தகமொன்று, அவன் மரணத்தின் பின்னேதான் கிடைத்தது.

படிப்பு நடந்துகொண்டிருந்த காலத்தில், காட்டில் 'மின்னல்' நடவடிக்கை தொடங்கியிருந்தது. இதனால் படிப்பு முடியும் முன்னரே மணலாற்றுக்குத் திரும்பினான். 'மின்னலை' முறியடிக்கும் சண்டை மிக மோசமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. எதிரியைச் சில யார் தூரத்துக்குள் வைத்தே அடிகொடுத்துக் கொண்டிருந்தனர் எம் வீரர்கள். காட்டினைக் கைப்பற்றுவது கடினமென்பதை உணரத் தொடங்கிய சிங்களப்படை, எறிகணைகளாலும் விமான எரிகுண்டுகளாலும் காட்டினை எரித்து அழித்துவிடும் முயற்சியில் இறங்கியது. இம்ரான் தன் நிலையில் கிடந்து, எதிரியின் நடுவே செல்களைக் குறிவைத்துப் போட்டுக்கொண்டிருந்தான். எங்கிருந்தோ வந்த எதிரியின் எறிகணையொன்று அருகில் விழுந்து வெடிக்க... நிலையெடுத்துக்கிடந்த இடத்திலேயே இம்ரான்...!

பிறப்பு:
22. 04. 1976

வீரச்சாவு:
02. 09. 1991




# அமுதன்

( மின்னல் )
( இராசதுரை சிவகுமார் )
**பல்லவராயன்கட்டு,**
**முழங்காவில்,**
**மன்னார்.**

குளத்தில் குளித்து கூடி விளையாடிக் களித்திருக்கவேண்டிய வயது. ஆனால் பொறுப்பை நெஞ்சில் சுமந்து, சுதந்திரப் போருக்குப் புறப்பட்டு வந்தான் அமுதன். இளமையில் தோழர்களுடன் கூடிவிளையாடி மகிழ, சிங்கள தேசமும் விடவில்லை; அருகிலிருந்த அந்நியப் படைகளும் விடவில்லை.

குழந்தை வயதுள்ள அமுதனுக்கு குழந்தைக்கேற்ற 'குழப்படியும்' இருக்கத் தவறவில்லை. ஏதாவது ஒரு குறும்பு வேலையைச் செய்துகொண்டேயிருப்பான். தான் விரும்பும் பொருள் மற்றவர்களிடம் இருந்தால், அதைத் தரும்படி தொல்லை கொடுப்பான்; கொடுக்காவிட்டால் எப்படியாவது அதை எடுத்துவிடுவான். சாப்பாட்டுப் பொருட்களாக இருந்தால் எடுத்து ஒளித்து வைத்து - எல்லாருக்கும் கொடுத்தே சாப்பிடுவான்.

அமுதனுக்கு அலுப்பு, களைப்பு என்பன கிடையாது. இரவு பன்னிரண்டு மணியாக இருந்தாலும் ரீ ஒன்று வைத்துத் தரும்படி கேட்டால், உடனே தயாரித்துக் கொண்டு வருவான். நித்திரை, சோம்பல் என்ற பேச்சுக்கே இடமில்லை. வருத்தமென யாராவது படுத்திருந்தால் அருகில் இருந்துவிடுவான்; அடிக்கடி தொட்டுப் பார்த்து பராமரித்துக்கொள்வான்.

அமுதனின் குழந்தை உள்ளத்தில் தலைவரைக் காத்த மணலாற்றுக் காடு உயர்ந்து நின்றது. சிங்களதேசம் காட்டினைக் கைப்பற்ற, முழுநோக் கோடு 'மின்னல்' என்ற நடவடிக்கையை தொடங்கியது. சண்டையின் தொடக்க நாளிலேயே 'சுகந்தன் பாசறை'யைப் பார்க்க விரைந்தான். வயதுக்கு மீறிய துணிவுடன் எதிரியை எதிர்கொண்டான். புலிகளை அழிக்க முடியாதென்பதை அந்தக் குழந்தையின் கரங்களே உணர்த்தின. அமுதனின் உயிர்த்துடிப்பு ஓயும் வரை அவன் கரங்கள் ஓயாது துடித்ததை நினைத்தால், நெஞ்சு வெடிக்கும்!

☆





பிறப்பு:
13. 03. 1971

வீரச்சாவு:
12. 09. 1991



# லெப். சிங்கர்

(மின்னல்)
(கந்தசாமி ஓவியராஜ்)
சந்தை வீதி, கிரான்,
மட்டக்களப்பு.

மட்டக்களப்பு மண்ணில் கிரான் கிராமம், பெருமதிமிக்க விடுதலை வீரர்களைத் தமிழீழத்துக்காய்க் கொடுத்த பெருமையுடையது. வசதிமிக்க குடும்பத்தில் பிறந்தாலும், சுதந்திர உணர்வு, அவனில் ஆழப் பதிந்திருந்தது. மணலாற்றுக்கு வந்து பயிற்சியை முடித்த பின், பல மாதங்கள் பாசறை ஒன்றின் பொறுப்பாளனாக இருந்தான். அவனோடு பாசறைகளில் நின்ற போராளிகளிடம் இவனது குணவியல்புகளைக் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம். எவரைக் கேட்டாலும், ஒரு குறையுமில்லாமல் எங்களைக் கவனித்துக்கொள் வார் என்றுதான் பதில் சொல்லுவார்கள். பொறுப்பும், நிதானமும் இவனி டம் இருந்தன. இயக்க நடவடிக்கைகளில் எந்தவித ஏற்றத் தாழ்வும் 'வழு வழுப்பும்' அவனிடம் இருக்கவில்லை. மற்றவர்களிடம் இக்குணம் இருப்ப தைக்கூடப் பொறுக்கமாட்டான். இறுக்கமான கட்டுப்பாட்டைக் கடைப் பிடித்ததால், மற்றவர்கள் சிறு தவறு செய்தாலும் தண்டனை வழங்கத் தவறமாட்டான். தன்கீழ் இருந்த போராளிகளைக் குறைவின்றிக் கவனித்துக் கொண்டதால், அவர்களும் இவன் நடத்தையை விரும்பினார்கள்; அதையே தாமும் பின்பற்றப் பழகினர்.

*சிங்கரிடம்* இருந்த வழுவழுப்பற்ற - இறுக்கமான - இயக்கப் பற்றுத் தான், 'மின்னல்' சண்டையில் உதவி வழங்கும் பெண்கள் அணிக்கு அவ

னைப் பொறுப்பாளனாக்கியது. ''இதுவரை மேற்கொள்ளப்பட்ட இராணுவ நடவடிக்கைகளில் இதுதான் மிகப்பெரிய நடவடிக்கை'' என இராணுவத் தளபதிகளாலேயே வர்ணிக்கப்பட்டது மின்னல் நடவடிக்கை. நிமிடத்துக்கு அறுபதுக்கு மேற்பட்ட குண்டுகள் வந்து விழுந்து வெடித்துக்கொண்டிருக்க, அதன் இடையே நின்று, காயமுற்ற வீரர்களை மீட்டும் - உணவு, துப்பாக்கி ரவைகள் என்பவற்றை உடனுக்குடன் கொடுத்தும் பம்பரமாய்ச் செயற்பட்டான் சிங்கர். நேரம் தப்பாமல், களமுனையில் நிற்கும் வீரர்களுக்கு உணவு கொடுத்துக்கொண்டிருந்தான். எப்படித்தான் குண்டுகள் வீழ்ந்தாலும் சிங்கரின் உதவி கிடைக்குமென்ற நம்பிக்கை போராளிகளிடம் இருந்தது. பெண் புலிகளிடம் அவனது தியாகத்தைக் கேட்டால் உணர்வைத் தொட சொல்லிக்கொண்டேயிருப்பார்கள்.

அடர்ந்த காடு. சண்டை எவ்விடத்தில் நடக்கிறது என்பது தெரிந்தாலும், இராணுவத்தினர் எந்த இடத்தில் நிற்கிறார்கள் என்பதைச் சரியாகக் கணிக்க முடியாதிருந்தது. ஏனெனில், இரண்டு மூன்று யாருக்குள்ளேதான் எம் வீரர்களுக்கும் இராணுவத்துக்குமிடையில் இடைவெளித்தூரம் இருந்தது. மிக நெருக்கமான சண்டை. சண்டைமுனையின் நிலைதெரியாமல் பெண்புலிகளை உதவிக்கு முன்னே அனுப்ப, சிங்கர் விரும்பவில்லை. அவர்களை ஓரிடத்தில் நிறுத்திவிட்டு, தான் மட்டும் தனித்துச் சென்று பார்த்துவரப் புறப்பட்டான். ''சற்றுப் பொறுத்துப் போங்களண்ணா'' என்று பெண் புலிகள் தடுத்தனர். ''பொறுப்பதற்கு இது நேரமில்லை. காயமுற்ற போராளிகளை உடன்மீட்பதுதான் எங்கள் கடமை; நிலை எடுத்துக் கிடக்க இங்கு வரவில்லை'' என்று கூறிவிட்டு முன்னே ஓடினான். கடமையை மட்டும் நெஞ்சில் சுமந்தவன் அதற்கே தன்னை அர்ப்பணித்துக்கொண்டான். சிங்கர் அன்று தன் கடமையில் தவறியிருந்தால், பல பெண்புலிகளின் உயிர் பறிக்கப்பட்டிருக்கும். உயிரின் பெறுமதியை விட விடுதலையை நேசித்த அந்த உத்தமனுக்காய், கல்லறைகளும் கண்ணீர் சிந்தும்!

☆

பிறப்பு:
19. 12. 1974

வீரச்சாவு:
02. 09. 1991



# குமுளன்

(மின்னல்)
(ஞானமனோகரன் கிருஷ்ணரூபன்)
ஏழாலை வடக்கு,
யாழ்ப்பாணம்.

ஏழாலை விடுதலைக்குத் தந்த செல்வன் குமுளன். தாயிருந்தும் தாயைத் தெரியாது வளர்ந்த அவனது சோகக்கதையைப் புரட்டிப்பார்ப்பது வேதனையைத் தரும். சுருக்கமாக ஒரு வரியில் சொன்னால், தாய் இன்றும் இருக்கின்றாள்; ஆனால் சாகும்வரை அவனுக்குத்தாய் யாரென்பது தெரியாது.

தந்தையுடன் வளர்ந்த குமுளன் க. பொ. த. சாதாரணதர வகுப்பு வரை கற்றான். ஆங்கில அறிவும் இருந்தது. இருந்தும் போருக்குப் போகும் புலிவீரனானான். குமுளன் புரியாத புதிர். பயிற்சிக்கு வந்து நின்ற காலத்தில் பயிற்சி தொடங்கும் முன்னரே மருத்துவப் பிரிவினருக்கு உதவிப்பணிகள் செய்யத் தொடங்கிவிட்டான். வீரவேங்கை லெஸ்ரனைப்போல் ஆரம்பத்திலேயே இத்துறையில் அதிக ஆர்வம் காட்டினான். பயிற்சி முடிந்ததும், பாம்பு கடித்த போராளியைக் காத்த சிகிச்சையோடு தன்பணியை வெற்றியாகத் தொடங்கினான்.

பார்த்தால் பசுமாதிரி இருப்பான்; பழகிப் பார்த்தால் இவனின் அட்டகாசம் புரியும். பழகியபின் தொல்லையாகிவிடுவான். தனக்கு விருப்பமான ஏதாவது பொருளை மற்றவர்களிடம் கண்டால், என்ன பாடுபட்டாவது அதைப் பெற்றுவிடுவான்; காலம் கொட்டித் தன் காரியத்தைச் சாதித்துக்கொள்

வான். ஆனாலொன்று, பெற்ற பொருளை இன்னொருவர் கேட்டால் உடனே கொடுத்துவிடுவான்.

தன்னையும், தன் உடைகளையும், தானிருக்கும் இடத்தையும் எந்த நேரமும் சுத்தமாக வைத்திருப்பான். சுத்தம் போலவே அவன் உடலும் ரத்தச் சிவப்பு. காயமுற்ற போராளிகளை எந்த அருவருப்புமின்றித் துடைத்துச் சுத்தமாக்கி, சிகிச்சை செய்வான். திறமையும், கடமையுணர்வும் அதிகமாக இருப்பவனை தமிழீழத்தாய் விரைந்து தன்னிடம் எடுத்துவிடுகின்றாள். 'மின்னல்' நடவடிக்கையிலிருந்து 'சுகந்தன் பாசறை'யைக் காக்கும் முதல் நாள் சண்டையிலேயே, தன்னைக் கொடுத்துவிட்டான்! ☆

பிறப்பு:
16. 11. 1974

வீரச்சாவு:
21. 02. 1991




# 2 ஆம் லெப். புஸ்பராசா

(முல்லைச் சமர்)
(தியாகராசா அகிலன்)
நீர்வேலி மத்தி, நீர்வேலி,
யாழ்ப்பாணம்.

விடுதலைப் போர் பல தடைகளைத் தாண்டி நடந்துகொண்டிருக்கிறது. நெருக்கடியான காலத்தில் துன்பங்களைச் சுமந்து மண்பற்றோடு இனத்தைக் காத்த வீரர்களின் வாழ்வில் - செய்ய முடியாமற்போன பல செயல்கள், சொல்ல முடியாத சோகங்கள் நடந்து முடிந்ததை எல்லாரும் அறிய முடியாது. பலருக்கு இவர்களின் சோகக் கதைகள் ஒரு கற்பனைக் கதையாகவும் தோன்றும். கற்பனையற்ற நிஜங்கள்தான் 'இந்த மண்ணில் நடக்கின்றன.

யாழ். மண்ணில் இருந்து படையணிகள் மணலாறு நோக்கி நடந்துகொண்டிருந்தன. நகர்ந்தது என்றுதான் சொல்ல வேண்டும்; ஏனெனில்,பார்த்த இடமெல்லாம் இந்தியச் சுவடுகள். பதுங்கிப் பதுங்கித் தண்ணீர் கூட இல்லாமல் நடக்கவேண்டும். சாப்பாடின்றி நடக்கலாம்; தண்ணீர் இன்றி எப்படி நடக்க முடியும்? புஸ்பராசாவால் இனி ஒரு அடிகூட எடுத்துவைக்க முடியாது. தண்ணீர்விடாயினால் மயக்கம் வருவது போலிருந்தது. அன்றுதான் அவன் வாழ்வில் மறக்கமுடியாத அந்தச் செயலை செய்யத்துணிந்தான். தன்னுடைய சலத்தை ஒரு பாத்திரத்தினுள் ஏந்திப் பருகினான். அவனது செயல் மற்றவர்களையும் துணிய வைத்தது. அனைவரும் அதே முறையில் தம் தாகத்தைத் தீர்த்தனர். வேதனையான - நெஞ்சு வெடிக்கும் - இந்தத் துயரம் இயற்கை அன்னைக்குக்கூட பொறுக்கவில்லைப்போலும்! திடீரென மேகங்கள் கூடின;

கறுத்துத் திரண்டன - மழைத்துளிகள் விழத்தொடங்கின. சற்று நேரத்துக்குள் மழை கொட்டத்தொடங்கியது. வானத்தைப் பார்த்து வாயைத் திறந்து மகிழ்வுகொண்ட அந்த நாளை நெஞ்சு மறக்காது!

மணலாற்றில் ஆயுதக் களஞ்சியத்தின் பொறுப்பாளனாக இருந்தான் புஸ்பராசா. அதனால் சண்டைக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. மணலாற்றில் இருந்து இவன் சென்று கண்ட களம், முல்லைத்தீவு இராணுவ முகாம் முற்றுகைத் தாக்குதல்தான். உதவி வழங்கும் அணியில் ஒருவனாய்ச் சென்ற இவன், இராணுவத்தின் சினைப்பர் தாக்குதலுக்கு இலக்காகி மரணித்தான்.

மரணம் இகுலவானது -

ஆனால் விடுதலைப் போரை வளர்த்துக் காக்க அவன் சுமந்த சுமைகள்......!

☆

பிறப்பு :
10. 05. 1971

வீரச்சாவு :
29. 08. 1990




# லெப். பாரூக்

(முல்லைச் சமர்)
(வெள்ளையன் ஏகாம்பரம்)
கோரகல்லிமடு,
கிரான்.

**வே**வு பார்க்கும் திறமைக்காக தலைவரின் பாராட்டைப் பெற்றவன் பாரூக். காட்டில் ஆரம்பகால வாழ்வில் வேவுப் பணிக்குச் செல்பவர்களுக்கு ரி. 81 துப்பாக்கி கொடுக்கப்படுவதில்லை. ஆனால் பாரூக்கிடம் மட்டும் ரி. 81 துப் பாக்கி கொடுக்கப்பட்டிருந்தது. குறிதவறாது சுடுகின்ற திறமை இவனிடம் இருந்தமையும் இதற்கொரு காரணமாக அமைந்தது.

மணலாற்றுக் காட்டில் பாரூக் நடந்து திரியாத இடமேயில்லை. மட்டக் களப்பில் இருந்து வந்தவனுக்கு, காட்டின் ஒவ்வொரு அங்குலத்தையும் அறியக் கூடிய ஆற்றல் எப்படி வந்தது என்ற கேள்வி எழலாம். திசையறிகருவியைச் சரியாகப் பயன்படுத்தக்கூடிய வல்லமையும் அறிவும் இவனுக்கிருந்தது. அத னால்தான் வேவுப்பணிக்கு இவன் நியமிக்கப்பட்டான். வேவுக்கடமைக்குப் புறப் பட்டுவிட்டால், ஒரு தடிச்சுள்ளிகூட முறியாமல் நடந்து செல்வான். அந்தப் பணியில் இருக்க வேண்டிய அவதானத்தைப் பற்றி, அவனுக்குத் தெரியும். பணியின் முக்கியத்துவம் மட்டுமன்றி, சற்று அவதானம் குறைந்தாலும் எதிரி யின் தாக்குதலுக்கு உள்ளாகி விட நேரிடும். இதனால், சருகில் மிதித்து சத்தம் கேட்டாலும் மிதித்தவனுக்குத் தண்டனை கொடுத்துவிடுவான். நம்பிக்கை மிக்க வேவு வீரனாக இருந்தபடியால், நித்திகைக் குளப் பிரதேசத்தின் முழு நேர வேவுக்காக நியமிக்கப்பட்டான்.

சண்டையில் சிலமாத ஓய்வு காணப்பட்டபோதுதான் பணியில் இருந்து விலகி, வீட்டுக்குச் செல்ல விரும்பினான். வீட்டுக்குச் சென்றவனுக்கு அங்கிருக்கப் பிடிக்கவில்லைப் போலும்; இதனால் மீண்டும் மணலாற்றுக்கு வந்து சேர்ந்தான் ''சண்டை செய்வதே என் விருப்பம்; வெல்லும்வரை போராடுவதே என் இலட்சியம்'' என்று கூறிக்கொண்டான்.

முல்லைத்தீவு இராணுவ முகாம் முற்றுகைத் தாக்குதல் இறுக்கமடைந்திருந்த காலம்; பாருக் தன் அணியைச் சரியாக வழிநடத்தி சண்டையில் ஈடுபட்டிருந்தான். சாவுக்கு அவன் அஞ்சியதில்லை எனும் உண்மையை அங்கே நிலைநிறுத்தினான். வீரவரலாறு அவனுக்கு 'செல்'வரிகளைப் பதித்துக் கொண்டது!

☆

பிறப்பு:
10. 10. 1970

வீரச்சாவு:
01. 09. 1990




# லெப். பொஸ்ரின்

(முல்லைச் சமர்)
(காளியப்பன் சுந்தரராஜ்)
உயிலங்குளம்,
மன்னார்.

மன்னார்ப் புதல்வன் பொஸ்ரின் உயிலங்குளம் கிராமத்தில், வறிய குடிசையொன்றில் இரட்டையர்களாய் பிறந்தவர்களில் ஒருவன். இவன் ஒரே நாளில், ஒரே நேரத்தில், ஆனால், முந்தியதால் அண்ணனாகிவிட்டான். இரட்டைப் பிறவிகளிடம் காணப்படும் ஒத்த இயல்புக்கு இவர்கள் விதிவிலக்கல்ல. ஒருவரைப் பிரிந்து ஒருவர் வாழ்வதுகூட இவர்களால் முடியாத காரியம்,இருப்பினும், அண்ணனாகிவிட்ட பொஸ்ரின் சுதந்திரப்போரில் குதித்தபோது, தம்பி அளவற்ற பிரிவுத் துன்பத்தை அனுபவித்தான். ஆனால், இராணுவ நெருக்கடியின் காரணமாக தாய் தந்தையர் இந்தியாவுக்குத் தப்பி ஓடிவிட பொஸ்ரினின் தம்பி மட்டும், அண்ணனைக் களத்தில் விட்டுவிட்டு இந்தியா செல்ல விருப்பமின்றி நின்றுவிட்டான். ஒரு சமயம் மணலாற்றுக்கு அண்ணனைப் பார்க்க வந்தான், ''அண்ணோய் ஒரு கவலையும் இல்லாமல் அடிபடு; நீ வீரமரணம் அடைந்தால் நான் போரில் குதித்து உன் பணி தொடர்வேன்'' என்று உறுதிகூறிச் சென்றான். தம்பியின் துணிவும், உறுதிமொழியும் பொஸ்ரினை உற்சாகத்துடன் போரில் நிற்க வைத்தன.

பொஸ்ரினைக் கொண்டு எந்த வேலையும் செய்விக்கலாம். ஆனால் மனக்குழப்பம் இருந்தால் எதையும் செய்விக்க முடியாது. குளிப்பதில் மட்டும்

இவனுக்குச் சோம்பல் அதிகம். மேஜர் வீமன் சில தடவைகள் இவனைப் பிடித்துக் குளிக்க வார்த்த சம்பவமும் உண்டு.

சண்டைக்காகச் சென்றால் அவனிடம் பொறுமை இருக்காது. ''அடிப்ப மண்ணோய்'' என்று பொறுப்பாளருக்குத் தொல்லை கொடுக்கத் தொடங்கி விடுவான். சண்டைக்குச் செல்வதென்றால் அதைவிட மகிழ்ச்சி வேறொன்றும் இருக்காது. அவனிடம் இருந்த சுதந்திரப்பசி அடங்கும் முன்னரே, தமிழீழத்தாய் அவனைத் தன்னிடம் அழைத்துக்கொண்டாள். முல்லை இராணுவ முகாமிலிருந்த சிப்பாய்களைக் காக்க வட்டுவாகலில் தரையிறக்கப்பட்ட இராணுவத்தை இடைமறித்துத்தாக்கிய சண்டையின்போது, சுதந்திர தாகத்தோடு கண்மூடிக் கொண்டான்! ☆

பிறப்பு:
02. 03. 1975

வீரச்சாவு:
01. 09. 1990




# ரணிஸ்

(முல்லைச் சமர்)
(சிவயோகநாதன் சுஜீதரன்)
தேவாலய வீதி,
கல்வியங்காடு.

ரணிசின் வாழ்வு முடிந்துபோன பின்னும், தொடர்கின்ற சோகக் கதையொன்று இன்றும் உண்டு. மணலாற்றில் ஒன்பதாவது படைப் பயிற்சி முகாம் நடைபெற்றுக் கொண்டிருந்ததால், முல்லைத்தீவு இராணுவ முகாமை முற்றுகையிட்டுத் தாக்குதல் நடத்திக்கொண்டிருந்த எம் வீரர்கள், இறுதிக் கட்டத் தாக்குதலில் சற்று இறுக்கத்தை ஏற்படுத்தியிருந்தனர். ரணிசின் பயிற்சி முடிவு நாளில் இச்சண்டை இறுதிக் கட்டத்தை எட்டியிருந்தது. சண்டையில் நிற்கும் படையணிகளுக்கு உதவி வழங்கும் அணி, மணலாற்றில் இருந்து புறப்பட்டது.முதல் அனுபவம். முதல் நாளில் ரணிஸ் சற்று மனப்பயத்துடனேயே செயற்பட்டுக் கொண்டிருந்தான்.

விமானக் குண்டுவீச்சுகளுக்கும் துப்பாக்கிக் குண்டுகளுக்குமிடையே ஒரு நாள் நின்றதோடு, அவனது மனப்பயம் நீங்கியிருந்தது. மறுநாள் அனுபவம் உள்ள போராளிபோல் செயற்படத் தொடங்கிவிட்டான். இராணுவ முகாமுக்கு மிக அருகில் சென்று மிதிவெடி வைப்பதற்கு, துணையாக செயற்பட்டுக்கொண்டிருந்தான். வானத்தில் 'வை - 8' விமானம் கண்மூடித்தனமாகக் குண்டு போட்டுக்கொண்டிருந்தது. ரணிஸ் அதனைக் கருத்திற் கொள்ளவில்லை. ஓடி ஓடிச் செயற்பட்டுக்கொண்டிருந்தவனின் அருகே 'வை - 8' விமானக் குண்டொன்று வீழ்ந்து வெடித்தது. உடல் சிதறிய நிலையில் கிடந்தான் ரணிஸ். கண்

களால் காண முடியாத வேதனை. வேதனைகளின் சுமையில் நாம் நின்றோம். துன்பத்தின் எல்லையைக் கடந்து அவன் சென்றான். ரஸிசின் மரணத்தை நம் பாத தாய் தந்தையர், இன்னும் அவன் உயிரோடு இருக்கின்றான் என்ற நம் பிக்கையோடு வாழ்கின்றனர். அவனது உடல் மணலாற்றுக் காட்டில் சமாதி யாய் நிற்கிறது. பெற்ற தாயோ, மனக்கண்ணில் உயிருடன் அவனைக் கண்டு கொண்டிருக்கிறாள்!

☆

பிறப்பு:
10. 01. 1972

வீரச்சாவு:
02. 09. 1990



# 2ஆம் லெப். கணேஜி

(முல்லைச் சமர்)
(பாலகிருஷ்ணன் கமலநாதன்)
புளியம்பொக்கணை,
பரந்தன்.

வன்னிக் காட்டில் புலிப் பயிற்சி பெற்றவன் கணேஜி. வன்னியில் பிறந்த் ஓர் இளைஞனுக்கு இருக்கவேண்டிய பலம், மன உறுதி எல்லாம் இவனிடமும் இருந்தன. இந்திய இராணுவத்திற்கெதிரான பல யுத்த முனைகளை, வவுனியா வின் பல கிராமங்களிலும் சந்தித்தான். 'பிறண் எல். எம். ஜி.' துப்பாக்கியை வெகு சாதாரணமாகவே தூக்கி வைத்துச் சுடுகின்ற அளவிற்கு பலமும் திறனும் இருந்தன.

1989 ஆம் ஆண்டில் மணலாற்றுக்கு வந்திருந்தான். மணலாற்றிலும் கடுமையான பல பயிற்சிகளைச் செய்து முடித்தான். காட்டுக்கு வந்த காலத் தில் இருந்து சண்டைச்குச் செல்லும் வாய்ப்பு எட்டவில்லை; பசி கிடந்த புலி யாக மாறினான். வேட்டைக்கு நாள் வந்தது. முல்லைத்தீவு இராணுவ முகாம் முற்றுகை இறுக்கமாக்கப்பட்டது. முகாமுக்குள்ளே சிக்கிய சிப்பாய்களைக் காப் பாற்றும் முயற்சியில், வட்டுவாகல் கடற்கரையில் மேலதிக இராணுவத்தினர் தரையிறக்கப்பட்டனர். மணலாற்றில் இருந்து எமது சில படைகள் முல்லைத் தீவிற்கு கணேஜி பெரும் மகிழ்ச்சியுடன் புறப்பட்டான். மரணத்துக்கு முந்திய மகிழ்ச்சி. வட்டுவாகலில் கடுமையான சண்டை, முடிவு......? கணேஜி விண்ணு லகு சென்ற வீரர்களுடன் சென்றுவிட்டான்!

☆

பிறப்பு:
21. 01. 1975

வீரச்சாவு:
25. 08. 1990



# கைலாஸ்

(முல்லைச் சமர்)
(கனகசபாபதி லோகேந்திரா)
கச்சேரி ஒழுங்கை,
யாழ்ப்பாணம்.

அரியாலையில் பிறந்த கைலாஸ், 1990 இல் மணலாற்றில், ஏழாவது பயிற்சிப் பாசறையில் படைப் பயிற்சியைப் பெற்றுக்கொண்டான். பயிற்சி முடிந்ததும் சண்டை காத்திருந்தது. முல்லைத்தீவு இராணுவ முகாமை முற்றுகைக்குள் வைத்திருந்த அணியில், இவனும் ஒருவனாக நின்றான். முல்லைத்தீவு இராணுவ முகாமினைத் தாக்கும் சண்டைதான் இவனது விடுதலை வரலாற்றின் பெரும் பகுதியானது.

காலில் ஏற்பட்ட 'கட்டு' ஒன்றின் காரணமாக, சிலவாரம் காட்டில் சிகிச்சை பெற்று வந்தான். கட்டு சுகமாகியதும், மீண்டும் முல்லைத்தீவுக்கே அனுப்பப்பட்டான் சில வாரங்களின் பின்னர், கடுமையான மலேரியாக் காய்ச்சல் ஏற்பட்டது; இதனால் மீண்டும் காடு திரும்பினான். காய்ச்சல் குணமாகிய பின்னர் முல்லைத்தீவுப் பணி தொடர்ந்தது. மூன்றாவது முறை சிகிச்சைக்காக அவன் காட்டுக்கு வரவில்லை; அவன் உடல் மட்டுமே காடு திரும்பியது.

முல்லைத்தீவில் தொடங்கிய விடுதலை வாழ்வு, முல்லைத்தீவிலேயே விடுதலையும் பெற்றுக்கொண்டது!

☆

பிறப்பு:
12. 10. 1972

வீரச்சாவு:
06. 09.1990



# 2ஆம் லெப். காதர்

( முல்லைச் சமர் )
( பரமானந்தம் மதிவண்ணன் )
புகையிரத நிலைய வீதி,
மன்னார்.

மன்னாரில் வறுமையில் - குடிசையொன்றில் பிறந்தான் காதர். கண்ணுக்கெட்டிய தூரம்வரை மரங்களற்ற வெளி; மண்ணுக்கு இயற்கை அன்னை செய்த துரோகம் இது. ஆனால் வளமான வயல்களும், நீர் வளமுள்ள கட்டுக்கரைக் குளமும் அங்குதானிருந்தது. இத்தனைக்கும் மத்தியில் சிறிய ஓலைக் குடிசையொன்றுதான் காதர் பிறந்த மாளிகை. வறுமையென்ற வெயிலில் வாடிப்போன வாழ்வு.

காதர் தனக்கு அறிவு தெரிந்த பராயத்திலிருந்து கடற்றொழிலையே கற்றுக்கொண்டான். பஞ்சம் என்ற காற்றில் அடித்துச் செல்லப்பட்ட பஞ்சு போன்றதுதான் அவன் கல்வி. வயிறு நிரப்பும் மானப் போராட்டமாய் இவனின் இளமைக்காலம் மறைந்தது. மூளைப் பசி தீர்க்கப் பள்ளி செல்ல, செல்வம் அவனுடன் இருக்க மறுத்துவிட்டது.

வீட்டில் வறுமையிருந்தாலும் மனதில் அவனுக்குத் தன்மான உணர்ச்சியிருந்தது. வறுமைதான் அவனுக்கு எதிரியாக இருக்கின்றதென்றால், அவன் அண்ணனும் நெஞ்சில் நெருப்பை மூட்டினான். தேசவிரோதக் கும்பலுடன் சேர்ந்துகொண்ட தமையனை, தம்பி திருத்தி நல்வழிக்குக் கொண்டுவர முற்பட்டான். அது முடியாமல் போனபோது, பாசத்தை மறந்து அவனை

அழித்து விடுவதே நல்லது என்ற முடிவுக்கு வந்தான். களம் நோக்கி அவன் பாதங்கள் பதிந்தன.

மன்னாரில் ஒன்பதாவது பயிற்சி முகாமில் பயிற்சியை முடித்துக்கொண்டு, மணலாற்றை வந்தடைந்தான். மணலாற்றிலும் சிறப்புப் படைப் பயிற்சிகளைப் பெற்றுக்கொண்டான். சண்டைக் களங்கள் அடுக்கடுக்காய்க் கிடைத்தன.

மன்னாரிலிருந்து காட்டுக்கு வரும் போராளிகளிடம், தனது வீட்டு நிலைபற்றி விசாரித்து அறிந்துகொள்வதில் ஆர்வமாக இருந்தான். இவனது போராட்ட வாழ்வின் கடைசி அத்தியாயங்கள் முல்லைத்தீவுச் சண்டையில் எழுதப்பட்டன.

முல்லைத்தீவுப் படைமுகாமை முற்றுகையிட்டு எம் வீரர்கள் தாக்கிக் கொண்டிருந்தனர். எதிரியின் பலவீனமான இடங்களை அறிந்து, அந்த இடங்களைத் தாக்கி அவனை ஓடவைக்கும் சண்டை நடந்துகொண்டிருந்தது. எதிரியின் பலமான தாக்குதல் இருந்தும் பின்வாங்கக் கூடாது என்ற மான உணர்ச்சியுடன், காதரும் அவனுடன் நின்ற வீரர்களும் சண்டையிட்டுக்கொண்டிருந்தனர். மிக நெருக்கமான இடைவெளியில் சண்டை... ஒரு அடிகூட காதர் பின்னே எடுத்துவைக்க முற்படவில்லை.

காதர் தன்மானம் அதிகமுள்ளவன். புலிகள் மரணத்துக்கு அஞ்சாதவர்களென்பதனை நிலை நிறுத்தினான். எதிரி பின்வாங்கி ஓடினான். ஆனால் காதர்...? தான் நிலையெடுத்துக் கிடந்த இடத்திலேயே நினைவற்றுக்கிடந்தான்! ☆

பிறப்பு:
05. 06

வீரச்சாவு:
17. 10. 1990




# பாலு

( மிதிவெடிவிபத்து )

( அருளம்பலம் ரவிச்சந்திரன் )

கருநாட்டுக்கேணி,

மணலாறு.

**வ**ன்னிக் காட்டில் பயிற்சியை முடித்துக்கொண்டு, வன்னியின் ஒரு பகுதியான மணலாற்றுக் காட்டிற்கு வந்தான் பாலு. காட்டுக்கு வந்த காலத்தில் இவனுடன் வந்த சக போராளிகளுக்கு, இவனையே பொறுப்பாக நியமித்தனர். காட்டில் மீண்டும் புதிய பயிற்சிகள் ஆரம்பமாயின. பயிற்சிக்குப் பின்னர் மோட்டர்செல் தாக்குதல் குழுவுக்குப் பொறுப்பாக இருந்தான்.

கப்டன் காண்டீபன் அணியில் ஒருவனாக முல்லை இராணுவ முகாம் முற்றுகைத் தாக்குதலுக்குச் சென்று, மோட்டர் தாக்குதலில் தன் திறமையினை பரீட்சித்துக் கொண்டான். இச்சண்டையின் பின்னர் காட்டில் சிறப்பு அதிரடி 'கொமாண்டோ' பயிற்சிகள் ஆரம்பமாயின. இப்பயிற்சி கடினமானதெனக் கூறி விடுதலைப் பணிக்கு முற்றுப்புள்ளி வைத்து வீடு சென்றான். தான் செய்தது தவறு என்பதை வீட்டிலிருந்தபோது உணர்ந்து கொண்டதால், மீண்டும் காட்டிற்கு வந்தான். கடினமான அதிரடி கொமாண்டோப் பயிற்சியை பெற்று முடித்தான். இப் பயிற்சியின் பின்னே, வேவுப் பணிக்காக வேவுப் பிரிவில் அமர்த்தப்பட்டான். சில மாதங்கள் வேவுப் பணியில் இருந்தவன், தன் வேவுத் திறமையைக் காட்டும் முன்னரே, மிதி வெடியில் அகப்பட்டு வீரமரணத்தைத் தழுவிக்கொண்டான். ☆

பிறப்பு:
25. 02. 1972

வீரச்சாவு:
01. 09. 1990



## 2ஆம் லெப். அசோக்

( முல்லைச் சமர் )
( மகாலிங்கம் இதயச்சந்திரன் )
ஓட்டுமடம்,
யாழ்ப்பாணம்.

**அசோக்கின்** சொந்த இடம் ஓட்டுமடம். மணலாற்றில் தன் நண்பன் ஒருவனின் வீட்டுக்கு வந்திருந்தபோது, மணலாற்றில் புலிகளின் நடவடிக் கைகளும் மக்களோடிருந்த அன்னியோன்னிய உறவும், அவனது உணர்வு களை மெல்லத் தொட்டன. இதனால், யாழ். திரும்பிச் செல்ல மனமின்றி பயிற்சி பெறுவதற்காகக் காட்டிற்குச் சென்றான்.

**பயிற்சிக்காக** வரும் வீரர்களின் உறுதி சில மாதங்களாகப் பரீட்சித் துப் பார்க்கப்பட்ட பின்னரே, பயிற்சி வழங்கப்படுவது இயல்பு. சகிப்புத் தன்மை, பொறுமை, பொறுப்புணர்ச்சி இல்லாத இளைஞர்கள் வீடு செல்ல விரும்பும்போது, அவர்கள் செல்ல அனுமதிக்கப்படுவர். வீட்டில் வறுமை இருந்தும் பொறுப்புணர்வற்று சுற்றித்திரிந்த அசோக், விடுதலைக்குத் தன்னை அர்ப்பணிக்கத் துணிந்தபோது, பொறுப்புணர்வுள்ளவனாக மாறினான். பயிற் சியைச் சகிப்புத்தன்மையோடு செய்து முடித்தான். நண்பன் வீட்டுக்குச் சென்றவனைத் தேடி வந்த உறவினர், அவன் சுதந்திரப் போருக்குச் சென்று விட்டதையறிந்து கொதித்தனர். எப்படியாவது அவனை வீட்டுக்கு அழைத் துச் சென்று விடவேண்டும் என்பதில், தொடர்ச்சியாக முயற்சி எடுத்தனர்.

அசோக் எண்ணித் துணிந்தவன்; அதனால், அவர்களின் எந்த முயற்சியும் பலனளிக்காது போயிற்று.

அசோக் பயிற்சிக்குப் பின் சென்ற முதல் களம் முல்லைத்தீவுக் களம். வட்டுவாகலில் தரையிறக்கப்பட்ட ஆயிரக்கணக்கான இராணுவத்தினர், இரு வழிகளில் முன்னேறிக் கொண்டிருந்தனர். விமானத் தாக்குதல், கடற்படைத் தாக்குதல் என்பன இராணுவத்துக்குப் பக்கபலமாக அமைந்தன. ஆனாலும், எம் வீரர்கள் அபாரத் துணிச்சலுடன் இராணுவத்தை எதிர்கொண்டனர். அஞ்சா நெஞ்சு படைத்த அசோக், இச்சண்டையில்தான் காவியமானான். ☆

பிறப்பு:
25. 02. 1968

வீரச்சாவு:
23. 09. 1990



# மேஜர் அரவிந்தன்

**( முல்லைச் சமர் )**

**( சிவலிங்கம் தவானந்தராசா )**

**பொலிகண்டி,**

**யாழ்ப்பாணம்.**

மணலாற்றில் போராளிகளின் நெஞ்சில் நீங்காத இடம் பிடித்த தளபதிகளில் அரவிந்தனும் ஒருவன். வல்வெட்டித்துறையில் பிறந்து வளர்ந்து, தமிழீழ விடுதலைப் போருக்கான பயிற்சியை இந்தியாவில் பெற்றுக்கொண்டான். இந்திய மண்ணில் பத்தாவது படையணியில் பயிற்சியை முடித்திருந்தான். 1987 இல் மணலாற்றுக் காட்டுக்குத் தலைவர் வந்தபோது, அவருடன் இவனும் வந்தான். மணலாற்றுக்கு வந்த நாளில், வேவு பார்க்கும் நடவடிக்கையில் ஓய்வின்றிச் செயற்பட்டுக்கொண்டிருந்தான். தென் தமிழீழத்திற்கு போராளிகளை வழிகாட்டி அனுப்பும் பொறுப்பு இவனிடமே இருந்தது. அதிக உயரமோ தோற்றமோ இல்லாத அரவிந்தனிடம், எவரிடமுமில்லாத ஒரு இனிய சுபாவம் இருந்தது. எந்த நேரமாக இருந்தாலும், எந்த வேலையாக இருந்தாலும், சக போராளிகளின் மீது சினந்துகொள்ள மாட்டான். ''ஐயா, ஐயா'' என்று அன்போடு - ஒரு தந்தையின் பரிவோடு - பேசிக்கொள்வான். இந்திய இராணுவம் காட்டில் மேற்கொண்ட செற்மேற் - 01, செக்மேற் - 02, செக்மேற் - 03, ஒப்பரேசன் பாஸ், புயல் என தொடர்ச்சியான அனைத்து நடவடிக்கைகளிலும் அரவிந்தனும் பங்கெடுத்தான். நித்திகைக் குளப் பிரதேசத்தில் அமைந்திருந்த இந்தியப் படையின் முகாமில், தினமும் நிறுத்தப்பட்டிருக்கும் 'கெலிக்கொப்ரர்'

களை வேவு பார்த்து, அவற்றைத் தாக்கியழிக்க கரும்புலியாக தலைவரால் அனுப்பப்பட்டவர்களில் அரவிந்தனும் ஒருவன்.

இந்தியப் படைகள் தமிழீழ மண்ணை விட்டு வெளியேறிய பின், காட்டின் பொறுப்பாளனாகவும் சில மாதங்கள் இருந்தான். அக் காலத்தில் பயிற்சிப் பாசறையில் போட்டிகள் வைப்பதிலும், வெற்றி பெற்றவர்களுக்கு பரிசில்கள் வழங்கி ஊக்குவிப்பதிலும் முனைப்பாக இருந்தான். சொன்ன சொல்லுக்கு மாறாமல், சொல்வதை உடனுக்குடன் செய்து கொடுக்கும் பண்பாலும் - போராளிகளை ஊக்குவிக்கும் பண்பாலும் அவர்களின் மனங்களில் ஆழமாகப் பதிந்துகொண்டான். அன்பான பேச்சும், சிரித்த முகமும், பண்பான அணுகுமுறையும் தனித்துவமான இடத்தை அவனுக்குப் பெற்றுக்கொடுத்தன.

காட்டின் முக்கியத்துவத்தை அறிந்து செயற்பட்ட அரவிந்தன், காட்டு வாழ்க்கை என்ற எண்ணத்தைப் போராளிகள் மனதில் நீக்குமளவிற்குச் செயற்பட்டான். ''சண்டை தொடங்கட்டும், வெலி ஓயாவின் எல்லைக்கப்பால் ஆமியை அடித்துத் துரத்துவதுதான் அடுத்த வேலை'' என்று, அவன் வாய் அடிக்கடி கூறிக்கொள்ளும். முல்லைத்தீவு முற்றுகைத் தாக்குதலை முறியடித்து - படை முகாமைப் பலப்படுத்திக் கொண்ட சிங்களப் படைக்கு, தலையடி ஒன்று கொடுக்காமல் விடக்கூடாதென்ற எண்ணத்தோடு புறப்பட்டான். ஆஸ்பத்திரிச் சந்தியில் கவசவாகனமொன்றில் வந்த சிங்களப் படையை, ஓட ஓடக் கலைத்துச் சுட்டான். கவசவாகனத்தையும் கைவிட்டு விட்டு, படைகள் முகாமுக்குள் தப்பி ஓடின. கவசவாகனத்தைக் கைப்பற்றும் நோக்கோடு முன்னேறிக்கொண்டிருந்த அரவிந்தனின் காலில் எதிரியின் 50 கலிபர் குண்டொன்று துளைத்துக்கொண்டது. கவசவாகனத்தை விட, அரவிந்தனைக் காத்து வருவதில் போராளிகள் முனைப்பாக நின்றனர்.

அரவிந்தனைச் சுமந்துகொண்டு எம் வீரர்களின் அதிவேகப் படகு, இந்தியா நோக்கிப் பயணமானது. 'அரவிந்தன் தப்பி விடுவான்; மீண்டும் அவன் பாதம் மணலாற்றில் பதியும்; ஐயா, தம்பி, ராசா என்று அன்பாக எம்மை கூப்பிடுவான்' என்று எதிர்பார்த்திருந்தோம். ஆனால் அவன் திரும்பவேயில்லை. சிங்களப் படையின் கையில் தன் புதல்வர்கள் சிக்கிவிடும் நிலை ஏற்பட்டபோது, அதைத் தடுக்கவிரும்பி, தன் அலைக்கரங்களால் அவனை வாரி அணைத்துக்கொண்டாளாம், தமிழீழக் கடற்தாய்!

☆

பிறப்பு:
23. 07. 1973

வீரச்சாவு:
01. 09. 1990




## சுந்தர்

( முல்லைச் சமர் )
( சித்திரவேல் கஜேந்திரராசா )
5ஆம் வட்டாரம்,
சம்பூர்.

கப். டேவிற்றின் நெருங்கிய நட்புக்கும் பாசத்துக்குமுரியவன் சுந்தர். மூதூர் சம்பூர்க் கிராமத்திலிருந்து மணலாற்றுக்கு வந்தவன். வரும்போதே டேவிற்றுடன் தான் கூடி வந்தான். பல போராளிகளின் வாழ்க்கையோடு இணைந்த வீட்டு வறுமை, இவனது வீட்டையும் விட்டதில்லை. வறுமையையும் மிஞ்சிய கல்விச் செல்வம் இவனிடம் இருந்தது. உலகப் பொது அறிவில் உச்ச அறிவுடனிருந்தான்.

1989 இல் மணலாற்றுக்கு வரும்போது, இந்தியப் படைகளின் கெடுபிடி யின் உக்கிரம் சற்றுத் தணிந்திருந்தது. காட்டில் ஐந்தாவது யுத்த அணியில் பயிற்சியைப் பெற்றபின், மருத்துவப் பிரிவில் இணைக்கப்பட்டான். மனித உயிரோடு விளையாடும் பணி; அதுவும் துப்பாக்கிக் குண்டுகளுக்கு நடுவேயும், விமானத் தாக்குதல்களுக்கிடையேயும் உறுதி குலையாது நின்று உயிர் காக்கும் உத்தமப் பணி. கிழக்கில் ஆக்கிரமிப்பால் வெடித்துக் கிளர்ந்தவனுக்கு போர்க் களமே பஞ்சு மெத்தையாகவும், கற்கைப்புலமாகவும் தெரிந்தது. எண்ணித் துணிந்த புலி வீரனாய் மணலாற்றுக் காட்டுக்கு வந்தான்.

மணலாற்றில் பயிற்சியை முடித்திருந்த காலத்தில், ' இரண்டாவது ஈழப் போர் ' தொடங்கியது. கிழக்கிலிருந்து தொடங்கி வடக்கில் வெற்றி வரை

சென்ற ஈழப் போரில், முல்லைத்தீவு இராணுவ முகாம் மீதான தாக்குதலில் மருத்துவ சேவை செய்யும் பாக்கியம் கிடைத்தது. மரணத்தோடு விளையாடிய சுந்தரைக் குண்டு துளைத்தபோது, தன் கருணை மிக்க பணியை முடித்துக்கொண்டான். உயிர் காத்த தன் உயிரை மற்றவர்கள் காத்துக்கொடுக்கச் சந்தர்ப்பம் கொடுக்காமலே மறைந்துகொண்டான்! ☆



பிறப்பு :
1972

வீரச்சாவு :
01. 09. 1990




# ரஜனி

( முல்லைச் சமர் )
(முத்துவேல் சௌந்தரராஜன்)
சேனையூர்,
மூதூர்.

ரஜனியின் இளமைக் காலத்தைப் புரட்டிப் பார்த்தால், தியாகத்திற்கு வயதில்லை என்ற உண்மை வெளிப்பட்டு நிற்கும். தென் தமிழீழத்தின் மூதூர் பிரதேசம் 'புலிகளின் பிரதேசம்' எனப் பெயரெடுத்து, சிங்களப் படைகளைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்த காலமுண்டு. இப் பிரதேசத்தின் ஒவ்வொரு கிராமமும், முடிந்தவரை விடுதலை வீரர்களைக் காத்து நின்ற கிராமமென்பது, தடையின்றிக் கூறிக்கொள்ளத் தக்கது.

சேனையூர்க் கிராமத்தில் ரஜனியின் வறிய குடிசை, விடுதலைப் புலிவீரர் வருகைக்காய் என்றும் மகிழ்ந்து காத்திருக்கும். அம்மா, அப்பாகூட வெளிப் படையாகவும் மறைமுகமாகவும் இயக்க வளர்ச்சிக்காகச் செயற்பட்டுக்கொண் டிருந்த போது, ரஜனியின் குழந்தை விழிகள் இவற்றைக் கூர்ந்து நோக்கிக் கொண்டன. தந்தை தாயுடன் புலிவீரர்கள் பேசிய பேச்சுக்களை ரஜனியின் செவிகள் வாங்கிக்கொண்டன. அதனால்தான், தன் பிஞ்சுப் பாதங்கள் நோக நோக ஓடி ஓடி உதவிகளைச் செய்யத் தொடங்கினான். சாப்பாடு கொண்டு செல்வதும், உணவுப் பொருட்கள் எடுத்துச் செல்வதும் அவனது மனதுக்குப் பெரும் மகிழ்வை கொடுத்தது. துப்பாக்கி தூக்கலாம் என்ற நிலை வந்தபோது, பயிற்சிக்காகத் தன்னை இணைத்துக்கொண்டான்.

மூதூரில் பயிற்சி முடித்து இந்திய ஜவான்களுக்கெதிரான நடவடிக்கைகள் சிலவற்றில் பங்குகொண்ட பின், மணலாறு நோக்கிய பயணத்தைத் தொடர்ந்தான். மணலாற்றில் நின்று நிலைத்துப் பணிபுரிய, தமிழன்னை விடவில்லை. தையல் வேலையில் திறமையிருந்ததால் சில மாதங்கள் அப்பணியில் இருந்தான். வட்டுவாகலில் தரையிறக்கப்பட்ட இலங்கைப் படைகளை எதிர்கொள்ளச் சென்ற அணியில் ரஜனியும் சென்றான். சண்டைமுடிந்து திரும்பிய போது ரஜனி ...?

☆

பிறப்பு:
10. 06. 1973

வீரச்சாவு:
01. 09. 1990




# லெப். மென்டிஸ்

(முல்லைச்சமர்)

( மகேஸ் ஜெயசீலன் )

புகையிரதநிலைய வீதி,

மன்னார்.

முல்லைத்தீவு இராணுவ முகாமுள் சிப்பாய்களின் அவலக் குரல்கள் கேட்கத் தொடங்கின. இராணுவ முகாம் எமது கையில் விழுவதற்குரிய அறிகுறியை இது எடுத்துக் காட்டியது. ஒரு மாதத்துக்கு மேலாக விமான மார்க்க, தரை மார்க்க, உதவிகள் அவர்களுக்குக் கிட்டவில்லை. வெற்றியின் எல்லையை நெருங்கிக் கொண்டிருக்கும் போதுதான், எதிர்பாராத விதமாக வட்டுவாகற் கடற்கரையில் இராணுவத்தினர் தரையிறக்கப்பட்டனர். சண்டை மிகக் கடூரமானதாக மாறியது. முகாம் முற்றுகையினை விடுத்து, இறக்கப்பட்ட இராணுவத்தினருக்கு முகங்கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

எமது புதிய பல அணிகள் பல களங்களில் இறக்கப்பட்டன. இவ்வணிகளில் ஒன்றாக 'மென்டிஸ் அணி'யும் இறங்கியது. மோட்டர் தாக்குதலணியின் பொறுப்பாளனாக நின்ற மென்டிஸ் மோட்டர் செல்களை இராணுவத்தின் மீது போட்டுக்கொண்டிருந்தான். பல ஆயிரக்கணக்கான சிப்பாய்கள் இறக்கப்பட்டிருந்ததால், இழப்புக்களைப் பொருட்படுத்தாமல் முன்னேறிக் கொண்டிருந்த படைகளை, சின்னாத்தான் காட்டுப் பாலத்தில் மீண்டும் சந்தித்தான் மென்டிஸ். தன் அணியில் பலர் காயமுற்றுப் போனதையும் உணர்ந்தான். மோட்டருக்குரிய செல் தீர்ந்து போனதையும் அறிந்துகொண்டான். அவசரமாகப் பின்

வாங்கிய மெண்டிஸ் சக தோழனொருவனிடம் துப்பாக்கியொன்றினைப் பெற்றுக்கொண்டு, மீண்டும் முன்னேறினான். படைகளின் முன்னேற்றத்தை தடுக்க வேண்டும்; அல்லது பலரை அழிக்க வேண்டும். இவைதான் மெண்டிசின் மனதில் ஓங்கி நின்றன. தன் உயிரைப் பற்றிச் சிந்திக்க அவனுக்கு நேரமிருக்கவில்லை; கடமை அவனை வழி நடத்தியது. சில மணித்தியாலங்கள் மெண்டிசின் துப்பாக்கி இயங்கியது. முடிவில் தன்னையும் அழித்துக்கொள்ள நினைத்துவிட்டான் போலும்! கர்ம வீரனாய் கண்மூடிக்கொண்டான்! ☆

பிறப்பு :
23. 04. 1972

வீரச்சாவு :
02. 09. 1990



# ஆப்தீன்

**( முல்லைச் சமர் )**
**(பாலசிங்கம் மோகனதாஸ்)**
**மந்திப்புலம்,**
**கொக்குவில்.**

**ப**டைப் பயிற்சி முடித்தும் கையில் ஆயுதம் கிடைப்பது கடினம்; ஆயுதம் கிடைத்தாலும் கனரக ஆயுதங்கள் கிடைப்பதென்பது மிகக்கடினம். நம்பிக்கை, திறமை, பலம், பொறுப்புணர்ச்சி எல்லாம் இருந்தால் மட்டுமே ஆயுதங்கள் வழங்கப்படும். பல உயிர்களைக் கொடுத்து எடுத்த ஆயுதங்கள் அல்லவா......? ஆனால் ஆப்தீனிடம் அனைத்துப் பண்புகளும் இருந்ததால், பயிற்சி முடிந்தவுடனேயே 'கால்கஸ்ரோ' வழங்கப்பட்டது. வலிமை மிக்க தேகத்திற்கு 'கால்கஸ்ரோ' பொருத்தமாகவே இருந்தது. மணலாற்றுக் காட்டில், ஏழாவது படைப் பயிற்சி முகாமில் யுத்தப் பயிற்சியை முடித்துக் கொண்டாலும், பின்னர் மீண்டும் ஒரு தடவை விசேட அதிரடிக்கொமாண்டோப் பயிற்சியைப் பெற்றுக் கொண்டான். 'கால்கஸ்ரோ'வினை வைத்திருக்கக்கூடிய முழுத் தகுதிக்குமுரிய திறமையை இச் சிறப்புப் பயிற்சியால் பெற்றுக்கொண்டான். 'கால்கஸ்ரோ'வினை இயக்கும் பாக்கியம் முதலில், முல்லைத்தீவு இராணுவ முகாமைத் தாக்கிய போதே கிடைத்தது. வெற்றியின் விளிம்பில் நிற்கும்போது எதிர்பாராமல் கைநழுவிப்போன இச் சண்டையில், பெறுமதி மிக்க வீரர்கள் பலரையும் பறி கொடுக்க நேர்ந்தது.

ஆப்தீனின் சாவும் இங்குதான் நிகழ்ந்தது. தன் பணியின் மகத்துவத்தையும் அவசியத்தையும் உணர்ந்து செயற்பட்டு உதிர்ந்துபோன இவனை, கொக்குவில் மந்திப்புலம் கிராமம் மறக்காது; பிறந்த மண் மறந்தாலும் வளர்த்த மண் இவனைநெஞ்சில் சுமக்கும்! ☆

பிறப்பு :
1970

வீரச்சாவு :
02. 09. 1990




# கபில் தேவ்

## ( முல்லைச் சமர் )

(வைரமுத்து கலாநாதன்)
1ஆம் குறிச்சி, பழுகாமம்,
மட்டக்களப்பு.

மண் மீட்பு யுத்தத்தில் கலந்துகொள்ள கபில் தேவ் சிந்தித்தபோது, அவன் வீட்டுநிலை சற்றுத் தயக்கத்தைக் கொடுத்தது. ஐந்து சகோதரிகளுக்கு ஒரு சகோதரன் இவன். முதல் தடவை வீட்டை விட்டுப் புறப்பட்டு வந்த கபில் தேவை, எம் வீரர்கள் உடனேயே வீட்டுக்குத் திருப்பி அனுப்பி விட்டனர். வீட்டின் வறுமையை நன்கு புரிந்துகொண்டதாலேயே எம் வீரர்கள் இம் முடிவினை எடுத்தனர். இவனுடைய முடிவோ மாறுபட்டதாக இருந்தது. முன்வைத்த காலைப் பின்வைக்க விரும்பாத இவன், பழுகாமம் கிராமத்தில் இருந்து வெளியேறி, வேறு பகுதியொன்றில் எமது இயக்கத்தில் இணைந்து கொண்டான்.

மட்டக்களப்பில் இருந்து மணலாற்றுக்கு வந்து, பதினோராவது படை அணியில் பயிற்சியைப் பெற்றுக்கொண்டான். பயிற்சி முடித்து பாசறையில் சில காலம் நின்றபோது, வீட்டில் இருந்து தந்தையின் மரணச் செய்தி இவன் காதுக் கெட்டியது. இச் செய்தி கபில் தேவைக் குழப்பத்துக்குள்ளாக்கவில்லை. உறுதி அவனில் உறைந்து கிடந்தது. இவனுக்குக் கிடைத்த முதல் சண்டை, முல்லைத் தீவு இராணுவ முகாமினைத் தாக்கியழிக்க முற்பட்ட சண்டைதான். பெண் சகோதரங்களுடன் கூடிப் பிறந்த காரணத்தாலோ என்னவோ, இவனிடம் பொறுப்புணர்ச்சி இருந்தது. அதனால்தான் பொறுப்புள்ள இச்சண்டையின் வெற்றிக்காய் ஓய்வின்றிக் களத்தில் நின்றான். 'வெற்றி அல்லது வீரமரணம்' என்பது போல், வெற்றி கைநழுவிப் போனபோது...... மானத்தைக் காக்க உயிரைத் தியாகித்துக்கொண்டான் கபில் தேவ்......! ☆

பிறப்பு:
05. 02. 1975

வீரச்சாவு:
01. 09. 1990




# ஆண்டவன்

( முல்லைச்சமர் )
( சிலுவைராசா ஜெயபாஸ்கரன் )
மல்வம், உடுவில்,
சுன்னாகம்.

முல்லைத்தீவு படை முகாம் எம்மிடம் வீழ்ச்சியுறும் நிலையில் இருந்தது. 1990 ஆம் ஆண்டு புரட்டாதித் திங்கள் 1ஆம் நாள், எமது வீரர்கள் இராணுவ முகாமுக்குள் புகுந்து, இறுதித் தாக்குதலை நடாத்துவதற்கான திட்டங்கள் வகுக்கப்பட்டன. அந்த வெற்றி பறிபோன கொடிய நாள்.

ஆவணித் திங்கள் 31ஆம் நாள் இரவு, வட்டுவாகல் கடற்கரையில், மேலதிக படைப் பிரிவுகள் இறக்கப்படுகின்றன. எத்தனை உயிரைக் கொடுத்தேனும் தமது தங்ககத்தில் இருக்கும் சிப்பாய்களைக் காக்கவேண்டிய கட்டாய நிலை அவர்களுக்கிருந்தது. இரு முனைகளில் படை நகர்ந்தது. விமானங்கள் அசுர வேகத்தில் குண்டுகளை வீசின. எமது வீரர்கள் சற்றும் தளராது எதிர்க்கு முகங்கொடுத்தனர்.

மணலாற்றிலிருந்து சில அணிகள் முல்லைத்தீவு நோக்கி விரைந்தன. ஆண்டவனும் அவ்வணியில் புறப்பட்டான். சென்ற வேகத்திலே சண்டை முனையில் நிற்கவேண்டிய நிலை; பல திசைகளாலும் இராணுவத்தின் துப்பாக்கிக் குண்டுகள் வந்தன. நிலை எடுத்து சண்டை செய்யக்கூடிய அவகாசம் இல்லாமையினால், பாய்ந்து பாய்ந்து இராணுவத்தினரைச் சுட்டுக்கொண்டிருந்தான்.

ஆண்டவன்; ஆனால் அவன் சாவை ஆண்டவனால் கூட தடுத்து நிறுத்த முடிய வில்லை. யாழ். உடுவில் கிராமம், ஆண்டவன் தியாகத்துக்கு சிலை எடுக்கும். சிலை எடுக்கத் தவறினாலும், மணலாற்று மக்கள் அவனை நெஞ்சில் சுமக்கத் தவறமாட்டார்கள்! ☆



பிறப்பு:
06. 12. 1973

வீரச்சாவு:
01 .09. 1990



## அமலன்

( முல்லைச் சமர் )
( சிவலிங்கம் சரத்சந்திரன் )
குமுழமுனை ,
மணலாறு.

மட்டக்களப்பிற்கும், மணலாற்றுக்குமிடையே பூர்வீக பந்தமொன்று இருந் திருக்க வேண்டும். ஏனெனில், அமலன் குமுழமுனை மண்ணில் பிறந்தாலும், அவன் தந்தை மட்டக்களப்பினைப் பிறந்த இடமாகக் கொண்டிருந்தார். எங் கெல்லாமோ இருந்து எம்மண்ணைக் காக்க ஓடிவர, உணர்வற்ற மனிதர்களாய் நாம் தொடர்ந்து வாழ்வதா என்ற கேள்விக்குறி அமலனின் மனதில் எழுந்து நின்றது. பள்ளிக்குச் சென்று புத்தகத்தை விரித்தபோதெல்லாம், ஒவ்வொரு நாளும் தன் மண்ணுக்காய் மடியும் வீரர்களின் முகமே தெரிந்தது. படிப்பில் திறமைசாலிதான்; ஆனால் தாய் தந்தையரை, உறவினரை, தன்னுணர்வுகளை மறந்து விடுதலைக்காகப் பலர் உயிர் கொடுக்க, தனக்கு மட்டும் படிப்பு அவசி யமா......?அமலன் காடு நோக்கிப் புறப்பட்டான்.

பத்தாவது பயிற்சிப் பாசறையில் பயிற்சி முடித்துக்கொண்டு சண்டைக் காகப் புறப்பட்டான். 1990 ஆம் ஆண்டு புரட்டாதித் திங்கள் 1ஆம் நாள், முல்லைத்தீவு பிரதான மருத்துவமனைச் சந்தியில், இராணுவத்துடன் பெரும் மோதல் ஏற்பட்டது. மேஜர் அரவிந்தன் தலைமையில், எம் வீரர்கள் மின்னல் வேகத் தாக்குதலில் இறங்கியிருந்தனர். தேசவிரோதிகள், தன் உடன் பிறந்த அக்காவினைச் சுட்டுக் கொன்றது, அமலன் மனதில் ஆழமாய்ப் பதிந்து கிடந்

தது. தாக்குதல் களத்தில் அந்தக் கொடிய நினைவு அமலனை எரிமலையாய் மாற்றியிருந்தது. சாந்தமும் அமைதியும் நிறைந்த அமலன், புயலாகிச் சண்டை செய்தான். எதிரியின் குண்டொன்று அமலனைக் துளைத்துக்கொண்டது.

ஒய்வின்றி உழைத்த அவன் சிதைந்த ஓவியமாய்க் கிடந்த அந்த நாள்......!

☆

பிறப்பு:
07. 09. 1970

வீரச்சாவு:
01.09. 1990




# சிறீ

( முல்லைச் சமர் )
( செல்வநாயகம் புனிதராசா)
உவர்மலை,
திருக்கோணமலை.

திருமலையில் உவர்மலைக் கிராமம், இன்று சிங்களத்தின் குடியேற்றப் பசிக்கு இரையாகிவிட்டது. சொத்துக்கள் போய், வீடும் போய், பிறந்த மண்ணும் பறிபோய்விட்ட நிலையில் உயிரை மட்டும் வைத்திருப்பதில் என்ன பயன்? இந்தியப் படைகளையும் நம்பிக் கெட்டாகிவிட்டது; இளைய தலைமுறையாவது நிம்மதியாக வாழ வேண்டாமா?

சிந்திக்கக் காலமில்லை எனக்கருதி போர்க்களம் புகுந்தான் சிறீ.

மணலாற்றில் பயிற்சிக்கு வந்த பின், சிறீ பல உண்மைகளைத் தெளிவாகப் புரிந்துகொண்டான். தமிழீழத்தின் இணைப்பு மையமாய் மணலாறு இருந்ததும், தென் தமிழீழ விடுவிப்பில் மணலாற்றின் பங்குப் பணி அதிகமென்பதும் அவனுக்குத் தெளிவாகியது. பயிற்சிக் களத்தைப் புரிந்துணர்வோடு முடித்துக் கொண்டவனுக்கு, யுத்த அனுபவக் களமாய் முல்லைத்தீவு சண்டை காத்திருந்தது. பிரதேச பேதம் மறந்து, தேசத்தின் நலனைச் சுமந்து களத்தில் புகுந்தான். சிறீயின் வீரவிளையாட்டை தமிழீழத்தாய் கண்டு பெருமிதப் பட்டுக்கொண்டாள். காலமகளோ அவன் வீரத்தில் கண்பதித்துவிட்டாள். வீரமகன் சிலையானான். அவன் உயிர் தியாகத்தின் விலையானது! ☆

பிறப்பு:
**24.01.1971**

வீரச்சாவு:
**26.08.1990**




# முகுந்தன்

( முல்லைச் சமர் )
( குணசேகரம் யோகராசா )
5 ஆம் வட்டாரம்,
நெடுந்தீவு.

நெடுந்தீவு முகுந்தனின் பிறந்தகம். இன்று சிங்களப்படைகளினதும், தேச விரோதக் கும்பல்களினதும் பிடியில் சிக்கி மக்களை இழந்து கிடக்கிறது. நெடுந் தீவில் கால் பதிக்க அஞ்சிய படைகளை, திசை காட்டி அழைத்து வந்தவர்கள் தேசவிரோதிகளே!

இந்தியப் படைகளின் மாறாத வடுக்களை தமிழீழ மண் சந்தித்தபோது போர்முனைக்கு வந்தான் முகுந்தன். நெடுந்தீவில் மட்டுமன்றி, யாழ். குடா நாடு முழுவதும் இந்திய வெறித்தனம் தலைவிரித்தாடியதால், பயிற்சித்தளங் கள் பல மணலாற்றுக் காட்டிற்கு மாற்றப்பட்டிருந்தன. இதனால் போர்க்களம் தேடி விரைந்த வீரர்களெல்லாம், மணலாற்றுக்குப் பயிற்சிக்காகக் கொண்டு வரப்பட்டனர்; அவ்வாறு வந்தவர்களில் முகுந்தனும் அடங்கியிருந்தான்.

பயிற்சிக்காக ஆயிரக் கணக்கில் இளைஞர்கள் வந்திருந்தாலும், அவர் களின் பொறுமை, திறமை, உறுதி என்பன சில மாதங்களாகப் பரீட்சிக்கப் பட்ட பின்பே பயிற்சிகள் வழங்கப்பட்டன. உறுதியற்றவர் திரும்பிச் செல்ல உறுதிகுலையாது நின்றவர்களில் முகுந்தனும் ஒருவன். பத்தாவது படையணி யில் பயிற்சியை முடித்துக்கொண்ட முகுந்தனுக்கு, முல்லைத்தீவில் களம் காத் துக்கிடந்தது. அங்கும் உறுதியோடுதான் புறப்பட்டான். ஆனால், உறைவிடமும் அதுவாகிப்போனது வேதனையானது. துயரங்களையே சுமந்த தமிழீழத்தாய் இவனையும் அணைத்துக்கொண்டாள்! ☆

பிறப்பு:
1971

வீரச்சாவு:
26. 08. 1990




## தங்கத்துரை

(முல்லைச் சமர்)

(கந்தசாமி செல்வராசா)

வங்காலை,

மன்னார்.

மேஜர் வீமன், மேஜர் சதாத், கப். காண்டீபன், கப். விமல்ராஜ் என பல பொறுப்புமிக்க தளபதிகளையும், வீரர்களையும் மணலாற்றுக்குத் தந்த பெருமையுடையது மன்னார். போர்க்குணம் மிக்க வீரர்கள் புலரை உருவாக்கிய மணலாற்றுக் காட்டுக்காக தம்மை அர்ப்பணித்துக்கொண்ட மாவீரர்களைத் தந்த இடங்களின் வரிசையில், மன்னார் மண்ணும் கணிசமான இடத்தைப் பிடித்துக்கொள்கிறது.

மன்னார் - வங்காலைக் கிராமத்திலிருந்து மணலாற்றுக் காட்டிற்குப் பயிற்சிக்காக வந்தவர்களில், தங்கத்துரையும் இருந்தான். காட்டில் பயிற்சி பெற்ற அணிகளில் அதிகூடிய கஷ்டத்தினைப் பெற்ற அணி, பத்தாவதுபயிற்சி அணியாகும். சரியான உணவுத்தட்டுப்பாட்டுடன் பயிற்சியை முடித்துக்கொண்ட இவ்வணியில்தான், தங்கத்துரையும் பயிற்சியை முடித்துக்கொண்டான். கஷ்டங்களை சகிப்புத்தன்மையோடு ஏற்றுக்கொண்ட தங்கத்துரை, பயிற்சி முடிந்ததும் முல்லைத்தீவுச் சண்டைக்குப் புறப்பட்டிருந்தான்.

வட்டுவாகலில் தரையிறக்கப்பட்ட இராணுவத்தினர், பிரதான வீதி வழியாகவும் கடற்கரை வழியாகவும் இரு முனைகளில் முன்னேறிக்கொண்டிருந்

தனர். விமானங்களும், கடற்படைப் பீரங்கிப் படகுகளும் சரமாரியாகக் குண்டுத் தாக்குதல்களை நடத்திக்கொண்டிருந்தன. எந்தப்பலத்தையும், தம் மனப்பலத் தால் எதிர்கொண்டு வெற்றி கண்ட எம் வீரர்கள், படையினை ஊடறுத்துச் சென்று தாக்கத் தொடங்கினர். இரண்டு மூன்று யார் தூரத்தில் துப்பாக்கிகள் சந்தித்துக்கொண்டன. இந்தத் துணிவு மிக்க தாக்குதலில், தங்கத்துரை இரத் தத்திலகமிட்டுக்கொள்கிறான். இரத்தத்தால் சிவந்த வரலாறு அவனையும் வரைந்துகொள்கிறது! ☆

பிறப்பு:
09. 12. 1972

வீரச்சாவு:
09. 09. 1990




# ஜெயபால்

( முல்லைச் சமர் )

(முத்துலிங்கம் சுகு)

ஐயங்கேணி,

ஏறாவூர்.

சிந்திய செங்குருதி செந்தமிழீழ மண் விடிவுக்கு போதும்; இனியும் எம் குழந்தைகள் குருதி சிந்தாதிருக்கட்டும் என்ற சிந்தனையோடு சிதையாகிப் போனவன் ஜெயபால். இலங்கைப் படைகளுக்கு ஓடி ஓடி ஒளித்துச் சலித்துப் போயிருக்க, இந்தியப் படை வந்து சேர்ந்தது. மீண்டும் ஓட்டம் ஓடி ஓடிச் சலித்து, இனி ஓட முடியாது என்ற நிலையில் விடுதலைப் போருக்கு ஓடிவந்தோர் பலர். பிறந்த மண்ணில் சுதந்திரமாக உறங்க முடியவில்லை; கல்வி பயில் முடியவில்லை; சிரித்து விளையாடி மகிழ முடியவில்லை என்ற உண்மையை உணர்ந்து புறப்பட்டோர் பலர். எதுவாக இருந்தாலும் உன்னதமான உயிரை, வளமான எதிர் காலத்துக்கு அர்ப்பணிக்கத் துணிந்தவர்களே இவர்கள்.

வன்னேரிக்குளம் கிராமத்தில் பிறந்து, இந்திய தேசப் படையின் கொடுமை கண்டு களம் புகுந்தான் ஜெயபால். மணலாற்றுக்கு வந்து படைப் பயிற்சி பெற்றுக் கொண்டவனுக்கு, நீண்டகாலம் சண்டை செய்யும் பாக்கியம் கிடைக்கவில்லை. வட்டுவாகலில் தரையிறக்கப்பட்டு முன்னேறிய இராணுவத்தை எதிர்த்து, எமது வீரர்கள் கடும் சண்டை செய்தனர். ஒரு சில நாட்கள் நீடித்த இச்சண்டையில் ஜெயபாலும் பங்குகொண்டான். வீரமும் களத்தே விட்டு வெறுமையாய் மீள்வதை விட, மார்பில் குண்டேந்தி மாள்வதே மேல் என நினைத்துவிட்டான் ஜெயபால்; சுதந்திரதேவி தன் பாதத்தில் அவனை அழைத்துக் கொண்டாள்! ☆

பிறப்பு:
06. 02. 1970

வீரச்சாவு:
26. 08. 1990



# அருளப்பு

( முல்லைச் சமர் )
(சுப்பிரமணியம் ஜெயரட்ணம்)
கரவெட்டி மேற்கு,
கரவெட்டி.

சாவு அனைவருக்கும் வருவது; ஆனால், சாதனையோடு வருவது குறைவு. பிறந்தோம், வாழ்ந்தோம், இறந்தோம் என்ற வாழ்வு வாழாமல் பிறந்தோம், சாதித்தோம், மக்களின் மனங்களில் நிறைந்தோம் என்ற வாழ்வே அர்த்தமுள்ளது. அருளப்புவின் சாவு வரலாற்றுப் புகழ் மிக்கது.

வடமராட்சியில் கரவெட்டிப் பிரதேசத்திலிருந்து விடுதலைக்களம் தேடி ஓடியவன் அருளப்பு. பயிற்சித்தளங்கள் மணலாற்றுக் காட்டிற்கு மாற்றப்பட்டிருந்ததால், அங்கிருந்து மணலாற்றுக்கு வந்தான். பயிற்சியை சிரமமின்றி முடித்தவனுக்கு, முல்லைத்தீவு சண்டைக்களம் காத்திருந்தது. முதற் சண்டையில் பெரும் எண்ணிக்கையான படை; பெரும்படை கண்டு அஞ்சாதவன் தமிழன் !

சிங்களத்தின் இப் பெரும்படைக்கு அஞ்சவில்லை. பிள்ளைகள் பலரைப் பெறலாம்; பெற்ற அனைத்துப் பிள்ளைகளாலும் பெற்றவர்க்கு புகழ் சேர்வதில்லை. தேசபக்தனாய், விடுதலைக்கு உயிர்கொடுத்த பிள்ளையின் பெயரால் தான் பெற்றவர்களின் பெயர் நிலைக்கிறது. முல்லைத்தீவு சண்டையில் அருளப்பு தன் பெற்றோர்க்கு இப்புகழைச் சேர்த்துக்கொண்டான்!

வீரச்சாவு:
06. 09. 1990




# கோபிநாத்

( முல்லைச் சமர் )
( விஜயன் குமார் )
மொறக்கொட்டாஞ்சேனை,
மட்டக்களப்பு.

மணலாற்றுக்காக உயிர்கொடுத்த மாவீரர் குறிப்பேட்டினைப் புரட்டும் போது, தென் தமிழீழ வீரர்களின் பெயர்கள் நீண்டு செல்லும். தாயை, தந்தையை, உறவுகளை மறந்து - பிறந்த மண்ணின் பற்றையும் மறந்து - மண லாற்றுக்காய் உயிர் கொடுத்த அந்த உத்தமர்களை எப்படி மறக்கமுடியும்? தமிழனாய்ப் பிறந்த குற்றத்துக்காய் சிங்கள தேசத்தின் அருகே, தமிழீழ எல்லைக் கிராமங்களாய் - எல்லையைக் காக்கும் கவசங்களாய், சொந்த மண்ணை இழக்கவிரும்பாத வைரநெஞ்சங்களாய் மட்டுமன்றி, முழுத் தமிழீழ மண்ணை யும் காக்கும் பணிக்காகப் புறப்பட்டுவிட்ட இளைஞர்கள்......!

அந்த இளைஞர்கள் வரிசையில், தன் வீரவரலாற்றை எழுதிக்கொண்ட கோபிநாத்.....

மணலாற்றுக்காக ஒரு வீரமைந்தனைப் பெற்றுத்தந்த முறக்கொட்டாஞ் சேனைக் கிராமத்தை மணலாறு மறக்காது. கிழக்கிலிருந்து கோபிநாத் இங்கு வந்து, பத்தாவது பயிற்சிப் பாசறையில் யுத்தப்பயிற்சியை முடித்துக்கொண் டான். பயிற்சிக்குப் பின்னே ஒரு மாதம் காட்டில் பாசறைப் பணிகளில் ஈடுபட்டான். இக்காலத்தில்தான் முல்லைத்தீவு இராணுவத் தங்ககத்தில் சண்டை தீவிரமாகியது. மணலாற்றிலிருந்து சில படைப் பிரிவுகள் முல்லைத்

தீவு நோக்கிப் புறப்பட்டன; கோபிநாத்தும் இவ்வணிகளில் ஒருவனாய் நின் றான். கிழக்கில் சிங்களத்தின் மனிதக் கொலைகளைக் கண்டு கொதித்துவந்த கோபிநாத், தனது முதற் சண்டையிலேயே சிங்களப் படைகளைக் கண்முன் சுட்டு வீழ்த்தினான்...., எமது வீரர்கள் சாவுக்கு அஞ்சாதவர்கள்; அதனால்தான் வெற்றி எம்பக்கம் நிற்கிறது. அந்த வெற்றியின் பின்னே குருதி படிந்த வர லாறுகள் பல உண்டு. முல்லைத்தீவுச் சண்டையில் தானும் இந்த வரலாற்றை எழுதிக் கொண்டான் - கோபிநாத்......! ☆

பிறப்பு:
03.01.1968

வீரச்சாவு:
26.08.1990




# கில்மன்

(முல்லைச் சமர்)
(அப்புராசா சிவேஸ்வரன்)
மூளாய் வீதி,
வட்டுக்கோட்டை.

ஓமந்தை பன்றிக்கெய்தகுளம் கில்மனின் பிறந்தகம். வன்னிவளக் கிராமங்களில் ஒன்று. காடும் காடு சார்ந்த இடமும்; அந்தக் காட்டின் நடுவே வயலும் வயல் சார்ந்த நிலமும்; அந்நிலத்தை நம்பி வாழும் சில குடும்பமும் கொண்ட சிறிய கிராமம் பன்றிக்கெய்தகுளம். விடுதலைப் போருக்கும் இத்தகைய குக்கிராமங்களுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. போராட்டம் நெருக்கடி மிக்க காலத்தைச் சந்தித்த போதெல்லாம், உயிர் கொடுத்த உறுதியின் உறைவிடங்கள் இவை. வலிமை மிக்க தன் சிறகுக்குள் எம் வீரர்களைக் காத்தமக்கள் இவர்கள். இத்தகைய கிராமத்திற்கேயுரிய வீரப்பண்புடன் புறப்பட்டு வந்தவன் கில்மன்.

வன்னியின் ஒரு பகுதியான மணலாற்றுக் காடு அவனை வரவேற்றது. கில்மனுக்குக் காடு புதிதல்ல; காட்டு வாழ்க்கையும் சிரமமானதல்ல. அதனால், மகிழ்ச்சி குன்றாது பயிற்சியை முடித்துக்கொண்டான். பெருமதிமிக்க வீரனான அவனிடம், நீண்டகாலப் பணியை இம் மண் வேண்டி நின்றது. காலத்தின் தேவை கருதி - முல்லைத்தீவில் தரையிறக்கப்பட்ட படைகளால் சண்டைக்குப் புறப்பட்டான். எதற்கும் அஞ்சாத நெஞ்சம். ஆயிரக்கணக்கில் முன்னேறி வந்த படையைக் கண்டு கலங்காத கில்மனின் துப்பாக்கி அனலைக் கக்கியது. வன்னி மண் - ''இங்கு வெற்றி அல்லது வீரசுவர்க்கம் என்பதுதான் வரலாறு.'' இதை நிலைநிறுத்தினான் கில்மன். நின்ற இடத்திலிருந்து ஒரு அடி கூட பின்னோக்கி வைக்காத வீரனாய் வீழ்ந்த அந்த நாள் ....!

☆

பிறப்பு:
28 03.1973

வீரச்சாவு:
02.09.1990



# துஷ்யந்தன்

**( முல்லைச் சமர் )**
**( சின்னராசா உதயராசா )**
**ஸ்ரீமுருகன் குடியேற்றம்,**
**வல்வெட்டித்துறை.**

தமிழீழ மண்ணின் விடுதலையை விரும்பிய குற்றத்துக்காக, அடிக்கடி சிங்களப் படையின் இடிபாடுகளுக்குள்ளானது வல்வெட்டித்துறை. அந்த மண்ணில் பிறந்த எமது தலைவனை அழிக்கும் முயற்சி கைகூடாதபோதெல்லாம், இலங்கைப் படையாயினும் சரி, இந்தியப்படையாயினும் சரி, தன் இயலாமையைக் காட்டிஅந்த மண்ணை அலங்கோலப்படுத்துவதில் திருப்திகண்டன. 'ஒப்பறேசன் லிபறேசனில்' பல பொதுமக்களின் வீடுகள் இடித்துத் தள்ளப்பட்டன; இந்தியப் படையின் 'வல்வைப் படுகொலையில் இடிக்கப்பட்டவை மிகுதி. புலிகளின் 'கடல் புறா' தலைமையகத்தை அழிப்பதாகக் கூறி, அண்மையில் இலங்கைப் படையின் விமானங்கள், எஞ்சியிருந்த வீடுகளையும் குண்டு வீசி அழித்தன. மொத்தத்தில், வல்வெட்டித்துறைப் பிரதேசத்தை ஒரு சுடுகாடாக மாற்றிவிட முனைந்தனர். ஆனால், இந்த முயற்சிகளையெல்லாம் முறியடிக்க, பல இளைஞர்கள் முளைத்தெழுந்ததைச் சிங்கள அரசு உணரத் தவறிவிட்டது. துயரங்களைச் சுமந்து, எரிமலையாய்ப் போர்முனை புகுந்த இளைஞர்களில் ஒருவனே துஷ்யந்தனும்.

மணலாற்றுக் காட்டில் தலைவனுக்கு அண்மையிலிருந்தே பயிற்சியை முடித்துக்கொண்டான். முல்லைத்தீவுச் சண்டை முழுவீச்சுப் பெற்றிருந்தபோது

மணலாற்றிலிருந்தும் பல அணிகள் சண்டை முனைக்குப் புயலாய்ப் புறப்பட்டன. நெஞ்சில் வஞ்சத்தைச் சுமந்து - வெஞ்சினத்தோடு புறப்பட்டான் துஷ்யந்தன். ''செய், அல்லது செத்துமடி'' என்ற பொன்மொழி, தமிழன் வீர வாலாற்றில் பிறந்த மொழியல்லவா!

மண்ணுக்கு மாசு ஏற்படக்கூடாதென்ற உணர்வுடன், தன்னை அங்கு உரமாக்கிகொண்டான் இந்த மறவன்......!

☆

பிறப்பு:
12. 10. 1972

வீரச்சாவு:
29. 08. 1990




# யசோ

( முல்லைச் சமர் )
( ஜோண் றொபின்சன் )
பிரதான வீதி,
இளவாலை

மணலாற்றுக் காட்டில் பத்தாவது படைப் பயிற்சியணியில் பயிற்சியை முடித்திருந்தான் யசோ. பயிற்சி முடித்தவுடனேயே சண்டைக்குச் செல்லும் பாக்கியம் கிடைக்குமென அவன் நினைக்கவில்லை; எல்லையற்ற மகிழ்ச்சியோடு முல்லைத்தீவு நோக்கிப் புறப்பட்டான்.

எமது வீரர்களின் முற்றுகைத் தாக்குதலை முறியடிக்கும் நோக்கில் வட்டுவாகலில் தரையிறக்கப்பட்ட சிங்களப் படைகள் முன்னேறிக்கொண்டிருந்தன. முன்னேற்றத்தைத் தடுக்கும் நோக்கில் எமது அணிகள் வட்டுவாகல் கிராமத்துக்குள் ஊடுருவிக் கொண்டன. புதிய இடம்; சண்டையில் முதல் அனுபவம். அளவெட்டியிலிருந்து புறப்பட்டு வந்த இவனுக்கு இப்பிரதேசத்தின் தன்மையைச் சரியாகப் புரிந்துகொள்ளத் தேவையான கால அவகாசம் இருக்கவில்லை. ஆனால் தன் நிலையில் சிறிதுகூடத் தளராமல் செயற் பட்டுக்கொண்டிருந்தான். ஓடிவரும் இராணுவத்தினர் ஒவ்வொருவராக தன் துப்பாக்கிக் குண்டுபட்டுக் குப்புற விழுந்துகொண்டிருப்பது, யசோவிற்குப் பெரும் மகிழ்ச்சியைக் கொடுத்தது. பல்லாயிரக்கணக்கில்வந்த எதிரியின் துப்பாக்கிக் குண்டுகளை, அவன் அலட்சியம் செய்துகொண்டான். தன் இலக்கில் மட்டும் கருத்தோடிருந்த யசோவை, எதிரியின் குண்டு துளைத்துக்கொண்டது. கண்முன்னே பல் எதிரியைச் சுட்டு வீழ்த்திய திருப்தியோடு அவன் உறங்கிக்கொண்டான்! ☆

பிறப்பு:
008. 010 1971

வீரச்சாவு:
06. 09. 1990




# பைரவி

( முல்லைச் சமர் )
( சங்கரப்பிள்ளை பார்த்திபன் )
3 ஆம் குறிச்சி, மண்டூர்,
மட்டக்களப்பு.

மட்டக்களப்பு மண்டூர்க் கிராமம், என்றோ ஒருநாள் பைரவிக்குப் பூபாளம் பாடும். கறுப்பு நிறமும், கட்டையான தோற்றமும் கொண்ட இவன், திருமலையில் பதினோராவது படைப் பயிற்சிப் பாசறையில் போர்க் கல்வி பயின்றான். போர்க்கலையை வளர்த்துக்கொள்ள தேசவிரோதக் கும்பல்கள் மீதான தாக்குதல்கள் களமமைத்துக் கொடுத்தன.

மணலாற்றுக்கு வந்த நூறு பேர் கொண்ட அணியொன்றில்தான், பைரவியும் வந்திருந்தான். பயிற்சி பெற்றிருந்தாலும் - சண்டையனுபவம் இருந்தாலும் - காட்டிற்கேயுரிய சிறப்பு 'கொமாண்டோ' அதிரடிப் பயிற்சியையும் பெறவேண்டியிருந்தது. அப் பயிற்சியை ஆசையோடு செய்து முடித்தான், பயிற்சியின் பின் தகுந்த களம் இவனுக்குக் கிடைக்கவில்லை. முல்லைத்தீவு இராணுவ முகாம் தாக்குதல் மட்டுமே கிடைத்தது. கிடைத்துக் கொண்டதைப் பயன்படுத்துவதுதான் பைரவியின் இலக்காக இருந்தது. அதனால், இலக்குத் தவறாத அவன் துப்பாக்கி, முல்லைச் சண்டையில் அனலை கக்கியது. வட்டுவாகலில் தரையிறக்கப்பட்டு முனையில் முன்னேறிய இராணுவத்தினரை நிலைகுலையச் செய்த பைரவி, தன் உயிரையும் நடுகல்லாக்கிக்கொண்டான்! ☆

☆

பிறப்பு:
19. 03. 1968

வீரச்சாவு:
01. 09. 1990




# குழந்தை

( முல்லைச் சமர் )

( யோண்ரட்ணம் அல்பிறட் பாலசிங்கம் )
மயிலங்கூடல்,
இளவாலை.

முல்லைத்தீவு சிங்களப் படை முகாமின் முற்றுகை இறுக்கப்பட்டிருந்தது. காப்பரண் ஒன்றில், 30 கலிபர் துப்பாக்கியுடன் நின்றிருந்தான் குழந்தை. விமானங்களோ கெலிகொப்ரர்களோ இரண்டாயிரம் அடிக்கும் கீழ் பறக்கமுடியாது; அப்படிப் பறந்தால், குழந்தையின் 30 கலிபர் துப்பாக்கி இயங்கத் தொடங்கி விடும். தான் இருக்கின்ற காப்பரணைத் தாக்க விமானங்கள் கீழ்நோக்கி வந்தால், மளமளவெனச் சுட்டுவிட்டு தானும் இறங்கிவிடுவான்; வீச வந்த குண்டை இலக்குத் தவறி வீசிவிட்டுச் சென்று மறையும் விமானங்கள்...

வழமைபோல் 'கலிபருடன்' வானத்தை நோட்டமிட்டுக்கொண்டிருந்தான். கெலிக்கொப்ரருடன் விமானமும் அணிவகுத்து வந்தது. குழந்தை துப்பாக்கியை இயக்கினான். இயக்கிவிட்டு பங்கருக்குள் துப்பாக்கியை இயக்கும்போது எதிர்பாராமல் ஒரு ரவை அடிக்கப்பட்டு விட்டது. குழந்தை பெயருக்கேற்றது போலவே மனங்கொண்டிருந்தான். மென்மையான மனங்கொண்ட இவனை யாராவது பேசிவிட்டால், உடனே அழுதுவிடுவான். அன்றும் தவறுதலாகச் சுடப்பட்ட ரவைக்காக, பொறுப்பாளரின் கண்டனத்துக்குள்ளாகி, பங்கர் வாசலில் இருந்து அழுதுகொண்டிருந்தான். விமானக் குண்டுகளுக்குக்கூட அசையாத இவன் மனம், சுடு சொற்களைச் சிறிதுகூட தாங்காது.

மெல்லிய தேகமும் உயர்ந்த தோற்றமும்கொண்ட குழந்தை,1990 இல் பயிற்சிக்காக வந்திருந்தான். பயிற்சியின் பின்னர் 30 கலிபர் துப்பாக்கியின் உதவியாளனாகி, முல்லைத்தீவுச் சண்டைக்கு முதலில் சென்றிருந்தான்: ஆனால் சண்டையில் களம் கண்ட அனுபவசாலியாகச் செயற்பட்டான். துணிவு மிகுதியாக இருந்தது. தன்னுடைய நிலையிலிருந்த பொறுப்பாளர் ஒருவருக்கு உதவிப் பொருளொன்றை வழங்குவதற்காகச் சென்று கொண்டிருக்கும் போதே, இவனின் சாவு நிகழ்கிறது. 'வை - 8' விமானம் வீசிய குண்டொன்றில், தன்னுடலையே காற்றோடு கலக்க விட்டுவிட்டான்! ☆




# ஜிம்கலி

**( முல்லைச் சமர் )**
**ஜின்னா நகர்,**
**மூதூர்.**

**பா**திரிப்பூ சேர்ந்த நீருக்கும் வாசனைஉண்டென்பார்கள். மூதூர் ஜின்னா நகரில் பிறந்த முஸ்லிம் இளைஞன், ஜிம்கலியின் உடலிலும் தமிழ் இரத்தம் ஓடியது. உண்மையான சுதந்திர உணர்வின் வழி செல்லத் துணிந்ததால், தமிழ் மண் அவனுக்காக வரலாற்று வரிகளை வரைந்து செல்கிறது; அவன் நினைவாலயத்தைப் பூசித்து நிற்கிறது. சுதந்திர வீரனுக்கு - ஒரு தேசபக்தனுக்கு - இந்த மண் என்றுமே பணிந்து நிற்கும் என்பதை, தமிழ் - முஸ்லிம் இளைஞர்கள், காலம் வரும்போது உணர்ந்துகொள்வார்கள்.

இந்திய இராணுவம் நெஞ்சில் குத்த முனைந்த காலத்தில், வேலெடுத்துக் கொடுத்தவர்கள் தேசவிரோதக் கும்பல்கள். நெருக்கடி மிக்க இக்காலத்தில், மூதூர்ப் பிரதேசப்பொறுப்பாளர் மேஜர் பவானின் நம்பிக்கை மிக்க வலக்கரமாக நின்று, அந்தரங்க நடவடிக்கைகளையும் அதற்கான உதவிகளையும் செய்துகொண்டிருந்தவன் ஜிம்கலி. தமிழ் மக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையில் பிரிக்கமுடியாத இணைப்பு ஏற்படுமென்ற அவாவில், தூக்கத்தை மறந்து செயற்பட்ட கர்மவீரன் அவன்.

மணலாற்றில் ஐந்தாவது யுத்த அணியில் பயிற்சி முடித்து, மாங்குளம் தாக்குதலுக்குச் சென்றிருந்தான். குறிதவறாது சுடும் ஆற்றல் இவனிடமிருந்தது. தளராத பலசாலி. மாங்குளத்தில் விழுப்புண் சுமந்து சில காலம்

மருத்துவச் சிசிச்சைக்கு சென்று இருந்தான். சுதந்திர தேவி அவனில் குடி கொண்டிருந்ததால், காயம் ஆறி வந்ததும் முல்லைத்தீவுச் சண்டைக்குப் புறப் பட்டான். சாவைத் துச்சமாய் மதித்து களத்தில் நின்ற இவ் வீரனை, சுதந் திரதேவி எடுத்துக்கொண்டாள். காட்டில் நிமிர்ந்து நிற்கும் அவன் நினைவால யத்தில், எம் சத்திய தரிசனங்கள் தொடர்கின்றன.....! ☆



வீரச்சாவு:
01. 09. 1990




## நிக்கலஸ்

( முல்லைச் சமர் )
( நாகராசா சங்கர் )
1ஆம் வட்டாரம்,
ஆலங்கேணி,
கிண்ணியா.

வட்டுவாகல் கடற்கரையில் திடீரென நான்கு ஹெலிக்கொப்ரர்களில் இராணு வத்தினர் தரையிறக்கப்பட்டனர். வீழ்ச்சியடையும் நிலையிலிருந்த இராணுவ முகாமை எப்படியாவது காத்துவிடவேண்டும் என்ற நிலை, சிங்கள அரசுக்கு இருந்தது. எதிர்பாராத இடத்தில் இராணுவத்தினர் இறக்கப்பட்டதால், எம் வீரர்கள் அவ்விடத்துக்கு விரைந்தனர். இறக்கப்பட்ட படையுடன் சண்டை தொடங்கியது. சண்டை நடந்துகொண்டிருக்கும்போதே, கடற்படைப் பீரங்கி கள் சரமாரியாகப் பீரங்கித் தாக்குதலைத் தொடங்கின. ஆயிரக்கணக்கில் படைகள் கடற்படைக் கப்பலிலிருந்து தரையிறக்கப்பட்டன. கடற்கரையினைத் தொட்டதாக பெரும் படையணியொன்று முல்லைத்தீவு நோக்கி நகர, வட்டு வாகல் - முல்லைத்தீவு பிரதான வீதி வழியாக மற்றுமொரு படையணி நகர்ந்து கொண்டிருந்தது. மூன்று திசைகளில், முப்படைகளின் தாக்குதலையும் எதிர்த் துச் சண்டையிட்டுக்கொண்டிருந்த எம் அணிகளில், நிக்கலஸ் தீரமுடன் சண்டை யிட்டுக்கொண்டிருந்தான்.

நிக்கலஸ் பிடிவாதக்காரன். 89 இன் பிற்காலப் பகுதியில் திருமலையிலி ருந்து மணலாற்றுக்கு வந்திருந்தான். மணலாற்றுக்கு வருமுன்பே, திருமலை

யில் யுத்தப்பயிற்சியை முடித்திருந்தான். இருப்பினும் சிறப்பு அதிரடி 'கொமாண்டோ' பயிற்சியையும் மணலாற்றில் பெற்றுக்கொண்டான் அவனது பிடிவாதக் கருத்துக்கு இப் பயிற்சி மேலும் ஊக்கத்தைக் கொடுத்தது. மேஜர் அரவிந்தனிடம் தனக்கொரு 'பைனட்' கத்தி தரும்படி தினமும் தொல்லை கொடுத்தான்; பிடிவாதமாக நின்று அதனைப் பெற்றுக்கொண்டான். துப் பாக்கிக் குண்டுகளுக்கு இலக்காகிய சிப்பாய்களை அக்கத்தியால், பாய்ந்து பாய்ந்து குத்திக்கொண்டே சண்டை செய்துகொண்டிருந்தான். எண்ணற்ற படைகள் அருகே வந்தும் பின் வாங்கும் எண்ணத்தையே தூக்கி வீசிவிட்டு, சண்டை செய்துகொண்டிருந்த நிக்கலஸ் ....ஆம்! மார்பில் குண்டுபட்டு மண்ணை அணைத்துக்கொண்டான்.

☆

பிறப்பு:
1967

வீரச்சாவு:
01. 09. 1990




# ஜலீம்

( முல்லைச் சமர் )

**( முகமது இஸ்மாயில் மன்சூர் )**

**ஏறாவூர்,**

**மட்டக்களப்பு.**

**வி**டுதலையை நேசித்த முஸ்லிம் சகோதரர்களும் எங்கள் மண்ணில் இருக்கத் தவறவில்லை. உள்ளும் புறமும் இருந்து தமிழீழ மண்ணைக் காட்டிக் கொடுக்க முனைந்த முஸ்லிம்களால், தற்காலிகமாக அனைத்து முஸ்லிம்களையும் தமிழீழ மண்ணை விட்டு வெளியேற்றவேண்டியிருந்தது. உணர்ந்து திரும்பும் காலம் வரும்வரை, அவர்களின் பிறந்த மண் அவர்களுக்காகவே பாதுகாக்கப்படும். ஆனால் இதய சுத்தியோடு, தமிழீழ மண் எங்களின் மண் என்று களமாடித் தம்மைத் தியாகித்த முஸ்லிம் இளைஞர்கள் பலர் உளர்; அவர்களில் ஒருவன்தான் ஜலீம்.

கல்முனையிலிருந்து மணலாற்றிற்கு வந்து, பத்தாவது படைப்பயிற்சிப் பாசறையில் யுத்தப்பயிற்சியைக் கற்று களமுனையில் உற்சாகத்தோடு நின்றான் ஜலீம். முரட்டுச் சுபாவம் நிறைந்திருந்ததால் முரட்டுவேலைகளில் ஈடுபடுவான்; அடிக்கடி இதற்காக தண்டனைகளும் பெற்றுக்கொண்டான். இருப்பினும் யுத்த முனையில் இவனின் முரட்டுக்குணம் பெரும் வெற்றிக்கு வழியமைத்தது. பயிற்சிக்குப் பின் பெரும் சண்டை என இவன் சென்றது; முல்லைத்தீவு இராணுவ முகாம் தாக்குதலே. இத் தாக்குதல் களமே இவனது முடிவுக் களமாகவும் அமைந்தது. இன விடுதலைக்கு இதய சுத்தியோடு தன்னை அர்ப்பணித்தவன் இவன். இவனுக்காக மணலாறு தன் தலை சாய்த்து நிற்கத் தவறாது!

☆

பிறப்பு:
12. 12. 1957

வீரச்சாவு:
06. 09. 1990




# கோபால்

( முல்லைச் சமர் )
( வேலாயுதம் சிவலிங்கம் )
கொக்குத்தொடுவாய்,
மணலாறு.

சட்டத்தால், சமூகத்தால் பெற்ற தாய் தந்தையரால் திருத்தமுடியாமல் - கெட்டவன், துட்டன் என்ற பெயர்பெற்றுத் திரிந்தவர் பலரை எமது இயக்கம் திருத்தி, தேசபக்தராய் மாற்றிய வரலாறுகள் பலவுண்டு. கொக்குத்தொடுவாய் மண்ணில், கடவுளாலும் திருத்த முடியாது என்று கைவிடப்பட்ட இருவர், இயக்கத்தில் நெறிப்படுத்தப்பட்டு மண்ணின் தெய்வமாய் நின்றனர். அதில் ஒருவர் லெப். கேணல் நவம்; அடுத்தவன் கோபால்.

கொலைக்குற்றத்திற்காக சிறைக்குச் சென்றவன் கோபால். கள்ளன், கொலைகாரன், காவாலி என்று கிராமமே ஒரு காலம் அவனைத்திட்டியது; இன்று அவனுக்காய்க் கண் கலங்கி நிற்கிறது. கோபால் சிறையிலிருந்து வந்த போது, பிறந்த மண்ணே பறிபோகுமளவிற்கு சிங்கள ஆக்கிரமிப்பு ஏற்பட்டிருந்தமை கண்டு ஒரு கணம் சிந்தித்தான்; கடந்த கால கசப்பான உண்மைகளுக்காக மனம் நொந்தான்; தன் கறைபடிந்த வாழ்வை மாற்றிவிட விடுதலைப் போரில் இணைந்துகொண்டான். இயக்கத்தின் தலைமையும் வழி நடத்தலும் கோபாலனைப் புதிய மனிதனாக்கியது. தான் பிறந்த மண்ணை புனித பூமியாக்குவதன்மூலமே, தன் கறை படிந்த வாழ்வை உயர்த்திக்கொள்ள முடியுமென உணர்ந்துகொண்டான்.

யுத்தப்பயிற்சியைப் பெற்று முடித்ததும், முல்லைத்தீவு இராணுவ முகாம் முற்றுகைத் தாக்குதலுக்காகச் சென்றான். இவனிடம் முரட்டுச் சுபாவம் நிறைந் திருந்தது. நல்ல தேகக் கட்டு. அதற்கேற்ற அதீத பலம். காயமடைந்த இரு வீரர்களைத் தூக்கிவரக்கூடிய பலசாலி. முல்லைத்தீவு சண்டையில் காய மடைந்த ஒரு போராளியையும் அவனது துப்பாக்கியையும் தூக்கி தோளில் போட்டுக்கொண்டு, தனது துப்பாக்கியை ஒரு கையினாலேயே இயக்கிக்கொண்டு பின்வாங்கும்போது கோபாலின் உடலைத் துப்பாக்கி ரவைகள் சல்லடை போடு கின்றன.

கோபால் மனந்தளரவில்லை. தன் காயத்தை விட. தன் தோளில் கிடக்கும் தோழனைக் காப்பாற்றிவிட வேண்டுமென்ற உணர்வே அவனிடம் ஓங்கி நின்றது. வேகமாக வந்தான்; ஆனாலும் அதிக ரத்தப் போக்கு அவனை நிலத்தில் மண்டியிட வைத்தது.

கோபாலையும் அவன் தூக்கி வந்த போராளியையும் தூக்கிச்செல்ல, அடுத்த போர்வீரன் முயன்றுகொண்டிருந்தான். கோபால் அவன் முகத்தைப் பார்த்தான், உறுதியான சில வார்த்தைகள் அவன் வாயிலிருந்து வெளிப்பட் டன. ''என்னைத் தூக்கிக் கொண்டு செல்ல உனக்குப் பலம் காணாது, இவ னையும் என்ர ரைபிளையும் தூக்கிக்கொண்டு உடனே புறப்படு'' என்று சற்று அதட்டலாகவே சொன்னான். நிச்சயமாக கோபாலைத் தூக்குவது சற்றுச் சிரமந்தான். அந்தளவு பருத்த தேகம். தன் துப்பாக்கியும் காயமுற்ற தோழ னும் காப்பாற்றப்பட்டுச் செல்வது, மூடிக்கொண்டிருந்த அவன் விழிகளுக்கு மங்கலாகத் தெரிந்தது. சற்று நேரத்தில் அந்த உருவம் மறைந்தது...... ஆம்! கோபாலின் விழிகள் முற்றாகவே மூடிக்கொண்டன. ☆

மாங்குளம், கிளிநொச்சி, கோட்டை

இராணுவ முகாங்கள்

தகர்க்கப்பட்டபோது

வீரகாவியமானவர்கள்.

பிறப்பு:
10. 05. 1977

வீரச்சாவு:
22. 11, 1990




# லெப். றொபேட்

(மாங்குளச் சமர்)
(சம்பூரணம் ஜெயசிங்கம்)
முருங்கன்பிட்டி,
முருங்கன்.

மன்னாரிலிருந்து மணலாறு நோக்கி நூற்றுக்கு மேற்பட்ட வீரர்களடங்கிய அணியொன்று நடந்துகொண்டிருந்தது. சிறு அசைவுகள் கூட இந்தியப்படைகளின் கண்களில் பட்டால், வீண் சண்டையாகிவிடும். சண்டை பெரிதல்ல; சென்றடைய இருக்கும் இலக்குக்குச் செல்வது தாமதமாகிவிடும். இந்த அணியினரிடையே, காட்டு வழியின் நீண்ட பயணத்தில் பலருக்கு மனத்தளர்வு ஏற்பட்டது. அதனால் மன்னாருக்குச், சென்று அங்கேயே சண்டை செய்வது - செத்து விடுவது - நன்று எனக்கூறிக்கொண்டு, பலர் திரும்பிவிடுகின்றனர். மணலாற்றைச் சரிபாதி வீரர்களே வந்தடைந்தனர். அவர்களுள் றொபேட் இறுதி வரை உற்சாகம் குறையாமலே வந்தடைந்தான்.

கட்டையான தோற்றம், சுருண்ட கேசம், நிறமான உடல், முறுக்கேறிய தசைகள், என்றும் சிவந்தே இருக்கும் விழிகள்; பார்த்தவர்கள் மறு தடவை அவன் முகத்தைப் பார்க்க அஞ்சுவார்கள். கோபத்தால் சிவந்த கண்கள் போல் இருக்கும். அவன் கண்களைச் சந்திக்க எவருக்கும் துணிவிருக்காது. ஆனால் றொபேட்டின் மனம் மென்மையானது; குணம் கருணை நிறைந்தது.

றொபேட் கடமை நேரங்களில் இறுக்கமான கட்டுப்பாட்டுடன் போராளிகளை வழிநடத்துவான். சாதாரண வேளைகளில், அவர்களுடன் தானும் ஒரு

வனாய் பாடி விளையாடி மகிழ்வான். கொக்குத்தொடுவாயில் சில காலம் தன் அணியினரோடு காவல் காப்பரண்களில் இருந்தான். கடற்கரையில் நிலைகளை அமைக்கும்போது, ''கடலில் நிற்கும் பீரங்கிப் படகுகளே! வாருங்கோ, நல்ல சாப்பாடு தருவோம் என்று உரத்த குரலில் கூறுவான்.

எம் வீரர்கள் பலரின் வாயிலும் வரும் வார்த்தை, ''கெதியாய் அடிபட்டு செத்துப் போவம்'' என்பதுதான். இவ்வாறு சொல்லும் போராளிகளைத் தனியே அழைத்து, ''எல்லோரும் கெதியாய் அடிபட்டுச் செத்தால் யார் தமிழீழம் காண்பது?'' எனக் கேட்டு, பல புத்திமதிகள் கூறுவான்.

மண்டைதீவுச் சண்டை, ஊர்காவற்துறைச் சண்டை, சாம்பன்குள மினி முகாம் தகர்ப்பு, கிளிநொச்சி படை முகாம் விரட்டியடிப்பு என பல, பெருஞ் சண்டைகளுக்குத் தன் அணியைச் சாதுரியமாக வழிநடத்திச் சென்றவன், இறுதியாக, மாங்குள இராணுவ முகாம் முற்றுகை இறுக்கமடைந்த போது - சிங்களப்படைகளைக் காக்கக் காட்டில் இறக்கப்பட்ட இராணுவத்தினருடன் கடுமையான சண்டையில் இறங்கினான். அங்குதான் இவனின் சிவந்த விழிகள் மூடிக்கொண்டன. காட்டில் எழுந்து நிற்கும் சமாதி இவனது வீரத்தின் செவ்வரிகளாய் நிற்கிறது!

☆

பிறப்பு:
01. 01. 1968




# இளங்கோ

( மாங்குளச் சமர் )

( அசனார்லெப்பை அன்சார் )
வத்தூலூவ,
புத்தளம்.

காலத்தை வென்று காவியமானவன் இளங்கோ. திருமலைப் பிரதேசத்தில் பிறந்தவன். நானும் தமிழீழ மண்ணில் பிறந்தவன் என்ற உணர்வோடு, களமுனையில் புகுந்துகொண்டான். இயற்கை எழில் மிக்க திருக்கோணமலையில் சிங்களப்படைகளினதும், சிங்களக் காடையரினதும், அட்டூழியங்கள் தாராளமாகவேயிருந்தன. இவர்களின் அடாவடித்தனம் முடியுமுன் இந்தியப் படை தமிழீழத்தில் கால்பதித்தது. அடுத்தடுத்து ஏற்பட்ட கொடுமைகளைத் தாங்கிக் கொள்ள முடியாமல் புறப்பட்ட இளங்கோ, இதய சுத்தியோடு விடுதலைப் போரில் பங்குகொண்டான்.

மணலாற்றுக் காட்டில் பயிற்சியை முடித்திருந்த காலத்தில், 'இரண்டாவது ஈழப்போர்' தொடங்கியது. கொக்காவில் இராணுவ முகாம் கைப்பற்றப் பட்ட பின், மாங்குள முகாமினையும் கைப்பற்றிவிடுவதற்கான தாக்குதல் தொடர்ச்சியாக நடைபெற்றுக்கொண்டிருந்தது. இத் தாக்குதலுக்காக அவசியமேற்படும் போதெல்லாம் - மணலாற்றிலிருந்தும் சில அணிகள் புறப்பட்டுக் கொண்டிருந்தன. இவ்வாறு சென்ற அணியில் தான் இளங்கோவும் சென்றான். தமிழீழ விடுதலைப்போரின் வரலாற்றுப் பதிவுகளில், மாங்குள இராணுவ முகாம் வெற்றியும் ஓர் பெரும் அத்தியாயம். அந்த வெற்றிக்காகச் சிந்திய குருதியில் இளங்கோவின் குருதியும் சங்கமமாகியது! ☆

வீரச்சாவு:
02. 09. 1990




## சாள்ஸ்

(மாங்குளச் சமர்)
(வேலுப்பிள்ளை கந்தசாமி)
பாரதிபுரம்,
கிளிவெட்டி.

மாங்குளம் இராணுவ முகாம் தாக்குதலுக்காக, மேஜர் சங்கரின் தலைமை மயில் மணலாற்றிலிருந்து ஓர் படையணி புறப்பட்டது. இவ்வணியில் சாள்சும் இடம்பெற்றிருந்தான். புறம்படும்போது தான் நேசிக்கும் தோழர்களைப் பார்த்து, ''என்ர கடைசி சண்டையாய் இது இருக்கும்; பார்க்கிற ஆட்கள் பார்த்துக் கொள்ளுங்கோ'' எனக் கூறிக்கொண்டான்.

சாள்ஸ் பணிவுள்ள ஒரு போர்வீரன். சொன்ன வேலையை முகம் கோணாது செய்து முடித்துவிடுவான். மூதூரில் இருந்து 1989இல் மணலாற் றுக்கு வந்த இருநூறு பேர் கொண்ட அணியில் ஒருவனாக வந்தவன், பயிற்சி களைத் தடையின்றி நிறைவாகப் பெற்றுக்கொண்டான். பயிற்சியை முடித்த போது இந்தியப் படைகளுடன் மோதுவதற்குரிய சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. இந்திய ஜவான்கள் தமிழீழ மண்ணை ஆக்கிரமித்து - வெளியேறிய பின், இடைக்கால அமைதியொன்று நிலவியது. இதனால் சண்டைத் திறனை வளர்ப் பதற்கான களங்கள் இவனுக்குக் கிடைக்கவில்லை.

மாங்குளம் இராணுவ முகாம் தாக்குதலுக்காகச் செல்லும்போது தன் தோழர்களுக்கெல்லாம் அவன் சொல்லிச் சென்றது உண்மையாகிப் போய்விட் டது. அவனின் கல்லறையைப் பார்க்கும் போதெல்லாம்......அவன் வேண்டிய கடைசி வேண்டுதல் பசுமையாய்...... !

☆

பிறப்பு:
03. 07. 1967

வீரச்சாவு:
19. 07. 1990




# டெஸ்மன்

**(பரந்தன் சமர்)**
**(கணபதிப்பிள்ளை தணிகாசலம்)**
**பள்ளிக்குடியிருப்பு,**
**மூதூர்.**

டெஸ்மன் தோப்பூர்க் கிராமத்தில் பிறந்தாலும், மூதூர் பிரதேசத்தில் அவன் பாதம் படாத இடமேயில்லை எனலாம். இளம் வயதில் இருந்தே வயல் வேலைகளில் ஈடுபட்டு, இளமையில் முதுமையை ஏற்படுத்திக்கொண்டான். மாட்டுப்பட்டி வைத்திருந்ததனால் அவற்றுடனேயே இவன் பொழுது கழிந்து போகும். மாடு மேய்ப்பது தப்பினால் வயல் வேலைகள் செய்வது - இதுதான் டெஸ்மனின் இளமைக்காலம். இவை இரண்டுமிருந்ததால் பள்ளி சென்று படிப்பதற்கு நேரமும் இருக்கவில்லை; அதற்கான முயற்சியுமில்லை. பத்தொன்பதாவது அகவையைத் தொடும்போது, தந்தையைப் பறிகொடுத்தான். வீட்டு வறுமை, தந்தையின் மறைவு, சிங்களப் படைகளின் அடாவடித்தனம் என பலமுறை அழுத்தங்கள் ஏற்பட்டபோது, சுதந்திரப்போரில் குதித்துக்கொண்டான். மூதூர் பிரதேசத்திலேயே பயிற்சிக் களத்தை முடித்துக்கொண்டு, 89இல் மணலாற்றுக்கு வந்து சேர்ந்தான். மணலாற்றுக்கு வந்து சில மாதங்கள் பாண்போடும் 'போறணை'யில் நின்றான். பின் அதிரடி 'கொமாண்டோ' பயிற்சியை முடித்துக்கொண்டு, 'ஸ்ரோ'வுடன் மாங்குளம் தாக்குதலுக்காகச் சென்றான். 'கால்கஸ்ரோ' வைத்திருக்கும் அளவிற்கு தகுதியும் திறமையும் இவனிடமிருந்தது.

மாங்குளம் சண்டையின் இடையே, கிளிநொச்சியில் இருந்து பரந்தன் நோக்கி முன்னேறிய இராணுவ அணியைத் தாக்குவதற்கெனப் புறப்பட்ட அணியில் இவனும் சென்றான். பரந்தனில் இருந்து இராணுவம் வெளியேறு மளவிற்கு - அதனை நிலைகுலையவைக்கும் தாக்குதலினை நடாத்திக்கொண் டிருந்தனர். இந்தத் தாக்குதலில்தான் டெஸ்மன் மண்ணில் வீழ்கிறான். டெஸ்மன் மண்ணில் விழும்போது, அவனின் உடன்பிறந்த தம்பியின் பாதங் கள் - மணலாற்றில் இவன் சுவடுகளில் பதிகிறது......! ☆

வீரச்சாவு:
22. 11. 1990




# லோகன்

(மாங்குளச் சமர்)
(இரட்ணசிங்கம் புவனேந்திரன்)
இளிவெட்டி,
மேன்காமம்.

பார்த்தவர்களின் கண்ணை மீண்டும் ஒரு முறை பார்க்கத் தூண்டும் அழகிய முகம்; நல்ல நிறம். திருமலையிலிருந்து காட்டுக்கு வந்து பயிற்சியை முடித்துக்கொண்டான். பயிற்சியும் முயற்சியும் வளரும்முன்னரே, வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த மாங்குளம் படைமுகாம் தகர்ப்பில் மரணித்துக்கொண்டான்.

காட்டில் பயிற்சிக்குப் பின் சில மாதங்கள் தையல் பணியில் ஈடுபட்டிருந்தான். ஓய்வு நேரங்களில் 'போறணையில்' பாண் போடுவதில் ஈடுபடுவான். இவனின் பாண் சாப்பிடுவதற்காக தோழர்கள் காத்திருந்த நாட்கள் வளம் நிறைந்த தமிழீழத்தின் தலைநகரமான திருமலையில் பிறந்திருந்தாலும், பிறந்த மண்ணும் சொந்தக் குடிசையும் பறிபோய்விட்ட நிலையில், லோகனின் மனம் எப்படி ஆறுதல் பெறும்.....? காலம் கிடைத்தால் சிங்களத்தின் படைகளில் பலரை அழித்துவிட வேண்டுமென்ற எண்ணமே ஓங்கி நின்றது! மாங்குளத்தில் முகாம் தகர்த்தெறியப்பட்ட சண்டையில் கலந்துகொள்ளச் சென்றபோது, தன் ஆசையைத் தீர்க்குமளவிற்கு எதிரிகளைச் சுட்டுத் தள்ளினான். மரண தேவதை இவனைத் தாவி அணைத்துக்கொண்டது. சாவினைக் கழுத்தில் சுமந்தவனுக்கு இது பெரும் சுமையல்ல; அமைதியோடு கண்ணை மூடிக்கொண்டான்! ☆

| பிறப்பு: | வீரச்சாவு: |
|---|---|
| 10. 04. 1973 | 14. 07. 1990 |




# பகீர்

(மாங்குளச் சமர்)

(கோவிந்தபிள்ளை சிவஞானம்)

252, சில்வா வீதி,

வட்டக்கச்சி.

கிளிநொச்சியில் வயல்வெளிகளால் சூழப்பட்ட அழகிய கிராமந்தான் வட்டக்கச்சி; ஆனாலும் பகீரின் குடும்பம் வறுமையிலிருந்து மீள முடியாதிருந்தது. வறுமை வயிற்றுப் பசியில் மட்டுமிருக்கவில்லை; வளர்ப்பிலும் இருந்தது. தாய், தந்தையரை இளமையிலேயே பறிகொடுத்ததால், தாய்ப்பாலுமின்றி தாய்ப் பாசமும் இன்றி வளர்ந்தான் பகீர். அன்பு காட்டி இவனை வளர்த்து மண்ணுக் காய்த் தந்த பெருமை அம்மம்மாவிற்கேயுரியது.

யுத்தப் பயிற்சி பெற்ற வீரனாகவே மணலாற்றுக் காட்டுக்குள் அடியெடுத்து வைத்தான் பகீர். காட்டிற்கு வந்ததும் விசேட அதிரடி 'கொமாண்டோ' பயிற்சியை முடித்துக்கொண்டான். மாங்குளத்திலிருந்த சிங்கள படையின் முகாமினைத் தாக்கிக்கொண்டிருந்த எமது படையணிகளுக்குத் துணையாக, மணலாற்றிலிருந்தும் சில அணிகள் விரைந்தன. படை முகாம் வீழ்ச்சியுறும் தறுவாயில் இருந்தது. எம் வீரர்களின் இழப்பும் மெதுவாக ஏற்படத் தவறவில்லை; ஆனால், வெற்றியின் வாசலை நெருங்கும்போது தாக்குதலில் தளர்வைக் காட்ட முடியாது. 'பசிலன் - 2000' எறிகணைகள் படை முகாமுள் சென்று விழும்போதெல்லாம் சிங்களத்தின் அழுகுரலும், அவலக் குரலும் கேட்கத் தவறவில்லை. வீரமரணப் போர் நடத்திக்கொண்டிருந்த இராணுவத்தின் குண்டொன்று, பகீரையும் பதம்பார்க்கத் தவறவில்லை. வெற்றியின் நடுகற்களிலொன்றாய் - வீரத்தின் நினைவாலயங்களில் ஒன்றாய் வீழ்ந்தான் பகீர் ...! ☆

பிறப்பு:
31. 08. 1972

வீரச்சாவு:
22. 11. 1990




# 2 ஆம் லெப். டெனி

(மாங்குளச் சமர்)
(நடராசா உருத்திரமூர்த்தி)
நொச்சிக்குளம்,
பன்குளம்'

டெனி என்ற பெயரைக் கேட்டதுமே கண்ணில் தெரிவது அவன் தோற்றந் தான். தடியன் டெனி, சோம்பேறி டெனி, நித்திரை டெனி, சோகை டெனி என்று - சகதோழர்களின் பல பட்டப் பெயர்களைத் தாங்கிக்கொண்டவன். பெயரை மட்டுமல்ல, கோபமின்றியே இவற்றைத் தாங்கிக்கொள்ளும் சக்தியை யும் பெற்றிருந்தான். உடலைப்போன்றே பொறுமையும் சகிப்புத்தன்மையும் இவனிடமிருந்தது.

திருமலையிலிருந்தே யுத்தப் பயிற்சி பெற்று, யுத்த முனைகள் சென்ற அனுபவப் பயிற்சியையும் பெற்றிருந்தான். மணலாற்றுக்கு வந்தபின், தன் தாக்குதல் திறமையை வளர்த்துக்கொள்வதற்காக, புதிய 'கொமாண்டோ' பயிற்சியையும் பெற்றுக்கொள்ளத் தவறவில்லை. காட்டில் போராட்ட வளர்ச் சிக்காக எத்துணை இடர்களை எல்லாம் அனுபவிக்க வேண்டியிருந்ததோ, அவற்றையெல்லாம் டெனியும் அனுபவிக்கத் தவறவில்லை. சண்டையென்று சொல்வதை விட, போராட்டத்தை பலம்மிக்க பாதைக்குக் கட்டி வளர்த்த வர்களென்பதில்தான், இவனுக்குப் பெருமையுண்டு.

லெப். றொபேட்டின் அணியில் ஒருவனாய் மாங்குளம் இராணுவமுகாம் முற்றுகைத் தாக்குதலுக்காகச் சென்றிருந்தான். முகாமுள் இருக்கும் இராணுவத்துக்குத் துணையாகக் காட்டில் இறக்கி விடப்பட்ட மேலதிக துருப்புக்களுடன், கடுமையான மோதல் நடைபெற்றது. எந்த வழியில் முனைந்தாலும் படைமுகாமை இழப்பது தவிர்க்கமுடியாதென்பதை உணர்த்திய இச்சண்டைதான், டெனியின் உடலை மணலாற்றுக்கு அனுப்பியது! ☆

பிறப்பு:
09. 12. 1968

வீரச்சாவு:
22. 06. 1990




# மஜீத்

(மாங்குளச்சமர்)
(முகமதுயாகூப்கேகலி)
4ஆம் வட்டாரம்,
மீராவோடை.

மஜீத் மட்டக்களப்பு ஓட்டு மாவடி கிராமத்தில் பிறந்தவன். முஸ்லிம் இளைஞனான இவனிடம் சுதந்திரத் தீ கொழுந்துவிட்டெரிந்தது. தானும் தமிழீழத்தவன் என்பதை தன் இரத்தத்தால் எழுதிக்கொண்ட வீரன். மெல்லிய உடல், தட்டையான தோற்றங்கொண்ட இவன், சுறுசுறுப்பு அதிகம் உள்ளவன். மட்டக்களப்பில் பத்தாவது பயிற்சிப் பாசறையில் யுத்தப் பயிற்சியைப் பெற்றுக் கொண்டான்.

இந்திய இராணுவம் தமிழீழ மண்ணில் கால் பதித்தபோது, தமிழ்-முஸ்லிம் இளைஞர்களையும் துன்பத்துக்குள்ளாக்கினார்கள். 'அமைதிப்படை' யென்ற பெயரில் அடக்குமுறைப் படையாகவும், ஆக்கிரமிப்புப் படையாகவும், அழிவுப் படையாகவும் அது செயற்பட்டதைக் கண்டு மஜீத் கொதித்தான். இதனால் இந்தியப் படைகள் தமிழீழ மண்ணில் இருந்து வெளியேறும் முன்னரே, மணலாற்றுக் காட்டுக்கு வந்திருந்தான். காட்டில் சிறப்பு அதிரடிப் பயிற்சியைப் பெற்றுக்கொண்டு, மேஜர் சங்கரின் கீழ், மாங்குளம் இராணுவ முகாம் தாக்குதலுக்குச் சென்றான். குடு குடுவென ஓடி ஓடித் தாக்குதலில் ஈடுபட்டான். மஜீத்தின் சாவு இங்குதான் நிகழ்கிறது. தோற்றத்தால், பண்பால், பழகும் திறனால் தோழர்கள் அனைவரின் மனதிலும் நிலைத்து நிற்கும் இவனது கல்லறை முன், எம் தலை குனிந்துகொள்கிறது! ☆

பிறப்பு:
02. 08. 1972

வீரச்சாவு:
22. 07. 1990



## 2ஆம் லெப். தங்கப்பா

(பரந்தன் சமர்)
(வீரகுலசிங்கம் செல்வவிநாயகம்)
தொண்டைமானாறு.

கடல் எங்கள் சொத்து. தமிழீழ விடுதலைப் பயணத்தை வெற்றிப் பாதையில் வழி நடத்தக் கருவூலமாய் நின்ற கடலையும் கடலோடிகளையும், மறந்துவிடுவது சுலபமானதொன்றல்ல. தமிழர்களின் போர் நியாயமானதெனக் கூறி அவர்களுக்குத் துணைநின்ற இந்திய மண்ணுக்கு, காயமுற்று எம் வீரர்களை உடனுக்குடன் கொண்டு சென்று காப்பாற்றவும், தேவையான போர்த்தளபாடங்களை உடனுக்குடன் கொண்டுவந்துபோரைத்தொடரவும், கடல்வழிப்பயணம் பெரிதும் துணையாயிற்று. பயணம் பெரிதல்ல; பயணத்தில் படகோட்டிய வீரர்களின் தியாகமே மிகப்பெரிது. தங்கப்பா ஒரு சிறந்த ஓட்டி. வல்வெட்டித்துறை மண்ணிற்கேயுரிய துணிவுடனும் திறமையுடனும் செயற்பட்ட தங்கப்பாவின் திறமையில் அனைத்துப் போராளிகளுக்குமே அசையாத நம்பிக்கை இருந்தது. மெல்லிய உடலும் உயர்ந்த தோற்றமும் கொண்ட இவனுள், எப்படித்தான் இத்துணை வீரம் ஒளிந்து கிடந்ததோ என வியப்புறவேண்டி வரும்.

கிளிநொச்சிப் படைமுகாமுள் முடங்கிக் கிடந்தால் முற்றாக அழிந்து போவதுதான் முடிவென்பதை உணர்ந்த சிங்களப் படைகள், தம்படைக்கலங்களுடன் அங்கிருந்து வெளியேறின. கிடைத்ததைச் சுருட்டிக்கொண்டு ஆனையிறவு நோக்கிப் புறப்பட்ட படைகள் பரந்தனில் முகாம் அமைக்க முற்பட்டன. முயற்சியை முளையிலேயே கிள்ளிவிட, எம் வீரர்கள் பரந்தனில் பெருந்தாக்குதலைத் தொடுத்தனர். இத் தாக்குதலில் தான் தங்கப்பாவை இழக்கின்றோம். தங்கப்பா வெறும் தங்கப்பா அல்ல; பல போர் வீரர்களை மண்ணுக்குக் காத்துத் தந்த, ஒரு சிறந்த ஓட்டி - வைரநெஞ்சம்! ☆

பிறப்பு:
17. 07. 1972

வீரச்சாவு:
24. 07. 1990




# லெப். சிங்கன்

( கிளிநொச்சி முகாம் சமர் )
( சண்முகராசா சுரேஸ்குமார் )
பொற்பதி வீதி,
கொக்குவில்.

சிங்கன் ஒரு முரடன்; அவனின் முரட்டுத் தன்மைக்குள் மறைந்து கிடந்த வீரமும், மானமும் யாருக்கும் புரியாதது. ''உயிரச்சம்'' என்பதை அறியாதவன். காலன் தன்மேல் வெகுண்டெழுந்து எதிர்த்து வந்தாலும், எதிர்த்து நிற்கும் நெஞ்சுரம் கொண்டவன். 'அருள் 89' ரைபிள் கிரனேட்டுக்களை எதிரியின் இலக்குகள் மீது, சொல்லிச் சொல்லிப் போடுவான். அவனது இத்திறமையைக் கண்டு நாம் வியந்ததுண்டு. சிங்கனின் வீரத்தையும் துணிவையும் நிலை நிறுத்த, கிளிநொச்சி மாவட்டத்தின் கரடிப்போக்கு சந்தியில் நடைபெற்ற சம்பவமொன்றே போதுமானது.

கரடிப்போக்குச் சந்தியில் மரங்களோ காடுகளோ கிடையாது. இரண்டு கட்டடங்கள்......வீடுகள்...... வயல்வெளிகள்; இப்பகுதியில் கடுமையான சண்டை நடந்துகொண்டிருந்தது. வானத்தில் இரண்டு கெலிக்கொப்ரரும், 'சியாமா செற்றி'விமானங்களிரண்டும், 'வை-12' விமானமும் வந்துசேர்ந்தன. நிலை எடுப்பதற்கு இடம் இல்லை; அங்கிருந்த ஒன்றிரண்டு மரங்களையும் கட்டடங்களையும் தவிர.

சிங்கனின் கையில் 'ஜி - 3' துப்பாக்கி இருந்தது. சாவினைப் பற்றி அவன் சிந்திக்கவில்லை. தளபதியையும் சகபோராளிகளையும் காக்க வேண்டும்; அவ

னின் துப்பாக்கி வானை நோக்கி சடசடத்துக்கொண்டிருந்தது. விமானங்கள் தாறுமாறாகக் குண்டுகளை வீசின.

சிங்கன் ஓடிச் சென்று ஒரு வீட்டின் அருகே நிலையெடுத்துக் கிடந்தான். அவனின் துப்பாக்கி ஓயவில்லை. சில நிமிடங்கள் சென்றிருக்கும் - அந்த வீடும் குண்டுவீச்சுக்கு இலக்காகியது. சிங்கன்......? தன்போராளிகளையும் தளபதியை யும் காத்த பெருமையோடு மரணித்துக் கிடந்தான்! ☆

பிறப்பு:
09. 01. 1971

வீரச்சாவு:
22. 07. 1990




# சீலன்

(கிளிநொச்சிச் சமர்)

(செ. தர்மரெட்ணம்)

மன்னார்.

மன்னார் மண்ணின் குழந்தை சீலன. ஒன்பதாவது பயிற்சிப் பாசறையில் தனது பயிற்சிகளை மன்னாரிலேயே முடித்தான். அந்தப் பயிற்சி அணியில் ஆகக்குறைந்த வயதுடையவன் சீலன்; ஆனால் அவர்களினுள்ளே பொறுப் புணர்ச்சி அதிகமானவன் இவனே - இளமையில் வறுமை இந்தப் பொறுப் புணர்வை அவனிடம் வளர்த்தது.

பயிற்சி முடிந்து பாசறைகளில் இருந்த காலத்தில், காவல் கடமையில் நிற்கும் ஒவ்வொருவரையும் சென்று பார்ப்பான். யாராவது நித்திரை தூங்கி னால் அல்லது பொறுப்புணர்வற்று கவனக்குறைவாக இருந்தால் பேசிவிடுவான்; வயதுக்கு மூத்தவர்களென்று பார்க்கமாட்டான்.

தாயின் மடியில் சுருண்டு படுத்துத் தூங்குகின்ற வயதில் தாய் மண்ணை மீட்கப் புறப்பட்ட சீலனைப் பார்த்து, இந்த மண்ணில் உள்ளவர்கள் கற்றுக்கொள்ளவேண்டியவை நிறையவேயுண்டு. தாய் குளிப்பாட்டி உடை தோய்த்து, உணவூட்டிவிடும் வயது; நித்திரையால் தட்டி எழுப்பி பள்ளிக் கூடம் செல்லவேண்டியதை நினைவுறுத்தும் வயது. ஆனால்... ...உணவை மறந்து உறக்கத்தை மறந்து, பனிக்குளிரையும் மழைக்குளிரையும் தாங்கி நின்று நாட் டைக் காத்த இச்சிறுவனின் தியாகத்தை உணர முடியாதவர்கள்கூட, இன்னும், தமிழீழத்தில் இருக்கவே செய்கின்றனர்! இவர்கள் எல்லாம் தமிழ் வித்துக்கள்

தானா...? என்ற கேள்விதான் எழுந்து நிற்கிறது. மணலாற்றில் தன் தளபதியின் மெய்க்காப்பு அணியிலும் தாக்குதலணியிலுமிருந்த சீலன், கிளிநொச்சி படை முகாமிலிருந்து தப்பி ஓட முனைந்த சிங்களச் சிப்பாய்களை அழித்து விடும் சண்டையில், கரடிப்போக்கு சந்தியில் தன் சாவினைத் தழுவிக்கொண்டான். எதிரிக்கு வணங்காத இந்த மண், அவன் கல்லறைக்குத் தலைசாய்த்து நிற்கிறது!

☆

பிறப்பு:
28 .12. 1972

வீரச்சாவு:
19. 06. 1990



# கப். சேரன்

**( கோட்டைச் சமர் )**

**(கந்தையா சேனாதிராசா)**

**ஒதியமலை,**

**மணலாறு.**

தமிழீழப் போரின் ஆரம்பத்தில், மணலாற்றில் பல தமிழர்களை சிங்கள இராணுவம் பலி கொண்ட கிராமம் ஒதியமலை. இன்று சிங்கள ஆக்கிரமிப்பில் அழிந்து தமிழ் மக்களை இழந்து நிற்கும் கிராமம்; மணலாற்றில் இந்திய இராணுவ முற்றுகையினை உடைத்தெறிந்து, பலம்மிக்க தளங்கள் காட்டில் எழுந்து நிற்கத் துணைநின்ற கிராமம். விடுதலைக்காய் மக்களையே பலி தந்த அந்தக் கிராமத்தில் பிறந்தவன்தான் சேரன்.

மணலாற்று மண்ணில் சேரனின் வரலாறு ஒரு காவியம். விருத்தெரிந்த வயதிலேயே இவனின் பாதங்கள் மணலாற்றுக் காட்டின் ஒவ்வொரு அங்குலத்திலும் பதிந்தன. வேட்டைக்காய் காட்டில் நடந்த அவன் கால்கள், 1986 இல் இருந்து நாட்டிற்காய் அலையத்தொடங்கின.

நல்லவனுக்கு நல்லவன்; வல்லவனுக்கு வல்லவன்; துட்டனுக்குக் கெட்டவன். வீட்டிலும் சரி கிராமத்திலும் சரி, போராட்ட வாழ்விலும் சரி, இதுவே சேரனின் இயல்பான குணம். ஒரு கிராமத்து இளைஞனுக்கு இருக்கக்கூடிய முறுக்கேறிய உடல்; உடலுக்கேற்ற துணிவு.

விடுதலைப் புலிகளின் மகளிர் படையணிக்கு வன்னிக்காட்டில் வழிகாட்டும் - அவசியமான - நம்பிக்கை மிக்க - துணிச்சலுள்ள பணியோடு இவனின்

போர்க்கால வாழ்க்கை ஆரம்பமானது. காடும், காட்டுப் பாதையின் அவசிய மும், இந்திய இராணுவ நடவடிக்கையிலிருந்து விடுதலைப் போராட்டத்தை வளர்த்தெடுக்கவேண்டிய அவசியமேற்பட்டபோது, 1988 இல் தன் பிறந்த பூமிக்கு அழைக்கப்பட்டான். அதுவரை, கிளிநொச்சி சிங்களப் படை முகாமை கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்த அணியில் பணி செய்தான். காட்டு வாழ்க்கை என்றால் அவனுக்கு அலாதி; நடப்பதற்கு அலுப்பே இல்லாதவன். கண்குறிப்பு அவனின் திசை காட்டி. குழந்தை வயதிலிருந்து பழகிய காடாகையினால், கண் குறிப்பால் குறிப்பிட்ட இடத்தைச் சென்றடையும் ஆற்றல் அவனிடமிருந்தது.

மணலாறு கண்ட இந்தியக் களங்களிலும், மணலாற்றுக்கு வெளியே நடந்த இந்தியக் களங்களிலும் அவன் பங்குபெறாத களங்கள் மிகக்குறைவு. மணலாற்றுக் காட்டில், மேஜர் செல்வராசா மாஸ்ரரின் தலைமையில், முந்திரி கைக் குள பிரதான வீதியில் நடந்த இலங்கை இராணுவ அணிமீதான அதி ரடித் தாக்குதலில் இவனின் பங்கு முக்கியமானது. இச்சண்டைக்கான வேவி னையும் இவனே பார்த்தான். இழப்புக்களின்றி பெருமளவு ஆயுதங்களை அள் ளிச் சுருட்டிய இச்சண்டையின் கர்த்தா சேரன் என்பதை, எவரும் மறக்க மாட்டார்கள்.

''மணலாற்றுக் காடு எதிரிக்குத் தலை சாய்க்காத மண்; போராட்டத்தை வளர்த்த மண்; பல தாக்குதலணிகளை உருவாக்கி களத்துக்கு அனுப்பிய மண்; மணலாறு தமிழீழத்தின் இருதயம்'' என்றெல்லாம் எழுதவும், பேசவும் காரண மாய் நின்றவர்கள், அந்த மண்ணைக் காக்க உரமாகிப் போனவர்களே! அங்கே சேரனின் பதிவுகளும் அழிக்கப்பட முடியாதவை. அவன் தன் கல்லறை யின் கடைசி வரிகளை, கோட்டைச் சண்டையில் வரைந்து கொண்டான்; வரலாற்றுப் புகழ்மிக்க யாழ். கோட்டையில் புலிக்கொடி பறக்க தியாகவேள்வி நடத்தியவர்களில், சேரனை மணலாறு அர்ப்பணித்து நின்றது! ☆

பிறப்பு:
13. 11. 1965

வீரச்சாவு:
19. 06. 1990



# கப். அந்தோனி

(கோட்டைச் சமர்)
(ஜேக்கப் சத்தியசீலன்)
எமில்நகர்,
மன்னார்.

மணலாறு வளர்த்த மன்னார்ப் புதல்வன் இவன். விடுதலைப் போரின் தளமாய் மணலாறு மாறத் தன்னைத் தற்கொடை செய்தவன். இயக்கத்தின் ஒரு மூத்த போராளியும்கூட. இந்தியாவில் பயிற்சிப் பாசறையை முடித்துக்கொண்டு, தலைவருடன் இந்தியாவிலேயே நின்றான்.

மிருகங்களை வளர்ப்பதில் மிகுந்த ஆர்வமுடையவன் அந்தோனி. இந்திய மண்ணில்தலைவருடன் நின்ற காலத்தில், புலிக்குட்டி ஒன்றினை வளர்த்தான்.

தமிழீழ மண்ணுக்கு தலைவருடனேயே வந்தான். வந்த சில மாதங்களில் இந்திய - புலிகள் போர் ஆரம்பமானது. யாழ்ப்பாணத்தில் நடந்த மோதல்களில் தொடர்ச்சியாகப் பங்கெடுத்தான். மணலாற்றுக் காட்டுக்குத் தலைவர் வந்தபோது, அவருடன் வந்த போராளிகளில் இவனும் ஒருவன்.

மரவேலைகள் செய்வதில் தேர்ச்சியும் திறமையும் இருந்ததால், பாசறைகளுக்குத் தேவையான கதிரை, மேசைகளைச் செய்யும் பணியில் ஈடுபடத் தொடங்கினான். வண்ணவேலைப்பாடுகளுடன் அமைந்த மேசையினையோ கதிரையினையோ ஒரு தடவை பார்த்தால் போதும்; அதேவடிவில் தன் கைவண்

ணத்தைக் காட்டி, அதுபோலவே செய்து முடித்துவிடுவான். அதுவரை ஓய மாட்டான்.

காட்டில் இந்திய இராணுவத்தைக் கலக்கிய மிதி வெடிகளை வைக்கும் பணியிலும் தொடர்ச்சியாக ஈடுபட்டதால், ஓய்வு என்பதையே மறந்திருந்தான்.

காட்டில், லெப். கேணல் டடியின் தந்தையுடன் சேர்ந்து, மிருகங்கள் வளர்க்கத் தொடங்கினான். புகைப்படங்களில் தலைவருடன் நிற்கும் புலிக்குட்டியைப் பார்க்கும்போதும் அவர் இருக்கின்ற கதிரையினையோ அல்லது கட்டிலையோ பார்க்கும்போதும் அந்தோனி கண்முன்னே நிற்பான்.

இந்திய இராணுவத்திற்கெதிராகவும் தேசத்துரோகிகளுக்கெதிராகவும் முயல்குத்தியில் நடந்த சண்டை - யாழ். தொலைத்தொடர்பு நிலையத்தில் முகாமிட்டிருந்த இலங்கைப் படை மீதான தாக்குதல் - மணலாற்றில் மேஜர். செல்வராசா மாஸ்ரர் தலைமையில் நடந்த, இராணுவ ரோந்து அணிமீதான அதிரடித் தாக்குதல் என்பவற்றிலெல்லாம், அந்தோனி பங்குகொண்டான். இறுதியாக கோட்டைத் தாக்குதலுக்காய், மணலாற்றிலிருந்து 'விசேட 'கொமாண்டோ' அணியொன்று புறப்பட்டது; அந்தோனியும் அதில் ஒருவனானான். சென்ற படை வென்றது. ஆனால் அந்தோனி மணலாற்றுக்கு மீண்டும் வரமறந்து கிடந்தான். மணலாற்றில் கோட்டை அமைத்த அந்தோனி, யாழ். கோட்டையில் துயில்கொண்டான்!

☆

பிறப்பு:
24. 03. 1972

வீரச்சாவு:
19. 06. 1990




# லெப். பூபதி

(கோட்டைச் சமர்)
(குமாரசிங்கம் குமாரசங்கர்)
கந்தளாய்,
திருக்கோணமலை.

பூபதி - பெயருக்கேற்ற குணம். பூப்போன்ற மென்மையான மனம் .அமைதி குடியிருக்கும் முகம். ஒரு போராளியின் மனம் எந்தளவு மென்மையானது என்பதற்கு, பூபதி ஒரு உதாரண புருஷன்.

திருக்கோணமலை மண்ணிலேயே தன் பயிற்சியை முடித்துக்கொண்டு காட்டுக்கு வந்தான். முழத்துக்கு முழம் அமைந்திருந்த இந்தியப்படைகளின் முகாம்களையும், நேரகாலமின்றித் திரியும் ரோந்து அணிகளையும் கடந்து மணலாற்றுக்கு வந்த அந்த நாட்கள், பூபதியின் போராட்ட வாழ்வில் மறக்கமுடியாத நாட்கள்.

மணலாற்றுக் காட்டில், 'செக்மேற் - 03' என்ற இந்திய சிக்கறுப்பு நடவடிக்கையில் அவர்களையே சிக்கவைத்து, கேணல் பஸ்கியையும் பலிகொண்ட சண்டையில், பூபதி தன் சண்டை அனுபவத்தைத் தொடங்கினான். 'சினைப்பர்' தாக்குதல் பிரிவில் இருக்குமளவிற்கு, குறிதப்பாது சுடும் ஆற்றலோடு வளர்ந்தான். மணலாற்றிலும், மணலாற்றுக்கு வெளியிலும் நடைபெற்ற சண்டைகளில் 'சினைப்பரா'கவே சென்றான்.

கோட்டைச் சண்டைக்குப் புறப்பட்ட 'சினைப்பர் அணி'யில் பூபதியும் சென்றான்; அவனது இலக்கு பல எதிரிகளை வீழ்த்தியது. இறுதி இலக்கை அடையும் முன்னரே, தன் இலட்சியப் பயணத்தை முடித்துக்கொண்டான்! ☆

பிறப்பு:
23. 03. 1973

வீரச்சாவு:
23. 08. 1990



## 2ஆம் லெப். சின்னஅல்பேட்

( கோட்டைச் சமர் )

( சடாட்சரம் தனேஸ்வரன் )

வீனஸ் மாளிகை,
கஸ்தூரியார் வீதி,
யாழ்ப்பாணம்.

செந்தமிழீழ மண்ணுக்காய்ச் சிந்திய இளவுதிரங்கள் கொஞ்சமா? ......பிஞ்சு வயது; குழந்தை உள்ளம்; மலையளவு உயர்ந்த தியாகம். அல்பேட் விருந்து கோட்டைக்குப் புறப்பட்ட புலிகள், வட்டுக்கோட்டையில் சில நாட் கள் தங்கினர். தன்மகன் துப்பாக்கியுடன் நிற்கும் தோற்றத்தைக் காண ஓடி வந்தாள் தாய், வடை...... தொதோல்...... விதம் விதமான சாப்பாட்டுப் பொருட்களோடு. காட்டில் தன் மகன் வாடி மெலிந்திருப்பான் என நினைத்த திருந்தவள், மகனைக் கண்டதும் மலைத்து நின்றாள்! கொழுத்து வளர்ந்த பருத்த தோற்றம்...... உச்சி முதல் பாதம் வரை அவள் கண்கள் ஏறி இறங் கின.

தாண்டிக்குளத்திலும், கிளிநொச்சி சிங்களப் படை முகாமிலும் அவன் செய்த சண்டையின் திறமையைச் சொன்னால், இன்னும் எந்தளவுக்கு வியப் புறுவாள்!

மகனின் உயர்வை நெஞ்சு நிறையச் சுமந்து திரும்பிய அந்தத் தாய், அடுத்தநாளே அவன் தியாகத்தை நெஞ்சில் சுமக்க வரும் என நினைத்திருக்க மாட்டாள். ஊர்காவற்றுறையில் அடுத்தடுத்து வந்து வெடித்த குண்டில், காற்றோடு சிதறிக் கலந்துபோன அல்பேட்......!

☆

வீரச்சாவு.
23. 08. 1990




# விக்னா

( கோங்டைச் சமர் )
( சித்திரவேலு சசிகரன் )
2ஆம் கொலனி, கந்தளாய்,
திருமலை.

தன்னை ஒத்த எத்தனையோ சிறுவர்கள் இந்த மண்ணில் ஓடி விளையாட விக்னா மட்டும் அதை ஏன் மறந்தான்... ? ''திருக்கோணமலை எங்கள் மண்'' என்று சொல்லும் நாள் வரும்வரை, எப்படி அவனால் விளையாட முடியும்? தான் பிறந்து தவழ்ந்த மண்ணில் இன்று நடக்க முடியாது, சிரிக்க முடியாது செய்துவிட்ட சிங்களத்தின் ஆக்கிரமிப்பை - அழிவுக்கொடுமைகளை - எப்படி அவனால் பார்த்துக்கொண்டிருக்க முடியும்?

பிறந்த மண்ணில் தன் குழந்தை வயதில் செய்யமுடியாத குறும்புத்தனங்களை - வீட்டில் அனுபவிக்க முடியாது போன சுதந்திரத்தை - காட்டில் தன் தோழர்களிடம் செய்து அனுபவித்தான் விக்னா.

மாங்குளம் இராணுவமுகாம் தகர்ப்பில், விக்னாவின் பிஞ்சுக்கரத்திலிருந்த துப்பாக்கி எதிரிக்குக் கொடுத்த கிலியைப் பெற்றதாய் கண்டிருந்தால் வாய் பொத்தி நின்றிருப்பாள்.

''என்னுடலை மடியில் வைத்து முத்தம் கொடுத்து அழுவதற்கு, பெற்ற அன்னை இருப்பாளோ அல்லது அந்நியர்கள் வெட்டிச் சாய்த்திருப்பாரோ'' என்ற கேள்வி, அவனுள் தினமும் எழுந்து நின்றது. அதனால்தான் என்னவோ, ஊர்காவற்றுறைச் சண்டையில் தன் உடலையும் உயிரையும் காற்றோடு காற்றாகக் கலக்க விட்டுவிட்டான் விக்னா!

☆

பிறப்பு:
10. 08. 1972

வீரச்சாவு:
23.08.1990




# பிரதீப்

(கோட்டைச் சமர்)
(வன்னியசிங்கம் வரேந்திரன்)
வந்தாறுமூலை,
செங்கலடி.

**வ**ந்தாறுமூலை, செங்கலடி, மட்டக்களப்பு இதுதான் *பிரதீப்பின் முக வரி.* **ஆனால்,** அவன் புகழ்வரிகள் பொறிக்கப்பட்டதோ வணங்காத மண்ணில்.

எலும்புக்கூடுகளும், இரத்தக்கறைகளும் படிந்து கிடக்கும் மட்டக்களப்பில் பிரதீப் எப்படி வாழமுடியும்? சுதந்திரமாகப் பள்ளிக்குப் போக...சுதந்திரமாகப் படுத்துறங்க... துள்ளிவிளையாட... கொடுமைகளும், நாசகாரத்தனங்களும் நாளுக்கு நாள் பெருகிவரும் நிலையில்... உயிர்கள் மலிவு விலையில் விலைபோகும் நிலையில்... ஒடுங்கி ஒதுங்கி, பயந்து வாழ பிரதீப் விரும்பவில்லை. நாளை தன் தம்பியர்களாவது 'சுதந்திரமாக வாழவேண்டுமென்று துணிந்து புறப்பட்டான். காட்டில் பயிற்சி முடித்து ' கன்னி யுத்தத்தை ' மாங்குளத்தில் தொடங்கினான்.

ஊர் வாழவேண்டுமென்று நினைத்த இந்தக் குழந்தை உள்ளம், ஊர் காவற்றுறையில் உறங்கிப்போனது. '' பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும் இந்த உலகில் உயர்ந்த பொக்கிஷங்கள் '' என்ற இந்தக் குழந்தையின் உணர்வு, தமிழீழ மண்ணின் மக்கள் மனதில் பதிய வேண்டும். அப்போதுதான், பிரதீப் என்ற குழந்தையின் ஆத்மாவினை நாங்கள் நேசித்தவர்களாகலாம்! ☆

பிறப்பு:
28. 03. 1975

வீரச்சாவு:
23. 08. 1990




# பாபுஜி

( ஊர்காவற்றுறைச் சமர் )

( ஐயர்த்துரை அருட்செல்வன் )

சந்தை வீதி,

காங்கேசன் துறை.

கருங்காலிக் கறுப்பு; மகிழ்ச்சிக்குக் குறைவில்லாத முகம்; சொற்ப நாளிலேயே முடிந்துபோன விடுதலை வாழ்வு. பாபுஜி என்றதும் கண்முன் நிற்கும் உடுக்கு.

உடுக்கடிப்பதில் வல்லவன் இவன். பாசறைகளில் நிகழ்ச்சிகள் நடந்தால், உடுக்கு வித்துவான் இவன்தான்; ' அருள் - 89 ' ரைபிள் கிரனேட்டை எதிரியின் இலக்கில் குறிவைத்துப் போடும் ஆற்றலும் அதிகமாகவேயிருந்தது.

கோட்டைச் சண்டைக்காக மணலாற்றிலிருந்து புறப்பட்ட அணியில், இவனும் இடம்பெற்றிருந்தான். கோட்டைச் சண்டையில் நேரடியாகப் பங்கு பெறும் பாக்கியம் கிடைக்காவிட்டாலும், ஊர்காவற்றுறையில் சிங்களப் படைகள் கால்வைத்துவிடாமல் காக்கும் பணியில் நின்றிருந்தான்.

சண்டையென்று தொடங்கிவிட்டால், சாப்பாடு கிடைப்பது கடினம்; கிடைத்தாலும் சரியான நேரத்தில் கிடைக்காது; கிடைத்த சாப்பாட்டினைச் சாப்பிடுவது என்பது அதைவிடக்கடினம். பாபுஜி நின்றிருந்த இடத்தில் இது பெரும் பிரச்சினையாக இருந்தது. நிலை எடுத்துக் கிடந்த இடத்திலேயே

கோழியை உரித்து, நெருப்பில் சுட்டுச் சாப்பிட்டனர். பாபுஜிக்கும் சுட்ட கோழியில் ஒரு துண்டு கிடைத்தது: அதனை உண்பதற்காக வாயில் வைத்தான். எதிரியின் துப்பாக்கி குண்டொன்று பாபுஜியின் நெற்றியைக் கிழித்துச் சென்றது.

சாப்பிடுவதை மறந்து - சாப்பிட நேரமின்றி - எதிரியின் இலக்கினை அழித்து விடுவதையே நெஞ்சில் சுமந்தவனாய். மண்ணை முத்தமிட்டுக் கிடந்தான் பாபுஜி...!

☆

மணலாற்றில் 'சிக்சர்' என்ற

இராணுவ நடவடிக்கையைச்

சிதறடித்துச் சிலையானவர்கள்.

பிறப்பு:
23. 06. 1975

வீரச்சாவு:
08. 03. 1992



## சித்தன்

(சிக்சர்)

(பொன்னுச்சாமி ஜெயராம்)

பூவரசங்குளம்,

வவுனியா.

சித்தன் விந்தையான பிறப்பு. தாய் தமிழ்; தந்தை சிங்களம். ஆனால் சித்தன் பிறந்த சில வருடங்களிலேயே தந்தை தன் தேசம் சென்றுவிட்டார். வவுனியாவின் எல்லைக் கிராமத்தில் வாழ்ந்த இவர்கள், 1986இல், சிங்களக் காடையரின் ஆக்கிரமிப்பால் அங்கிருந்து வெளியேறினர். நாவற்குழி இவனின் வளர்ப்பிடமாகியது. இவனின் தாய் கூலிவேலை செய்தே இவனை வளர்த்தாள். அறிவுதெரிந்த பராயத்தில் தாய்க்கு உதவியாகச் சித்தனும் கூலி வேலைக்குச் சென்றான். வயது பதினைந்தைக் கடந்தபோது, நாவற்குழியிலிருந்த கடையொன்றில் வேலைக்கமர்ந்தான். தாயின் துயரம், அடிமை வாழ்வு என்பன சித்தனின் மனதில் ஆறாத்துயரை ஏற்படுத்தியது. தந்தையை நினைத்த போதெல்லாம் அவனுக்குக் கடுங்கோபம் தலையெடுத்தது. சிங்கள இனத்தையே அழித்துவிட வேண்டுமென்ற உணர்வு கிளர்ந்தது. ஆனையிறவுப் பெருஞ்சமர் நடந்துகொண்டிருந்தபோது, காயமுற்றுவரும் வீரர்களும் மரணித்த வீரர்களின் உடல்களும் அவனை எரிமலை ஆக்கியது. பொறுப்பதற்கு இனிக் காலமில்லையெனக் கருதிப் புறப்பட்டு வந்தான் மணலாறு.

காட்டில் போர்க்கலை பயின்றான்; பயிற்சி முடிந்ததுமே சிங்களப் படைகளை அழித்துவிடவேண்டுமெனத் துடித்துக்கொண்டிருந்தான். அவன்

துடிப்பிற்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. 'ஒப்பரேசன் சிக்சர்' என்ற இராணுவ நடவடிக்கை ஆரம்பமானது. இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட இராணுவத்தினர் முன்னேறிக்கொண்டிருந்தனர். இராணுவ முகாமிலிருந்து ஐநூறு யார் முன்னேறியிருப்பர். திசைதெரியாது துப்பாக்கிக் குண்டுகள் வந்தன. சிங்களப் படை நிலைகுலைந்து ஓடியது. சித்தனும் கலைத்துக் கலைத்துச் சுட்டான். சிங்களச் சிப்பாய்களின் உடலைக் கடந்து கடந்து துரத்திச் சுட்டது அவனுக்குப் பெரும் திருப்தியைக் கொடுத்தது. ஆனால், 'சிக்சரின்' இரண்டாம் நாள் சண்டையில், மார்பில் குண்டுபாய மௌனமாய் உறங்கிக்கொண்டான்!

☆

பிறப்பு:
06. 11. 1974

வீரச்சாவு:
17. 03. 1992



## 2ஆம் லெப். புவியழகன்

(சிக்சர்)
(லூயிஸ் மாத்துன்)
மாங்கேணி
வாழைச்சேனை.

மட்டக்களப்பில் மாங்கேணியில் பிறந்தவன் புவியழகன். அறிவுதெரிந்த பராயத்திலிருந்து அவன் அனுபவித்ததும் கண்ணிலே கண்டதும், சிங்களக் காடையரின் அடாவடித்தனங்கள்தான். இரவு தூங்கும்போது விடிய உயிருடன் இருப்போமாவென்ற கேள்விக்குறி தினமும் எழுந்து நின்றதால், விடுதலைப் பணியில் தன்னை இணைத்துக்கொண்டான்.

புவியழகனின் குடும்பமே தேசவிடுதலையின் பின்னே நின்றது. இவனின் அண்ணன்கூட ஆனையிறவு முற்றுகைச் சண்டையில், வீரமரணத்தைத் தழுவிக் கொண்டான்.

புவியழகன் சண்டையில் நிதானத்தைக் கடைப்பிடிப்பவன். 'அருள் - 89' ரைபிள் கிரனேட்டுக்களை குறிப்பிடும் இடத்துக்கு - குறிதப்பாது - போடும் திறமையில் அவனுக்கு நிகர் அவனேதான். 'கஜேபாார ஒப்பரேசனில்' ஆர். சி. எல். பீரங்கியை நாம் கைப்பற்ற, புவியழகனின் இத்திறமை பெரிதும் பயன்பட்டது. இந்தச் சண்டையிலே ஆர். சி. எல். எடுக்கவேண்டுமென்பதை முற்கூட்டியே அவன் சொல்லியிருந்தான். வீட்டின் வறுமையை நினைத்து ஊருக்குச் செல்லும்படி தளபதி கூறியபொழுது, மணிக்கணக்காக இருந்து அழுதான்.

''சாவு எல்லாருக்கும் வருமண்ணா; நான் கோழையாய் சாகவிரும் பேல்ல. மட்டக்களப்புக்குப் போய் நான் சிங்களநாய்களால வீணாய் சாகோணு மெண்டு விரும்புகின்றீர்களா? அண்ணன் ஒரு புலிவீரனாய் சாக நான் மட்டும் ஏன் அப்படிச் சாகக்கூடாது?'' என்று நியாயம் கேட்டு அழுதான். இறுதியில் அந்த இலட்சியவீரன், தன் குருதிச்சுவடுகளை இந்த மண்ணிலே பதித்ததை எப்படி மறக்கமுடியும்?

புவியழகன் மண்ணில் சாயும்போது, எம்வீரர்கள் பாய்ந்து சென்று 'பவள்' வண்டியில் ஏறினர்; அதிலிருந்த 50 கலிபர் துப்பாக்கியை மிகவேக மாகக் கைப்பற்றிக்கொண்டனர், ஆர். சி. எல். பீரங்கி பூட்டிய ஜீப் வண்டியை சில சிப்பாய்கள் திருப்பிக் கொண்டோடும் முயற்சியிலிறங்கினர்.

''டேய் ஓடுங்கடா, முகாமுக்கு போகமுதல்ல அவுங்கள மடக்கிப் போடோணும்'' என்ற எமது வீரர்களின் ஆவேசக்குரல், அனைவரையும் மின்ன லாய்ச் செயற்படவைத்தது. சிலகணந்தான்...... ஆர். சி. எல். பீரங்கி எம் வீரர் கள் கைக்கு மாறியது!

கொக்குத்தொடுவாய் படைமுகாமிலிருந்து இருநூறு யார் தொலைவுக் குள்ளேயே, அந்த நவீன ஆயுதத்தை எமது வீரர்கள் கைப்பற்றிக்கொண்டார் கள். எம்வீரர்களின் தியாகமும், வேகமும்தான் இந்தச் சாதனையின் பின்புல மாகின.

ஆர். சி. எல். பீரங்கி எமது கரங்களில் வந்ததை, மரணத்தின் இறுதிப் பிடியிலிருந்த புவியழகன் அறிந்திருப்பான்; வரலாற்றுச் சாதனையோடு தன் மரணம் பதியப்படுவதை நினைத்து நிச்சயம் ஆனந்தப்பட்டிருப்பான்!

'எடுத்த எடுப்பும்', ஐநூறு யார்கூட முன்னேற முடியாது பெரும் இழப் பைச் சந்தித்ததும், 'ராங்கி'களையும், கவசவண்டிகளையும் அழிவுக்குட்படுத்தி யதும், ஆர். சி. எல். பீரங்கியைப் பறிகொடுத்ததும் இராணுவத்துக்குப் பெரும் பீதியைக் கொடுத்திருந்தது. வந்தது தெரியாமல் திரும்பி ஓடியதால், சண்டை நண்பகலுடனேயே முடிந்துபோனது. 60. எம். எம், 81. எம். எம், 120. எம். எம் குண்டுவீச்சுக்களும்; ஆட்டிலறி எறிகணைவீச்சும், விமானக் குண்டுவீச்சும் கடற்படைப் பீரங்கி வீச்சும் ஒரேநேரத்தில் - கண்மூடித்தனமாக - இலக்கற்ற முறையில் நடைபெறத் தொடங்கின.

ஆர். சி. எல். பீரங்கி எம் கரங்களில் கிடைத்துவிட்டதால், விமானங் களும் கடற்படைக் கப்பல்களும் கண்ணுக்கு எட்டாத தூரத்தில் இருந்து தாக்கு தல்களை நடாத்தின. மாலைநேரமானது; இருள் கருக்கொண்டது. எறிகணை வீச்சுக்கள் மட்டும் ஓயவில்லை!

☆

பிறப்பு :
10. 02. 1972

வீரச்சாவு:
17. 03. 1992



## 2ஆம் லெப். செம்மனச் செம்மல் – குரு

(சிக்சர்)
(வீரசிங்கம் இளையராசா)
15 ஆம் கிராமம்,
நாவிதன்வெளி,
கல்முனை.

மட்டக்களப்பில் பிறந்தாலும் மணலாற்று மண்ணை நேசித்த குரு, பவள் வண்டியிலிருந்து குதித்தோடிய சிப்பாய்களைக் கலைத்துக் கலைத்துச் சுடத் தொடங்கினான்.

மௌனமாகவும் அமைதியாகவும் இருக்கும் குரு, அன்று உற்சாகத்துடன் காணப்பட்டான். முதல்நாள் மாலையிலேயே ''மச்சான் விமானத் தாக்குதல்ல நாங்கள் வீணாய்ச் சாகக்கூடாது. சண்டையினை நாங்கள்தான் எதிர்பார்த்துக் கிடக்கிறம்; வெற்றி கட்டாயமாய் எங்களுக்குத்தான் கிடைக்கும்.'' என்று கூறினான். மணலாற்று மண்ணில் – அதுவும் இந்தச் சண்டையில் – தன் வீரத்தை நிலைநாட்ட வேகமுடன் செயற்பட்டான் குரு. ஆயிரமாயிரமாய் வந்த எதிரியின் துப்பாக்கிக் குண்டுகளிலொன்று குருவின் மார்பிலும் பாய்ந்து விட, அடுத்த கணமே மணலாற்று மண்ணை அணைத்துக்கொண்டான்! ☆

பிறப்பு:
23. 08. 1970

வீரச்சாவு:
19.03. 1992




# லெப். புலித்தேவன்

(சிக்சர்)
(செல்வன் செல்வேந்திரன்)
பன்குடாவெளி,
மட்டக்களப்பு.

போர்க்களத்தில் மார்பில் அம்புபட்டு மகன் இறந்ததைக் கேள்வியுற்று, முலைசுரக்க நின்ற வீரத்தாயை, சங்க இலக்கியத்தில் படித்திருக்கின்றோம். களத்திற்கு ஓடிச்சென்று வீரமகனின் உடலை மடியில் கிடத்தி ஆனந்தக் கண்ணீர் வடித்தவள், இலக்கியத்தில் வருகின்ற தாய். இன்று தமிழீழ மண்ணில் இருக்கும் தாய், இலக்கியத் தாயைவிட ஒருபடி உயர்ந்து நிற்கின்றாள். இந்தத் தாயின் தியாகத்தை, உறுதியை, ஆனந்தக் கண்ணீரை எழுத சங்கப் புலவர்களால்கூட முடியாது. மணலாற்றுக் காட்டில், இரண்டு ஆண்டுகளாய்த் தன் தடத்தைப் பதித்தவன் புலித்தேவன். 'ஒப்பரேசன் மின்னல்' நடவடிக்கையில் பட்ட தழும்பு மாறாத புலி.

களத்தில் நிற்கும் மகனைக் காண, மட்டக்களப்பு இலுப்பையடிச் சேனைக் கிராமத்திலிருந்து புறப்பட்டுவந்தாள் அவனின் தாய். ஐந்து இரவுகள் கண் மூடாத பயணம்; கண்ணில் மகன் புலித்தேவனே நிறைந்துநின்றான்.

தன் கைபட மகனுக்காகச் செய்த பலகாரங்களுடன் ஓடிவந்தாள். ஆனால் இங்கே ...

இரண்டு நாட்களுக்கு முன், மணலாற்றைத் தன் செந்நீரால் கழுவிவிட்டு, மாவீரர் இல்லத்தில் துயின்றுகொண்டிருந்தான் புலித்தேவன். சமாதியின்

முன்னே, மகனின் பாதத்தில், பலகாரப் பையுடன் நின்றாள் அந்தத் தாய்... வார்த்தைகள் இன்றி எம் நாக்குப் புரண்டது. ஆனால் அந்தத் தாயின் வாயி லிருந்து வெடித்த உறுதியான வார்த்தைகள்......

''வீரனாய் என்ரமகன் சாகிறதைத்தான் நான் விரும்பிறன்; என்ர பிள்ளைக் கும் இந்த மண்ணில சமாதி உருவாகிறதைப் பார்த்து மகிழ்ச்சியடையிறன்; என்ர பிள்ளையின் படமிருந்தால் ஒன்றுதாருங்கள் மக்கள். அதைப்பார்த்துக் கொண்டே மிகுதி நாளை நான் கழித்துவிடுவன். இந்தப் பலகாரங்களைச் சாப்பிடுங்கோ; சாப்பிடும்போது என்னுடைய பிள்ளை சாப்பிடுவதாகவே நினைக்கிறன் மக்கள்'' என்று கூறிய அந்தத் தாயின் சிவந்த விழியிலிருந்து நீர்த்துளிகள் உருண்டு, புலித்தேவனின் சமாதியில் விழுந்து சிதறின.

''வெற்றிக்குத் தோள்கொடுத்த எங்கள் தோழனிடம், நாளை செய்தி சொல்லப்போகும் பிள்ளைகள் அவர்கள்'' என்பதை, அந்தத் தாய் நன்கு உணர்ந்திருந்தாள்! ☆

பிறப்பு:
09. 05. 1967

வீரச்சாவு:
23. 03. 1992



# கப். டயஸ் மணாளன்

( சிக்சர் )

( சண்முகநாதன் சிறீராம் )

சுழிபுரம்,

யாழ்ப்பாணம்.

யாழ்ப்பாணத்தில் - சுழிபுரம் தந்த புதல்வன் டயஸ். மணலாற்றுக் காட்டில் தன் முடிவு வரிகளை எழுதிக்கொண்டவன். காட்டுக்கு வந்தபோது, கரும்புலிக் குத் தன்னைப் பதிவுசெய்துகொண்டான். பயிற்சியை முடித்த காலத்திலிருந்தே கனரக ஆயுதங்களைச் சுமந்து, தோள்களை உரமாக்கிக்கொண்டான்.

கனரக ஆயுதங்களை வைத்திருப்பவர்கள் சண்டையில் முன்னுக்கு செல் வது தவிர்க்கப்படுகின்றதொன்று. சண்டை தொடங்கிவிட்டால், டயஸ் இதை மறந்துவிடுகின்றான். எல்லாருக்கும் முன்னே பாய்ந்து சென்று சண்டையிலி றங்கிவிடுவான்.

எந்தப் போராளியிடம் சென்று டயஸ் எப்படிப்பட்டவனென்று கேட் டாலும், ''மரணச் சண்டைக்காரன்'' என்றுதான் முதலிலே சொல்வான்.

கட்டைக்காட்டு சண்டையில் ஆர். பி. ஜியுடன் இராணுவத்துள் புகுந் தான். குறிதப்பாமல் இரண்டு ரொக்கட்டுக்கள், அவனது ஆர். பி. ஜியிலிருந்து பறந்தன. 'பவள்' கவசவண்டிகள் இரண்டு தீப்பிடித்து எரிந்தன. அடுத்த குறிவைக்குமுன் காயத்தைச் சுமந்துகொண்டான். காயத்துக்குக் கட்டுப்போட்ட பின், மீண்டும் சண்டைக்குத் தயாரானான்.

மணலாற்றிலிருந்து தாக்குதல் அணிகள் எங்கெல்லாம் சென்றதோ, டயசும் அங்கெல்லாம் நின்றான். இவன் சண்டைக்காரன் மட்டுமல்ல; கலைஞனும்கூட; இராணுவ வகுப்புக்களை சகபோராளிகளுக்கு எடுக்கும் நல்லாசிரியனும்கூட. படைத்துறைப் பள்ளியில் இருந்த காலத்தில், நாடகங்கள் பல எழுதி அரங்கேற்றினான். முக்கிய பாத்திரங்களைத் தானே ஏற்று நடித்தான். ஓய்வு நேரங்களில் சகபோராளிகளுக்கு இராணுவ வகுப்புக்களை எடுத்து, காலத்தைப் பெறுமதியாக்கினான்.

சண்டைக்காரன், கலைஞன், ஆசிரியன் என்று ஒப்புக்கு அவனைப் புகழவில்லை. மணலாற்றுக்காய் மரணித்த அவ்வீரனின் பெயரில், யாழ்ப்பாணத்தில் ஒரு பாசறை அமைக்கப்பட்டிருப்பது, அவன் பணிக்கு நிலைக்கல்!

டயசின் கடைசிப் பயணம் நெஞ்சில் ஆழமாய் நிற்கிறது. 'ஒப்பரேசன் சிக்சர்' நடவடிக்கையில் இராணுவத்தின் இறுதி முயற்சி; நான்கு வீரருடன் நின்று அதை முறியடித்தான் டயஸ். கொக்குத்தொடுவாயிலிருந்து முன்னேற முயற்சித்து முடியாமல் போன இராணுவம் வேறொரு பாதையினால் முன்னேற முயன்றது. முற்கூட்டியே அந்தப் பாதையில் டயசும், கெங்கையும், பிரியனும், சிலோட்சனும் நிலையெடுத்துக் கிடந்தனர். ஐநூறுக்கு மேற்பட்ட இராணுவம் முன்னேறிக்கொண்டிருந்தது. சண்டை தொடங்கியது.

டயசுக்கு உதவிக்காக, தளபதியே அணியொன்றுடன் விரைந்து கொண்டிருந்தார். 'வோக்கி ரோக்கி'யில் ''பிரச்சனையில்லை; சண்டை நடக்கிறது'' என்று டயசின் குரல் கம்பீரமாய் ஒலித்துக்கொண்டிருந்தது. பதினைந்து நிமிடங்கள் இருக்கும்; துப்பாக்கி வேட்டுக்கள் ஓய்ந்து அமைதி நிலவியது.

களத்துக்கு வந்த தளபதி கண்கள் இமைக்க மறந்து நின்றார். இராணுவத்தினர் தம் சகாக்களின் உடல்களைத் தூக்கிக்கொண்டு தப்பி ஓடினர்! ஆனால், டயசும் தோழர்களும்......?

☆

பிறப்பு:
06. 04. 1975

வீரச்சாவு:
23. 03. 1992



## லெப். பிரியன்

( சிக்சர் )

( மதிவதனன் தயானந்தன் )

மாணிக்கவாசகர் வீதி,

திருமலை.

பிரியனின் பிறந்தமண் கோணமலை. போராட்டத்தின் சுவடுகளை அறியாத, அறிய முயற்சிக்காத, அனுபவிக்காத செல்வக்குடும்பத்திலே பிறந்து செல்லமாக வளர்ந்தவன்.

'இரண்டாவது ஈழப்போர்' தொடங்கியது. இராணுவத் தாக்குதலிலிருந்து தப்பியோடிக்கொண்டிருந்தனர் கிழக்கு மக்கள். மணலாற்றின் செம்மலைக் கிராமத்தில், பல படகுகளில் வந்து மக்கள் தரையிறங்கினர். அவலங்கள் பல நிறைந்த அந்த இடப்பெயர்வில் வந்தவர்கள்தான், பிரியனின் குடும்பத்தினரும். வந்திறங்கிய சில வாரங்களிலேயே அவனது தந்தை முதற்செய்த செயல், அனைவருக்கும் வெளிநாடு செல்வதற்கான கடவுச்சீட்டுக்களைப் பெற்றதுதான்.

தப்பிவந்த இளைஞர்கள் சிலர் விடுதலைப் போரில் பங்குபற்றத் துணிந்து பயிற்சிக்காகப் புறப்பட்டனர். அவர்களைப் பயிற்சிக்காக ஏற்றிச் சென்ற வாகனத்தில் பிரியனும் ஏறிக்கொண்டான். பயிற்சி முடிந்து போராளிகளுடன் உணர்வுகளைப் பகிர்ந்துகொண்டபோதுதான், இனவிடுதலையின் தேவையை - உண்மையை - பிரியன் புரிந்துகொண்டான். அந்தளவிற்கு செல்லப்பிள்ளையாக - உலகம் புரியாதவனாக - அவன் வளர்க்கப்பட்டிருந்தான். ஒவ்வொரு நாளும்

இந்த உண்மையைத் தன் சகபோராளிகளுக்கு மனம் திறந்து சொன்னான் பிரியன் .

கோட்டைக்கேணியில் சிங்களப் படைகளுடன் நடந்த சண்டைதான், அவனது முதற் போராட்டக் களம். அதன் பின் களங்கள் அவனுக்குத் துரும்பாகின.

'ஒப்பரேசன் சிக்சர்' நடவடிக்கையின் இறுதிநாள் சண்டையில், கப்.டயசுடன் வீரத்தின் விழுதுகளானான். ☆

வீரச்சாவு:
23. 03. 1992



## 2ஆம் லெப். கெங்கை

( சிக்சர் )
( சுப்பிரமணியம் அசோக்குமார் )
நுவரெலியா.

மலையகத்திலிருந்து பாய்ந்து மணலாற்றில் சங்கமித்த கெங்கை இவன். இவனின் போராட்ட வாழ்வு வித்தியாசமான வரலாற்றைக் கொண்டது.

இளமையில் தாய் தந்தையைப் பிரிந்து, அறிவு தெரியும்வரை, பெற்றோர் யார் என்பதை அறியாமல் வளர்ந்தான். யாழ்ப்பாணத்தில் பணக்காரக் குடும்பமொன்றில் வேலைக்காரனாய் வளர்ந்தான்.

கல்வி வாசனை அறியாது அடக்குமுறைக்குள் வாழ்ந்தவனின் மனதில் வெடித்த விடுதலைஉணர்வைத் தடுக்க எந்தச் சக்திக்கும் முடியாது போயிற்று.

1985 ஆம் ஆண்டிலிருந்தே இயக்கத்தின் நலன்விரும்பியாய் - உதவியாளனாய் - செயற்படத் தொடங்கினான். புலிகள் மறைந்து வாழவேண்டியேற்பட்ட காலத்தில், துணிந்து பல உதவிகளைச் செய்துகொண்டிருந்தான்; 1990 இல் முழுநேரப் பணிக்காக இணைந்துகொண்டான்.

காட்டில் வாழ்ந்த காலமெல்லாம் தான் படிக்காததை நினைத்து, நண்பர்களுக்குக் கூறிக் கவலைப்பட்டுக்கொண்டான். படிக்காத மனக்குறை இருந்தாலும், சொல்லும் விடயங்களை இலகுவில் கிரகித்துக்கொள்வான். இளமையிலிருந்து பட்ட துன்பங்களெல்லாம் அவனது அனுபவ அறிவை வளர்த்திருந்தது.

மணலாற்றில் நடந்த பல சண்டைகளுக்கு கெங்கை சென்றான். சண்டை அனு பவம் அவனுக்கு அதிகமாகியிருந்தது.

ஆனையிறவு உப்பளமுகாம் தகர்ப்பின் போது உள்ளே பாய்ந்தவர்களில் இவனும் ஒருவன். திலகன் என்றபோராளி காயமுற, அவனை வெளியே கொண்டுவரும்போது கெங்கையும் காயப்பட்டுக்கொண்டான்.

சிகிச்சைக்காக சிலவாரங்கள் யாழ்ப்பாணத்திலிருந்தான். ''கனநாளைக்கு காயமெண்டு படுத்திருந்தால், டூப்படிக்கிறமெண்டு அண்ணன் பகிடிபண்ணு வார் மச்சான்'' என்று அடிக்கடி சொல்லிக்கொண்டிருந்தவன், சிலநாட்களில் மணலாற்றுக்குத் திரும்பினான். அங்கு மிகப்பெரும் 'மின்னல்' சண்டை காத் திருந்தது. களம் புகுந்தான்; மீண்டும் கையில் காயமுற்று, சிகிச்சைக்காக யாழ்ப் பாணம் அனுப்பப்பட்டான்.

சிகிச்சை பெற்றுவந்த காலத்தில் கெங்கை சக போராளிகளுடன் பழகிய நாட்களை மறக்கமுடியாது.

''மச்சான் என்ரகையை ஒப்பரேசன் செய்து கழட்டப்போறதாய் கதை யடிபடுது; அதுக்குமுதல் மதிலால ஏறிவிழுந்தாவது மணலாற்றுக்கு போய் சேர்ந்திடோணும்'' என்றான்.

''கையைக் கழட்டினாப்பிறகு என்ன செய்யிறதாய் உத்தேசம்?'' என்று வம்புக்கிழுத்தபோது, ''கையில்லாமல் எத்தினைபேர் என்னென்ன வேலையெல் லாம் செய்யிறாங்கள்!'' என்று சூடாகவே பதில் சொன்னான்.

கைக்காயத்தை மாற்றிக்கொண்டு மணலாற்றுக்கு மீண்டான். 'ஒப்ப ரேசன் சிக்சர்' களம் காத்திருந்தது; தமிழீழத்தாய் அவனை அழைக்க விரும்பி னாள். புகழ்மிக்க வீரனாக 'சிக்சரில்' அவனை அணைத்துக்கொண்டாள்!

☆

பிறப்பு:
**15. 06. 1971**

வீரச்சாவு:
**23. 03. 1992**




# சிலோட்சன்

( சிக்சர் )
( கந்தவனம் தேவராசா )
வாகரை,
மட்டக்களப்பு.

கதிரவெளிக் கிராமத்துக்கு புகழ்சேர்த்தவன் சிலோட்சன்; தாயும், தாய் மண்ணும் மகிழத் தியாகியானான். 1990ஆம் ஆண்டு சித்திரை மாதம் நண்பர்கள் ஒரிடத்தில் கூடினர். பயிற்சி பெறச் செல்வது பற்றிய முடிவு அதில் எடுக்கப்பட்டது.

''சித்திரை வருசத்தைக் கொண்டாடிக்கொண்டு போவம் மச்சான்; இயக்கத்துக்கு வெளிக்கிட்டால் அடுத்த வருசக் கொண்டாட்டத்துக்கு இருக்கிறோமோ என்று தெரியாது'' என, தனது அபிப்பிராயத்தை அங்கு வெளியிட்டான். எல்லாரும் அவனின் ஆலோசனையை ஏற்றுக்கொண்டனர்.

அப்பம் சுட்டு விற்று குடும்பத்தைக் காக்கும் தாயைப் பற்றி, சிலகணம் சிந்தித்தான். சித்திரை வருடமும் கொண்டாடி முடிந்துவிட்டது. அதிகமாகச் சிந்திக்க இனி நேரம் இல்லை; புறப்பட்டான். நண்பர்கள் பத்துப்பேருடன் மட்டக்களப்பில் இருக்கும் பாசறையொன்றினை அடைந்தான். அங்கிருந்து காட்டுக்கு அனுப்பப்பட்டனர். காட்டில் சிலகாலம் தங்கியிருந்தபோது, இருவரைத் தவிர மற்றவர்கள் கிராமத்துக்குத் திரும்பிவிட்டனர்.

சிலோட்சனும் அவனது நெருங்கிய நண்பனுமே மணலாற்றை வந்தடைந்தனர். பயிற்சியை முடித்து இரண்டு ஆண்டுகள் மணலாற்றில் பணி

புரிந்தான். சிலோட்சனின் அம்மா மகனைப் பார்க்க விரும்பி, மட்டக்களப் பிலிருந்து யாழ்ப்பாணத்தை வந்தடைந்தாள். மணலாற்றில் அப்போது கடுமை யான சண்டை நடைபெற்றுக்கொண்டிருந்தது. காயமடையும் வீரர்கள் யாழ். மத்திய மருத்துவமனைக்கு அனுப்பப்பட்டுக்கொண்டிருந்தனர். தன் மகனுடன் சென்ற அவனின் நண்பன் காயமுற்று வந்திருப்பதைக் கண்டாள். ''தம்பி என்ர மகன் சுகமாக இருக்கிறானே? அவனை ஒருக்கால் பாத்திட்டுப் போவமெண்டு வந்தனான்; நீங்கள்தான் சொல்லி அவனை ஒருக்கால் கூட் டிக்கொண்டு வரோணும்'' என வேண்டினாள்.

''சண்டை நடக்கிறதம்மா; சண்டை முடிந்ததும் கட்டாயம் நீங்கள் பார்ப்பதற்கு அனுப்புவார்கள்'' என அந்தப் போராளி கூறினான்.

ஆனால், சண்டை முடியும் முன்னரே சிலோட்சன் வந்தான்.

மாவீரனாய்......மாலையுடன்.....வந்த களைமாறாமல் நின்ற தாயோ வாயடைத்து நின்றாள். அவளின் கண்ணீர் மகனின் பாதத்தைக் கழுவியது.

''உன்னுடைய உடலையாவது பார்க்கக் கொடுத்துவைச்சிட்டனப்பனே'' என்று தனக்குத்தானே ஆறுதல் சொன்னாள். மகனின் உடலை மண்ணுக்கு உரமாக்கி மட்டக்களப்புக்குத் திரும்பினாள் அந்த வீரத்தாய்! ☆

பிறப்பு:
24. 11. 1974

வீரச்சாவு:
17. 03. 1992



# 2ஆம் லெப். தாஸ்

( சிக்சர் )

( ஆரியரத்ன லால்சிறீ ஆரியதிலக )

விபுலானந்தர் வீதி,

வாழைச்சேனை.

சிங்களத் தந்தைக்கும், தமிழ்த் தாய்க்கும் பிறந்த தமிழ் மறவன் தாஸ். தமிழர்களின் நியாயமான உணர்வுக்காய் அவன் தந்தைகூட போருக்குப் புறப் படத் தயாராக இருந்தவர். உரிமைகளைப் போராடிப் பெறுவதைவிட வேறு வழியில்லை என்பதை உணர்ந்தவன். தலைவன் இருக்கும் மண்ணில் பயிற்சி பெறவிருப்பதை அறிந்து அளவற்ற மகிழ்ச்சியடைந்தான். மணலாற்றுக் காட் டுக்கு வந்தபோதுதான், போராட்டத்தில் அவனுக்கு முழுநம்பிக்கை பிறந் தது. காடெல்லாம் தளங்கள்; பார்த்த இடமெல்லாம் புலிகள். வாழைச்சேனை யிலிருந்து நடந்துவந்த களைப்பினை மறந்தான். பயிற்சிக் காலத்திலும் பயிற்சி முடிந்த காலத்திலும், தாஸ் எவருடனும் அளவுக்கதிகமாகப் பேசமாட்டான். மௌனமும் அமைதியும் அவனில் குடிகொண்டிருக்கும்.

எந்த வேலையானாலும் சினக்காமல் - மனம்கோணாமல் - செய்யும் பண்பு அதிகம் அவனிடமிருந்தது. இதனால், நீண்டநாட்கள் பாசறையொன்றில் களஞ்சியப் பொறுப்பாளனாக இருந்தான். பெருங்காடு; உயர்ந்த நிலம். தண் ணீர்த் தட்டுப்பாடு அதிகமாகவேயிருந்தது. 'மைக்கல் பாசறையில் உள்ள கிணற்றில்தான் தண்ணீர் எடுக்கவேண்டும். கிணற்றின் ஆழம் 47அடி. அந்த ஆழக்கிணற்றில், தாஸ் ஒருநாள் தவறி வீழ்ந்தான். தண்ணீர் அள்ளி நிரப்பி

விட்டுத் தூக்கும்போது சறுக்கி விழ்ந்தான். உழண்டிக் கயிற்றைப் பிடித்த படியே பாதாளம் சென்றான்; அதிர்ஷ்டம் அவன் பக்கமிருந்தது. அவன் தப்பி யிருக்கமுடியாதென்றுதான் நாம் கருதினோம். வெளியே அவனை எடுத்தபோது தான், எமக்கு மூச்சுவந்தது.

''மச்சான் இந்தக் கிணத்தில விழுந்தும் சாகாத எனக்கு, கிட்டடியில சாவில்லை'' என்று சிரித்துக்கொண்டே கூறினான் தாஸ். அவனின் மனவுறுதி எம்மை அசரவைத்தது.

'ஒப்பரேசன் மின்னலில்' இறுதிவரை காயம் காணாது சண்டை செய்த இந்த வீரனை, 'ஒப்பரேசன் சிக்சர்' விழுங்கிவிடுமென நாம் நினைக்கவில்லை. போராட்ட வாழ்வில், மறக்கமுடியாத அதிசயத்தை வரலாறாகப் பதித்துவிட்டுச் சென்றுவிட்டான் தாஸ்!

☆

பிறப்பு:
05. 02. 1971

வீரச்சாவு:
17. 03. 1992



## இராமநாதன்

(சிக்சர்)
( சிவலிங்கம் சிவபாலன் )
பாரதிபுரம்,
கிளிநொச்சி.

இராமநாதனின் இறுதிப் பயணத்தின் வீரவரிகளைப் புரட்டிப்பார்த்தால், அவனது தியாகம் மனதில் சுடர்விடும்.

'ஒப்பரேசன் சிக்சர்'

ஒவ்வொரு போராளியின் மனதிலும் கண்ணிலும் தாகமாய்த் தேங்கி நின்றது ஆர். சி. எல். பீரங்கிதான். சண்டை தொடங்கிய சில நிமிட நேரத்துக்கெல்லாம், 'பவள்' வாகனமொன்று கைப்பற்றப்பட்டு, அதில் இருந்த 50 கலிபர் துப்பாக்கியை ஒரு அணி கழற்றிக்கொண்டிருந்தது. பார்த்த இடமெல்லாம் சிப்பாய்களின் உடல்கள் கிடந்ததால், விமானங்களும் ெலிக்கொப்ரர்களும் தாக்குதல் நடத்தமுடியாமல் சுற்றிச் சுழன்றுகொண்டிருந்தன. இன்னுமோர் அணி ஆர். சி. எல். பொருத்தப்பட்ட ஜீப்வண்டியை நெருங்கிக்கொண்டிருந்தது. அந்த அணியில், இராமநாதன் தன்னை மறந்து சுட்டுக்கொண்டே முன்னேறினான். ஆர். சி. எல். பறிபோகப்போவதை உணர்ந்த ெலிக்கொப்ரர்கள், கண்மூடித்தனமாக 50 கலிபர் குண்டுகளைக் கக்கத்தொடங்கின. இராமநாதனின் கையில் பாய்ந்த குண்டொன்று கையை முறித்துவிட, முறிந்த கையில் துப்பாக்கியைத் தாங்கிக்கொண்டு, ஆர். சி. எல். நோக்கிச்

சுட்டுக்கொண்டே முன்னேறினான். அடுத்த குண்டொன்று அவன் தலையைச் சிதறவைக்கின்றது.

இராமநாதன் மண்ணில் சரியும்போது, ஆர்.சி.எல். பீரங்கி எம்வசமாகிறது.

மணலாற்றை ஒவ்வொரு போராளியும் எந்தளவிற்கு நேசித்தான் என்பதற்கு, இராமநாதனின் மரணமொன்றே போதுமானது. மணலாற்றுக் காட்டினை தன் கண்ணாய், இருதயமாய்ப் பூசித்த அந்த வீரனின் சாவு, எம்மை உந்தும் சக்தியாய் வழிகாட்டி நிற்கிறது! ☆

பிறப்பு:
07. 03. 1976

வீரச்சாவு:
17. 03. 1992



# ஞானி

(சிக்சர்)

( இராசரத்தினம் வைகுந்தன் )

தெருமூடி மடத்தடி,

அல்வாய் கிழக்கு,

பருத்தித்துறை.

அச்சம்! இது எம் வீரர்களிடம் என்றும் இருந்ததில்லை. பகைகண்டு - பயம் கொண்டு அவர்கள் ஓடி ஒளிப்பவர்களல்ல; எதிரியின் குண்டுக்காய் இவர்களின் கண்கள் இமைத்ததில்லை. இந்த இலக்கணத்துக்குப் பொருள் தந்தவர்களில் ஞானியும் ஒருவன். பயிற்சி முடிந்ததும் முதற்சண்டை கிடைப்பது அரிது; சண்டை கிடைத்தாலும் அதில் திறமையை வெளிப்படுத்துவது அரிது; திறமையை வெளிப் படுத்தினாலும் வரலாற்றுச் சாதனை படைக்கும் சண்டையில் உயிர்கொடுத்தல் அதனிலும் அரிது. ஞானி இதற்கு விதிவிலக்கானவன்; பயிற்சி முடிந்ததும் களத் தில் பாய்ந்தான்.

பாய்ச்சல் சிறியதா......? அபாரமானது. தளபதியின் நெஞ்சு மகிழச் சண்டை செய்தான்.

தமிழ் ஈழப்போரில் புதியவரலாறு பதியப்படுகிறது. ஆர். சி. எல். பின்னு தைப்பற்ற நவீன பீரங்கி எம்வசமாகியது. ஆனால் வரலாற்றின் பின்புல வரிக ளாய்......ஞானி..... வீரத்தில் எச்சத்தை விட்டுச் சென்றவன் ஞானி. அவனின் மரணம் எமக்கு வழிகாட்டும் சிவப்பு வரிகள்! ☆

பிறப்பு:
22. 12. 1970

வீரச்சாவு:
19. 03. 1992



# கப். உருத்திரா

(சிக்சர்)

( சற்குணநாதன் ஜீவரத்தினம் )

மயிலிட்டி,

காங்கேசன்துறை.

கடலோரக் காற்று சுகமாக உடலைத் தொட்டுச் செல்லும் மயிலிட்டிக் கிராமம். கைநிறைந்த காசு; வசதி நிறைந்த வீடு; கண்ணிறைந்த தாய் தந்தை; உறவுகொண்டாட சகோதரர்கள்; வளம் நிறைந்த வாழ்க்கை. இவற்றின் மத்தியில் பிறந்தவன் உருத்திரா. விளையாட்டுத் திறமையும், கல்வியின் நிறைவும் அவனது பாடசாலை வாழ்வை உயர உயரக் கொண்டு சென்றது. உயர்ந்த தோற்றம், அகன்ற மார்பு, இருண்ட நிறம், மலர்ந்த முகம், ராஜநடை ..... உருத்திரா வசீகரமானவன்தான்! எல்லாவற்றையும் மீறி உருத்திராவின் மனதில் ஓங்கி நின்றது, இந்த மண்ணின் விடுதலை.

மணலாறு வளர்த்த மைந்தர்களெல்லாம் மணலாற்றைக் காக்கத்தவறிய தில்லை. இந்திய ஓநாய்களிடமிருந்து, தலைவனையும் அவன் வளர்த்த இலட்சிய வீரர்களையும் காத்தது கானகம். இந்தக் காட்டின் ஒவ்வொரு மரத்திற்கும் தமிழீழப் போரின் கதை தெரியும். அத்தகைய மண்ணில் இயக்கத்தின் வளர்ச்சிக்காக, இமைக்க மறந்து உழைத்தவன் உருத்திரா; 'அர்ப்பணிப்பு' என்ற சொல்லுக்குப் பொருளானவன்.

உருத்திராவை நேசிக்காத போராளிகள் காட்டில் இல்லை. போராளிகளுக்கிடையில் ஏற்படும் கருத்து மோதல்களைச் சமாளித்து முடிவுக்குக் கொண்டு வருவான் உருத்திரா. இந்தப் பண்புதான், அனைத்து வீரர்களின் மனதையும்

தொட்டுநிற்கக் காரணமாயிற்று. ஓய்வு நேரங்களில் அவனைச்சுற்றி ஒரு பெரும் அணி திரண்டிருக்கும் அவனின் பாடலைக் கேட்பதற்கு. விடுதலைப் போரை வேரறுக்க நினைக்கும் ஊடுருவல் பேர்வழிகளைக் கண்டறிந்து ஒழிப்பதன்மூலம் விடுதலைக்கு உரமூட்டலாம் என்ற சிந்தனை அவனிடம் ஓங்கி நின்றதால், உளவுத்துறையில் ஆர்வமுடன் செயற்பட்டான். சிலகாலம், யாழ்ப்பாணத்தில் அமைந்திருக்கும் மணலாற்றுத் தொடர்பகத்திற்குப் பொறுப்பாக நியமிக்கப்பட்டான். பொறுப்பினை உணர்ந்துசெய்யும் திறமைக்கு உருத்திரா சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கினான். 'ஒப்பரேசன் மின்னல்' என்ற இராணுவ நடவடிக்கை மணலாற்றுக் காட்டில் நிகழ்ந்த ஒரு மாத காலமும், நித்திரையை மறந்து உழைத்தான்.

பூநகரிப் பாதையில், காயமடைந்துவரும் போராளிகளை உடனுக்குடன் மாற்றிச் சிகிச்சைக்கு அனுப்பி அவர்களைக் காத்து, பராமரிக்கும் முழுப்பொறுப்பும் உருத்திராவிடமே விடப்பட்டிருந்தது. 'மின்னல்' வெற்றியில் உருத்திராவின் பங்கு மறக்கமுடியாதது.

'ஒப்பரேசன் சிக்சர்' நடவடிக்கையின் மூன்றாம் நாள், இராணுவம் மீண்டும் ஒரு அதிரடியைச் சந்தித்தது. புயல்வேக 'கொமாண்டோ' அணியொன்றுடன் முன்னேற முயன்ற இராணுவ அணிக்குள் புகுந்தான் உருத்திரா; 'உருத்திர தாண்டவம்' நடந்தது. வியூகம் உடைந்து சிதறி ஓடினர் சிப்பாய்கள். ஆனால் உருத்திரா......? ஓயாமல் உழைத்த அந்த வீரன் ஓய்வெடுத்துக்கொண்டான். மணலாற்றுக் கானகத்தில் அவன் 'கானம்' மட்டும் ஒலிக்கிறது! ☆

பிறப்பு:
09. 05. 1971

வீரச்சாவு:
19. 03. 1992



# லெப். ஆனந்தகுமார்

(இக்சர்)

( சீனித்தம்பி கனகரட்ணம் )

பழுகாமம்,

மட்டக்களப்பு.

மட்டக்களப்பில் பழுகாமம் கிராமத்தில் இருக்கும் தாய்க்கு கடிதம் ஒன்று வரைந்தான் ஆனந்தகுமார். கடிதம் இராணுவத்தின் கையிலகப்பட்டு,அது தன் தாய்க்குத் துன்பமாகி விடக்கூடாது என்பதில் அவதானமாக இருந்து, ஒவ்வொரு வரியினையும் வரைந்தான்.

அன்புடன் அம்மா அறிவது,

நான் மணலாற்றில் சுகமாக இருக்கின்றேன். கடையொன்றில் வேலைக்குச் சேர்ந்தது உங்களுக்குத் தெரியும். கடை உழைப்பு என் சாப்பாட்டிற்கு மட்டுமே போதுமானதாகவுள்ளது. ஏதோ சமாளித்துக்கொண்டு உயிருடனிருக்கின்றேன். இப்போதைக்கு உவ்விடம் வரமுடியாமலிருக்கும்.

உங்கள் அன்புமகன்,
ஆனந்தகுமார்.

ஆனந்தகுமார் சற்று வித்தியாசமான போராளி, சிரித்துச் சிரித்து உண்மையாகவே எதையும் செய்துவிடும் சுபாவமுடையவன். கோட்டைத் தாக்குதல், மண்டைதீவுச் சண்டை, ஆனையிறவு ஆ. க. வெ. சமர், 'ஒப்பரேசன் மின்னல்' ஆகிய மிகப்பெரும் களங்கள் கண்டு துணிச்சலுடன் போராடியவன். 1991 ஆம் ஆண்டு மாவீரர் நினைவுநாளன்று துணைப்படை வீரன் லெப்.

பொன்னம்பலத்தின் பாத்திரத்தை ஏற்று - பொன்னம்பலத்தை நேரில் காணும் உணர்வை ஏற்படுத்தும் வகையில் நடித்தான். சகபோராளிகளை வியக்கவைக்கும் வகையில் தன் திறமையைக் காட்டினான். ஆற்றல்கள் இவனுள் மறைந்து கிடந்ததை இந்நாடகம் வெளிக்கொண்டுவந்தது. 'ஒப்பரேசன் சிக்சர்' (' கஜேபார' ) இவன் தியாகத்தின் நடுகல்லானது.

''மச்சான், நான் எல்லாச்சண்டைக்கும் போயிருக்கிறன்; ஆனால் ஒரு இடமும் காயப்படேல்ல; காயம் வந்தால் ஒரு வெடியில் தான் வரும்; அதுதான் என் சாவாகவுமிருக்கும்; ஆனால் சாகிறோக்கு முதல் இயக்கத்துக்கு ஒரு எல்.எம். ஜி. எடுத்துக்குடுத்துத்தான் சாகுவன்'' என்று கூறிக்கொள்வான்.

சிரித்துச் சிரித்து அவன் இதைச் சொன்னபோதெல்லாம் நாமும் சேர்ந்து சிரித்தோம். ஆனால் சொன்னதை உண்மையாக்கி, எம்மை மௌனமாக இருக்க வைத்துச் சென்றுவிட்டான். சண்டையில் எல். எம். ஜி. ஒன்றினை எடுத்துக் கொண்டு ஓடிவந்தான். எல். எம். ஜி. எம் கரங்களில் புகும்போது, அவன் மட்டும் தமிழீழத்தாயின் மடியில் புகுந்துகொண்டான்!

☆

பிறப்பு:
20. 02. 1972

வீரச்சாவு:
23. 03. 1992




# லெப். நளினி

(சிக்சர்)

( சாந்தி செல்லையா )

முள்ளியவளை,

முல்லைத்தீவு.

பூதன்வயல். முல்லைத்தீவு மாவட்டத்தில் முள்ளியவளை கிராமத்தை அண்டிய குக்கிராமம் இது. பசுமை நிறைந்த வயல் வெளிகளைக்கொண்ட இக்கிராமத்தில் பிறந்தவள் நளினி. இடம் பெயர்ந்துவரும் தமிழ் மக்களும் அவர்கள் படும் துன்பங்களும், நளினியின் குழந்தை உள்ளத்தைப் பெரிதும் பாதித்தன, என் அண்ணன் களத்தில் நிற்கின்றான் என வீராப்புடன் சொல்லிவந்தவள். தானும் ஒருநாள் விடுதலைப் புலிகளின் மகளிர் படைப்பிரிவில் தன்னை இணைத்துக்கொண்டாள். பன்னிரண்டாவது பயிற்சிப்பாசறையில் பயிற்சியை முடித்துக் கொண்ட நளினியை , எந்தநேரமும் குதூகலத்துடன் காணலாம்.

அடிக்கடி, தாய் கவளமாகப் பிரட்டித்தரும் பழஞ்சோற்றைப் பற்றிக் கூறிக்கொள்வாள். தனக்கிட்ட கடமையைச் சுறுசுறுப்பாகச் செய்துமுடித்து விட்டு சகதோழியரைச் சிரிப்பில்ஆழ்த்திவிடுவதில் பொழுதைப்போக்குவாள். கோட்டை முற்றுகை, ஆனையிறவுச் சமர், 'ஒப்பரேசன் மின்னல்' எனப் பெரும் சண்டைகளில் தமிழ்ப்பெண்ணின் வீரத்தைக் காட்டியவள். மணலாற்றுக் காட்டில் இருபதாவது பயிற்சிப் பாசறையொன்றை நடத்தத் துணைநின்ற அந்த நாளில்தான், 'ஒப்பரேசன் சிக்சர்' என்ற இராணுவ நடவடிக்கை மணலாற்றில் தொடங்கியது.

பயிற்சி முடிவுபெறாதபோதும் களத்தில் குதிக்க அவாவுற்றதன் தோழியர் பலரைக்கொண்டு, உதவிப்பணியில் ஈடுபட்டுக்கொண்டிருந்தாள். பலதிசைகளிலு

மிருந்துவந்த எண்ணற்ற எறிகணைகளில் ஒன்று இவர்களின் அருகே வீழ்ந்து வெடிக்க......நளினி......தர்சினி......சிறீமதி......ஆண்டாள்......மான்விழி,......மறக்க முடியாத சாவு.

இறப்பிலும் சிரித்த முகத்தோடு கிடந்த நளினி ...அடர்ந்த காட்டில், மரங்களின் வேரில் இருந்து, இவள் நடந்த தடங்கள் தேடும் தோழியர்......!

☆



பிறப்பு:
15. 09. 1972

வீரச்சாவு:
23. 03. 1992




# மான்விழி

(இக்சர்)

(சிவகெங்கை செல்வராசா)

அல்வாய்,

யாழ்ப்பாணம்.

ஒடுக்குமுறையிலிருந்து வெடித்துக் கிளம்பிய சுதந்திரப் பறவை மான்விழி. வீட்டின் ஒடுக்குமுறையில் 'சிவகெங்கை' என்ற நாமத்துடன் வளர்ந்தவள். நாட்டின் விடுதலைக்குத் தன்னை இணைத்தபோது மான்விழி எனப்பெயர்கொண்டாள்.

வடமராட்சியில் - அல்வாய்க்கிராமத்தில் பிறந்த மான்விழி, விடுதலைப் போரில் தன்னை இணைத்துக்கொள்ளும்வரை கூலிவேலையே செய்துவந்தாள். கல்வி வாசனையை மணந்துகொள்ள வீடும், அவள் சமூகமும்இடங் கொடுக்கவில்லை.

சுதந்திரபூமி தேடி ஓடிவந்தவள், மனதில் விரைவாக விடுதலை பெற்றுவிட்டாள். தலைவனைக் காத்த மணலாற்று மண்ணில் பயிற்சியைப் பெற்றுக் கொண்டிருக்கும் அணியில் களத்தில் புகுந்தவள்தான்... மீளாத் துயிலாகிவிட்டாள்!

☆

பிறப்பு:
04. 05. 1976

வீரச்சாவு:
23. 03. 1992




# தர்சினி

( சிக்சர் )

( வனிதா கந்தசாமி )

வாழைச்சேனை,
மட்டக்களப்பு.

கிழக்குப் புதல்வி. மட்டுநகர் வாழைச்சேனை அவளது பிறந்தகம். குடும்பத்
தில் கடைக்குட்டி; ஆனால் வறுமை அவள் வீட்டின் சொத்தாக இருந்தது.
புத்தகம் திறந்து படிக்க வாய்ப்பின்றி, சிங்களம் அவர்களை விரட்டியது. இள
மையில் மனதில் தைத்த முள் கொஞ்சமல்ல. ஏழு வயதை எட்டிப்பிடிக்க
முயன்றபோது, பெற்றோரை இழந்தாள்; இராணுவ வேட்டையில் சகோதரர்
களையும் இழந்தாள்.

கிழக்கிலிருந்து வடக்கு நோக்கிப் பயணமானாள். யாழ்ப்பாணத்தில் தன்
உறவினரொருவரால் வளர்த்தெடுக்கப்பட்டாள். வயது பதினேழைத் தொடும்
போது, இளமைக்காலக் கொடுமைகள் வரிசையாகக் கண்முன் வந்துநின்றன.

விடுதலை தேடி மகளிர்படைப் பிரிவில் இணைந்து, பயிற்சி பெறப்பயண
மானாள். வானுயர்ந்த மணலாற்றுக் காடு; எங்கள் தலைவர் வாழ்ந்த காடு.
இந்திய ஜவான்களுக்குப் புதைகுழியான காடு மகிழ்ச்சி பொங்கப் பயிற்சி தொடங்
கினாள். 'ஒப்பரேசன் சிக்சர்' -சிங்கள இராணுவ சிக்கறுப்பு முயற்சி ஆரம்பமானது.
முப்படைப்பலமும் முழுவீச்சில் இடம் பெற்றுக்கொண்டிருந்தது. உணவு, நீர்,
மருத்துவ வசதி ஆகிய உதவிப்பணிகள்எம் வீரர்களுக்குத் தேவையாகியது.

உதவி அணியில் ஒருத்தியாய் தர்சினி புறப்பட்டாள். ''பயிற்சி முடிந்ததும்
சண்டைக்குப் போகோணும்; ஆமியின்ர துவக்கை எடுத்தே அவனைச் சுடோ

ணும்" என்று கூறிக்கொள்ளும் அவளுக்கு, இது பெரும் மகிழ்ச்சியைக் கொடுத்தது. காயமடைந்த போராளிகளை மீட்டெடுக்கும் ஆபத்தான பணியில் துணிச்சலுடன் இறங்கினாள் தர்சினி. இளமையின் கொடுமைகள் அவள் மனதில் அச்சத்தை விரட்டியடித்துவிட்டிருந்தன. சாதனைகள் படைத்துச் சாகநினைத்தவளை, எதிரியின் எறிகணை ஒன்று சிதறடித்தது. இலட்சியப்பாதையில் இணைந்துவிட்ட அவள் நிழல் மட்டும் எம்மைத் தொடர்கிறது! ☆

பிறப்பு:
15. 03. 1973

வீரச்சாவு:
17. 03. 1992



## தில்லைஅழகன் - கிட்ணன்

(சிக்சர்)

(கறுப்பையா சிவகுரு)
பிள்ளையார் கோவிலடி,
பெரியதம்பனை,
மன்னார்.

உடப்பில் பிறந்து, மணலாற்றில் வளர்ந்தவன் கிட்ணன். இவனைப்பற்றி என்ன எழுதுவது......? எப்படி எழுதுவது? புரியாத பிறப்பு. சுருக்கமாகச் சில வரிகளையாவது வரலாற்றில் அவனுக்காய்ப் பதித்துக்கொள்ள வேண்டும்.

யாரென்ன சொன்னாலும் தானும் அதைத் திருப்பிச் சொல்லுவான்; யார் என்ன செய்தாலும் தானும் அதைத் திரும்பச் செய்ய முனைவான். சுருக்கமாகச் சொன்னால், குழந்தைப்பிள்ளையின் இயல்பு; வலது குறைந்த நடத்தை.

பயிற்சி முடிந்தபின்னர் தையற் தொழிலுக்கு உதவியாளனாக நியமிக்கப்பட்டான் தானும் சிங்கள இராணுவத்தினர் சிலரைச் சுட்டுவிட வேண்டுமென வேண்டிக்கொண்டான். வரலாற்றுப் பதிவுகொண்ட 'சிக்சர்' சண்டையில் பங்குபெற அவனுக்குச் சந்தர்ப்பம் கொடுக்கப்பட்டது. ஆர். சி. எல். பீரங்கியைக் கைப்பற்றிய இச்சண்டையில், பல இராணுவத்தினரைச் சுட்டுக்கொன்ற பின் அமைதியோடு உறங்கிக்கொண்டான் கிட்ணன்! ☆

பிறப்பு:
06.04.1978

வீரச்சாவு:
19.03.1992



# தமிழ்மாறன்

(சிக்சர்)

(அந்தோனிப்பிள்ளை லோறன்ஸ்)

தண்ணீரூற்று,

முள்ளியவளை.

மணலாற்றுக் கிராமங்களுள் ஒன்றுதான் குமுழமுனை. வயல்வெளிகள் சூழ்ந்த வளமான கிராமம். தண்ணிமுறிப்பு வயல்களையும், மணலாற்றுக் காட்டையும் பிரித்து ஓடிக்கொண்டிருப்பது பேராறு. பேராற்று வித்தனில் தோட்டம் செய்துகொண்டிருந்தார் தமிழ்மாறனின் தந்தை. தமிழ்மாறன் தந்தையுடன் தோட்டத்துக்கு வருவான். அருவியில் துணிந்து இறங்கிக் குளிப்பான், பக்கத்திலுள்ள பாசறைக்குச் சென்று, போராளிகளிடம் தன்னை இயக்கத்தில் சேர்க்கும்படி அடிக்கடி வேண்டுவான். சிறிய வயதாகையால், இவனது வேண்டுதலை எமது போராளிகள் ஏற்கவில்லை.

தமிழ்மாறனின் துணிவினை, அருவியில் தனித்து இறங்கிக் குளிக்கும்போது அவதானித்துக்கொண்டனர். தமிழ்மாறனின் விடாத முயற்சியினாலும், தொல்லையினாலும், அவனை இணைக்கவேண்டியதாயிற்று. தமிழ்மாறன் இளமையில் இருந்து மாடுகளுக்குப் பின்னால் ஓடியாடித் திரிந்தவன். இதனால் பயிற்சிக் காலத்தில் மிகுந்த சுறுசுறுப்புடன் செயற்பட்டான். பயிற்சி முடிந்ததும் சங்கரண்ணையின் நேரடிக் கண்காணிப்பில் நெறிப்படுத்தப்பட்டான். வயதுக்கேற்ற குழப்படியிருந்ததால், சங்கரண்ணையிடம் அடிக்கடி பேச்சுவாங்கினான். ''எடு பாக்கை'', தூக்கிக் கொண்டு வீட்ட போய்ச்சேரு'' என்று அடிக்கடி பேசும்போது, அழுதழுது 'பாக்'கைத் தூக்கிக்கொண்டு வருவான்.

ஒருநாள் பாசறை இருக்குமிடத்தைச் சுற்றி 'ஆட்டிலறி' எறிகணைகள் வந்து விழத்தொடங்கின. எல்லாரும் நிலை எடுத்துக் கிடந்தனர். செல்வீச்சு முடிந்ததும் எழுந்து எல்லாரையும் கணக்கிட்டுப் பார்த்தபோது, தமிழ்மாறனைக் காணவில்லை. நீண்டநேரம் தேடியபின், பங்கர் ஒன்றினுள் நல்ல நித்திரையில் கிடப்பது கண்டுபிடிக்கப்பட்டது. எல்லாரும் நிலையெடுக்கும் ஆரவாரத்தில் இருக்க, இவன் 'கும்பகர்ணன் படலத்தில்' இருந்தான் !

'மின்னல்' சண்டையில் ஓடி ஓடி உதவிப் பணிகளில் ஈடுபட்டான்; பொறுப்புள்ள போராளியாய்ச் செயற்பட்டான். இக்காலத்தில் இவனிடம் குழந்தைத் தனம் இருக்கவில்லை. 'சிக்சர்' நடவடிக்கையை முறியடித்த சண்டையிலும் உதவிப் பணியிலேயே இருந்தான். ஆமியைக் கொல்லவேண்டுமென்ற ஆவேசத்தில் தன்னிடமிருந்த குண்டுடன் களம் புகுந்தான். சில நிமிடந்தான். அவனது பிஞ்சு உடலைக் குண்டு துளைத்தது. தான் பிறந்த மண்ணில் மரணித்த பெருமையுடன், வரலாறானான் தமிழ்மாறன் !

☆

பிறப்பு:
05. 11. 1971

வீரச்சாவு:
19. 03. 1992



# லெப். தங்கன்

( சிக்சர் )

(நடராசா விமலநாதன் )

கோப்பாய்,

யாழ்ப்பாணம்.

ஓட்டோத் தங்கன் என்று சொன்னால்தான், போராளிகளுக்கு இவனின் ஞாபகம் வரும். இது இவனுக்குக் கொடுக்கப்பட்ட பட்டப்பெயர். பாரதூர மாக எதையும் செய்து, இப் பட்டப்பெயரை வாங்கிக்கொள்ளவில்லை. வாய் ஓயாமல் கதைத்துக்கொண்டிருப்பான். வம்பு வார்த்தைகளையல்ல; சண்டை களைப் பற்றியும், சண்டைகளை எவ்வாறு பிடிக்கவேண்டும் என்பதுபற்றியும் கடந்தகாலங்களில் கேட்ட அனுபவங்களை வைத்து விளக்கங்கொடுத்துக் கொண்டிருப்பான்; அல்லது அரசியல் விளக்கம் கொடுத்துக்கொண்டிருப்பான். ஆனால் இயக்கத்தின் ஒவ்வொரு நடைமுறையிலும் உறுதியாகவும், விசுவாச மாகவும் நடந்துகொண்டான்.

தங்கனிடம் நல்லகுணங்கள் நிறைந்திருந்தன. ஒரு வேலையினைச் சொல் லாமல் செய்பவர்கள் சிலர்; சொல்லிச் செய்பவர்கள் பலர்; சொல்லியும் செய்யாதோர் அநேகர். இவர்களுள் முதலாவது பிரிவில் உள்ளவன் தங்கன், சொல்லாமலேயே ஒருவேலையை உணர்ந்து செய்பவன் இவன்; அதுமட்டுமல்ல. பொறுப்பாளரிடம் சென்று என்னவேலைகள் இருக்கின்றன என்பதைக் கேட்டு அவற்றைச் செய்து முடிப்பான். எந்த வேலைக்கும் அவன் மறுப்புத் தெரிவித் தது கிடையாது. சக போராளிகளுக்குக் கொடுக்கப்பட்ட பணியை அவர்கள் கஷ்டப்பட்டுச்செய்துகொண்டிருந்தால், தானும் கூட நின்று உதவிசெய்து அதை

முடித்துவிடுவான். மற்றவர்களுக்கு உதவும் பண்பால், போராளிகள் மனங்களில் இடம் பிடித்தவன் தங்கன்.

தங்கனுக்கு நீண்டநாள் ஆசை ஒன்றிருந்தது. தானே வேவு பார்த்து, தன்னுடைய அணியை வழிநடத்தித் தாக்குதலொன்றை நடத்தி, நிறைய ஆயுதங்கள் அள்ளவேண்டும் என்று. ஆயுதங்களை அள்ளவேண்டும் என்ற ஆசை, அவனது மரணத்தின் கடைசிநேரத்திலும் அவன் வாயில் இருந்து வெளிப்பட்டது. 'ஒப்பரேசன் சிக்சரை' முறியடித்து, ஆர்.சி.எல். பீரங்கியைக் கைப்பற்றிய சண்டையில் காயமுற்ற தங்கனைத் தூக்கிக்கொண்டு வந்தோம். உயிர் மெல்ல மெல்ல அவனைவிட்டுப் போய்க்கொண்டிருந்தது. ''நிறைய ஆயுதங்கள் கிடக்குது, ஓடிப்போய் அள்ளுங்கோடா'' என்று அவன் வாய் முணுமுணுத்துக்கொண்டே இருந்தது. வார்த்தைகள் காற்றுப்போலப் போயின; உதடுகள் அசைந்தன. உதடுகளின் அசைவும் நின்றபோது......! ☆

பிறப்பு:
16. 06. 1972

வீரச்சாவு:
17. 03. 1992




# இளங்குன்றன்

**( சிக்சர் )**
**(அப்புலிங்கம் ஜெகதீஸ்வரன்)**
**பாரதி வீதி,**
**பத்தைமேனி,**
**அச்சுவேலி.**

**போ**ராளிகளின் நலன்காப்பதில் இளங்குன்றனுக்கு நிகர் இளங்குன்றனே தான். ஆரம்பத்தில், யாழ்ப்பாணத்தில் இயக்கத்திற்கென வந்துசேர்ந்தவன். பாசறையொன்றில் ஏழுமாதங்களுக்கு மேலாகச் சமைத்துக் கொடுத்தான். பயிற்சிபெறும் முன்னரே, திரும்பவும் வீட்டிற்குச் சென்று சிலநாட்கள் மட்டுமே நின்றிருப்பான். போராளிகளுக்குச் சமைத்துக் கொடுப்பதிலிருந்த திருப்தியை வீட்டில் அவனால் காணமுடியவில்லை; ஆதனால் மீண்டும் இணைந்துகொண்டான். இணைந்த சில நாட்களில் மணலாற்றில் பயிற்சிக்கென வந்திருந்தான்.

மணலாற்றில் இவன் பணி நீண்டநாட்கள் இருக்கவில்லை. சிலமாதங்கள் மட்டுமே நின்றான். இக்காலத்தில் மிருகங்களை உரித்து, சுத்தமாக வெட்டி, சுவையான சமையல் செய்தான். பயிற்சி நேரம் தவிர ஓய்வு நேரங்களில் சமையல் பணியில் ஈடுபடுவான். பயிற்சி முடிந்ததும், இவனுக்குக் களம் காணும் வாய்ப்பு கிடைத்தது. முட்டிமோத வந்து, தம்முடைய தலையைத் தாமே உடைத்துக்கொண்ட சிங்களப் படைகளின் 'சிக்சர்' என்ற சிக்கறுப்பில், இளங்குன்றன் தன் போர்த்திறனைக் காட்டினான்; அதில் பல சிங்களப் படையினர் சிக்கினர். ஆர். சி. எல் பீரங்கியை எம்மிடம் பறிகொடுத்துத் தப்பியோடினர், தமிழீழ விடுதலைப் போரில். ஆர். சி. எல் பீரங்கியை எதிரியிடமிருந்து பறித்த முதற் சாதனையோடு தன் பெயரைப் பொறித்துக்கொண்டான். இளங்குன்றன், குன்றாய் எம் மனதில் நிற்கின்றான் !

☆

வீரச்சாவு:
19. 03 . 1992



## 2ஆம் லெப். ஆனந்தன்

(சிக்சர்)
(சின்னத்தம்பி கணபதிப்பிள்ளை)
மேகலா வீதி,
தம்பிலுவில்,
அம்பாறை.

தம்பிலுவில் கிராமம். அம்பாறை மாவட்டத்தில், அக்கரைப்பற்று முஸ்லிம் கிராமத்தின் அண்மையில் அமைந்திருப்பது இக்கிராமம். முஸ்லிம்களின் அருகே இருப்பதால் ஏற்படக்கூடிய நெருக்குதல்கள் எப்படியிருக்குமென்பதை, சொல்லா மலேயே புரியலாம். ஆனந்தனின் இளமைக்காலம் பரிதாபத்துக்குரியது. தாய், தந்தை மடியில் துள்ளிவிளையாடும் வயதில், தந்தையினையும் தாயினையும் இழந்தான்.

சிறியதாயின் வளர்ப்பில் வளர்ந்ததால், மற்றவர்களின் கொடுமைக்குள்ளா னான். மற்றவர்கள் குட்டக்குட்ட ஆனந்தனால் அழத்தான் முடிந்ததே தவிர வேறு எதுவுமே செய்ய முடிந்ததில்லை. அந்நியனின் அடக்குமுறை ஒருபுறம் - உறவினர் ஒடுக்குமுறை மறுபுறம் அழுத்தியதால், சுதந்திர உணர்வு இருமடங் காக வெடித்துக்கொண்டது. தன் இளமைக்காலத்தில், காடு சென்று, வண்டி யில் மரம் இழுத்து ஏற்றி இறக்கும் தொழில் செய்துவந்தான். அதனால் படைப் பயிற்சி பெறுவதிலோ, சாமான்கள் தூக்குவதிலோ இவனுக்குத் துன்பம் தெரிய வில்லை. வீட்டில் செய்த வேலைகளுக்கும் காட்டில் செய்த வேலைகளுக்கு மிடையில் இவனுக்கு, வேறுபட்ட உணர்வுகள் இருந்தன. வீட்டில் அடக்கு முறையில் வேலை செய்தவன், காட்டில் ஆத்ம திருப்தியுடனும் சுதந்திரத்துட

னும் வேலைசெய்தான். சகிப்புத்தன்மையுடன் வளர்ந்ததால், கோபமென்பதே இவனுக்குத் தெரியாமலிருந்தது.

முல்லைத்தீவு இராணுவமுகாம் முற்றுகை தாக்குதல்,
மாங்குள முகாம் தகர்ப்பு,
ஆனையிறவுச் சமர்,
'ஒப்பரேசன் மின்னல்' நடவடிக்கை,
கப். காண்டீபன் மரணித்த காப்பரண் தகர்ப்பு,
கப். சுபாஸ் மரணித்த இராணுவ அணி மீதான அதிரடித் தாக்குதல்,
மேஜர் சதாத் மரணித்த காப்பரண் தகர்ப்புச் சண்டை.

என, இவன் செய்த சண்டைகளின் பட்டியல் நீண்டு செல்லும். ஒவ்வொரு சண்டைக்குச் செல்லும்போதும் ''நான் செத்தாப்பிறகு என்னை மறந்திடுவீர்களா ?'' என்று சக தோழர்களை அடிக்கடி கேட்டுக்கொள்வான். சிங்களப் படைகளிடமிருந்து ஆர். சி. எல். நவீன பீரங்கியைக் கைப்பற்றிய 'சிக்சர்' என்ற இராணுவ நடவடிக்கையை முறியடித்த சண்டைதான், ஆனந்தனை மறக்காது எம் நெஞ்சில் நிலைக்கவைத்தது. ''நான் செத்தாலும் என்னை மறக்கமாட்டீர்கள் தானே''? என்று கூறிக்கொண்டே கண்மூடிய ஆனந்தன் ..... !

☆

1990ஆம் ஆண்டிலிருந்து

1992ஆம் ஆண்டுவரை

மணலாற்றில் நடைபெற்ற,

இராணுவக்காவலரண் தகர்ப்பில்

**வித்தாகியவர்கள்!**

பிறப்பு:
08. 08. 1967

வீரச்சாவு:
01. 11. 1990




## மேஜர் சங்கர்

(முந்திரிகைக்குளச் சமர்)

(அரியரட்ணம் லைலோகிநாதன்)

தம்பலகாமம்,

திருக்கோணமலை.

"எல்லைகளை நோக்கி நாங்கள் நகராவிட்டால் எல்லைகள் எங்களை நோக்கி நகரும்." 1985 ஆம் ஆண்டு, நாடாளுமன்றத்தில் உரையாற்றும்போது இதனை, சிங்கள நாட்டின் அன்றைய ஜனாதிபதி ஜே. ஆர். ஜெயவர்த்தனா குறிப்பிட்டார். சிங்கள அரசியல் வாதிகளின் மனதில், ஆக்கிரமிப்பு வேரூன்றிவிட்டதை, இது எடுத்துக்காட்டுகிறது.

தமிழீழத்தின் எல்லைப் பிரதேசங்களில் தமிழர்கள் விரட்டியடிக்கப்படுவதும், அங்கு சிங்களக் குடும்பங்கள் இராணுவ வேலிக்குள் குடியமர்த்தப்படுவதும் இன்று சாதாரண விடயமாகிவிட்டது. இத்தகைய ஆக்கிரமிப்பில் கிழக்கு மாகாணத்தின் பெரும்பகுதியும், மணலாற்றின் பெரும்பகுதியும் விழுங்கப்பட்டுவிட்டன.

தம்பலகாமம் வயல்வளம் நிறைந்து தமிழ்மணம் கமழும் மண். அந்த மண்ணில் பிறந்தவன் சங்கர். தாய்மண் பறிபோவதைப் பார்த்திருக்க காலம் போய்விடுமெனக் கூறி தமிழீழப் போருக்கு சில நண்பர்களையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டான்.

சங்கரின் ஆரம்பகாலப் போராட்ட வாழ்வே சுவையானது. கிழக்குப் பகுதியில், புலிகளின் முதலாவது பயிற்சி முகாமில் சங்கர் இணைகின்றான். மொட்டைத்தலையுடன் வந்தவனை, பொறுப்பாளர் சந்தேகக் கண்ணுடன்

நோக்கத் தொடங்கினார். பயிற்சி முடியும் முன்னரே அவனது நம்பிக்கை பரீட்சிக்கப்பட்டது.

பாலம்போட்டாறு நிலக்கண்ணிவெடித் தாக்குதல், சங்கரின் முதற்களம். எஸ். எம். ஜி. அவனுக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. வெற்றிகரமான அத்தாக்குதலில், சங்கர் தன் துப்பாக்கிக்குப் பல சிப்பாய்களைப் பலியாக்கினான் அன்று அவனது நிதானமான சண்டையினால் எம்மில் பலர் காப்பாற்றப்பட்டனர். முதற்களத்துடன் நம்பிக்கை மிக்க போராளியாகினான் சங்கர். பாலம்போட்டாறு சண்டை முடிந்துவரும்போது பாதிவழியில் பாசப்பிணைப்பொன்று பொங்கி அணைந்தது. ஓடிக்கொண்டிருந்த உழவுஇயந்திரத்தின் பின்னே ஓடிவந்து கொண்டிருந்தாள் சங்கரின் தாய். தூரத்தே சங்கரின் தாய் ஓடி வருவதைப் பொறுப்பாளர் கண்டுகொண்டார். தாய் ஓடிவருவதை முன்னரே சங்கர் கண்டிருந்தும் மௌனமாக இருந்துவிட்டான். இயக்கநலன்களை அவன் மீறமுடியாது அல்லவா? எமக்கெல்லாம் தாய்க்குத் தாயாக இருப்பவர்கள் எம் பொறுப்பாளர்கள். காலமறிந்து, இடமறிந்து, பொருளுணர்ந்து நடப்பவர்கள் - அவ்வாறு வளர்க்கப்பட்டவர்கள். அவருக்கு சங்கரின் உள்ளம், அவனது தாயின் ஏக்கம் புரியாததா?

''சங்கர் உன்ர அம்மா ஓடிவாறா. போய் கதைச்சுப் போட்டு ஓடிவா'' என்றார். உழவு இயந்திரம் நிறுத்தப்பட்டது. சங்கர் இறங்கி ஓடினான். பாதி வழியில் இருவரும் இணைந்தனர். தாயன்பு பெருக்கெடுத்துப் பாய்ந்து அணைந்தது. பிரிந்தனர்......இது அவனது போராட்ட வாழ்வின் ஆரம்பகாலம். இழக்கில் களம்பல கண்டான்; காயங்கள் சுமந்தான்.

1987 இன் இறுதிக் காலப்பகுதி. இந்திய இராணுவத்தின் கெடுபிடிகள் ஈழமண்ணில் அதிகரித்த காலம். வெருகல் கங்கை கடலுடன் கலக்கும் மணற்பரப்பில், சகபோராளிகளுடன் அமர்ந்திருந்தான். விடிந்தும் விடியாத காலைப் பொழுது. இந்திய தளபதிகளின் கழுகுக்கண்கள் சங்கரைச்சுற்றியே சுழன்று திரிந்தன; ஆனால் மக்கள் என்ற கவசம் அவனைக்காத்து வந்தது. அன்றும்......

காலை அமைதியைக் கிழித்துக்கொண்டு துப்பாக்கிக் குண்டுகள் மழை போல் வந்தன. லிங்கய்யா குறுக்கே ஓடிவந்தார். ''ஓடுங்கோ தம்பி. வெருகல் தாய் உங்களைக் காப்பாற்றிவிடுவாள்'' என்று உரக்க கூறி, தலையில் கைகுவித்து நின்றார். சங்கரின் உடலில் ஐந்து குண்டுகள் பாய்ந்துவிட்டன. லிங்கய்யாவின் மறைவில் ஓடி வெருகல் கங்கையைக் கடந்துவிட்டான் சங்கர். குண்டுகள் உடலைப் பிய்க்க, சங்கரைக்காத்த பெருமையில் மணலில் குப்புற வீழ்ந்தார் அந்த 'இரும்புக்கவசம்'. சங்கரின் உயிர்' ஊசலாடிக்கொண்டிருந்தது. ஒரு வாரமாக எடுத்த முயற்சி கைகூடாமல் போக, வைத்தியர்கள் கையை விரித்தனர். ஆனால் லிங்கம் என்ற, எமது வைத்தியப் பிரிவைச் சேர்ந்த போராளி, அவனைக் காப்பாற்றச் சபதம் கொண்டான்.

தொடையில் பூத்துக்கிடந்த சதையை வெட்டி எறியாவிட்டால் காயத்தினை மாற்றமுடியாது. சங்கரின் உயிருக்கு விதிக்கப்பட்ட கால எல்லை இரண்டு நாட்கள்.

சங்கர் மரநிழலொன்றில் படுக்கவைக்கப்பட்டான். பூத்துக்கிடந்த சதைகளை லிங்கம் அரியத்தொடங்கினான். பார்த்துக்கொண்டு நின்ற போராளிகள்

மயங்கி வீழ்ந்தனர். சங்கர் ...? அறிவு மயங்கவில்லை; அம்மா .... என்று அழவில்லை. அவனின் கைகள் மட்டும் மரக்கிளையை இறுக இறுகப் பிடித்தன. எதை நினைத்து அவன் இப்படிக் கிடந்தான் ...? தாங்கும் சக்தியை எங்கிருந்து பெற்றான் ...? புரியாத புதிர். சங்கரின் போராட்ட வாழ்வில் இது இடைக்காலம்.

தலைவரின் வேண்டுதலில் சங்கர் மணலாற்றுக்குக் கொண்டு வரப்பட்டான். காயம் குணமாக இந்தியாவுக்கு அனுப்பப்பட்டு, சில காலத்தின் பின் மீண்டும் மணலாற்றுக்கே திரும்பினான். மணலாற்றில் பல பயிற்சிப் பாசறைகளை நடாத்தி முடித்தான். அவனது இறுதிக்காலப் பணி தொடர்ந்தது.

மணலாற்றின் எல்லைப்பிரதேச தமிழ் மக்கள் விரட்டப்பட்டதும், அங்கு சிங்களக் குடியேற்றங்கள் நிறுவப்பட்டதும் சங்கரின் மனதில் அனலாய்க் கொதித்தது. குடியேற்றத்துக்குத் துணையான சிங்களப் படை முகாம்களை அழிப்பதே ஒரு வழி என்ற முடிவுக்கு வந்தான்.

மணலாற்று மண்மீட்பில் முதல் மினிமுகாம் தகர்ப்பு. இத்தாக்குதலுக்குத்தானே பொறுப்பேற்றுச்செல்ல வேண்டுமென தளபதியுடன் முரண்டுபிடித்தான். தன்னை இத்தாக்குதலுக்குச் செல்லவிடாமல் தடுப்பது, திட்டமிட்ட செயல் எனச்சாடினான். குழந்தைபோல் அடம் பிடிக்கும் சங்கரைத் தளபதி தடுக்க விரும்பவில்லை. தாக்குதலுக்கான பொறுப்பு அவனிடம் ஒப்படைக்கப்பட்டது. மகிழ்ச்சி பொங்க தன் அணியுடன் புறப்பட்டான்.

01. 11. 92 - சங்கரின் திட்டப்படி வியூகங்கள் அமைக்கப்பட்டன. புலிப்பாய்ச்சல் தொடங்கியது. சில நிமிடங்கள் தான் ... சாம்பன்குள மினிமுகாம் எம் வசம். ஆர்.பி.ஜி., எல். எம். ஜி உட்பட பல ஆயுதங்கள் எங்கள் கரங்களில்.....!ஆனால் சங்கர் ...?மௌனமாய் மண்ணை அணைத்தபடி.....சங்கருக்குத் துணையாய் மதுவனும் முசோலினியும்... !

☆

பிறப்பு :
24. 02. 1972

வீரச்சாவு:
01. 11. 1990



## 2ஆம் லெப். மதுவன்

(முந்திரிகைக்குளச் சமர்)

(தவராசசிங்கம் விஜயசேகரன்)

மீசாலை தெற்கு,

சாவகச்சேரி.

சாவகச்சேரியில் மீசாலையை பிறந்த மண்ணாகக் கொண்டவன் மது. ஆண் சகோதரர்கள் இருவரோடு பிறந்தான். தாய்க்குக் கடைக்குட்டி. ஆனால் அண்ணன்மார் எவ்வழியோ தானும் அவ்வழி எனக் கூறி, பயிற்சி பெறப் பறந்துவிட்டான். பெற்ற பிள்ளைகளை யுத்தமுனைக்கு அனுப்பி விட்டு, வெற்றித் திலகமிடக் காத்திருந்தாள் தாய்.

நாட்கள் நகர்ந்தன. வீட்டில் வறுமை வாட்டியபோதும், அந்தத் தாய் உறுதி தளரவில்லை.

தம்பியை அழைத்துச் செல்ல அண்ணன் வந்திருந்தான். "சற்றுத் தொலைவில் ஆள் நிற்கிறது. நாளைக்கு அவரை கூட்டிச் செல்லலாம்" என தன்புதி ஊறிதி கூறினார். தம்பியைக் காணும் ஆவலோடு இரவு கழிந்தது.

காலை விடிந்தது. மது வந்தான் மாலையோடு பெட்டியிலே... தம்பியைக் காண வந்த அண்ணன்... ஏற்றிச்செல்ல வந்த மோட்டார்சைக்கிள், மீது... அவர்களைச் சுமந்துகொண்டு சாவகச்சேரி நோக்கி பயணமானது புலிகளின் வண்டி!

☆

பிறப்பு:
24. 04. 1973

வீரச்சாவு:
01. 11. 1990




# முசோலினி

( முந்திரிகைக்குளச் சமர் )

(ஆபிரகாம் தயாசிலன்)

கட்டைபறிச்சான்,

மூதூர்.

கட்டைபறிச்சான் கிராமம். கிழக்கு மாகாணத்தில் - தமிழீழப் போரின் முதல் நிலக்கண்ணி வெடியில் ஏழு சிங்களச் சிப்பாய்களைக் காவுகொண்ட கிராமம். கிழக்குப் போரின் வரலாற்றினைத் தன்னுடன் தொடக்கிய அந்த கிராமத்தில்தான் முசோலினி பிறந்தான். குறும்புத்தனம், குழந்தை உள்ளம்; ஆனால் களம் கண்ட புலி.

கிளிநொச்சியில் தமது படைமுகாமைப் பாதுகாத்துக்கொள்ள முடியாமல் தப்பியோடிய இராணுவத்தை ஓட ஓட விரட்டிய சண்டையில், மனமார எதிரிகளைச் சுட்டான். சண்டையில் தன் திறமையால், மணலாற்றிலிருந்து கோட்டை முற்றுகைக்குச் சென்ற அதிரடி 'கொமாண்டோ' அணியில் ஒருவனாய்ச் சென்றான். நேரடியாக கோட்டைச் சண்டையில் பங்கெடுக்க முடியாது போனாலும், ஊர்காவற்றுறையிலும் அராலியிலும் நின்று இராணுவ நுழைவைத் தடுக்கும் சண்டையில் ஈடுபட்டான். அந்நியப் படைகளின் அடக்குமுறையை அனுபவித்து - விடுதலையின் தேவையை உணர்ந்து - தமிழீழப் போரில் குதித்த முசோலினி, மேஜர் சங்கருக்குத் துணையாக விண்ணுலகம் புகுந்து கொண்டான்! ☆

பிறப்பு:
12. 07. 1971

வீரச்சாவு:
29. 01. 1991




# 2ஆம் லெப். முரளி

( முந்திரிகைக்குளச் சமர் )
( பாலசுப்பிரமணியம் செல்வகுமார் )
உப்புவெளி,
திருக்கோணமலை.

திருக்கோணமலையில் உப்புவெளி கிராமத்தில் பிறந்தவன் முரளி; ' ஆக்கிரமிப்பு ' என்பதை அனுபவத்தில் கண்டவன். 1985 இல் ஏற்பட்ட இனக்கலவரத்தில், சிங்களக் காடையரால் உப்புவெளிக் கிராமம் முற்றாக எரிக்கப்பட்டது. மீண்டும் புதிதாக எழுந்த தமிழர் வீடுகள், 1987இல் ஏற்பட்ட கலவரத்தில் சாம்பலாகிப்போயின. சாம்பல் மேடுகளிலேயே தன் குழந்தைப் பாதங்களைப் பதித்த முரளி, தன் உடலில் வலு ஏறும் காலம் வரை காத்திருந்தால் காலம் கடந்து விடுமெனக் கருதி, களத்தில் புகுந்து கொண்டான். முரளி களம் புகுந்த காலம் நெருக்கடி மிகுந்த காலம். இந்திய ஜவான்களின் சூரதாண்டவம் தமிழீழ மண்ணில் நிகழ்ந்துகொண்டிருந்த பொல்லாத காலமது.

மண்ணின் சுதந்திரத்தைக் காக்க முனைந்த புலிவீரர்க்கு, உணவும் நீரும் கிடைப்பதே கடினமாக இருந்தது; அதுவும் கிழக்கில் நின்ற அணிகளுக்கு, மணலாற்றிலிருந்து இரகசியப்பாதை வழியாகத்தான் இவை கொண்டு வரப்பட்டன.

முரளியின் போராட்ட வாழ்வு சுமையுடன் ஆரம்பமானது. மனித வாடை அறியாத பெரும்காடு. புலியின் உறுமலும், யானைகளின் அலற

ஓும் மட்டுமே காட்டின் அமைதியைக் கிழித்துக்கொண்டு வரும். அந்தக் காட்டுவழியில் இரவுகளை மறந்து, தலையில் சுமையுடன் நடந்ததும், கொடிகள் தடுக்கி விழுந்ததும், ஆற்றுநீரில் உடல் நடுங்கச் சென்றதும், சேற்றிலே புதைந்ததும்... ஒரு சோக வரலாறு.



பயிற்சிக்கு முந்திய இந்தப் பணியில் பெற்ற உறுதிதான் அவனின் வளர்ச்சிக்கு அத்திவாரமானது. மணலாற்று மண்ணைக் காக்க கிழக்கிலிருந்து புறப்பட்ட அணியில், முரளியும் ஒருவனாவான். மணலாற்றுக்கு வந்து அதிரடிப் பயிற்சிகளை முடித்து, சிலகாலம் தாக்குதல் அணியில் இருந்தான். சொல்லும் விடயத்தை இலகுவில் கிரகித்துவிடும் தன்மையால், இராணுவ நடவடிக்கைகளை வேவுபார்க்கும் அணியில் பணிபுரிய அமர்த்தப்பட்டான். மணலாற்றுக் காட்டில் அவன் பாதங்கள் பதியாத இடம் இருக்கமுடியாது! ☆

பிறப்பு:
30. 08. 1966

வீரச்சாவு:
25.06. 1990




# கப். அகஸ்ரின்

(செம்மலை விமானத் தாக்குதல்)
(சிங்கராசா சேகர்)
கடலேரி வீதி,
மன்னார்.

இந்தியாவில் பத்தாவது பயிற்சி முகாமில், விடுதலைப் போருக்கான பயிற்சியை முடித்துக்கொண்டான் அகஸ்ரின். அன்புக்கு அன்பு; பொல்லாதவனுக்கு நெருப்பு.

*1984* ஆம் ஆண்டிலிருந்து *89* ஆம் ஆண்டின் இறுதிக் காலம்வரை இந்திய மண்ணில் நின்று, தமிழீழப் போருக்கான ஆக்கப் பணிகளில் ஈடுபட்டான். இந்திய மண்ணில், புலிகளைக் கைதுசெய்யும் படலம் ஆரம்பமான காலத்தில், இவனது பணி முக்கியமானது துணிந்து நின்று - மிக விரைவாக - முக்கியமான பொருட்களைத் தமிழீழத்துக்கு அனுப்பியவன்.

கைதுசெய்யப்பட வேண்டியவர்களின் புகைப்படங்கள் இந்தியப் பத்திரிகைகளில் பிரசுரமானபோது, அகஸ்ரினின் படம் மிகப் பெரியளவில் போடப்பட்டிருந்தது; அகஸ்ரினைப் பிடிக்க உதவுவோர்க்கு இலட்சம் ரூபா சன்மானமும் அறிவிக்கப்பட்டிருந்தது.

*1990* ஆம் ஆண்டின் ஆரம்பப் பகுதியில், இந்திய மண்ணிலிருந்து மணலாற்றுக்கு வந்தான். மணலாற்றுக்கு வரும்போது, இந்திய இராணுவம் எம் மண்ணிலிருந்து வெளியேறிக்கொண்டிருந்தது.

மணலாற்றின் வெளியேயான நடவடிக்கைகளின் நிதிப்பொறுப்பு அவனுக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. வாகனங்களின் பொறுப்பாளனாகவும் சிறந்த வாகன ஓட்டியாகவும் இருந்தான். மழையினையும் வெயிலினையும் பாராது தன்பணியை ஆரம்பித்தான்.

வெளிவேலைத் திட்டத்தின் பயனாக, மணலாற்று மக்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பும் இவனுக்குக் கிடைத்தது. கப். சங்கிலி எந்தளவிற்கு மணலாற்றின் மக்கள் மனங்களிலும் போராளிகள் மனங்களிலும் இடம்பிடித்தானோ, அந்தளவிற்கு அகஸ்ரினும் இடம்பிடித்துக்கொண்டான். சங்கிலியைவிட, இந்திய மண்ணில் இயக்கத்தின் நலன் காக்க இவன் செய்த பணி, பலமடங்கு உயர்வானது.

ஏமாற்றுக்காரர்களுக்கும், வட்டிக்குப் பணம் கொடுப்போருக்கும், இயக்கத்தின் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டு உழைக்கலாம் என்று நினைப்பவர்களுக்கும் அகஸ்ரினைக் கண்டால் நடுக்கமெடுக்கும். சொன்னதைச் சொன்னபடி நிறைவேற்றிவிடும் மனோதிடம் இவனிடமிருந்தது.

அகஸ்ரினின் வாகனம் நாயாற்றிலிருந்து செம்மலை நோக்கிப் பயணமாகிக்கொண்டிருந்தது. இது தனது இறுதிப்பயணமாக இருக்குமென, அவன் நினைத்திருக்கமாட்டான். எங்கோ சென்ற இலங்கை விமானங்கள் நான்கு, இவன் வாகனத்தைக் கண்டுகொண்டன...... ஓடிக்கொண்டிருந்த வாகன இரைச்சலில் விமானத்தின் இரைச்சல் இவனுக்குக் கேட்கவில்லை.

காட்டில், பாசறையில், விமான ஓட்டிகளின் தொடர்புகளைப் போராளிகள் இடைமறித்துக் கேட்டனர். ஓடிக்கொண்டிருக்கும் வெள்ளை வாகனத்துக்கு அடிக்கும்படி, சிங்களத்தில் அவர்கள் பேசிக்கொண்டனர். வெள்ளை வாகனத்தில் செல்வது அகஸ்ரின் என்பதை அறிந்த எம் போராளிகள் அவனுடன் தொடர்பு கொள்ள, மரத்துக்குக் கீழே வெள்ளை வாகனம் நின்றுவிட்டது.

''அடி'' என ஒருவிமானி இன்னொரு விமானிக்குக் கட்டளை பிறப்பிப்பதும் கேட்கிறது.

ஒன்றும் செய்யமுடியாது எம்வீரர்கள் தவித்தனர்.

''அடித்துவிட்டேன்...... ' விமானியின் பதில்.

சில நிமிடங்கள் சென்றன.

அகஸ்ரினின் உடல்......!

☆

பிறப்பு:
01. 01 1975

வீரச்சாவு:
23. 06. 1991




# சோழன்

**மண்கிண்டிமலைச் சமர்**
**( தனபால சுப்பிரமணியம் ராஜராஜன் )**
**அம்புலானை,**
**கோப்பாய்.**

"ஆடிப்பாடி வேலைசெய்தால் அலுப்பிருக்காது" என்பதற்கு இலக்கணம் சோழன். வேலைநேரங்களில் சிந்தித்து - சிரிக்கவைக்கும் கதைகள் சொல்லுவான், அல்லது சுவையான பாட்டுக்கள் பாடி ஆடுவான். எவ்வளவு பாரமாக இருந்தாலும் சுமையின் கனம் தெரியாமல் தூக்கிச் செல்வான். தன்னுடன் கதைத்துச் சிரித்து மகிழாதவர்களுடன், தானும் அதிகம் பேசிக்கொள்ள மாட்டான்.

மணலாற்றுக் காட்டில், வேவுப்பிரிவில் அபாரத் துணிவுடன் செயற்பட்டவர்களில் சோழனும் ஒருவன். காட்டு வாழ்க்கை புதிதாக இருந்தாலும் கடமையில் நிதானத்தையும், ஆர்வத்தையும் காட்டினான். வேவுக்குச் சென்று வந்து ஓய்வாக இருக்கும்போது, சமையல்வேலையில் ஈடுபடுவான். சுவையாகச் சமைப்பதால், அனைத்துப் போராளிகளும் இவனின் சமையலுக்காகக் காத்திருப்பார்கள். காலநேரம் பாராது - களைப்பு அலுப்பென்று கூறாது - சாப்பாடு செய்வான். "ரீ" தயாரித்துக் கொடுப்பான்.

1991 ஆம் ஆண்டு ஆனித் திங்கள் 23 ஆம் நாள், மண்கிண்டிமலைப் பிரதேசத்திலிருந்த சிங்களப் படைமுகாமை வேவுபார்க்கச் சென்றான். காட்டுக் கரைக்குள் பதுங்கியிருந்த சிப்பாய்கள் திடீரெனத் தாக்கினர். எதிர்பாராத இத் தாக்குதலில்தான் சோழனின் வேவுப்பணி முடிவடைகின்றது. ஆனால் சோழனைச் சுட்ட சிப்பாய்கள், பயத்தின் காரணமாக, அடுத்தகணமே ஓடித் தப்பிக்கொண்டனர்! ☆

பிறப்பு:
25. 06. 1967

வீரச்சாவு:
14. 04. 1991



# கப். காண்டீபன்

( காப்பரண் தகர்ப்பு )

( சந்தியாமார்க் அல்பிரட்மார்க் )

1 ஆம் வட்டாரம்,

வங்காலை.

மன்னார் மண்ணிலிருந்து இந்தியாவுக்குப் புறப்பட்டு, இந்திய மண்ணில், பத்தாவது பயிற்சி அணியில் படைப் பயிற்சியை முடித்துக் கொண்டான். பயிற்சியை முடித்துக்கொண்டு மன்னாருக்குத் திரும்பியதும், இலங்கைப் படைக்கெதிரான தாக்குதல்களில் தன் போர்க்குணத்தைத் தொடக்கினான்.

உயர்ந்த தோற்றம், ராஜநடை, இனிய சுபாவம், மக்களோடு பழகும் போது மக்களின் உணர்வுகளை மதிக்கும் பண்பு, போராளிகளுக்கு எது விருப்பமோ அதற்கேற்பப் பழகி - அவர்களை மகிழ்வித்தல், அவர்களின் போராட்ட உணர்வுகளை வளர்த்தல் இவையெல்லாம் காண்டீபனுக்கென்று அமைந்த தனித்துவமான குணங்கள். மன்னார் மண்ணில் இருந்த காலத்தில், முள்ளிக்குளத்தில் அமைந்திருந்த ' புளொட் ' கும்பலின் பலம்மிக்க முகாமொன்று தாக்கி அழிக்கப்பட்டது. இச் சண்டைக்கு தன்னையும் அழைத்துச் செல்லாததையிட்டு அளவற்ற வேதனையடைந்தான். ஆனால், அடுத்தடுத்து பல இராணுவக் களங்கள் அவனின் போர்க்குணத்துக்கு வாய்ப்பளித்தது.

மன்னாரில் பத்தாவது பயிற்சிப் பாசறை ஒன்றினை தனித்து நின்று கட்டிவளர்த்து, அதிலிருந்த நூற்றைம்பது போராளிகளுடன் மணலாற்றுக்கு வந்தான்.

இலக்குத் தவறாது சுடும்திறன்; தோற்றத்துக்கு ஏற்ற செயல், பொறுப் புணர்ச்சி என்பவற்றால் மணலாற்றின் சிறப்புத் தளபதியின் மனதில் இடம் பிடித்தான்.

மணலாற்றில் கொக்குத்தொடுவாய் மக்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு அவனுக்குக் கிடைத்தது. மணலாற்று மனங்களில் காண்டீபன் நிலை பெறக் காரணமாய் அமைந்த இன்னுமோர் முக்கிய அம்சம் துணைப்படை.

மணலாற்றுக் கிராமங்களில் திட்டமிட்ட கட்டமைப்புள்ள மக்கள் படை யான துணைப்படை அமைப்புக்கு, பயிற்சிகளைத் தொடக்கிவைத்தவன் காண்டீபனே. காண்டீபனின் இறுதி ஊர்வலத்தில் மக்கள் கண்ணீர் பெருக நின்றதும், துணைப்படை துப்பாக்கி வேட்டுக்களைத் தீர்ந்து இராணுவ இறுதி மரியாதை செலுத்தியதும், இவனது வீரத்தின் அழியாத சுவடுகள்.

மன்னாரின் பல பகுதிகளில் இடம்பெற்ற இலங்கை இராணுவத்தின் மீதான தாக்குதல்கள்.

முயல்குத்தியில் இந்தியப் படைக்கும் அவற்றுடன் கூடிய தேசவிரோதக் கும்பலுக்கும் புதைகுழியமைத்த சண்டை.
மன்னார் நகரின் இந்திய இராணுவ மினிமுகாம் தகர்ப்பு.
மணலாற்றில் இந்திய சிக்கறுப்பு களங்கள்.
மாங்குளம் சிங்களப் படைமுகாம் தாக்குதல்.
முல்லைத்தீவு சிங்களப் படைமுகாம் மீதான தாக்குதல்.
மணலாற்றில் இலங்கைப் படையின் காப்பரண் தகர்ப்புகள்.

இவையெல்லாம் இவன் சந்தித்த சண்டைகளின் நிரல். முந்திரிகைக் குளத்துக்கும், 'சிலோன் தியேட்டர்' படைமுகாமுக்குமிடையில் அமைந் திருந்த காப்பரண் தகர்ப்பு, காண்டீபனின் இறுதிக் களமாகியது. தாக்குத லுக்கு தன் அணியைத் தயார்ப்படுத்திக்கொண்டு புறப்படும்போது, "மச்சான் அன்பண்ணன் லீவில உன்னை வீட்டுக்குப் போய்வரச் சொல்லியிருக்கிறார். இந்த முறை வருசக்கொண்டாட்டம் ஊரில ஓகோவெண்டு கழியப்போகுது" என நண்பனொருவன் கூற,

"சண்டையில திரும்பி வந்தாத்தானே மச்சான் மிச்சமெல்லாம்" எனப் பதில்கூறிச் சென்றான்.

சென்றவன் வென்றான்.

அவன் உடல் மட்டுமே திரும்பியது. இரவின் விடியலுக்குத் தன்னுயி ரைத் தியாகித்துவிட்டு, உடல் மட்டும் மன்னாருக்குப் பயணமானது! ☆

பிறப்பு:
05. 01. 1970

வீரச்சாவு:
20. 06. 1991




# கப். சுபாஸ்

(சாம்பன்குளச் சமர்)
( அன்ரனிபோல் ஹென்றி சில்வெஸ்டர் )
சிப்பித்திடல்,
தம்பலகாமம்,
திருமலை.

களம் பல கண்ட புலி. சிங்களச் சிப்பாய்களையும் இந்திய ஜவான்களையும் காட்டுப் போரில் கலங்கவைத்த 'ஜொனி மிதிவெடி'க்குரிய பெட்டிகளை ஓய்வின்றிச் செய்தவன். காட்டின் ஆரம்ப வாழ்வில், மரமரியும் பணியைத் தொடர்ச்சியாக - சலிப்பின்றிச் செய்தவன்.

சண்டைக்குச் செல்லும்போது ஆர். பி. ஜி. அவன் தோளில் ஏறும். ஆர். பி. ஜி. எறிகணைகளை இலக்குத் தவறாமல் செலுத்துவதில் சாதுரியம் மிக்கவன் சுபாஸ். மாங்குள இராணுவ முகாம் தகர்ப்பின்போதும், கிளிநொச்சி படைமுகாமிலிருந்த சிங்களப் படைகளை ஓடஓட விரட்டியபோதும், சுபாசின் ஆர். பி. ஜி. நெருப்புக் கக்கி அனுப்பிய எறிகணைகள் எதிரிக்குக் கொடுத்த அழிவு கொஞ்சமல்ல. மணலாற்றுச் சிறப்புத் தளபதியின் கருத்தில் நிலைக்குமளவிற்கு தியாகம், வேகம், விவேகம் எல்லாமே இவனிடமிருந்தது. காட்டில் அவ்வப்போது வீரர்களுக்கு அதிரடி 'கொமாண்டோ' பயிற்சிகளைக் கொடுக்கும் பொறுப்பும், இவனிடம் கொடுக்கப்பட்டிருந்தது.

யாழ். கோட்டை சண்டையில், முதன்முதலாக அணியொன்றின் பொறுப்பினை ஏற்றுச்சென்றான்; ஊர்காவற்துறையில் நடந்த கடும் சண்டையில் பலத்த காயங்களுக்குள்ளானான். தன்னை வளர்த்த தலைவனுக்கும், அவனைக் காத்த மணலாற்றுக்கும் புகழ்சேர்க்க விரும்பினான்.

சாம்பன்குள வீதியில் இராணுவ அணியொன்று அதிரடித் தாக்குதலுக்குள்ளானது; கப். சுபாஸ் இத் தாக்குதலுக்குப் பொறுப்பாளனாக இருந்தான். பத்தொன்பது சிப்பாய்கள் நாசமாகினர்; அனைத்து ஆயுதங்களும் வாரிச்சுருட்டி எடுக்கப்பட்டன.

ஆனால்..... சுபாசின் உயிரைமட்டும் காக்க முடியவில்லை. தம்பலகாமத்தில் பிறந்து வளர்ந்த சுபாஸ், மணலாற்றுக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டான். அந்த வள்ளலைத் தந்த தாயை, தாய்மண்ணுள்ளமும் மறக்க முடியாது!

☆

பிறப்பு:
03. 07. 1971

வீரச்சாவு:
20. 06. 1991



# லெப். கலீம்

(சளம்பன்குளச் சமர்)
( குமாரசிங்கம் ரவிச்சந்திரன் )
சந்தை வீதி, கிரான்,
மட்டக்களப்பு.

கலீம் அவனைப் போல் அருமையான ஆள் கிடையாது. எந்தப் போராளியைக் கேட்டாலும் இந்த வசனத்தைத்தான் முதலில் சொல்வான். அமைதியின் இருப்பிடம் கலீம். அளவளப்பாக எவருடனும் பேசிக்கொள்ள மாட்டான். வீண்பேச்சை விரும்பாத அவன் முகத்தில் எந்த நிமிடமும் மெல்லிய சிரிப்புத் தவழும். ''தாடியண்ணனிடம் தண்டனை பெறாத-பேச்சு வாங்காத-ஒரேயொரு மனிதன் இவன்தான்'' என்று சொல்லுமளவிற்கு கனிவு, பணிவு, உண்மை, உறுதி எல்லாம் இவனிடம் நிறைந்தேயிருந்தன. மட்டக்களப்பு இளைஞனுக்கு இருக்கக்கூடிய பண்புதான்!

மட்டக்களப்பு கிரானில் பிறந்த கலீம், மணலாற்றினையும் மணலாற்றைக் காத்து நின்ற ஒவ்வொரு போராளியையும் எந்தளவு நேசித்தான் என்பதை எழுதுவதற்கு, வார்த்தைகளைத் தேடிப்பிடிப்பது கடினமானது. மணலாற்றின் சிறப்புத் தளபதி தன்னருகில் வைத்தே அவனை வளர்த்தான். ஒருசமயம் கலீமை அவனது சொந்த மாவட்டத்திற்குச் செல்லும்படி அவர் பணித்தார். கலீமின் கண்கள் கலங்கிவிட்டன. ''நான் போகமாட்டன்; என்னைச் சுட்டு விழுத்தினாலும் போகமாட்டன்'' என்று விம்மி விம்மிப் பதிலளித்தான். அவன் இந்த மண்ணில் ஏன் இவ்வளவு பற்றுக்கொண்டான் என்பதை, மக்களால் புரிந்துகொள்ள முடியாது. இவன்போன்று இந்த மண்ணுக்காய் உயிர்கொடுத்த வீரர்கள் அறுநூறைத் தாண்டிவிட்டனர். வெறும் காட்டுக்காய்

இத்தனை உயிர்களும் ஏன் அர்ப்பணிக்கப்பட்டன என்பதை ஆழமாகச் சிந்தித் தால், உண்மை புலப்படும்.

தாய் தந்தையாய்-சகோதரமாய்-பாசத்தைக் கொட்டிப் போராளிகளை வளர்ப்பவர்கள்தான் எம் தளபதிகள். தான் வளர்த்த பிள்ளைக்கு ஏதேனும் நிகழப் போவதை தாயொருத்தி எப்படித் துர்க்குறிகளால் அறிந்துகொள் கிறாளோ, அதுபோன்ற வல்லமை எம் தளபதிகளுக்கும் இருந்தது.

சுபாசின் அணி தாக்குதலுக்காகச் சென்றிருந்தது. காய்ச்சலோடு படுத்திருந்த தளபதிக்கு, கலீமும் சுபாசும் சென்றபோதும் தான் செல்லாதது மனதுக்குச் சங்கடமாக இருந்தது. சண்டையின் முடிவை ஆவலோடு எதிர் பார்த்திருந்தார். சண்டை முடிந்து ஆயுதங்கள் அள்ளப்பட்டு வந்தன. ஆனால், ஆயுதங்களோடு சுபாசினதும் கலீமினதும் உடல்கள் ...! ☆

பிறப்பு:
15. 05. 1971

வீரச்சாவு:
20. 06. 1991



## 2ஆம் லெப். காமன்

(சாம்பன்குளச் சமர்)
(பொன்னையா காசிநாதன்)
கிண்ணியடி,
வாழைச்சேனை.

**வீ**ட்டில் கடைக்குட்டி காமன். கிழக்கே கடலுடன் தொடுக்கும் சிறுகடலும், மிகப்பெரும் கிரான்துறைப் பாலமும், மேற்கே வயல்வெளிகளும், வயல்வெளி களுக்கப்பால் பெருங்காடும் அமைந்திருக்க, நடுவே அழகு பொலிய விளங்குவது 'கிண்ணியடி'கிராமம். வாழைச்சேனைப் பிரதான கடைத்தெருவுக்குச் செல்ல வேண்டுமாயின், 'முறாவட' என்ற முஸ்லிம் கிராமத்தைக் கடந்தே கிண்ணியடி தமிழ் மக்கள் செல்லவேண்டியிருந்தது.

காமனின் குடும்பமும் விடுதலைப்போராட்ட வீரர்களுக்காய்த் தம்மை அர்ப்பணித்து நின்றது. இந்திய இராணுவ நெருக்கடிக் காலத்தில் எம் வீரர் களுக்கு உணவுப் பொருள்களை இரகசியமாக எடுத்துவருவதும், முக்கியமான சில பொருட்களை வாழைச்சேனைக்குச் சென்று எடுத்துவந்து கொடுப்பதும், காமனின் தாய் தந்தையரின் இரகசியப் பணியாக இருந்தன. தந்தைக்கும், தாய்க்கும் உதவியாக காமன் செயற்பட்டான். முஸ்லிம்களின் காக்காய் விழி கள் இதை எப்படியோ கண்டுவிட்டன; காமனின் வீடு இந்தியப்படைகளால் சுற்றிவளைக்கப்பட்டது.

வாகனேரி 6ஆம் கட்டை இராணுவ முகாமிற்கு, குடும்பத்தவர்கள் அனை வரும் கொண்டுசெல்லப்பட்டனர். சித்திரவதைப் படலம் ஆரம்பமானது. மூக் கில் தண்ணீர் விட்டனர்; தலைகீழாகக் கட்டித்தூக்கினர்; மிளகாய்த்தூளைக்

கண்ணில் வைத்துக் கட்டினர். ஆனால், இவர்களிடமிருந்து எந்த உண்மையை யும் எடுக்கமுடியாமல் போய்விட்டது. முயற்சி 'கைகூடாது போனபோது விடு தலை செய்யப்பட்டனர்.

வீட்டிற்கு வந்த காமன், நேராக மூதூருக்குச் சென்றான்; விடுதலைப் போருக்கான பயிற்சியை முடித்துக்கொண்டு, மணலாற்றிற்கு வந்தான். மண லாற்றில் இவனது பணி நீடிக்கவில்லை.

மணலாறு பிரதான வீதியில், இராணுவத்தை எதிர்பார்த்துக் கிடந்தது கப். சுபாசின் தலைமையில், சென்ற, புலிகளின் சிறப்பு அதிரடிப் படையணி; இவ்வணியில் காமனும் சென்றிருந்தான். இராணுவத்தினரின் அணி வந்து கொண்டிருந்தது. சற்றுநேரத்திற்கெல்லாம் சண்டை ஆரம்பமாகியது. பதி னேழுக்கு மேற்பட்ட சிப்பாய்கள் அந்த இடத்திலேயே கொல்லப்பட்டனர்; ஆயுதங்கள் சுருட்டப்பட்டன. ஆனால் காமன்......? தன் போர்க்கால வாழ் விற்கு முற்றுப்புள்ளியிட்டுக் கிடந்தான் .... !

☆

பிறப்பு:
08. 01. 1974

வீரச்சாவு
20. 06. 1991



## அண்ணாத்துரை

(சாம்பன்குளச் சமர்)
(ஐயம்பிள்ளை தவராசா)
6 ஆம் வட்டாரம், தம்பலகாமம்
திருமலை.

ஒரு தேசபக்தனின் வீட்டில் - ஒரு விடுதலை வீரனின் வீட்டில் - வறுமைதான் சொந்தமாக இருக்கும். அண்ணாத்துரையின் வீடும் இதற்கு விதிவிலக்கல்ல. காலத்திற்குக் காலம் சிங்களத்தின் அடாவடித்தனங்கள், அழகிய திருமலை நகரை அழித்துவிடுவது உண்டு. அழிக்க அழிக்க எழில் பெற்றெழுந்த அந்த மண்ணை, தன் மண்ணாக மாற்றிவிடச் சிங்கள அரசு முடிவுகட்டிவிட்ட நிலையில், அது காணப் பொறுக்காது புறப்பட்டவன் அண்ணாத்துரை.

வீடழிந்து, பிறந்த மண்ணிழந்து, சொத்துக்கள் அனைத்துமே அழிந்த பின்னும் ஒரு வீரன் தன் மண்ணைவிட இன்னொரு மண்ணை நேசித்து, அதற்காக உயிர் கொடுத்திருக்கின்றானென்றால், அந்தத் தியாகத்திற்கு என்ன பெயர் சூட்டுவது?அந்த அர்ப்பணிப்பினை எந்தச் சொல்லால் சுட்டுவது?

அமைதியான அவன் முகம், பழகும் பண்பு, இனிமையான பேச்சு - அண்ணாத்துரையுடன் பழகிய நாட்கள் குறைவாக இருந்தாலும், அந்தநாட்களை மறக்க முடியாது. மணலாற்றிலே முதன் முதல் எதிரியிடமிருந்து 81 எல். எம். ஜி. துப்பாக்கியை கைப்பற்றிய சண்டைதான், இவனது முதல் அனுபவம். அடுத்த கணம் மணலாறு பிரதான வீதியில், இராணுவ வழிமறித் தாக்குதல். ஏழு வீரர்களை இழந்து பெருமளவு ஆயுதங்களைக் கைப்பற்றிய இச் சண்டையில்தான், அண்ணாத்துரையும் காவியமானான். அவனது நெஞ்சிற்குள் வீசிய வஞ்சப்புயல் ஓயவில்லை. அவனது மண் என்று மீட்கப்படுகிறதோ, அன்றுதான் அது ஓயும். அதுவரை, ஆயிரம் ஆயிரம் மரணித்த மாவீரருடன் நின்று, தமிழீழத்தின் போரை இமைக்க மறந்து பார்த்துக்கொண்டேயிருப்பான்!

☆

வீரச்சாவு:
20.06.1991




# செல்வா

(சாம்பன்குளச் சமர்)
(பொன்னம்பலம் விஜயன்)
மாங்கேணி,
மட்டக்களப்பு.

"மட்டக்களப்பிலிருந்து மணலாற்றிற்கு வந்திருக்கிறம். இவ்வளவு தூரத்துக்கு வந்தனாங்கள் எவ்வளவு பொறுப்பாய் நடக்கோணும்" என்று தன் தோழர்களுக்கு பொறுப்புணர்ச்சி பற்றி நினைவூட்டிக்கொள்வான் செல்வா. பயிற்சிக்காலத்தில் ஒரு அணியை நிர்வகிக்கும் பொறுப்பு இவனிடமே கொடுக்கப்பட்டிருந்தது. எந்த வேலையாக இருந்தாலும், விரைவாக - அழகாக செய்து முடித்துவிடுவான். சாமான்கள் தூக்கும்போது, எந்தப் பாரமான பொருளையும் தன்னால் தூக்கிவர முடியுமெனக் கூறி, சலிப்பின்றித் தூக்கிக்கொண்டு வருவான்.

செல்வாவின் உடன்பிறந்த தம்பியும் விடுதலைப் போரில் நிற்கின்றான். அண்ணனுக்கு முந்தியே தம்பி களம் சென்றுவிட்டான். தம்பி யுத்தமுனையில் நிற்க, தான்மட்டும் எப்படி வீட்டில் நிற்பது என்ற மானப் பிரச்சினையில் களத்திற்கு வந்தான். தம்பிக்கு முன் மண்ணுக்காய் உயிர்கொடுத்துவிட வேண்டுமென்பதில் உறுதியாக இருந்தான்.

ரைபிள் கிரனேட்டை எதிரியின் நிலைகளில் இலக்குத் தவறாமல் போடுவதில், செல்வன் வல்லவன். இராணுவ வழிமறித் தாக்குதலொன்றுக்கு கப்.சுபாஸ் தலைமையின் கீழ் சென்றிருந்தான். அங்குதான் இவனின் வீரவரலாறு எழுதப்படுகிறது. எங்களுடைய மண்ணில் சுதந்திரமாக நடமாட எதிரிக்கு என்ன உரிமையுண்டு? மூச்சுக்கூட அவன் சுதந்திரமாக விடக்கூடாதென்பது, செல்வாவின் மனதில் வைரமாய்ப் பாய்ந்திருந்தது. அதனால்தான், சண்டை தொடங்கியதும் எழுந்து நின்று, எதிரி ஓடும் திசையெல்லாம் ரைபிள் கிரனேட்டுக்களைப் போட்டு அனைவரையும் அழித்துக்கொண்டிருந்தான். இராணுவ அணி முற்றாக அழிக்கப்பட்டது. ஆனால் செல்வா......? ☆

பிறப்பு:
21. 03. 1971

வீரச்சாவு:
20. 06. 1991




# 2ஆம் லெப். சின்னப்பர்

(சாம்பன்குளச்சமர்)

(கனகராசா பிரபானந்தன்)

சசிக்குமார் வீதி,
கோண்டாவில் மேற்கு,
யாழ்ப்பாணம்.

பாட்டுக்கள் பாடி தோழர்களை மகிழ்வித்த சின்னப்பர் இன்று எம்முடனில்லை. க. பொ. த. (சாதாரண) தரத்துடன் கல்வி போதுமென நினைத்து, நாட்டுப்பணிக்காக ஓடிவந்தான். மணலாற்றில் படைப் பயிற்சியை முடித்து, பாசறையொன்றில் சில மாதங்கள் நின்றான். அப்பாசறையில் இருந்த தாக்குதலணிக்கு இரண்டாவது பொறுப்பாளனாக இருக்குமளவிற்கு நேர்மை, உறுதி, கட்டுப்பாடு என்பன இவனிடமிருந்தன.

முதலில் சின்னப்பரின் துப்பாக்கி எதிரிக்குப் பதில்சொன்னது, முல்லை இராணுவ முகாம் முற்றுகைத் தாக்குதலில்தான். தாக்குதலுக்குச் செல்லும் போது, சின்னப்பரின் வாயில் ஒரு வார்த்தை அடிக்கடி வரும். " இந்தச் சண்டையில் நான் தப்பமாட்டன். என்ர உடல்கூட எடுக்கக்கூடியதாய் வருமோ என்பது சந்தேகம்தான் " என்று சொல்லிவிட்டுத்தான், சண்டைக்குச் செல்வான். இறுதியாக கப். சுபாசுடன் இராணுவ ரோந்து அணியொன்றைத் தாக்கச் சென்றபோது...

" மச்சான், சண்டையில நான் காயப்பட்டால் என்ர ரைபிளை மட்டும் எடுத்துப்போடுங்கோ. நான் இழுத்திழுத்தாவது வந்துசேர்ந்திடுவன். ஏலாட்டி செத்திடுவன் " என்று சொல்லிக் கொண்டு வந்தான். மண்மீட்கப் புறப்பட்டவனுக்கு சாவு பெரிதல்ல. மானமுள்ளவன் சின்னப்பர்; இனத்திற்காக இரத்தத்தால் காவியம் வரைந்து கொண்டான்! ☆

பிறப்பு:
27. 03. 1976

வீரச்சாவு:
16. 10 1991



# காசிம்

**(கொக்குத்தொடுவாய்ச் சமர்)**
**(அப்புத்துரை பத்மநாதன்)**
**பண்டத்தரிப்பு,**
**யாழ்ப்பாணம்.**

பிறருக்கு உதவிபுரிவதில் இன்பம் காண்பவன் காசிம். தன்னிடம் மேலதிகமாக எந்தப்பொருள் இருந்தாலும், இல்லாதவர்க்கு அதைக் கொடுத்துவிடுவான். ' பங்கர் ' அமைக்கும்போதும் சாமான்கள் தூக்கும்போதும், தனக்குரிய பங்கைச் செய்துவிட்டு மற்றவர்க்கு உதவிசெய்வதில் இறங்கிவிடுவான்.

காசிமிடம் அனைத்துப் போராளிகளும் மறக்கமுடியாத இன்னுமோர் தனித்துவமான செயற்பாடு இருந்தது. எந்தநேரமும் அரைக்காற்சட்டை அணிதல்; அவன் நீளக் காற்சட்டை அணிவதையோ, சாறம் அணிவதையோ ஒருபோதும் காணமுடியாது. இந்திய இராணுவ நெருக்கடி காலத்தில் மணலாற்றிற்கு வந்தால் உணவுப் பொருட்களையும், ஏனைய பொருட்களையும் துன்பத்தின் மத்தியில் சுமந்தவர்களில் ஒருவனாவான். சண்டை என்பதை விட, இக்காலத்தில் சகிப்புணர்வோடு பொருட்களைச் சுமந்து போராட்டம் வளரக் காரணமாயிருந்தவர்களுக்கு, விடுதலை வரலாற்றிலே பெரும்பங்குண்டு; காசிமுக்கும் இந்தப் பெருமையுண்டு.

வீட்டிலிருந்து வீணாய்ச் சாகிறதை விட, நாட்டுக்காய் அடிபட்டுச் சாவது எவ்வளவோ உயர்ந்ததென்பதை, சக போராளிகளுக்கு எந்தநேரமும் சொல்லிக்கொள்வான். மணலாற்றுக்காய் தம்மைத் தியாகித்துக்கொண்ட ஒவ்

வொரு வீரனின் சாவும் பெறுமதியானது. மணலாற்றுக் களங்கள் பலவற்றை காசிம் சந்தித்திருந்தாலும், 'மின்னல் - 02' என்ற சிங்களப் படையின் நடவடிக்கையில் கொக்குத்தொடுவாய்க்கு முன்னேறிய படையணியோடு, சிறிய எண்ணிக்கையில் மலையளவு மனத்துணிவுடன் களமாடியவர்களில் காசிமும் ஒருவன். காட்டின் முக்கியத்துவம் கருங்கல்போல் அவன் மனதில் இறுகிக் கிடந்தது. அதனாலே தான் அச்சண்டையில் நிலைதளராது, தன் உயிரைக் கூடக் கொடுத்துநின்றான்!

☆



பிறப்பு:
11. 11. 1972

வீரச்சாவு:
16. 10. 1991




# 2 ஆம் லெப். சாஸ்திரி

**(கொக்குத்தொடுவாய்ச் சமர்)**
**(அந்தோனி சந்திரதாஸ்)**
**பெரிய உப்போடை,**
**மட்டக்களப்பு.**

அதிகாலை நான்கு மணிக்கு கண்விழித்துக்கொண்டான் *சாஸ்திரி*. முதல் நாள் மாலையிலேயே, இயக்கத்துக்குப் போகப் போவதாகத் தாயிடம் சொல்லியிருந்தான். தாய் சிலகணங்கள் மகனை உற்றுநோக்கினாள். உறுதி அவன் சொல்லிலும் முகத்திலும் தெரிந்தது; அதனால், மறுப்பு வார்த்தைகள் சொல்லாமலே மௌனமாக இருந்துவிட்டாள். காலைக்கடன்களை அவசர அவசரமாக முடித்துவிட்டு, தாயிடம் தேநீர் கேட்டான். தேநீரைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டு, மகனை ஏறஇறங்கப் பார்த்தாள்.

" இதுதான் அம்மாவின்ரை கையால குடிக்கிற கடைசி ரீயாயிருக்குமெண்டு நினைக்கிறன் " என்று சொல்லும்போதே, அவனின் நாக்கு குழறியது. தாயின் முகத்தையும் தங்கையின் முகத்தையும் சில கணங்கள் மாறிமாறிப் பார்த்துவிட்டு, " போட்டு வாறனம்மா " என்றான்.

" போட்டுவாப்பா " என்று சொல்லிக்கொண்டே, தன் சேலைத்தலைப்பினால் கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

மண்ணை நேசித்த தாய்; தாய்க்கு மேலாக தாய்மண்ணை நேசித்த மகன்......

அன்று புறப்பட்டவன்தான் - சாஸ்திரி பின் தாயிடம் திரும்பவேயில்லை!

மணலாற்றில் மேஜர் வீமனின் அணியில் நீண்ட காலமிருந்தான். கோழி வளர்ப்பதில் அதிக ஆர்வம் அவனுக்கிருந்தது. அதனால், சிறிய கோழிப் பண்ணை ஒன்றை, வீமன் அவனுக்காக அமைத்துக் கொடுத்தான். கோழிப் பண்ணையை மட்டுமன்றி, பாசறையினையும் எந்த நிமிடமும் சுத்தமாக வைத் திருப்பதில் கவனமாக இருந்தான் சாஸ்திரி.

சிலகாலம் வேவுப்பணிக்காக நியமிக்கப்பட்டான். வேவுப் பணியில் ஈடுபடு வோர்க்குக் கிடைக்கும் லீவு நாட்களை, சாஸ்திரி வீணாக்குவதில்லை. லீவு கிடைக்கும்போது கோழிப்பண்ணைக்குச் சென்றுவிடுவான். சோம்பல், அலுப்பு அறியாத பிறவி. இதனால் இவனைக் '' கோழிச்சாஸ்திரி '' என்று கிண்டலாக அழைப்போம்.

தாய் தந்தையைத் துறந்து, தாய்மண் மீட்கப் புறப்பட்டு வந்த அவனின் மரணம், மனதை என்றும் அழுத்திக்கொண்டே இருக்கின்றது. 1991 ஆம் ஆண்டு ஐப்பசித் திங்கள் 16 ஆம் நாள், கொக்குத்தொடுவாய் நோக்கி முன் னேற முயன்ற இராணுவத்துடன் ஏற்பட்ட மோதலில், வீரமரணத்தைத் தழு விக்கொண்டான். சாஸ்திரி .....!

☆

பிறப்பு:
13. 02. 1975

வீரச்சாவு:
16. 10. 1991



# லெப். நீலன்

(கொக்குத்தொடுவாய்ச் சமர்)
( மயில்வாகனம் சேதுலிங்கம் )
புதுவளவு,
வல்வெட்டித்துறை.

சாஸ்திரியோடு மரணத்தைத் தழுவிக்கொண்ட ஐவரில் நீலனும் ஒருவன். பயிற்சி முடிந்ததும் மருத்துவப் பிரிவில் இணைக்கப்பட்டான். மருத்துவப் பிரிவில் ஒரிரு மாதங்கள் மட்டுமே பணிபுரிந்தான்; அதன்பின்னர் வேவுப் பிரிவுக்கு மாற்றப்பட்டான். மருத்துவத்துறையில் அனுபவமும் நிபுணத்துவமும் அதிகம் இருந்ததனால் சில மாதங்களில் மீண்டும் மருத்துவப்பிரிவுக்கு மாற்றப்பட்டான்.

மாங்குள இராணுவ முகாம் தகர்ப்பு, முல்லைத்தீவு இராணுவ முகாம் மீதான முற்றுகைத் தாக்குதல் என்பன, அவனின் முழுமையான பணிக்கு வாய்ப்புக் கொடுத்தன. ஆனால், கொக்குத்தொடுவாய் நோக்கி முன்னேற முயன்ற இராணுவத்துடன் ஏற்பட்ட மோதலில் வீரமரணத்தைத் தழுவிக் கொண்டான். பருத்தித்துறையிலிருந்து வல்வை. சிதம்பராக் கல்லூரிக்கு கல்வி பயில வந்த நீலன், வல்வை. மண்ணின் வாசனை ஊறியதால், களம்புகுந்து மண்பெருமையைக் காத்து மறைந்தான்! ☆

பிறப்பு:
26. 02. 1971

வீரச்சாவு:
24. 12. 1991




# லெப். ராதா

(கோவில்முனைச் சமர்)
(சிவஞானம் கண்ணன்)
35ஆம் கிராமம்,
மட்டக்களப்பு.

வெண்மையான நிறம்; பண்பான பேச்சு; அமைதியான முகம். மட்டக்களப்பு தன் சொந்தமண் என்பதை மறந்து, மணலாற்று மண்ணை நெஞ்சிலே சுமந்த வள்ளல். சாதனை பொறித்த சண்டையொன்றுடன் இந்த மண்ணில், தனக்கென ஒரு நிலைக்கல்லைப் பதித்துக்கொண்டான் ராதா.

போராட்ட வாழ்வில் பாதிப்பகுதியைத் தனது பிறந்த மண்ணுக்காய் முடித்து, மீதிப் பகுதியை மணலாற்றில் வரைந்தான். மட்டக்களப்பில் இலங்கைப் படையுடனான மோதல்கள், இந்தியப் படைக்கெதிரான சண்டைகள் பலவற்றைச் சந்தித்தவனாதலால், போர்க்கலையில் நல்ல அனுபவம் பெற்றிருந்தான். இவனின் அனுபவமுள்ள சண்டைத்திறனை ஆனையிறவுச் சமரிலும், 'மின்னல்' சண்டையிலும் அளவிட முடிந்தது. மணலாற்றில் மோட்டர் செல் தாக்குதல் பிரிவுக்குப் பொறுப்பாக இருந்து, சண்டைகளின் வெற்றிக்கு வழியமைத்தான்.

மணலாறு பறிபோய்விடக்கூடாதென்பதில், இறுக்கமான நிலைப்பாடு கொண்டிருந்தனர் மட்டக்களப்பின் மைந்தர்கள் பலர். அவர்களின் தியாகங்களை எழுதுவதற்கு, பேனாமுனைக்குக்கூட வலு இருக்காது; சொல்லுக்கு அடங்காதது அவர்களின் தியாகம்.

1991ஆம் ஆண்டு, மார்கழித் திங்கள் 24 ஆம் நாள், கோட்டக்கேணி-கொக்குத்தொடுவாய் வீதியில் இராணுவத்தின் வரவை எதிர்பார்த்துக் காத்துக்கிடந்தனர் எம்வீரர்கள். எப்படியாவது இச்சண்டையில், நவீன ஆயுதங்களைக் கைப்பற்றி விடவேண்டுமென்ற உணர்வு ராதாவின் மனதில் ஓங்கி நின்றது.

இராணுவ அணி நகர்ந்துகொண்டிருந்தது. ராதா தன் துப்பாக்கியை முத்தமிட்டுக்கொண்டான். தாக்குதல் எல்லைக்குள் எதிரிப் படைகள் வந்து விட்டன. அடுத்த கணம் துப்பாக்கிகள் ஏககாலத்தில் இயங்கின. சிங்கள தேசத்துப் படைகள் பல சுருண்டன; பல சிதறி ஓடின.

எம்மவர்கள் ஆயுதங்களை அள்ளிச் சுருட்டிக்கொள்ளும் பணியில் இறங்கினர். ராதாவுக்கு மகிழ்ச்சி எல்லை கடந்திருந்தது. தன்னை மறந்து செயற்பட்டான். தன் எதிர்பார்ப்பு நிறைவேறிக் கொண்டிருப்பது, அவனது மகிழ்ச்சியை எல்லை கடக்க வைத்தது. சில நிமிடங்கள்தான்... ராதாவின் உடலைத் துளைத்துச் சென்றது எதிரியின் குண்டொன்று. ராதாவின் கண்கள் மகிழ்வோடு மூடிக்கொண்டன. மணலாற்றில் முதன்முதல் மினி மினி எல். எம். ஜி. எடுத்த சண்டை என்ற வரலாற்றுப் பெருமையுடன், தன் வரலாற்று வரிகளைச் செந்நீரால் எழுதிக்கொண்டான்! ☆

பிறப்பு:
17. 03. 1971

வீரச்சாவு:
15. 10. 1991




## 2ஆம் லெப். மயிலி

(கொக்குத்தொடுவாய்ச் சமர்)
(இருஷ்ணகுமாரி ஏரம்பு)
6ஆம் கட்டை,
அளம்பில்,
கொக்குத்தொடுவாய்.

சிங்களத்தின் கொடுமைகளைக் கண்முன்னே கண்டவள் மயிலி. மணலாற்றுக் காட்டினையும், மணலாற்றுக் கடலினையும் தொட்டு நிற்கும் கருநாட்டுக்கேணி கிராமத்தில் பிறந்தவள் மயிலி. இதனால் காட்டு வளத்தையும், கடல் வளத்தையும் இவளுக்கு நன்கு தெரியும். எத்தனையோ வீரர்களைக் காத்து வளர்த்து தமிழீழத்துக்காய்க் கொடுத்த தன் பிரதேசத்தில், தான் மட்டும் வாழாவிருப்பது பொருத்தமற்றதெனக் கருதி. விடுதலையில் தன்னை இணைத்துக்கொண்டாள். தங்கைக்கு தான் குறைந்தவளல்ல என்பதை நிரூபித்த இவளின் உடன்பிறப்பும் களத்தில் குதித்தாள். 'அக்காக்கள் துப்பாக்கி பிடிக்க எனக்கு மட்டும் படிப்புத் தேவையா..? என்று சிந்தித்து, தம்பியும் போருக்குப் புறப்பட்டான். 'பெற்ற பிள்ளைகள் வீரகாவியம் படைக்கப் புறப்பட்டபோது, தான் மட்டும் இனி யாருக்காக உழைப்பது .....? நாட்டுக்காக உழைப்போம்' என்று கருதிய தந்தை, துப்பாக்கியோடு துணைப்படையில் இணைந்துகொண்டார்.

வீரப் பரம்பரையொன்று முற்றாக அழிந்துவிடக் கூடாதென்பதற்காக, சிறியவனாய் இருந்த மயிலியின் தம்பியை, தளபதி வீட்டுக்குச் செல்லும்

புடி பணித்துக்கொண்டார். மயிலிக்குப் பழக்கப்பட்ட காடு. சிறுவயதில் இருந்து விறகு முறித்த காடு. இயக்கத்தை வளர்த்த காடு. மேலாக, தான் பிறந்த மண் என்ற உணர்வு இவளிடம் இருந்தது. வானைத் தொடும் பெருமரங்கள் நிறைந்த காடு. அந்த மரங்களின் வேரில் துப்பாக்கியோடு அமர்ந்திருந்து, தன் மண் சிறிது சிறிதாக எதிரியின் கையில் பறிபோவதை எத்தனை நாட்கள் சிந்தித்திருப்பாள்...? காட்டு விலங்குகளுக்கும் கானப் பறவைகளுக்குங்கூட சுதந்திரமற்றுப் போக வீசப்பட்ட குண்டுகளைப் பற்றி எத்தனைமுறை சிந்தித்திருப்பாள்....!

தன் மண்ணை மீட்க கிழக்கிலிருந்து வந்து உயிர் கொடுத்த எண்ணற்ற வீரர்களின் நினைவுகள் நெஞ்சை அழுத்த, அவள் கண்கள் பெருக்கெடுக்க முனைந்த நாட்கள் தான் எத்தனை ?

தான் பிறந்த மண்ணின் வீரம் தன் குருதியாலும் புனிதமாக்கப்பட வேண்டும் என்று இவள் சிந்தித்திருக்க வேண்டும். கோட்டைக்கேணியில் இருந்து கொக்குத்தொடுவாய்க்கு முன்னேற முயன்ற இராணுவ அணியைத் தாக்க, எம்வீரர்கள் பதுங்கிக் கிடந்தனர். மயிலி தன் துப்பாக்கியை அடிக் கடி தடவிக் கொடுத்தபடி, தன் நிலையில் கிடந்தாள். அந்நியப் படைக ளின் கொடுமையால், அவளது மென்மை வன்மையாய் மாறி நீண்ட நாட் கள். இராணுவத்தினர் தாக்குதல் எல்லைக்குள் வந்துவிட்டனர். துப்பாக் கிகள் இயங்கின. மயிலி தன்னை மறந்து எழுந்து நின்று, எதிரியைக் குறி வைத்து வீழ்த்தத் தொடங்கினாள்; தன் மண்ணில் தனக்கொரு நிலை தேவையென்பதை மறந்துவிட்டாள். ஆனால். தமிழ் அன்னை அவளை மறக்கவில்லை. இருகைகளாலும் அவளை அள்ளி அணைத்துக்கொண்டாள். மண்ணின் மடியில் குருதியால் குளித்துக் கிடந்தாள் மயிலி. அவள் குருதி காயவில்லை, அதனால்தான் போர்க்களம் இன்னும் ஓயவில்லை...! ☆

பிறப்பு:
06. 05. 1967

வீரச்சாவு:
05. 03. 1992



# மேஜர் சதாத் - வீமன்

(மண்கிண்டிமலைச் சமர்)
(அமிர்தநாதன் அருளப்பு)
அடம்பன்,
மன்னார்.

கா லும் கையும் வலித்துக்கொண்டிருந்தது; கண்கள் மெல்லச் செருகியது. ''என்ர தங்கச்சியை கூட்டிக்கொண்டு வாருங்கோ..... தங்கச்சியை கூட்டிக் கொண்டு வாருங்கோ .... கடைசியாயாவது அவளைப் பார்த்திட்டு சாகோ ணும்'' என்று, சதாத்தின் அடித்தொண்டையிலிருந்து மெதுவாக வார்த்தை கள் வெளிவந்தன. இவனது வைரநெஞ்சுக்குள் தங்கை நிறைந்து நின்றாளா...?

சதாத்துக்கு இப்போது அடிக்கடி இந்த வலி ஏற்படுவதுண்டு. ஆ.க.வெ. சமரில், கட்டைக்காட்டுச் சண்டையிலே, தலையில் செல் துண்டொன்று பாய்ந் திருந்தது. காயம் சீழ்ப்பிடித்து விட்டதால் இவ்வலி ஏற்பட்டிருப்பதாக நினைத் தோம். காயம் ஆறிவிட்டபின்னும், வலிப்பு அவனை விட்டுப் பிரியவில்லை; சிலசமயங்களில் அது ஏற்படும்.

விசேட தளபதி, சதாத்தினை மன்னாருக்குப் போகும்படி சொன்னபோது, ''நான் வளர்ந்தது மணலாற்றில, என்னை வளர்த்ததும் மணலாறுதான். என்னை மனிதனாக்கிய மண்ணிலதான் நான் சாகோணும்'' என்று கூறி மறுத்து விட்டான். தன் தங்கையை - தாயை - நெஞ்சின் ஆழத்தில் சுமந்திருந்தாலும், அவர்களுக்கு மேலாக மணலாற்றை நேசித்தான்.

'இயக்கத்தில் தன் கடமைகளைச் சரிவரச் செய்தவன், கட்டுப்பாட்டுடன் பெடியளை வளர்த்தவன், ஒவ்வொரு போராளியின் நலனிலும் கருத்தாக இருந்தவன்' என்று எந்தப் போராளியிடம் கேட்டாலும் சொல்லுவான். போராளிகளுக்கு உணவு கொடுப்பதில், கறிக்காக மிருகங்களைச் சுட்டுக்கொடுப்பதில் சதாத் ஒவ்வொரு நாளுமே கவனமாக இருந்தான். சதாத்தின் மரணம் அனைத்துப் போராளிகளின் மனத்தையும் பெரிதும் பாதித்திருந்தது.

''கொப்பேக்கடுவ வாறான். கொப்பேக்கடுவ மாதிரி நடக்கிறான்'' என்று, விசேட தளபதி இவனைக் கிண்டல் செய்யாத நாளே கிடையாது. இத்தகைய மாபெரும் வீரம் நிறைந்த சதாத் கண்ட களங்கள் பல.

சிலாபத்துறை இராணுவமுகாம் தகர்ப்பு.

மாங்குளம் இராணுவமுகாம் தகர்ப்பு.

கோட்டைச் சண்டை.

கிளிநொச்சி படைமுகாம் விரட்டியடிப்பு.

வவுனியா தாண்டிக்குளம் சண்டை(வன்னி விக்ரம - 01)

ஆ. க. வெ. கட்டைக்காட்டுச் சண்டை.

கப். சுபாஸ் தலைமையில் நடந்த மணலாறு சிங்களப்படைகளின் காவலரண் தகர்ப்பு

என அவை விரிந்து செல்லும்.

மூன்று தடவைகள் விழுப்புண் சுமந்துகொண்டவன் சதாத். 1992 ஆம் ஆண்டு பங்குனித்திங்கள் மூன்றாம் நாள், சிங்களப்படையின் காப்பரண்களைத் தகர்க்கச் சென்றான். தாக்குதலுக்கான பொறுப்பு அவனிடமே கொடுக்கப்பட்டது.

''மச்சான் இந்தச் சண்டையில் டொங்கானோட வருவன்; இல்லாட்டி உயிரோட திரும்பமாட்டன் பார்'' என்று நண்பர்களுக்குக் கூறிவிட்டுச்சென்றான். டொங்கான் வந்தது; டொங்கானுடன் அவன் உடல் மட்டுமே வந்தது. சொன்னதை நடத்தி முடித்த வீரர்களைத்தான் மணலாறு வளர்த்திருந்தது. தலைவனைக்காத்து, தலைவனால் மண்ணைக் காக்க வளர்க்கப்பட்ட வளர்ப்புக்களல்லவா?

சதாத்தின் துருதுருத்த விழிகள் மூடிக்கிடந்ததை இயற்கையும் பொறுக்காது, கண்ணீரை மழையாய்க் கொட்டியது!

☆

பிறப்பு:
02. 08. 1967

வீரச்சாவு
25. 04. 1992



# கப். சிவராஜ்

(கொக்குத்தொடுவாய்ச் சமர்)
(அல்பேட் அருள்சீலன்)
பாலையடி, புதுக்குளம்,
வட்டக்கண்டல்,
மன்னார்.

சிவராஜ் என்றதும் கண்ணில் தெரிவது வாகனங்கள்தான். பார்த்தவர்களுக்கு அவன் ஒரு வாகனச் சாரதி. அவனது உள்ளத்து உணர்வுகள், அர்ப்பணிப்புக்கள் சொல்லில் வடிக்கமுடியாதவை.

தாக்குதல் பிரிவில் இருப்பவனுக்கு சண்டைக்காலம் முடிந்ததும் ஓய்விருக்கும்; வாகனச் சாரதிக்கு ஓய்வு எப்பொழுதுமே கிடைக்காது. கண்மூடிவிட முடியாது. நெருக்கடியான சண்டைக் காலங்களில், அவன் கரங்களில் எத்தனை போராளிகளின் உயிர் தங்கியிருக்கும்! கண்மூடினால் அனைவருமே மரணம்..... சிவராஜ் வாழ்விலும் தியாகி; இறப்பிலும் தியாகி!

எதிரியை அழிக்கப்புறப்பட்டு வந்த தன்னைச் சாரதியாகவே வைத்திருப்பது, சிவராஜனுக்குப் பெரும் வேதனையாகவும் சோதனையாகவும் இருந்தது. தன் குறையை அடிக்கடி சிறப்புத் தளபதியிடம் கூறிக்கொண்டான். ஆனால் அவரோ, தனது நம்பிக்கை மிக்க சாரதியாகவே அவனை வைத்திருக்க விரும்பினார்.

தற்செயலாக ஒருநாள் சண்டையொன்றுக்குச் செல்ல, அவனுக்கு அனுமதி கிடைத்தது. சிவராஜனின் மகிழ்ச்சி எல்லை கடந்தது; ஆனால் அது

நீடிக்கவில்லை. திடீரென வெடி விபத்தொன்றில் காயப்பட்ட போராளியைக் கொண்டுசெல்லவேண்டிய அவசியம் ஏற்பட்டது. சிவராஜனின் முகம் கோணிப் போனது. போராளியை ஏற்றிக்கொண்டு அவனின் வாகனம் கிளம்பியது. அடுத்தநாள் சண்டைக்குச் செல்வதற்கான அணிகள் பிரிக்கப்பட்டுக் கொண்டிருக்கும்போது, சிவராஜன் சென்ற வாகனம் புழுதிகிளப்பி வந்து நின்றது. ''என்னடாப்பா, காயப்பட்டவனை யாழ்ப்பாணம் கொண்டுபோய் விட்டிட்டு வந்தனியோ அல்லது இடேல எங்கேயும் தள்ளி விழுத்திப்போட்டு வாறியோ'' என்று ஆச்சரியமாக - கிண்டலாகவே கேட்டார் தளபதி. சக போராளிகள் சிரித்தனர். இரவோடிரவாக யாழ். சென்று வந்திருந்தான் சிவராஜ். சண்டைக்குச் செல்ல அத்தனை ஆசை அவனுக்கு...!

''இரவிரவாய் நித்திரை முழிச்சுப் போய் வந்திருக்கிறாய். இந்தச் சண்டைக்கு போகவேண்டாம். அடுத்த சண்டைக்கு கட்டாயம் உன்னை விடுவன்'' என்று தளபதி கூற, சிவராஜ் நின்ற கோலம். அவன் முகத்தில் தெரிந்த சோகம் ..... இன்னும் அப்படியே கண்ணில் நிற்கிறது.

''உன்ர நன்மைக்குத்தானடாப்பா சொல்லுறன்'' என்று கூறி, அன்பண்ணன் அவனை ஆறுதற்படுத்தியது...!

'மின்னல்' நடவடிக்கையின்போது கப். சங்கிலியும் சிவராஜனும், குண்டு வீச்சு விமானங்களையும், பீரங்கி பொருத்தப்பட்ட கெலிக்கொப்ரர்களையும் கடற்படைப் பீரங்கிப் படகுகளையும் ஏமாற்றி, காயமடைந்த எம் போராளிகளைக் கொண்டு சென்று காத்த அந்த நாட்கள்......

தளபதி ஒருநாள் சிவராஜனைக் கூப்பிட்டு, அவனுக்கு பல போராளிகளையும் கொடுத்தார். தன்னை எங்கோ சண்டைக்கு அனுப்பப்போகிறார் என நினைத்து மகிழ்ந்த சிவராஜனுக்கு, ஏமாற்றமே கிடைத்தது.

''எல்லோரையும் கூட்டிக்கொண்டு போய் பாதைக்கு நன்றாய் கிரவல் இட்டு திருத்து'' என்றார்.

கொடுக்கப்பட்ட பணியை மிக விரைவாக - நேர்த்தியாகச் செய்து முடித்தான். திருத்தவேலை முடிந்தகையுடன் 'மின்னலும்' ஆரம்பமாகியது. அப்போதுதான் தளபதி எவ்வளவு முக்கியமான பொறுப்புமிக்க பணியைத் தன்னிடம் தந்தாரென்பதை, அவன் புரிந்துகொண்டான்.

''அன்பண்ணோய், நான் எவ்வளவு நாளாய் நித்திர முழிச்சு வேலை செய்யிறன். என்னை ஒருநாளாவது சண்டைக்கு விடுங்கோவன்'' என்று இரந்து விண்ணப்பித்தான். அவனது ஆசையை நிறைவுசெய்யக் கருதி, சண்டையொன்றுக்கு ஒரு அணியையும் கொடுத்து அனுப்பினார். சிவராஜன் கொடுத்துவைக்காதவன். தாக்குவதற்குச் சென்ற காவலரண்களில் அன்று இராணுவத்தைக் காணாமல், ஏமாற்றத்தோடு திரும்பினான். 'மின்னலின்' பின், மன்னாருக்கு வீட்டுக்குச் சென்று வரும்படி அனுப்பினார் தளபதி.

தந்தையின் மறைவுக்குப் பின், குழந்தையிலிருந்தே தந்தையாய் இருந்து இவனை வளர்த்த அண்ணன், ''தம்பி கடன்தொல்லை கூடிக்கொண்டு வந்திட்டுது, இயக்கத்திட்ட கேட்டிட்டு வாவன்'' என்று சொல்ல......

''அண்ணோய், நீங்கள் வீட்டுக்காய் ரத்தம் சிந்திறியள்; நான் நாட்டுக்காய் ரத்தம் சிந்திறன். ரெண்டுபேரும் ஒரே பணிதான் செய்யிறம்'' என்று பதில் கூறினான். சிலநாட்களின் பின்னர் திரும்பினான்.

காலங்கள் ஓடின. அந்த நாளும் வந்தது. கொக்குத்தொடுவாயில் ரோந்துப் பணியில் ஈடுபட்டிருந்தபோது, இராணுவத்துடன் எதிர்பாராமல் கடும்மோதல் தொடங்கியது. சண்டை சில நிமிடங்கள்தான். உதவி அணி வருவதற்கிடையில் சிவராஜ்..ரத்தன்...கர்ணன்...தயாளன்...அசுவந்தன் என ஒன்றன் பின் ஒன்றாய்... கெலியையும், பொம்மரையும் ஏமாற்றிய சிவராஜ் தண்டவாளம், சிலிப்பர்கட்டை என மாறி மாறி நித்திரை விழித்து ஏற்றிய சிவராஜ்... எண்ணற்ற போராளிகளின் உயிர் காத்த உத்தமன் சிவராஜ்... சிறப்புத் தளபதியின் நம்பிக்கைமிக்க சாரதி சிவராஜ்...... எதைச் சொல்வது, எதை எழுதுவது .....?

☆

பிறப்பு:
14.04.1971

வீரச்சாவு:
25.04.1992



# கப். வேங்கையன்-ரத்தன்

( கொக்குத்தொடுவாய்ச் சமர் )

( மார்க்கண்டு ஜெகநாதன் )

சின்னவத்தை,

மட்டக்களப்பு.

ரத்தத்தால் எழுதவேண்டிய வரிகள் இவன் வரலாறு. ரத்தக் களங்கள் கண்ட சினங்கொண்ட புலியிவன். தமிழீழப் போரில் இவனுக்கு ஒரு வரலாறே யுண்டு. 'பெரியவன்' என்று பெற்றோராலும் நண்பர்களாலும் கிராமத்தில் அழைக்கப்பட்டவன், எப்பொழுது ரத்தனாக மாறினான்? எப்பொழுது வேங் கையனாக மாறினான்?

மட்டக்களப்பில் நெடியவெட்டை கிராமம், பின்தங்கிய சிறிய தமிழ்க் கிராமம். அதன் அருகே சின்னவத்த என்ற புதிய சிங்களக் கிராமமொன்று முளைத்தது. சின்னவத்த சிங்களவர்க்கு ரத்தன் என்ற சிங்களக் காடையன் தான் தலைவன். இடையிடையே, நெடியவெட்டை கிராம மக்கள் மீது அடா வடித்தனங்கள்...... தட்டிக்கேட்க ஆளில்லை. கேட்பவர் சிங்களப் படைமுகா மில் சித்திரவதை... தலை துண்டிப்பு. பெரியவன் இதற்கு வழி கண்டான்.

விடுதலைப் புலிவீரனொருவனின் துணை நாடினான். ரத்தனுக்குக் குறி வைக்கும் படலம் ஆரம்பமானது. பலநாள் முயன்று ஒரு நாள் கைகூடியது. புலியின் பாய்ச்சலுக்கு சிங்கள ரத்தன் பலியானான். நெடியவெட்டை கிராமம் ஆரவாரித்து மகிழ்ந்தது. பெரியவன் பெயர் மாறியது; கிராம மக்கள் பெரிய வனை 'ரத்தனென்றே' அழைக்கத் தொடங்கினர்.

ரத்தனை இராணுவம் தேடும் படலம் ஆரம்பமானது. சில மாதங்களின் பின் இந்திய ஜவான்களின் வாரோட்டம் ஆரம்பமானது. தேசவிரோதக் கும்பல்கள் நெருப்பெடுத்துக் கொடுத்தனர். தேசத்துரோகிகளைக் காட்டிக் கொடுப்பதும், மட்டக்களப்பு நகருக்குள் சென்று தகவல் பெற்று வருவதும் ரத்தனின் தீவிர பணியாகியது. காட்டில் மறைந்து வாழ்ந்த புலிகளுக்கு உணவுப் பொருட்களைச் சுமந்துவந்து கொடுத்துக்கொண்டிருந்தான்.

ரத்தன் 'வேங்கையாய்' களத்தில் நின்று செய்த சாதனைகளை விட, ரத்தனாய் நின்று நெருக்கடியான காலத்தில் செய்த உதவிகள் மலையளவு உயர்ந்தவை. தேசவிரோதக் கும்பல்களின் முகாங்களை அடியோடு அழிக்க, இவனது தகவல்களே பெரிதும் உதவின. குழந்தை முதல் பெரியோர்வரை, '' ரத்தன் மாமா '' என வாயார அழைத்தனர்.

இந்திய ஜவான்களும் தேசவிரோதிகளும் ரத்தனுக்கு வலைவிரிக்கத் தொடங்கியபோது, 1989 இல், தன்னை முழுநேரப் புலியாய் மாற்றிக்கொண்டான். லெப். கேணல் றீகனின் அணியில் சில மாதங்கள் - தாக்குதல்களில் பங்குகொண்டு, தேசவிரோதிகளின் கும்பல் ஒன்றை முற்றாக அழித்து. ஆயுதங்களையும் அள்ளி ஏற்றிக்கொண்டார்கள். 'ஏ. கே.' ரக துப்பாக்கி ஒன்றுடன் தேசவிரோதக் கும்பலின் முகாமுக்குள் பாய்ந்தவன், அவர்களிடமிருந்து 'பிறண் எல். எம். ஜி.' துப்பாக்கியைப் பறித்து, அதனாலேயே அவர்களைத் துரத்திச் சுட்டான். சண்டை முடிந்து வரும்போது, '' தங்கட ஆயுதங்களாலேயே தாங்கள் அடிவாங்கிக் கொண்டு ஓடுறாங்கள் மச்சான் '' என்று சொல்லிச் சொல்லிச் சிரித்தான். இதன் பின்னர், இவனின் மணலாற்றுப் பயணம் ஆரம்பமாகியது.

மணலாற்றுக் காட்டின் வேங்கையாய் மேஜர் சங்கர் மரணித்த சாம்பன்குள மினிமுகாம் தகர்ப்பில், ஆர். பி. ஜி. உதவியாளனாகச் சென்றான். சண்டையின் பின் ஆர். பி. ஜி. அவன் தோளுக்கே ஏறியது. ரத்தன் வைத்த குறி தப்பாது; இதனால், மணலாற்றுச் சிறப்புத் தளபதியின் விருப்பத்துக்குரியவனானான்.

மணலாறு கண்ட களமெல்லாம் ரத்தனின் ஆர். பி. ஜி. முழங்கியது. ஆனையிறவுச் சமரில் ஏ. கே. ரக துப்பாக்கியுடன் நின்றவனைத் தளபதி விரைந்து அழைத்தார்.

'' எதிரியின்ர 50 கலிபர் துப்பாக்கியொண்டு கடுந்தொல்லை குடுக்கிற மாதிரிக் கிடக்குது. ஆர். பி. ஜியைத் தூக்கிக் கொண்டந்து ஒண்டு குடு '' என்றார்.

ரத்தன் ஆர். பி. ஜியுடன் ஓடிவந்தான். சிலகணங்கள் தான்... எதிரியின் கலிபர் சிதறியது. விடுதலைப் போரில் சாதனைபுரிந்த ரத்தன், கொக்குத்தொடுவாய் மண்ணில் விதையாகிக்கொண்டான்! ☆

பிறப்பு :
14.09.1974

வீரச்சாவு :
25.04.1992



# லெப். கர்ணன்

( கொக்குத்தொடுவாய்ச் சமர் )
( தவராசசீலன் பிரதீபன் )
இருதயபுரம்,
**மட்டக்களப்பு.**

பாரதத்தில் தன்னை வளர்த்த துரியோதனனுக்காய் தன் உயிர்கொடுத்தவன் கர்ணன். இங்கே தன்னையும் விடுதலைப் போரையும் வளர்த்த மணலாற்றுக்காய் உயிர் தந்தவன், இருதயபுரக் கர்ணன்.

சிவராஜ், சங்கிலி, கர்ணன் மூவரும் சாரதிகள்; மூவரும் இணைபிரியாத் தோழர்கள். பாரதப் போரில் கண்ணன் சாரதியாய் இருந்து எப்படி யுத்தத்தை முறியடித்தானோ, அதேபோன்று மணலாற்றில் எதிரியின் தோல்விக்கு இச் சாரதிகளின் உழைப்பு உன்னதமானது.

புலிக்குப் ,பிறந்தது பூனையாகுமா......? கர்ணனின் தந்தையும் ஒரு சிறந்த வாகனச் சாரதி.

அமைதியான முகம், அளவான பேச்சு, அகன்ற மார்பு, உயர்ந்த தோற்றம், நிதானமான வாகன ஓட்டம் - இவைதான், கர்ணனை எல்லார் மனதிலும் பதியவைத்தன. போருக்குப் புறப்பட்ட நாளிலிருந்து வீட்டுச் சிந்தனையை மறந்தவன். யுத்தமுனைக்கு வந்துவிட்டால் பாசத்தைச் சிந்திக்கக் கூடாது என்பதில் இறுக்கமாக இருந்தவன்.

மணலாற்றுக்கு பயிற்சிக்காக வந்த காலத்தில், திருக்கோணமலையில் காட்டுப்பாதையொன்றில் சிலர், உழவு இயந்திரமொன்று புதைந்து விட்டதில் எடுக்கமுடியாது நின்றனர். வந்த வழியில் அவர்களுக்கு உதவி செய்து கொடுத்துவிட்டுப் போவது நல்லது எனக் கருதினான். அவர்களிடம் சென்று, '' விலகுங்கோ நானெடுத்துத் தாறன் '' என்றான். கர்ணனின் தோற்றத்தைக் கண்டு அவர்கள் நகைத்தனர்; ஆனால், திக்கற்று நின்றதால் அவனுக்கும் இடங்கொடுத்தனர். சில நிமிடந்தான்...... உழவு இயந்திரம் வெளியே வந்தது. நகைத்தவர்கள் விறைத்து நின்றனர்; நன்றி நவின்றனர். கர்ணன் அவர்களைப் பார்த்து ஏளனமாகச் சிரித்துவிட்டு வந்தான்.

கர்ணனின் உள்ளக்கிடக்கையை அறிந்தவர்கள் சிவராஜனும் சங்கிலியும்; ஆனால் அவர்களும் இன்றில்லை.

' மின்னல் ' சண்டையில் காயமடைந்த போராளி ஒருவனை ஏற்றிச் செல்லும்போது, '' ரத்தத்திலே சிவந்த மண்ணே முத்தம் கொடுத்தேன் வா, மொத்தத்திலே எனை உனக்கே தத்துக் கொடுத்தேன் வா '' என்று பாடிக் கொண்டே வந்து பாதிவழியில் மரணித்துப் போனவனின் தியாகத்தைப் பற்றி, அடிக்கடி சொல்லுவான்.

கர்ணன் தன் தினக்குறிப்பேட்டில் எழுதிவைத்த வரிகள் மறக்கமுடியாதவை; நட்பின் ஆழத்தை, தியாகத்தின் உயர்வை அவைகாட்டி நிற்கின்றன.

'' நான் இறந்தால் புதிய வரி உடுப்புப் போட்டு, சங்கிலிக்குப் பக்கத்தில என்னைப் புதைக்கோணும் ''

ஒரு சாதாரண மனிதனின் ஆசைக்கும், கர்ணனின் ஆசைக்கும் எத்துணை வேறுபாடு .....? தியாகத்தால் மலையளவு உயர்ந்துவிட்டான். கர்ணா ..! நிறைவேற்ற முடியாது போன உன் ஆசையை நினைத்து நாம் துடிப்பது உனக்குப் புரியுமென்றே நினைக்கிறோம். சங்கிலியைப் பிரிந்தாலும் சிவராஜனுடன் இணைந்துவிட்டாயே......!

☆

பிறப்பு :
30. 08. 1969

வீரச்சாவு:
25. 04. 1992



# லெப். தயான்

(கொக்குத்தொடுவாய்ச் சமர்)
(தியாகராசா தயாபரன்)
திருமலை வீதி,
மட்டக்களப்பு.

தன்னைத் தேடிவந்து, பார்க்க முடியாது மட்டக்களப்புக்குத் திரும்பிய தாயின் நினைவு தயானின் மரணம் வரை... ''மட்டக்களப்பிலிருந்து ஓடிவந்த அம்மாவைப் பார்க்காத பாவி'' என்று சொல்லிச் சொல்லியே மரணித்தவன்.

1989 ஆம் ஆண்டில் மட்டக்களப்பிலேயே பயிற்சியை முடித்து, தேசத் துரோகிகளைக் கழுவித்துடைக்கும் சண்டைகளில் ஈடுபட்டான். தேசத்துரோகிகளின் கொடுமை தாங்காமல் போர்முனைக்கு வந்தான். மனமார அவர்களைச் சுட்டுப்பொசுக்கினான். அந்த நிறைவோடு மணலாற்றுக்கு வந்தான். தலைவர் இருக்கும் இடத்துக்கு வந்ததனால், புதிய தெம்பு. 'கொமாண்டோ' அதிரடிப் பயிற்சிகளை முடித்தான்.

தயானிடம் வாசிக்கும் திறமையிருந்தது. பத்திரிகைகள், சஞ்சிகைகள் வந்ததும், பாசறையில் அவனைச் சுற்றி ஒரு கூட்டம் மொய்க்கும்; நடுவே இருந்து செய்திகளை உரக்க வாசிப்பான்.

ஓய்வு நேரம் கிடைத்தால், செத்துமடிந்த போராளிகளைப் பற்றி-அவர்களின் ஆசைகளைப்பற்றி-அவர்களின் வீட்டு நிலைமைகளைப் பற்றியெல்லாம் மணித்தியாலக் கணக்கில் சொல்லிக் கொண்டிருப்பான்.

'மின்னல்' சண்டை நடந்துகொண்டிருக்கும் காலத்தில் மட்டக்களப்பிலிருந்து இவனின் தாய் வந்திருந்தாள். தயானுடைய சொந்தப் பெயர் எந்தப் போராளிக்கும் தெரியாது; தாய்க்கும் மகனின் இயக்கப் பெயர் தெரியாது. இந்தக் குழப்பத்தில் மகனைப் பார்க்காமல் திரும்பிவிட்டாள் அவனின் தாய். அதன்பின் இறுதிவரை அவனைப் பார்க்கவேயில்லை. 'மின்னலில்' காலில் காயமுற்றுச் சிலகாலம் சிகிச்சை பெற்றான்; களங்கள் சென்றான். ஈற்றில், நிறைவேறாத ஏக்கத்துடனேயே சிவராஜ், ரத்தன், கர்ணனுடன் தானும்...! ☆



பிறப்பு :
29. 11. 1969

வீரச்சாவு:
25. 04. 1992



## 2ஆம் லெப். அசுந்தன்

( கொக்குத்தொடுவாய்ச் சமர் )

( தங்கராசா மன்மதராஜ் )

சின்னஊத்தை,

மட்டக்களப்பு.

தயானின் சொந்த மைத்துனன் அசுந்தன். இயக்கத்துக்கு இருவரும் இணைந்தே வந்தனர்; மணலாற்றுக்கும் இணைத்தே வந்தனர்; பயிற்சிப் பாசறையிலும் பிரிவில்லை; சண்டைக்களங்களிலும் ஒன்றாகவே நின்றனர். மரணத்திலும் இணைபிரியாமலே சென்றனர். நட்பில் வள்ளுவன் 'குறளுக்கு இலக்கணமானவர்கள். ''டேய் எங்க இருந்திடா வந்தனீங்கள்? வெள்ளைக் காரர் மாதிரி நிறமாயிருக்கிறாங்கள், ஆளோட ஆள் ஒட்டிக்கொண்டிருக்கி றாங்கள்'' என்று சிறப்புத் தளபதி அடிக்கடி கிண்டல் செய்யுமளவிற்கு ஒற்றுமை.

''நான் தொழிலுக்குப் போட்டு வரேக்குள்ள மச்சான், ஒவ்வொரு நாளும் அரைப்போத்தில் எடுத்துவருவன் அப்பருக்கு, கொண்டந்து குடுத்தவு டன் அவற்ர முகத்தில வாற புன்சிரிப்ப பாக்கோணும்'' என்று தந்தையைப் பற்றி அடிக்கடி சொல்லிச் சிரிப்பான். வீட்டின் வறுமையை நீக்க கடலுக்கு - தொழிலுக்குச் சென்று வருவான் அசுந்தன். தந்தையின் இயலாமையால் சுமை இவன் தலையிலே ஏறியது. அசுந்தன் கடலோடினால்தான் வீட்டில் உலை ஏறும்; வயிறாறும். வீட்டுச் சுமையிலிருந்து விடுபட்டு, நாட்டுச் சுமையினைச் சிலகாலம் சுமக்கவிரும்பி, மைத்துனனோடு களத்திற்கு வந்தான்.

''மணலாற்றில் நான் போன சண்டையளொண்டும் இன்னும் தோல்வியில முடியேல்ல மச்சான்'' என்று, சண்டைகளுக்குச் சென்று வந்த பெருமை பேசுவான். அவன் சென்ற களங்கள் உண்மையில் பெருவெற்றிகளையே கண்டன. ''நாங்கள் அப்பா அம்மாவை எப்ப பாக்கிறது; தமிழீழம் எப்ப கிடைக்கிறது?'' என்று சொல்லிக்கொள்ளும் அசுந்தன், அந்த ஆசைகள் நிறைவேறும் முன்னரே தன் பணியை நிறைவு செய்துகொண்டான்! ☆



பிறப்பு :
07. 08. 1970

வீரச்சாவு :
21. 05. 1992



# கப்டன் குட்டிமணி

( முந்திரிகைக்குளச் சமர் )
( தங்கப்பன் உதயகுமார் )
மகிழமுனை,
களுவாஞ்சிக்குடி,
மட்டக்களப்பு.

மட்டக்களப்பிலிருந்து மகனைப் பார்ப்பதற்குத் தாய் வந்திருந்தாள்; கூடவே சகோதரியும் வந்திருந்தாள். குட்டிமணி காட்டுக்கு வந்த காலத்திலிருந்து, சண்டைகள் பலவற்றில் தன் திறமைகளை நிலைநாட்டியிருக்கின்றான். மட்டக் களப்பிலிருந்து வந்த தாயைக் கண்டு, அவவின் ஆசியைப் பெற்றுக்கொண்ட சில வாரங்களிலேயே தன் சாவையும் அணைத்துக்கொண்டான்.

மேஜர் சங்கருடன சென்று சாம்பன்குள இராணுவ மினிமுகாமைத் தகர்த்ததுதான் இவனது முதற் சண்டை. ஆனையிறவுப் பெரும்போரில் - கட்டைக்காட்டுச் சண்டையில் தன் ஒரு கண்ணை இழந்திருந்தான் குட்டிமணி. மகனுக்குக் கண் பறிபோனதை, மட்டக்களப்பிலிருந்த தாய் அறிந்திருக்க நியாயமில்லை.

கண்துஞ்சாது, பசிநோக்காது, கண்ணுக்குக் கண்ணாய் வளர்த்த மகன் ஒரு கண்ணைத் தன் மண்ணுக்கு அர்ப்பணித்து விட்டு முன்னே வந்து நின்ற போது...... அவளுடைய மனம் எந்தளவு துடித்திருக்கும்? ஆனாலும், மகனை விட ஒருபடி மேலாக இந்த மண்ணில் பற்று வைத்திருந்தாள், அந்தத் தாய்.

''தம்பி மட்டக்களப்பில சும்மாயிருந்து சாகிறதைவிட இஞ்ச இருந்து அடிபட்டுச் சாகலாம். இப்பவும் அங்க இருக்கிற தென்னந்தோட்டங்களில எத்தின எலும்புக்கூடுகள் தொங்குது. சண்டாளப் பாதகர்கள் பிடிச்சுப் பிடிச்சுக் கொண்டு போய், உயிரோட கழுத்தில சுருக்குப்போட்டுத் தொங்கவிடுறாங்கள். இப்படி எலும்புக்கூடாய் தொங்கிறதை விட, நாட்டுக்காய் அடிபட்டு சாகிறது உயர்ந்ததப்பா'' என்று மகனுக்குத் தேறுதல் கூறிவிட்டுச் சென்றாள் அந்தத் தாய்.

தாயின் ஆசிபெற்று பத்துப் பதினைந்து நாட்களிருக்கும். 'சிலோன் தியேட்டர்' படைமுகாமுக்கு அண்மையிலமைந்திருந்த காவலரணைத் தகர்த்தெறிந்த சண்டையில், தன்னை முற்றாகத் தாய்மண்ணுக்கு வழங்கிவிட்டான் குட்டிமணி!

☆

பிறப்பு:
19. 11. 1973

வீரச்சாவு:
21. 05. 1992



# லெப். குணாளன்

( முந்திரிகைக்குளச் சமர் )
( தங்கராசா சிவகுமார் )
அல்லாய் வடக்கு,
யாழ்ப்பாணம்.

இயக்கத்தின் ஒவ்வொரு பொருளையும் சொந்தப் பொருளாகக் கருதி, அவற்றைச் சுத்தப்படுத்தி, ஒவ்வொரு நிமிடத்தையும் விடுதலையின் வளர்ச் சிக்காகப் பயன்படுத்துவதில் குணாளனுக்கு நிகர் குணாளனேதான். தனக்கிட்ட பணியை இம்மியளவும் விலகாமல் செய்துவிடுவான்.

குற்றங்களுக்கு தண்டனை கிடைத்துவிட்டால், தான் செய்யாத குற்றத் தைத் தன்மீது சுமத்தியதற்காக துணிந்து வாதிடுவான்; ஆனால், அதற் காகக் கிடைக்கும் தண்டனையை செய்துமுடிக்கத் தவறமாட்டான். அவ்வா றான வேளைகள் எல்லாம் எவருடனும் பேசாது மௌனமாகவே இருந்து விடுவான்.

உடல்வலிமை குறைந்த குணாளனிடம் தொழில்நுட்பத்திறனை நிறை வாக இருந்தது. ஒரு சிறிய பிளாஸ்ரிக் குழாய்த்துண்டு கிடைத்தாலும், அதில் ஒரு 'ரோச்லைற்'றே செய்துவிடுவான். இதனால் சிலகாலம், மிதி வெடி புதைக்கும் அணியில் இருந்து பணிசெய்தான். கடைச்சல் தொழிலி லும் நல்லதேர்ச்சி இவனிடமிருந்தது.

சண்டையில் சாதனைகள் படைத்து இயக்கத்தை வளர்த்தவர்கள் பலர்; இயக்கநலன்களையும் பொருட்களையும் பேணிக்காப்பதன்மூலம் இயக்கத்தை வளர்த்தவர்கள் சிலர். இந்தச் சிலரில் குணாளனும் ஒருவன். 1992ஆம் ஆண்டு வைகாசித் திங்கள் 21ஆம் நாள், இலங்கை இராணுவக் காப்பரண்களைத் தாக்கியழித்த சண்டையில், தன் உயிரையும் விதைத்துக்கொண்டான்!

☆



பிறப்பு:
11. 09. 1973

வீரச்சாவு:
28. 03. 1992



## 2ஆம் லெப். ஜெகன்நாத்

(மண்கிண்டிமலைச் சமர்)
(துரைசிங்கம் பிரபாகரன்)
ஆலையடி,
வல்வெட்டித்துறை.

தலைவர் பிறந்த மண்ணில் பிறந்தவன், தலைவரைக் காத்த மண்ணில் மரணித்துக்கொண்டான். இதனால் அவனுக்கு இரட்டிப்புப் பெருமை.

வேவுப்பிரிவின் பொறுப்பாளராக இருந்த ஜெகன்நாத் விளையாட்டு நேரங்களில் விளையாடித் தோழர்களை மகிழ்விப்பான்; கடமை நேரங்களில் நிதானம், கட்டுப்பாடு என்பவற்றில் இறுக்கமாக நடந்துகொள்வான். வேவு பார்க்கப் புறப்படும் போது, '' இப்ப முக்கியமான ஆபத்துள்ள பணிக்கு வெளிக் கிட்டிருக்கிறியள். இனி கதை பேச்சு இருக்கக்கூடாது '' என்று பணிப்பு விடுப் பான். யாராவது ஏதும் தவறு செய்துவிட்டால், தனியாகக் கூட்டிச்சென்று புத்திமதிகள் கூறுவான்.

பயிற்சியை முடித்த காலத்திலிருந்தே வேவுப்பிரிவில் பணிபுரிந்ததால், மணலாற்றுக் காட்டினை நன்கு படித்துக்கொள்ளுமளவிற்கு அனுபவத்தைப் பெற்றுக்கொண்டான். மணலாற்றுக்கு வந்து நீண்ட நாட்களாகியதில் தாயைப் பார்க்க, ''தாடியண்ணோய் அம்மாவை ஒருக்கா பாக்க ஆசையாய்க் கிடக்குது. ஒருக்கா ஊருக்குப் போட்டு வரட்டுமா?'' என்று, மனம் திறந்து கேட்டு விட்டான்.

'ஒப்பரேசன் சிக்சர்' முறியடிக்கப்பட்டும் அதன் தூறல்கள் ஓயாமல் இருந்ததால், ''சண்டை முடிஞ்சதும் போட்டுவா'' என்று அவர் கூறியிருந்தார். சொன்ன சில நாட்களுக்குள், அவனது ஆசை நிறைவேறாமலே தொடர் கதையானது.

மண்கிண்டி இராணுவ முகாமை வேவுபார்க்கச் சென்றிருந்தான் ஜெகன் நாத். இடையில் இன்னுமோர் வேவுப்பிரிவைச் சந்தித்து, அவர்களிடமிருந்து தகரத்தில் அடைக்கப்பட்ட பழங்களைப் பெற்றுக்கொண்டான். அதனைத் தன் அணியினர்க்குப் பகிர்ந்து கொடுத்து, தானும் சாப்பிட்டான். சாப்பிடும்போது, ''போறம் மச்சான் - இந்தமுறை திரும்பிவாறது கஷ்ரமெண்டு நினைக்கிறன்'' என்று, தன் முடிவின் வரிகளை முன்கூட்டியே சொன்னான். முடிவு அது வாகவே அமைந்துபோயிற்று! ☆

பிறப்பு:
03. 04. 1968

வீரச்சாவு:
15. 04. 1989




# 2 ஆம் லெப். குணம்

(முந்திரிகைக்குளச் சமர்)
( கணேசலிங்கம் ஜெகநாதன் )
கிண்ணியா,
மூதூர்.

எல்லாருக்கும் கோபம் வருவதுண்டு. ஆனால் வருகின்ற கோபத்தை அடக்கிச் சிரித்து வாழ்பவர்கள் சிலர்; கோபம் வந்துவிட்டால் மற்றவர்களுடன் கதைக்காமல் மௌனமாக இருப்பதன் மூலம், கோபத்தினை மறந்துவிடுபவரும் உளர். இன்னும் சிலர் கோபத்தை அடக்கமுடியாமல் அடித்துவிட்டு, அடித்த மறுகணமே அதற்காக வருந்துவர். இதில் குணத்திடமுள்ளது மூன்றாவது குணம். பயிற்சிக்கு முன்னும் பயிற்சிக்கு பின்னும்கூட இந்த இயல்பு அவனிடமிருந்தது; கூடவே குறும்புத்தனமும் இருந்தது. இதனால், போராளிகள் மத்தியில் இவனைச் சமாளிப்பதென்பது பெரும்பாடாகிவிடும்.

யாழ்ப்பாணத்தில் மேஜர் செல்வராசா மாஸ்ரரிடம் பயிற்சியை முடித்துக்கொண்டு, காட்டுக்கு வந்தான். சில ஆண்டுகள் வனவாசத்தினை முடித்துக்கொண்டு 2ஆம் லெப். கரனுடன் வீடு சென்றான். திருக்கோணமலையில், முஸ்லிம் பிரதேசமான கிண்ணியாவுக்கு மத்தியில் அமைந்ததுதான் ஆலங்கேணிக் கிராமம். அந்தக் கிராமத்தில்தான் இவனது குடிசையுமிருந்தது. ''ஒரு தேசபக்தனின் வீட்டில் அல்லது ஒரு விடுதலைப் போராளியின் வீட்டில், பெரும்பாலும் வறுமை இருக்கும்; ஏனெனில், அங்கு சுய நலமிருப்பதில்லை. சுயநலக்காரன் மற்றவனைச் சுரண்டி, ஏமாற்றி உயர்ந்த வாழ்க்கை வாழ்ப

வன்; அவனிடம் தேசபக்தியோ விடுதலை உணர்வோ இருப்பதில்லை; இருக்கு மென்று நாம் எதிர்பார்க்கவும் கூடாது '' என்று தளபதி என்றோ ஒருநாள் சொன்னது எந்தளவு உண்மையென்பதை, போராளியின் குடிசைகளைப் பார்க் கும்போது புரிந்தது.

காட்டில் வாழ்ந்த காலத்தில், சில மாதங்கள் இவனுக்குத் துப்பாக்கி வழங்கப்படவில்லை. ஒருநாள் தளபதியிடம், '' நானென்ன சண்டை பிடிக்க மாட்டன் என்று நினைக்கிறியளோண்ண, துப்பாக்கியைத் தந்துபோட்டுப் பாருங்கோ எத்தின ஆமிய விழுத்திறனெண்டு?'' என நேரடியாகவேசொன் னான். அடுத்த நிமிடமே அவனுக்குத் துப்பாக்கி கிடைத்தது.

துப்பாக்கி கிடைத்த சில நாட்களுக்குள்ளாகவே சண்டைக்குச் செல்லும் வாய்ப்பும் கிடைத்தது. மேஜர் செல்வராசா மாஸ்ரரின் தலைமையின் கீழ், மணலாறு முந்திரிகைக்குளம் பிரதான வீதியில், இலங்கைச் சிப்பாய்களின் ரோந்து அணிமீது நடைபெற்ற அதிரடித் தாக்குதலில், குணம் சிப்பாய்களைக் கலைத்துச் சுட்டான். அங்கு தான் அவன் முடிவும் வரையப்பட்டது.

தனது வீரத்தில் ' மறு ' இல்லை என்பதைக் குணம் நிலைநிறுத்தினான். ஆனால், ஆசைதீரச் சண்டைகள் செய்யும் முன்னரே, இந்த மண்ணிலிருந்து அவன் உடல் விடுதலை பெற்றுக்கொண்டது!

☆

பிறப்பு:
03. 10. 1971

வீரச்சாவு:
15. 04. 1989




# 2ஆம் லெப். கரன்

( முந்திரிகைக்குளச் சமர் )

( வேலாயுதம் சசிகரன் )

சாம்பல்தீவு,
திருக்கோணமலை.

செல்வராசா மாஸ்ரரிடம் பயிற்சி பெற்றவர்களென்றால் அதற்கொரு தனிப் பெருமையுண்டு. கரனும் யாழ்மண்ணில் அவரிடம் பயிற்சி பெற்றான். பயிற்சியின் பின் யாழ்ப்பாணத்திலேயே, இந்திய இராணுவத்திற்கெதிரான சண்டைகளில் பங்கெடுக்கும் வாய்ப்பு இவனுக்குக் கிடைத்தது.

இந்திய இராணுவம் தமிழீழ மண்ணை விட்டு வெளியேறிய பின் மணலாற்றுக்கு வந்தான். இலங்கை அரசுடன் ஏற்பட்ட ஒப்பந்த ஓய்வின் இடைக்காலத்தில், தன் பிறந்த மண்ணான சாம்பல்தீவுக்கு விடுமுறையில் சென்றான். இயக்கப் பணியில் இணையும்போது இருந்ததைவிட, கரனின் தோற்றம் முற்றிலும் மாறியிருந்தது; வளர்ந்தும் பருத்துமிருந்தான். வீட்டிற்குச் சென்று படலையைத் திறக்கும்போது, திண்ணையில் இருந்த தந்தை, '' ஆரது பெடியள் ஆரோ வருகினம் போல கிடக்குது'' என்று கூறினார்.

'' பார் மச்சான், பெத்த அப்பாவே என்னை அதுக்கிடேல மறந்து போனார்'' என்று கரன் சொல்ல, தந்தை வியப்புற்று, தன் மகனை உச்சி முதல் பாதம்வரை ஏற இறங்க நோக்கினார். அந்தளவுக்கு இவன் பெரிதும் மாற்றத்துக்குள்ளாகியிருந்தான்.

கரன் நன்கு படித்தவன்; அறிவாற்றல் மிகுந்தவன். 'எலக்றோணிக் கல்வியில் நல்ல தேர்ச்சியுடையவன். 'எலக்றோணிக்' துறைபற்றிய அறிவினைப் போராளிகளுக்குக் கற்றுக்கொடுப்பதற்காக, தலைவர் இவனை சண்டைகளுக்குச் செல்ல அனுமதிப்பதில்லை. அவசியமான நேரங்களில் - தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்களில் - மிதிவெடிவைக்கும் பணிக்காக மட்டும் செல்வான்.

மேஜர் செல்வராசா மாஸ்ரரின் அணி சண்டைக்குச் செல்லும்போது தானும் செல்லப்போவதாகக் கேட்க, "சண்டைக்கு முன்னே சென்று அடிபடாமல் பின்னுக்கு நின்று உதவிப்பணிகளைச் செய்" என்று விடை கிடைத்தது. ஆசையுடன் துள்ளிக்குதித்துப் புறப்பட்டான். சண்டைக்குச் செல்வதென்றால் எம் வீரர்களுக்கு, அதைவிட மகிழ்ச்சியானதொன்று இந்த உலகத்தில் வேறு எதுவும் இருப்பதில்லை. சண்டை நடந்துகொண்டிருக்கும் போது, முன்னே பாய்ந்து சுட்டுக்கொண்டிருந்த குணம் குண்டுபட்டு விழுவதை, சற்றுத் தூரத்தில் நின்ற கரன் கண்டுவிட்டான். தன்னை மறந்தான்; தனக்கிட்ட கட்டளையை மறந்தான். ஓடிச்சென்று அவனது துப்பாக்கியை எடுத்துச் சுடத்தொடங்கினான். குணத்தின் உடலில் உயிர் இருக்கலாமென்ற ஐயப்பாட்டில், அவனைத் தூக்கி தோளில் போட்டுக்கொண்டான். துப்பாக்கியை இயக்கிக் கொண்டே, அவனையும் சுமந்துகொண்டு வர முற்பட்டான். தொடையைத் துப்பாக்கிக் குண்டொன்று துளைத்துச் சென்றது. தன் தோழனைச் சுமந்த கரன், மற்றவர்களின் தோளில் சுமக்கப்பட்டான். சிகிச்சைக்காக விரைந்து கொண்டுவரும்போதே தோழர்களின் தோளில், அவன் உயிர் பிரிந்தது! ☆

பிறப்பு:
22. 11. 1971

வீரச்சாவு:
29. 08. 1991




# 2ஆம் லெப். சிறீதரன்

( மண்கிண்டிமலை விபத்து )
(நிக்கலஸ் சூசைப்பிள்ளை)
இருதயபுரம்,
மூதூர்.

தலைமகன் பிறந்துவிட்டான் என தாய் தந்தையர் மகிழ்ந்த காலமொன்று இருந்தது. சிறீதரனும் தங்கையர் மூவருக்கு மூத்தவன். வீட்டின் 'வரவு' இவன் கையினை எதிர்பார்த்தே நின்றது. வறுமையை நீக்கவும் அண்ணனின் சுமையைக் குறைக்கவும் கருதி, தங்கையர் இருவர் தும்புத் தொழிற்சாலையொன்றில் வேலைக்குச் சென்றனர்.

1989 ஆம் ஆண்டு தைத்திங்களில், சிறீதரன் தன் உழைப்பினை நாட்டுக்கு வழங்கப் புறப்பட்டான். மூதூர் - இருதயபுரம் கிராமத்திலிருந்து, தமிழீழத்தின் இருதயமான மணலாற்றுக்கு வந்தான். திருக்கோணமலையிலிருந்து, படைப் பயிற்சிக்கான பாசறையினை முடித்து வந்த சிறீதரனை, மணலாறு வரவேற்றது. 'மினிமுகாம்' தகர்ப்புக்குச் சென்றான். தான் சென்ற முதல் சண்டை வெற்றியுடன் முடிந்ததில், அவனுக்குப் பெரும் மகிழ்ச்சி. வீட்டில் வறுமை மிகுதியாக இருப்பதை அறிந்த சிறப்புத் தளபதி, அவனை வீட்டுக்குப் போகும்படி கூறினார்; சிறீதரன் தன் மறுப்பை உறுதியாகத் தெரிவித்துவிட்டான். பொறுப்புணர்வும், உறுதியும், திறமையும் இவனிடமிருந்ததால் வேவுக்குழுவுக்குப் பொறுப்பாக நியமிக்கப்பட்டான். இரண்டு ஆண்டுகள் இப்பணியில் முயன்றான்.

மணலாற்றுக் காட்டில் இவன் பாதங்கள் பதியாத இடமில்லை. காட்டில் எழும் ஒவ்வொரு ஒலியினதும் அர்த்தம் புரிந்து சொல்லும் ஆற்றலுடையவனானான். எல்லையோரங்களில் இருக்கும் ஒவ்வொரு சிங்களப் படைமுகாங்களினைப் பற்றியும் நுணுக்கமாக அறிந்து கொள்ளுமளவிற்கு வேவுத்திறனிருந்தது. வேவுப்பிரிவிலிருந்து விடுபட்டுச் சண்டைக்குச் செல்ல விரும்பியதால், பாசறையொன்றுக்குப் பொறுப்பாளனானான். திறமைக்கேற்ற பணிக்காய் மீண்டும் வேவுக்குழுவுக்குப் பொறுப்பாகி, மண்கிண்டி மலையில் அமைந்திருந்த படை முகாமை வேவுபார்க்கச் சென்றான். அங்கே தற்செயலாக நடந்த வெடிவிபத்தொன்றில், அவனது மரணம் நிகழ்ந்தது! ☆



பிறப்பு:
26. 07. 1972

வீரச்சாவு:
29. 05. 1992



## 2ஆம் லெப். பாணன் - ரவிச்சந்திரன்

( அளம்பில் சமர் )

( நடேசலிங்கம் உதயமோகன் )

புளியடி ஒழுங்கை,

காங்கேசன்துறை.

வடக்கே யாழ். குடாநாட்டின் கரையோரமாய் அமைந்திருப்பது காங்கேசன்துறைப் பட்டினம். இன்று சிங்களத்தின் இராணுவ ஆக்கிரமிப்பு வாய்க்குள் அகப்பட்டு, பாலைவனமாய் மாறிக் கிடக்கிறது. அந்தக் கரைத் துறைப் பட்டினத்தில் பிறந்தவன் பாணன். வீட்டிற்கு மூத்தபிள்ளை; அதனால் செல்லப் பிள்ளையாக வளர்க்கப்பட்டான். அது நீடிக்கும் முன்னர், அடுத்தடுத்து நான்கு சகோதரிகளின் அண்ணனாகிவிட்டான்.

பள்ளிக்காலத்தில் விளையாட்டுத்துறையில் சான்றிதழ்களை அள்ளிக் குவித்தான்; படிப்பிலும் சுட்டி, வறுமை என்னும் பிணி படிப்புக்கு முடிவு கட்டியது. ஒன்பதாவது வகுப்பில் படிப்புக்கு முடிவுகட்டி, கடற்தொழிலில் தந்தைக்கு உதவியாளனானான். பாணனின் தந்தை சிறந்த படகோட்டி; எமது இயக்கத்துக்காகப் படகோட்டி, இறுதியில் படகுடன் காணாமலே போய்விட்ட கதை சோகக்கதை!

காலமும் மாற்றமும் எம் கையிலில்லை. இந்திய இராணுவத்தின் 'கரகாட்டம்' தொடங்கியது. கரகத்தின் பின்னே தேசவிரோத சக்திகள் கற்பூரச் சட்டி தூக்கி ஆடின. பாணனின் கடற்றொழில், பாதிப்படையத் தொடங்கியது.

தேசத்துரோகிகளை இனங்காட்டி அழிப்பதிலும், எம் இயக்க உறுப்பினர்களை மறைத்துக் காப்பதிலும், அக்குடும்பம் முழுமையாக ஈடுபடத் தொடங்கியது. இந்திய இராணுவம் கரகத்தை இறக்கும் வரை, பாணன் எமக்கான உதவிப் பணிகளில் துணிந்து செயற்பட்டான். 'இரண்டாவது ஈழப்போர்' தொடங்கிய ஆரம்ப நாட்களில், முழுமையாகத் தன்னை விடுதலைப் போருக்குத் தயாராக்கிக்கொண்டான். '' அண்ணன் காட்டிய வழி'' என்று, தங்கையர் இருவரும் மகளிர் படைப்பிரிவில் இணைந்துகொண்டனர். மணலாற்றுக் காட்டில் பயிற்சி முடித்த பாணன் மேஜர் வீமனின் தலைமையில், மாங்குள இராணுவ முகாம் தகர்ப்புக்குச் சென்றிருந்தான். முகாம் கைப்பற்றப்பட்ட பின் மணலாற்றுக்கு வந்த பாணன், சிங்களச் சிப்பாய்கள் தப்பியோடியது பற்றியும், அவர்களது பலவீனம் பற்றியும் அடிக்கடி தோழர்களுக்குக் கூறினான். சகோதரிகள் இயக்கத்தில் இணைந்தது பற்றிப் பெருமையாகப் பேசிக்கொண்டான்.

'' தங்கச்சியாக்கள் இயக்கத்துக்குப் போனது, எனக்குப் பெரிய மகிழ்ச்சியடாப்பா. எப்பவோ ஒருநாளைக்கு சும்மாய் அழியப் போற உடம்பு, தமிழீழத்துக்காய் அழிஞ்சுபோறது எவ்வளவு மேலானது'' என்று பெருமையாய்க் கூறுவான்.

சிலாபத்துறை இராணுவ முகாம் தாக்குதலுக்குச் சென்றுவந்த பின், 'மின்னல்' தாக்குதலில்தான் அவனது ஜி - 3 துப்பாக்கிக்கு நல்ல வேலை கிடைத்தது. 'மின்னல்' களமுனையில் தற்செயலாக, தங்கை ஒருத்தியைச் சந்திக்க நேர்ந்தது. களத்திலே அண்ணனும் தங்கையும் நிற்கும் பேறு எல்லாருக்கும் கிடைக்காதது!

'' அண்ணா! மின்னல் சண்டை முடிய அம்மாவை ஒருக்காப் போய் பார்த்துக்கொண்டு வா'' என்று தங்கை கூற, '' தங்கச்சி இப்ப நடக்கிற நாட்டுப் போர் ஒரு புனிதப்போர். இதில் ஆர் உயிரோட இருக்கிறமென்பது தெரியாது. நீ தப்பியிருந்தால் அம்மாட்ட போய் சொல்லு. உயிரோட இருந்தால் ஒரு நாளைக்கு வாறனாமெண்டு '' எனப்பதில் கூறினான். மணலாற்றில் பாணன் சந்தித்த களங்கள் மிகப் பெரியவை. 'மின்னலுக்' குப் பின் எதிரியை ஆட்டங்காணவைத்த 'சிக்சர்' என்ற நடவடிக்கையில், தன் ஆட்காட்டி விரலை இழந்தான்; அதற்காக அவன் சிறிதும் கவலைகொள்ளவில்லை. காயம் மாறியதும், முல்லைத்தீவிலிருந்து மணலாறு நோக்கி நகர்ந்த 'ஆறு சக்திகள்' என்ற இராணுவப் படையெடுப்பை அளம்பிலில் தடுத்து நிறுத்திய சண்டையில், மணலாறு பாணனை இழந்தது. அவன் வீரம் வரலாற்றில் பொறிக்கப்பட்டது! ☆

பிறப்பு:
20. 07. 1969

வீரச்சாவு:
30. 05. 1992



# லெப். மணாளன் - ராஜன்

( ஏழுசக்திகள் அளம்பில் சமர் )

( அன்னலிங்கம் மதியழகன் )

உடுவில் தெற்கு,

மானிப்பாய்.

அறிவும் ஆற்றலும் நிறைந்த ஒரு போராளி மணாளன். சுழிபுரம் கிராமத்திலிருந்து புறப்பட்டு புலிப்பாசறை புகுந்தான். மணலாற்றுக் காட்டில், ஏழாவது பாசறையில் புலிப் பாய்ச்சலுக்கான பயிற்சியைப் பெற்றுக்கொண்டான். பயிற்சியின் பின் குறுகிய காலத்துள், தன் திறமையால் வளர்ச்சி கண்டான். இதனால் ஆர். பி. ஜி. அவன் தோளில் ஏறியது.

பயிற்சிக்குப் பின்னே படைத்துறைப் பள்ளியிலிருந்த காலம் சுவையானது. இலகுவில் புரிந்துகொள்ளும் ஆற்றல் இவனிடம் அதிகமிருந்தது. இராணுவக் கல்வியைத் தெளிவுடன் கற்றுக்கொண்டான். ஏற்கெனவே கல்வியறிவில் உயர்வாக இருந்தமை இதற்குத் துணைபோயிற்று. கற்றதைத் தனக்கு மட்டும் பயன்படுத்தாமல், மற்றவர்க்கும் சொல்லிக் கொடுப்பதில் வல்லவன். படைத்துறைப் பள்ளியில் குறிப்பிட்ட நேரத்துக்கு ஆசிரியர் வராவிட்டால், அந்தப் பாடப்பகுதியைத் தானே கற்றுக்கொடுப்பான். இக் கல்விக்காலத்திலேயே நாவாந்துறை, கொட்டடி ஆகிய பிரதேசங்களில் காவற் கடமையில் நின்ற தாக்குதலணிகளின் நிர்வாகப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டான். ஆனையிறவுச் சமரில் புல்லாவெளியில் நடந்த சண்டையில், முன்னே பாய்ந்து சென்று

ஆர்.பி.ஜி. றொக்கட்டுக்களை வீசினான்; கவச வண்டிகள் தீப்பற்றி எரிந்தன. இச்சண்டையில் அவனின் துணிவும் சண்டையிட்ட முறையும், இவனை அணி யொன்றின் பொறுப்பாளனாக மாற்றின.

பொறுப்பாளனாக இருந்தபோது, தமது அணியில் இருந்த ஒவ்வொரு போராளியின் நலனிலும் கண்ணுங் கருத்துமாக இருந்தான். பத்திரிகை, சஞ் சிகைகள் கிடைத்தால் அனைவரையும் ஓரிடத்தில் கூட்டி, செய்திகளைப் படித்துக் காட்டி விளங்கவைப்பான். தன் உடையினைச் சுத்தமாகவும் சிக்கன மாகவும் வைத்திருப்பதன்மூலம், மற்றவர்களைத் திருத்த முனைவான்.

மணாளன், தான் செய்த தவறுகளுக்காகத் தண்டனை கிடைத்தால், மனப்பூர்வமாக அதை ஏற்றுச் செய்வான். பொறுப்பு பொறுப்பாக இருந்தா லும் பிழைகள் தண்டனை மூலம் திருத்தப்படவேண்டும் என்பதில், உறுதியாக இருந்தான். தன் அணியிலுள்ள போராளிகள் சரியாகச் சாப்பிடுகின்றார்களா? குளிக்கின்றார்களா? உடுப்புப் பிரச்சினையுண்டா என்பதில் எல்லாம், அதிக அக்கறை காட்டுவான்.

தன் மனம் நிறைந்த பணியை இயக்கத்துக்காகச் செய்தான். ஆனால், முல்லைத்தீவிலிருந்து வந்த இராணுவ படையெடுப்பினை அளம்பிலில் எதிர் கொண்டு தடுத்து நிறுத்திய சண்டையில், வீரமரணத்தைத் தழுவிக்கொண் டான்!

☆

பிறப்பு :
26. 08. 1967

வீரச்சாவு:
30. 05. 1992



## கப். குட்டி - அன்பு

( ஏழுசக்திகள் அளம்பில் சமர் )
( ஐயம்பிள்ளை சிவகுமார் )
கந்தரோடை வீதி,
சண்டிலிப்பாய்,
யாழ்ப்பாணம்.

தன்னை வளர்த்த தலைவனின் கண்ணில் நீர் பெருக வைக்குமளவிற்குச் சாதனை புரிந்து சாவினை தழுவிக்கொள்வதையே, உண்மையான வீரன் விரும்புகின்றான். எம் தோழர்கள் ஒவ்வொருவரின் இழப்பும் தலைவனின் நெஞ்சை நெருடத் தவறுவதில்லை.

அன்பு! இவன் தன் திறமையால், மணலாற்றுச் சிறப்புத் தளபதியின் மனதில் இடம்பிடித்துக்கொண்டவன்.

பயிற்சி முடிந்தவுடனேயே பயிற்சி ஆசிரியனாக வருவது எல்லார்க்கும் எளிதல்ல. அன்பு அதைச் சாதித்தான். பயிற்சி ஆசிரியனாக மட்டுமன்றி, பயிற்சி பெற்ற வீரர்களுக்கான இராணுவக் கல்வி வகுப்புக்களையும் அவனே எடுத்தான். அந்தளவுக்கு அறிவாற்றலும் அவனிடமிருந்தது.

திறமைகள் அனைத்து வீரர்களிடமும் இருந்தாலும், மாறுபட்ட - தனித்துவமான சில திறமைகள் இவனிடமுண்டு. திசையறிகருவியைப் பயன்படுத்தும் நுட்பம் முதல், அனைத்துரகத் துப்பாக்கிகளின் பாகங்களையும் உதிரிகளாக்கி

சரிசெய்வதோடு காட்டில் திசையறிகருவியைப் பயன்படுத்தும் முறைபற்றியும் ஒவ்வொரு போராளிக்கும் கற்றுக் கொடுத்தான்.

தன் தோழர்களின் நெஞ்சைத் தொடும்வகையில் அன்பு செய்த சண்டை, 'ஒப்பரேசன் மின்னல்.' ஒரு மாதகாலம் நீடித்த இச்சண்டையில், இருபது நாட்களுக்கு மேல் பசியை - உறக்கத்தினை - மறந்து சண்டை செய்தான்.

கையில் பட்ட வெடியினால் எலும்புடைவு ஏற்பட்டு சிலகாலம் யாழ்ப்பாணத்தில் சிகிச்சை பெற்று வந்தான். காயம் சரியாகமாறும் முன்னரே காட்டுக்கு வந்துவிட்டான்.

முல்லைத்தீவிலிருந்து அளம்பில் வரை முன்னேறிய இராணுவத்தினரை, அளம்பில் ஐந்தாவது மைல்கல்லில் வைத்து எதிர் கொண்டான் அன்பு. இராணுவம் நிற்கும் இடங்களை அறிந்து, அந்த இடங்களில் மிதிவெடிகளையும் வாகனப்பொறிக் கண்ணிகளையும் நட்டு. சண்டைக்குத் தயாராகி நின்றான். நாலாயிரத்துக்கு மேற்பட்ட இராணுவத்தை அளம்பிலுக்கு அப்பால் முன்னேற முடியாமல் தடுக்க, முடிந்தவரை போராடினான்; முயற்சியில் வெற்றியும் கண்டான். ஆனால், எதிரியின் எறிகணையொன்று அருகில் வந்து விழுந்து வெடித்தபோது, மரணத்தைத் தழுவிக்கொண்டான். இயக்கத்தின் வளர்ச்சிக்கு அவனின் பங்களிப்பு அதிகம் வேண்டப்பட்ட நிலையில், பாதியிலே அவன் பயணம் முடிந்துபோனது. மணலாறு அவன்மீது கொண்ட அன்புமட்டும் நின்று நிலைக்கிறது! ☆

பிறப்பு:
05. 04. 1968

வீரச்சாவு:
30. 05. 1992



# லெப். சுலோஜன்

( ஏழுசக்திகள் அளம்பில் சமர் )
( பாக்கியத்துரை தயாளசிலன் )
7 ஆம் வட்டாரம்,
கட்டைபறிச்சான்,
மூதூர்.

போராட்ட வளர்ச்சியின் பின்புலங்களில் மருத்துவப் பணி முக்கியமானது. விடுதலைப் போரில் காயமடையும் போராளிகளைப் பராமரிப்பதும், களத்தில் கொடுக்கும் உடனடிச் சிகிச்சையும் அந்தப் போரின் வெற்றிக்குக் காரணமாகின்றன. அபாயமும், அர்ப்பணிப்பும் நிறைந்த இப்பணியினைத் தொடர்ச்சியாக இயக்கத்துக்கு அளித்தவன் சுலோஜன். காயமடையும் ஒவ்வொரு போராளியின் அருகிலிருந்தும் நித்திரை விழித்துப் பராமரிப்பது, சண்டையை விடப் பலமடங்கு கடினமானது; புனிதமானது. உயிர் கொடுக்கும் அந்தப் புனிதப் பணியால் போராளிகளின் மனதில் நிலைத்தவன் இவன்.

1988 ஆம் ஆண்டில் திருக்கோணமலையிலே பயிற்சியை முடித்துக் கொண்டு மணலாற்றுக்கு வந்தான். வந்தநாள் முதல் மரணிக்கும் நாள்வரை, அனைத்துச் சண்டைக் களங்களிலும் அவன் பாதங்கள் பதிந்தன. சண்டை கடுமையாக நடந்துகொண்டிருக்கும்போதும் அருகில் சுலோஜனைக் காணலாம். அவனைக் கண்டால், எமது தாக்குதலிலும் ஒரு உத்வேகம் பிறக்கும். காயம் படப்பட ஓடி ஓடி காயங்களுக்கு உடனடியாகக் கட்டுப் போட்டுக்கொள்வான்.

காய்ச்சல், தலையிடி என்று நாம் பாசறைகளில் படுத்துக் கிடந்தால் போதும், அருகிலிருந்து பராமரிக்கத் தொடங்கி விடுவான். சத்துள்ள உணவுகள் தயாரித்துக் கொடுப்பான். இதற்காக சும்மாகவேனும் சிலசமயங்களில், தலையிடி காய்ச்சலென்று நாம் படுப்பதுண்டு. வீட்டில் தாயிடம் பெற்ற அன்பினை, காட்டில் சுலோஜனிடம் பெற்றோம்.

கொக்குத்தொடுவாயில் ஒருதடவை இராணுவத்துடன் நேரடி மோதல் ஏற்பட்ட சமயம், காயம்பட்ட போராளிகளுக்கு உடன் மருத்துவ சிகிச்சை கொடுத்துக்கொண்டிருந்த சுலோஜன், ஆவேசமுடன் இராணுவத்தினருக்குள்ளே சென்று, எதிரியின் துப்பாக்கியொன்றையும் அபகரித்துக்கொண்டு மீண்டான். தாய்க்குத் தாயாய் நின்ற சுலோஜனின் இறுதிப் பயணத்தை நினைக்கும்போது, நெஞ்சு வெடிக்கும்.

முல்லைத்தீவிலிருந்து வந்த இராணுவத்தை அளம்பிலில் தடுத்து நிறுத்தி, கடும்சண்டை நடந்துகொண்டிருந்தது. சுலோஜன் பம்பரமாய்ச் செயற்பட்டுக்கொண்டு நின்றான். அலறிக் கொண்டுவந்த ஆர். சி. எல். பீரங்கி ஒன்று சுலோஜனையும் அறுத்துச் சென்றது. எம்மையெல்லாம் காத்த அவன், தன்னைக் காப்பதற்கு அவசியமின்றியே முடிந்து போனான்.

சுலோஜன் சொன்ன, தன் இளமைக்காலக் கதையொன்று இன்றும் எம் நெஞ்சில் நிற்கிறது. மூதூரிலே ஆலயத் திருவிழா ஒன்றில் சுவாமி வீதிவலம் வருமென்று, வீட்டுவாசலில் நிறைகுடம் வைத்துக் காத்திருந்தானாம். வர்ண மின்குமிழ்களோடு 'ஐஸ்பழ' வானொன்று வர சுவாமி ஊர்வலம் வருவதாக நினைத்துத் தேங்காயை எடுத்து உடைத்தானாம். இதை அவன் சொன்ன நாளிலிருந்து, "ஐஸ்பழ வானுக்கு தேங்காய் உடைக்கேல்லையா ?" என தினமும் கிண்டல் செய்தோம். சுற்றிச் சுற்றி எத்தனையோ வீரர்களைக் காத்த அந்த வீரனை மணலாறு மறக்காது! ☆

பிறப்பு:
01. 07. 1972

வீரச்சாவு:
24. 08 1992



## கப். அக்பர் - அன்பரசன்

( அளம்பிலில் காப்பரண் தகர்ப்புச் சமர் )

( திருச்செல்வம் சதீஸ்குமார் )

தேவபுரம்,

மொறக்கொட்டாஞ்சேனை,

மட்டக்களப்பு.

"இப்பிடித்தானம்மா உங்கட பிள்ளையும் ஒருநாளைக்கு சமாதியாய் நிற்பான்" - மாவீரர் துயிலும் இல்லத்தைப் பார்த்துக் கொண்டு நின்ற அக்பரின் அம்மாவிடம், தளபதி கூறினான். மட்டக்களப்பு மொறக்கொட்டாஞ் சேனையிலிருந்து வந்திருந்தாள் அந்தத் தாய்.

"அதுக்கென்னப்பன் என்ர பிள்ளைக்கும் சமாதி ஒண்டு இருக்கிறது. எனக்குத் தான் பெருமை" என்று கம்பீரமாகத் தளபதிக்குப் பதில் கொடுத்தாள் அக்பரின் அம்மா. மணலாற்றின் சிறப்புத் தளபதி, அக்பர் மீது அளவற்ற அன்பு வைத்திருந்தார். மணலாற்றுக் காட்டில் எதிரியிடம் முதலில் அடித்தெடுத்த ஏ. கே. எல். எம். ஜி. துப்பாக்கியை, அவனிடமே கொடுத்து வைத்திருக்குமளவிற்கு அவனின் திறமையில் நம்பிக்கையிருந்தது.

அக்பர் என்றதும் அவனது சிரித்த முகம் கண்ணில் தெரியும். எப்பொழுதும் மலர்ந்த முகத்துடன் இருப்பது அவன் இயல்பு. மரணத்தின் பின்னர்கூட முகத்தில் மகிழ்ச்சியே காணப்பட்டது. அக்பருக்கு ஒய்வு கிடைத்தால், பொறுப்பாளரிடம் அனுமதி பெற்று, நாயாற்றுக் கடல் நீரேரிக்குச் சென்றுவிடுவான்.

கடல் நீரேரியிலும், கடலிலும் அவன் பிடித்த மீன்கள் பல ஆயிரம் கிலோக் கள் வரும். அக்பர் ' சாப்பாட்டுராமன் ' என்று, எந்தப் போராளியைக் கேட் டாலும் சொல்லுவான். ஆனாலொன்று, எந்தச் சாப்பாட்டுப் பொருளை எடுத்தாலும் பத்துப்பதினைந்து பேருக்குப் பகிர்ந்து கொடுக்காமல் அவன் சாப்பிட்டதில்லை. அக்பர் சாப்பாட்டு ராமன் என்று சொல்லி, அவனிடம் வாங்கி அவனைவிட அதிகம் உண்டவர்கள்தான் பலர். சாப்பாட்டுக்கு மட் டும் எவரிடமும் அனுமதி கேட்கமாட்டான். அக்பர் சிலவேளைகளில், கறி யைச் சட்டியுடன்கூட தூக்கிச் சென்றுவிடுவான். அவனைச் சுற்றி ஒரு வட்டம் மொய்த்திருக்கும். சாப்பாட்டுராமன் என்று சொல்லும் அதேவேளை, ' வள்ளல் ராமன் ' என்றும் சொல்லுதல் பொருத்தமானது.

சண்டைக்களத்திலும், சண்டைக்குப் பின் ஆறுதல் பெறும் போதும், போராளிகளுக்கு துணிவூட்டும் கதைகள் சொல்லிக் கொண்டிருப்பான். தன் னைப் போல் ஒவ்வொரு போராளியையும் உருவாக்கிவிட வேண்டும் என்ப திலே உன்னிப்பாக இருந்தான். '' ஆமிக்கு அடிக்கவேனும், அவனை ஓடஓடக் கலைத்து சுடோணும் '' என்ற வசனம் அவன் வாயில் அடிக்கடி வரும்.

ஆனையிறவுச் சமரில் காலில் காயமுற்று, சிலகாலம் சிகிச்சை பெற்று வந்தான். காயம் ஆறிவிட்டபோதும் அதிக தூரம் ஓடினால் அல்லது நடந் தால், பாதம் வீக்கம் கண்டுவிடும். இதனைச் சாட்டாகவைத்து தளபதி தன் னைச் சண்டைகளுக்குச் செல்லாமல் தடுத்துவிடுவார் என்று கருதி அதிகாலை எழுந்து நீண்டதூரம் ஓடுவான்; கடின பயிற்சிகளைச் செய்வான். கால் தனக் குப் பிரச்சினையில்லை என்பதை சிறப்புத் தளபதிக்கு அடிக்கடி காட்டிக் கொள்வான். அக்பர் கண்ட களங்களை வரிசைப்படுத்தினால் அவன் திறமை வெளிப்படும்.

முல்லைத்தீவு இராணுவ முகாம் முற்றுகைத் தாக்குதல்.

மாங்குளம் இராணுவ முகாம் தகர்ப்பு.

ஆனையிறவுப் பெருஞ் சமர்.

சிலாபத்துறை படைமுகாம் தகர்ப்பு.

ஒப்பரேசன் மின்னல்.

ஒப்பரேசன் சிக்சர்.

சாம்பன்குள மினிமுகாம் தகர்ப்பு.

' ஆறு சக்திகள் ' என்ற - முல்லைத்தீவிலிருந்து அளம்பில் நோக்கிய இராணுவ நடவடிக்கை.

மணலாற்றில் நடந்த காப்பரண் தகர்ப்புகள்.

இவற்றில் எல்லாம் அக்பரின் ஏ.கே. எல். எம். ஜி துப்பாக்கிக் குண்டு கள் எத்தனை இராணுவ உடல்களைக் கிழித்துக் குதறியிருக்கும்! மூன்று தட வைகள் காயத்தின் தழும்புகள் கண்ட அக்பர், அளம்பிலில் இராணுவக் காப் பரண்களைத் தாக்கி அழிக்கையில், தன் செங்குருதி கொண்டு மணலாற்றைக் கழுவி மௌனமானான்! ☆

பிறப்பு:
24. 07. 1971

வீரச்சாவு:
24. 08. 1992



## 2ஆம் லெப். சுடர்

( அளம்பில் சமர் )
( கந்தசாமி கௌரீஸ்வரன் )
காக்காச்சி வெட்டை,
மண்டூர்

**கா**ட்டில் நடந்துகொண்டிருந்தோம். இடையிடையே எம் பின்னே தொடர்ந்து வரும் ஏனைய தோழர்களையும் திரும்பிப் பார்த்தோம். எல்லாரது முகத்திலும் பசிக்களையும் நித்திரைக்களையும் தெரிந்தன.

''மச்சான் திரும்பி ஊருக்கு போவமோடா?'' சுடர் மெதுவாக என்னிடம் கேட்டான்.

''இவ்வளவு தூரம் வந்திட்டம்; இனித் திரும்பினால் மரியாதையில்லை'' எனக் கூறிக்கொண்டேன். ஒன்பது நாளாக காட்டில் நடை. பத்தாம் நாள் கடற்பயணம்; பிளாஸ்ரிக் படகுகளில் ஏற்றப்பட்டோம். மணலாறு நோக்கிய பயணம்.. காட்டுவழியில் பல இடங்களில், இராணுவத்தின் தாக்குதலுக்குள்ளாகிச் சிதறி ஓடியிருந்தோம். கடற் பயணம் எவ்வாறு அமையப் போகின்றதோ எனச் சிந்தித்துக்கொண்டிருக்கும் போதே, கடற்படைப் பீரங்கிப் படகுகள் பீரங்கிகளை வீசியபடி எமது படகைத் துரத்தத் தொடங்கின. அனுபவமும் துணிவுமுள்ள எமது படகோட்டிகள், பதற்றமின்றி, வேகமாகப் படகை ஓட்டத் தொடங்கினர். சிலநிமிட நேரந்தான்.. படகு நாயாற்றுக் கரையைத் தொட்டு நின்றது.

சுடரின் நெற்றியில் அந்தக் குளிரிலும் வியர்வைத் துளிகள் அரும்பி நின்றன. ''என்னடாப்பா பயந்திட்டியோ'' என்று சிரித்துக் கொண்டே கூறினேன். சிலநாட்களில் படைப் பயிற்சிப் பாசறை ஆரம்பமானது. பயிற்சி தொடங்கிய ஓரிரு வாரத்துக்குள், பயிற்சி முகாம் விமானக் குண்டு வீச்சுக்கு இலக்கானது. ''என்னமச்சான் தொடக்கமே ஆபத்தாய் கிடக்குது. வெளிக்கிட்ட நேரம் சரியில்லைப்போல கிடக்குது'' என்று கூறிச் சிரித்துக்கொண்டான் சுடர். பயிற்சி முடிந்த பின், பல சண்டைகளுக்குச் சென்றுவந்தான். அதிகாலையில் எழுந்ததும் சில நிமிடம் எவருடனும் பேசாமல் மௌனமாக இருப்பான். ''என்ன பலமான யோசினை?'' என்றால், ''வீட்டுக் கஷ்ரத்தைப் பற்றி யோசிச்சுப் பார்த்தன்'' அம்மாவும் தங்கச்சியாக்களும் என்ன கஷ்ரப்படுகினமோ தெரியாது'' என்று வேதனையோடு சொல்வான்.

நீண்ட நாட்கள் அவனுடனே ஒரே அணியில் இருந்தேன். சில மாதங்கள் சென்றதும், கரும்புலியாகத் தன்னைப் பதிவுசெய்துகொண்டான் சுடர். அவனிடம் புதிய வேகமும் உறுதியும் பிறந்திருந்தன. முறியடிக்கப்பட்ட இராணுவ நடவடிக்கைகளான 'மின்னல்', 'சிக்சர்' ஆகிய சண்டைகளிலும்; சில காப்பரண் தகர்ப்புத் தாக்குதல்களிலும் தன்வீரத்தை நிலைநிறுத்தத் தொடங்கினான்.

'சிக்சர்' சண்டை நடைபெற்றுக்கொண்டிருந்தபோது, இவனது தந்தை இவனைப் பார்க்க மட்டக்களப்பிலிருந்து வந்திருந்தார். தந்தையைக் கண்டதும் அவரது அறிவுரைகளைக் கேட்டதும், சுடரின் அறிவு சுடர்விடத் தொடங்கியது. ''லீவு எடுத்துக்கொண்டு மட்டக்களப்புக்கு வந்திடாதேப்பா. அங்க வந்தால் வீணாய் சாக வேண்டிவரும். அதைவிட இஞ்சநிண்டு அடிபட்டு சாகிறது நல்லது.'' என்று அறிவுரைத்து, ''மறக்காமல் போட்டோ ஒன்று எடுத்து அனுப்பி விடு'' என வேண்டிக்கொண்டு புறப்பட்டார்.

ஒரு கிழக்குத் தந்தையின் அறிவு... அவருக்கிருந்த மண்பற்று... தந்தை வந்துசென்று சில மாதங்கள்தான் - அளம்பிலில் முகாமிட்டிருந்த சிங்களப் படைகளின் காப்பரண்களைத் தாக்கி அழிக்கும் சண்டையில், நெற்றியில் குண்டு சுமந்து அணைந்துபோனான் சுடர் !

☆

பிறப்பு:
26. 10. 1972

வீரச்சாவு:
09. 09. 1992



# 2ஆம் லெப். சூடாமணி - சம்பத்

**( கும்பகர்ணன் மலைச் சமர் )**
**(சுப்பிரமணியம் விக்கினேஸ்வரன்)**
**நானாட்டான்,**
**மன்னார்.**

சண்டைத்திறனில் சம்பத்திற்கு வரலாறுண்டு. அமைதியான சுபாவம். இனிமையான பேச்சு. பண்பான நடத்தை. இவற்றுள் மறைந்து கிடந்ததோ அளவற்ற போர்க்குணம். சண்டைகளில் இப்பண்பெல்லாம் எங்கே ஓடி ஒளித்துக்கொள்கிறதோ தெரியாது. சண்டை தொடங்கியதும் சூரசன்னதம் கொண்டு நிற்பான். சண்டைகளில் ஆயுதம் எடுக்கத் தவறினால், அடுத்த சண்டையில் ஆயுதம் எடுக்கும்வரை அதைப்பற்றியே அலட்டிக்கொண்டிருப்பான்.

சம்பத்திடம் இரக்க சிந்தனையும் இருக்கத் தவறவில்லை. காவற் கடமையில் நிற்கும்போது மற்றவர்களுக்குத் தொல்லை கொடுக்கமாட்டான். இரவில்கூட மற்றவர்களை காவற்கடமைக்கு எழுப்பும்போது, அலட்டாமல் மெதுவாகத் தட்டி எழுப்புவான். ''மச்சான் அலுப்பாய் கிடக்கடா'' என்றால், அல்லது ''மெல்லிதாய் தலையிடிக்குதடா'' என்றால் போதும், அவர்களுடைய நேரத்திலும் அவர்களுக்காய் தன் காவற்கடமையைத் தொடருவான். இதனால் சகதோழர்களின் நெஞ்சில் பிரிக்க முடியாத இடத்தைப் பிடித்திருந்தான். மணலாற்றில் மினிமினி எல். எம். ஜி முதன்முதலில் கைப்பற்றப்பட்ட கொக்குத்தொடுவாய்ச் சண்டை, கப்டன் சிவராஜ், கப். ரத்தன், மரணித்த கொக்குதொடுவாய்ச் சண்டை, ஆனையிறவுச் சமர், இராணுவத்தினரின் 'ஒப்பரேசன் மின்னல்', 'ஒப்பரேசன் சிக்சர்'' மாங்குள இராணுவ

மர
முகாம் தகர்ப்பு, சிலாபத்துறை படைமுகாம் தகர்ப்பு, கப். சுபாஸ்
ணித்த இராணுவத்தின் மீதான அதிரடித் தாக்குதல், முல்லைத்தீவிலிருந்து
அளம்பிலுக்கு முன்னேறிய இராணுவ அணி மீதான தாக்குதல், அளம்பி
லில் முகாமிட்ட சிங்களப் படைகளின் காப்பரண் தகர்ப்பு இவையெல்லாம்
சம்பத்தின் வீரக்கலையின் விளையாட்டிடங்கள்.

ஈற்றில், 1992ஆம் ஆண்டு புரட்டாதித் திங்கள் ஒன்பதாம் நாள், மண்கிண்டி நோக்கிச் சென்ற இராணுவ அணியைத் தாக்கியழித்த சண்டையில் அவனது கலை சிலையானது! சிங்களப் படை துப்பாக்கிகளை எறிந்துவிட்டு ஓடித் தப்ப முனைந்த அதிரடித் தாக்குதல் இது. ஓடஓடத் துரத்திச் சுட்ட இச்சண்டையில், நெற்றியில் குண்டு துளைக்க இரத்தத் திலகமிட்டுக்கொண்டான் சம்பத்!

☆

பிறப்பு:
15. 10. 1970

வீரச்சாவு:
28. 09. 1992



## 2 ஆம் லெப். இளம்பிறை - ஞானம்

( கொக்குத்தொடுவாய்ச் சமர் )

(பாக்கியராஜா ரவி)

வீரமாநகர்,

கட்டைபறிச்சான்,

மூதூர்.

பெயரும், பெயருக்கேற்ற புகழும் கொண்ட கிராமங்கள் கிழக்கு மண்ணில் பல உண்டு. கிழக்கு மாகாணத்தில் புலிகளின் கட்டுப்பாட்டிலிருந்த பிரதேசத்தில், மூதூர் முக்கியமான பகுதியாகும். இப்பிரதேசத்தில் கம்பீரமாக நிமிர்ந்து நிற்கும் கிராமம் வீரமாநகர். தான் பிறந்த கிராமத்தின் பெயர் மங்கிவிடக்கூடாதென்பதில் ஞானம் உறுதியாக இருந்தான்.

எப்பணியையும் பின்போடாமல் - தட்டிக்கழிக்காமல் செய்யும் உயர் குணம் ஞானத்திடமுண்டு. கப்டன் டேவிற்றின் விசேட அதிரடி அணியில் ஒருவனாக, மணலாற்றுக் களங்களைக் கண்டான். பாரபட்சமற்ற தன் நடத்தையினால் போராளிகள் மனத்தைத் தொட்டு நின்றான்.

கப். சிவராஜ், கப். ரத்தன். ஆகியோர் உட்பட ஏழுவீரர்கள் மரணித்த நாளின் ஓராண்டு நிறைவு நாள் - 1992 ஆம் ஆண்டு புரட்டாதித் திங்கள் 28 ஆம் நாள் - இரவு தாக்குதலுக்கு அனைத்து அணிகளும் தயாராகின. எல்லாருடைய மனதிலும், இனிமையாகப் பழகி மறைந்த அந்த ஏழுவீரர்களின் நினைவுகளும் நிறைந்துநின்றன. அந்நினைவுகளின் காரணமாக எழுந்த வெறி, அதே இடத்தில் வைத்து பல எதிரிகளை அழித்து விடத்துடித்தது.

சண்டைக்குச் செல்லுமுன், கொண்டு சென்ற உணவுப் பொட்டலங்களைப் பிரித்து உண்ணத்தொடங்கினர். ஞானம் 'பார்சல்' ஒன்றுடன் என்னருகில் வந்தான். "மச்சான் இண்டைக்கு ஒரு பாசலை இருவரும் சாப்பிடோணும்" என்று கூறினான். நான் மறுத்த போது, சாப்பிடும்படி பிடிவாதமாக நின்றான்; சாப்பிட்டேன். சாப்பாடு முடிந்த சிலமணி நேரத்துக்கெல்லாம், சண்டை தொடங்கியது. இருட்டினுள் முகாமின் காப்பரண்களை நோக்கிப் பாய்ந்தோம். அதிகாலை 3.45 மணிக்குத் தொடங்கிய சண்டை, காலை வரைநீடித்தது. பத்துக்கும் மேற்பட்ட காப்பரண்கள் அழிக்கப்பட்டன. காயப்பட்ட வீரர்களை மீட்கும் பணி தொடர்ந்துகொண்டிருந்தது. காப்பரண்களைத் தகர்த்து உள்ளே மீளும்வரை ஞானத்தைச் சந்திக்க முடியவில்லை. சண்டை முடிந்து திரும்பியபோது, அவனுடலை மட்டுமே காணமுடிந்தது! ☆

பிறப்பு:
15. 10. 1972

வீரச்சாவு:
28. 09. 1992



# லெப். தேவநேயன் - குருசாமி

( கொக்குத்தொடுவாய்ச் சமர் )
( மயில்வாகனம் சந்திரகுமார் )
களுதாவளை,
மட்டக்களப்பு.

குடும்பத்தில் வீசிய புயல் குருசாமியைப் புலியாக்கியது. பள்ளி செல்லும் வயதில் தாயை இழந்தான். மட்டக்களப்பு மக்கள் அந்நியப்படைகளின் ஆக்கிரமிப்புப்பசிக்கு அடிக்கடி இரையானவர்கள். மட்டக்களப்பு களுதாவளைக் கிராமம் சிங்களப்படையால் சுற்றி வளைக்கப்பட்டபோது, குருசாமியின் அண்ணனும் கைதாகி பூசாவுக்கு அனுப்பப்பட்டான்; இன்னும் பூசாவில் இருந்து அவன் திரும்பவில்லை.

குருசாமியின் குழந்தை உள்ளத்தில் இந்நிகழ்வுகள் பெரும்பாதிப்பை ஏற்படுத்தின. இராணுவத்தினரை அழித்துவிட வேண்டுமென்ற உணர்வேற்பட்டது. இராணுவக் கெடுபிடி மாறியபோது, இந்திய ஜவான்களினதும் தேசவிரோதிகளினதும் அடாவடித்தனம்தொடங்கியது. இதனால், குருசாமி விடுதலைப் போரில் அமைதி காணப் புறப்பட்டுவந்தான்.

மட்டக்களப்பில் இருந்து மணலாற்றுக்கு வந்த நடைப்பயணத்தைப் பற்றி குருசாமி அடிக்கடி சொல்லிக்கொண்டான். பயிற்சி நடக்கும்போதும் பயிற்சி முடித்து பாசறைகளில் இருந்த போதும், உற்சாகத்துடன் அனைத்து வேலைகளிலும் ஈடுபட்டான்; எதையும் பிற்போடுவதை குருசாமி விரும்பமாட்

டான். செய்ய முடியாதென்று ஒன்றுமில்லை என்பதை சகபோராளிகளுக்கு அடிக்கடி சொல்லிக்கொள்வான். துணிவு சற்றுக் குறைந்தவர்களுக்கும் துணி வூட்டும் கதைகளைச் சொல்லி, ஊக்கப்படுத்திக்கொண்டான். குருசாமி சண் டைகள் பல கண்ட புலி. அவனுக்குள் உறைந்து கிடந்த வெறித்தனத்தை ஆற்றுமளவிற்கு எதிரியை அழித்திருந்தான்.

சாம்பன்குள மினிமுகாம் தகர்ப்பு.

மணலாற்றில் முதலில் 81 எல். எம். ஜி. எடுத்த சண்டை.

கப். காண்டீபனுடன் சென்று காப்பரண் தகர்த்த சண்டை.

மாங்குள இராணுவ முகாம் தகர்ப்பு.

முறியடிக்கப்பட்ட 'ஒப்பரேசன் சிக்சர்.'

அளம்பில் காப்பரண் தகர்ப்பு.

28. 09. 92 இல் நடைபெற்ற கொக்குத்தொடுவாய் காப்பரண் தகர்ப்பு மின்னல் தாக்குதலில். மோட்டர் எறிகணைத் தாக்குதலில் பொறுப்பாக இருந்தான். இச்சண்டையில் காயத்துக்குள்ளானான். 'சிக்சர்' சண்டையிலும் நெஞ்சில் காயம் அடைந்தான். சிகிச்சைக்காக யாழ். சென்றும் காயம் சரியாக ஆறுமுன், மணலாறு திரும்பினான். வந்தவுடன் அக்பர் மரணித்த அளம்பில் காப்பரண் தகர்ப்பு சண்டையில் கலந்துகொண்டான்.

1992 ஆம் ஆண்டு புரட்டாதித் திங்கள் 28 ஆம் நாள், கொக்குத்தொடு வாய் இராணுவ முகாம் காப்பரண்களைத் தகர்த்தவேளையில் மரணத்தைத் தழுவிக்கொண்டான்! ☆

பிறப்பு:
28. 06. 1968

வீரச்சாவு:
28. 09. 1992



# கப். திருமலையான் - டேவிற்

(கொக்குத்தொடுவாய்ச் சமர்)

(பாலகிருஷ்ணன் டேவிற்ஜெயந்திரன்)

மின்சாரநிலைய வீதி,

திருமலை.

இனத்தின் மானத்துக்காய் - இனத்தின் சுதந்திரத்துக்காய் - தாயை, தந்தையை, சகோதரங்களைத் துறந்தவர்கள்தான் எம் வீரர்கள். டேவிற் இதற்கு ஒருபடி மேலே உயர்ந்து நின்றான். கட்டிய மனைவியின் அன்பை, பெற்ற பிள்ளையின் பாசத்தை எட்ட வைத்துவிட்டுப் புறப்பட்ட வேங்கை இவன்.

திருமலை இவன் பிறந்த புகழ்மலை. மலைபோன்ற வீரம், மலை போன்ற உறுதி, விவேகத்தின் சிகரம், பணிவின் உறைவிடம், அமைதியின் பிறப்பிடம், தியாகத்தின் நிலைக்களம். டேவிற்றுக்காய் எழுத வார்த்தைகள் கிடையா; வார்த்தையில் அடக்க முடியாத ஒருபிறவி.

ஆரம்பத்தில், மாற்று இயக்கமொன்றில் உறுப்பினராக இணைந்து பயிற்சி பெற்றிருந்தான். பயிற்சி பெற்றவனுக்கு சுதந்திரப் பசி தீர்க்க வாய்ப்பு அங்கே வழங்கப்படவில்லை. இதனால்தான் விடுதலைப் புலியாய் மாறினான். திருமலையில் மேஜர் சங்கருடன் நின்று, இவன் காணாத களம் இல்லை எனலாம்; எங்கெல்லாம் சங்கர் சண்டையில் நின்றானோ அங் கெல்லாம் டேவிற்றும் நின்றான். கிழக்கில் இருந்து மணலாற்றுக்கு வந்த

நூற்றுக்கு மேற்பட்ட வீரர்களுடன். டேவிற்றும் வந்திருந்தான். காட்டுக்கே
யுரிய விசேட அதிரடி 'கொமாண்டோ' பயிற்சியை முடித்தான். மண
லாற்றுக்கு தன்னுடன் வந்து, மீண்டும் கிழக்கிற்கே திரும்பிச் சென்றுவிட
நினைத்த பல வீரர்களைத் தனித்தனியாகச் சந்தித்துப் புத்திமதி கூறி,
உணரவைத்து நிறுத்தியவன் டேவிற். எந்தப் போராளியும் இதை மறக்க
மாட்டான். டேவிற் ஒரு சிறந்த போர்வீரன்; சிறந்த நிர்வாகி; ஒரு சிறந்த
பயிற்சி ஆசிரியர்; வேவுத்திறன் உள்ளவன்; சினக்கத் தெரியாதவன் என
வாய் ஓயாது அவனைப் புகழ்ந்துசொல்லாத போராளிகள், மணலாற்றில்
இல்லை.

மணலாற்றின் சிறப்புத் தளபதிக்கு டேவிற் மீது தனிப்பற்று - தலை
வரை. இந்த மண்ணை, சுதந்திரத்தை, மானத்தை இறுக்கமாக நேசிக்கும்
எந்தப் போராளி மீதும் அவர் தனிப்பற்றினை வைத்துவிடுவார்; அவர்க
ளின் வளர்ச்சியில் பெருமைப்பட்டுக் கொள்வார். டேவிற்றைப் பொறுப்பு
மிக்க வீரனாய் வளர்த்து விட்ட பெருமையில் பூரித்திருந்தபோதுதான்,
அவன் எல்லாரையும் கண்கலங்கவைத்து சென்று மறைந்தான்...

டேவிற்றிடம் ஒரு தனிச்சிறப்பு இருந்தது. தானே வேவு பார்த்து,
தானே அச்சண்டைக்கு அணியை வழிநடத்திச் செல்லுதல் இல்லாவிட்டால்
அவனுக்குத் திருப்தியே இருக்காது. பயிற்சிநேரங்களில் எல். எம். ஜி. துப்
பாக்கியைத் தூக்கிக்கொண்டு ஓடத் தொடங்கினான் என்றால், பின்னால்
எவரும் ஓடமுடியாது. பல மாதங்களாக 'கொமாண்டோ' சிறப்புப் பயிற்சி
கொடுக்கும் பொறுப்பும், இவனிடமே இருந்தது. டேவிட் சென்ற சண்டை
களை ஒவ்வொன்றாகச் சொல்வதைவிட ஒட்டுமொத்தமாகச் சொன்னால்,
மணலாற்றுப் படையணிகள் எங்கெல்லாம் சண்டை செய்தனவோ அங்கெல்
லாம் டேவிற்றின் துப்பாக்கியும் இயங்கியது.

1991ஆம் ஆண்டு புரட்டாதித் திங்கள் 28 ஆம் நாள், டேவிற்றின் மன
தில் அழியாத நெருப்பாய் எரிந்துகொண்டேயிருந்தது. கப். ரத்தன், கப். சிவராஜ்
லெப். தயான், 2 ஆம் லெப். சுகந்தன், லெப். கர்ணன் என பெறுமதிமிக்க
ஐந்து தோழர்களை கொக்குத்தொடுவாய் படைமுகாமின் சிப்பாய்கள் பதுங்
கிக் கிடந்து தாக்கி அழித்த நாள். டேவிற் ஒவ்வொரு நாளாக அதை
எண்ணிக்கொண்டே வந்தான்.

ரத்தன், சிவராஜ் மறைந்து ஓராண்டு கழிந்தது. அதேயிடத்தில் எதிர்
ரியை அழிக்கவேண்டுமென்ற சிந்தனையுடன் வேவு பார்க்கத் தொடங்கிய
வன் டேவிற் அந்த நாள் வந்ததும், சிறப்புத் தளபதியிடம் அனுமதி பெற்
றான். அணிகள் பிரிந்தன 28ஆம் நாள் இரவு... இரவின் அமைதியைக்
கிழித்துக் கொண்டு துப்பாக்கிகள் முழங்கின. டேவிற் பாய்ந்து சென்றான்.
காப்பரண்களில் நின்ற சிப்பாய்கள் அலறி விழுந்துகொண்டனர்; எஞ்சியவர்
இருட்டில் ஓடித்தப்பினர். படைக்கலன்களை எம் வீரர்கள் வாரிச்சுருட்டினர்.

"டேவிற் எங்கேயடா.." சிறப்புத் தளபதியின் குரல் ஓங்கி ஒலித்தது.
டேவிற் இவ்வுலகில் இல்லை. எல்லாரும் மௌனமாய் நின்றனர்; அனை
வரின் தலைகளும் அவனுக்காய்க் குனிந்துகொண்டன.

"மாஸ்ரர் நீங்கள் எழுதும் புத்தகத்தில் டேவிற்றுக்காய் ஒருபக்கத்தை
வைத்துக்கொள்ளுங்கள்; அடுத்து இவன்தான்" என்று. சிறப்புத் தளபதி
விளையாட்டாகச் சொன்னதை நினைத்துப் பார்க்கிறேன்...என்னையறியாது,
அவனது பக்கங்களை என் பேனா நிரப்புகிறது. ☆

பிறப்பு: 04. 01. 1974

வீரச்சாவு: 28. 09. 1992



# லெப். கோமகன் - கலீஸ்

( கொக்குத்தொடுவாய்ச் சமர் )

( பிலிப்பையா பிரேமானந்தன் )

கந்தாதோட்டம்,

பருத்தித்துறை.

வடமராட்சியில் பருத்தித்துறையில் பிறந்தவன் கலீஸ். வசதியான குடும்பத்தில் பிறந்தாலும், சுதந்திரதேவி அவன் நெஞ்சில் குடியிருந்தாள். அளவான தோற்றம், கம்பீரமான நடை, விறைத்து நிற்கும் தலைமுடி; இவனின் தலைமுடி போன்றுதான் நெஞ்சுறுதியும் இருந்தது. இவனின் போராட்ட வாழ்வில் நடந்த சில நிகழ்வுகள் இதைக் காட்டி நிற்கும்.

☆

மணலாற்றுக் காட்டில் பயிற்சி முடிந்த நாளிலிருந்து, வைத்தியப் பிரிவிலேயே போர் வாழ்வைத் தொடர்ந்தான்; அதனால் மரணிக்கும் வரை, எங்கெல்லாம் சண்டை நடக்கிறதோ அங்கெல்லாம் இவனும் நிற்பான். இன்றும் களத்தில் நிற்கும் பல போராளிகளை அவன் கரங்கள் காத்த பெருமை பலருக்குத் தெரியாதது.

களத்தில் நின்ற கலீசுக்கு, வீட்டிலிருந்து கடிதமொன்று வந்திருந்தது. அதில் இயக்கத்தை விட்டு வரும்படியும் கனடாவிற்கு அனுப்புவதற்காக ஒழுங்கு செய்திருக்கின்றோம் என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. கடிதத்தைக் கண்ட நாளிலிருந்து இவன் மனம் கொதித்தது. அவனுக்கு வீட்டார் மீது அளவற்ற கோபம் உண்டானது. விடுமுறை கேட்டு வீட்டிற்குச் சென்றான். தாய் சகோ

தரங்கள் அனைவரையும் வாய்க்கு வந்தபடி திட்டித் தீர்த்தான்.'' நான் செத்தால் என் உடல்கூட வீட்டிற்கு வராது பாருங்கோ'' என்று சொல்லிவைத்து விட்டு காட்டிற்குத் திரும்பினான்.

கலீசிடம் காணப்பட்ட நல்ல பண்புகளிலொன்று, வைத்தியப் பராமரிப்பு வேலையை மட்டுமன்றி எல்லாவேலைகளையும் செய்வதாகும். மற்றவர்கள் கஷ்டப்பட்டுச் செய்துகொண்டிருக்கும் வேலையில், தானும் பங்கெடுத்து விடுவான். எழுத்து வேலைகளை அழகாகவும் ஒழுங்காகவும் செய்து கொடுப்பான். ஒவ்வொரு சண்டைக்குச் செல்லும் பாக்கியம் கிடைத்தபோதும், துப்பாக்கி தூக்கி எதிரியை அழிக்கவேண்டுமென்ற ஆசையே அதிகமாக இருந்தது. சிறப்புத் தளபதியிடம், சண்டைக்கு தனக்கும் வாய்ப்புத் தரும்படி அடிக்கடி கேட்டுக்கொள்வான். அவனின் நீண்டநாள் ஆசை, மேஜர் சதாத் மரணித்த காப்பரண் தகர்ப்புச் சண்டையில் நிறைவேறியது.

'ஒப்பரேசன் சிக்சர்' என்ற சிங்களப் படையின் நடவடிக்கையை, கொக்குத்தொடுவாயில் முளையிலேயே கிள்ளிய சண்டையில் காயம் சுமந்தான். பலருக்குக் காயம் கட்டி காத்த இவனை, இவன் தோழர்கள் கட்டுப்போட்டுக் காத்தனர். சிகிச்சைக்காக யாழ். சென்று திரும்பினான். கப். சிவராஜ் கப். ரத்நன், லெப். தர்ணன், லெப். தயான், 2ஆம் லெப். அசுந்தன் ஆகியோர் மரணித்த ஓராண்டு நினைவில், கொக்குத்தொடுவாயில் இராணுவ முகாம் காப்பரண்களைத் தகர்த்தெறிந்த சண்டையில் காயமுற்று வீழ்ந்த வீரர்களுக்கு, ஓடியோடிச் சிகிச்சை செய்துகொண்டிருந்தான். மற்றவரைக் காக்க நினைத்த கலீஸ், தன்னைக் காக்க நினைக்கவில்லை. கடமைதான் அவன் நெஞ்சில் நின்றது. அந்த வைரநெஞ்சினைக் குண்டொன்று துளைத்துக்கொண்டது; தன் கணக்கு முடியப்போவதை உணர்ந்தான் கலீஸ். ''மச்சான் உங்களைக் காப்பாற்றியதற்காக இல்லாவிட்டாலும், உங்களோடு பழகியதற்காக ஒரு ஊசியாவது போடுங்கோ'' என்று, மரணத் தறுவாயிலும் மற்றவர்களைச் சிரிக்க வைக்க முயன்றான். மற்றவர்களின் மகிழ்விற்காகவே வாழ்ந்தவனின் உயிர்......

''பாசம் மிகுந்த தோழர்களே, வீட்டில் என் உடலைக் கொடுக்கவேண்டாம்; காட்டிலேயே என் உடலைப் புதைத்துவிடுங்கள் !''

இதுதான் இவனது தினக்குறிப்பில் கிடந்த கடைசி வரிகள்... ! ☆

பிறப்பு:
11. 02. 1971

வீரச்சாவு:
28. 09. 1992



# 2ஆம் லெப்.வெற்றிவேல் - நியா

( கொக்குத்தொடுவாய்ச் சமர் )
( சித்திரவேல் இராமச்சந்திரன் )
கல்குடா,
வாழைச்சேனை,
மட்டக்களப்பு.

நியா பிறந்தது வன்னியில், வளர்ந்தது மட்டக்களப்பில், மண்ணுக்காய், தன்னை அர்ப்பணித்தது மணலாற்றில். நியாவின் காட்டு வாழ்விலும் சில தனித்துவங்கள் இருந்தன. எவர் பிழைவிட்டாலும் நியாவிற்குப் பிடிக்காது; திருந்தி நடக்கும்படி அடிக்கடி கூறிக்கொள்வான். பாசறையில் இருக்கும் போதாயினும் சரி சண்டைக்குச் செல்வதாயினும் சரி சொன்னபடி நடந்து கொள்ளவேண்டும். சாப்பிட்டுவிட்டு மிச்சச்சோறு யாராவது கொட்டினால், நெருப்பாய் நின்று பேசுவான். ஆனால் விட்டுக் கொடுக்கும் மனப்பாங்கு, இவனிடம் நிறைய இருந்தது. வீண்வம்பு விளையாட்டுக்களை விரும்பமாட்டான்.

இளமையிலிருந்தே பள்ளிக்குச் செல்லாத நியா, அதற்காக முயற்சிக்கவுமில்லை. ஆனால், பாசறையில் ஏதாவது பத்திரிகைகள் - சஞ்சிகைகள் வந்துவிட்டால், மற்றவர்களைத் தொல்லைகொடுத்தாவது அவற்றினை வாசிக்கவைத்து அறிந்துகொள்வான். சக போராளிகள் கூடியிருந்து கதைக்கும்போது அருகில் நின்று கேட்பான். நல்ல பயனுள்ள விசயமாயின் தானும் கூடியிருந்து கேட்பான்; இல்லையேல் எழுந்து சென்றுவிடுவான். இவனுக்கு யுத்தமுனைகள் பெரிதாகக் கிடைத்ததில்லை.

1992ஆம் ஆண்டு புரட்டாதித் திங்கள் 28ஆம் நாள், கப். சிவராஜ், கப். [illegible]ரத்தனுடன் ஐந்து போராளிகள் இலங்கைப் படைகளால் தாக்குண்டு மரணித்த ஓராண்டு நினைவுநாள். அவர்களின் ஆத்ம நிறைவுக்காய், அவர்கள் தாக்குண்டு மறைந்த அதே இடத்தில் உள்ள சிங்களப் படைகளின் காப்பரண்களில் வைத்தே எதிரிகளை அழிப்பதற்காக வேவு பார்க்கப்பட்டது. 28ஆம் நாள் இரவு, காப்பரண்களை நோக்கிச் சுட்டுக்கொண்டு ஓடினர் எம் வீரர்கள். சிப்பாய்கள் நிலைகுலைந்து ஓடினர். நியா ஓடிச்சென்று, பெரும் உயரமாக அமைக்கப்பட்டிருந்த மண் அணையின் மேலால் எட்டிப் பார்த்து, தன் ஆர். பி. ஜியை இயக்க முனைந்தான்.

அடுத்த கணம், துப்பாக்கிக் குண்டு இவனுடலைக் குதறிச் சென்றது. ''இன்னும் இன்னும் திருந்தேல்லையடாப்பா...... இன்னும் திருந்தேல்லையடாப்பா......'' என போராளிகளைத் திருத்திய நியா ......!

☆

பிறப்பு :
16. 11. 1972

வீரச்சாவு :
09. 10. 1992



# தினகரன்

(நாயாற்று வெடிவிபத்து)
(சிந்தாமணி அம்பிகைபாலன்.)
கோணாவில்,
கிளிநொச்சி.

மெல்லிய உயர்ந்த தோற்றம். அமைதியான முகம். பயிற்சி முடிந்த காலத்திலிருந்து அவனுக்குத் துப்பாக்கி வழங்கப்படவில்லை. கைக்குண்டுகள் மட்டும் அவன் இடுப்பில் தொங்கின. ஓரிரண்டு சண்டைகளுக்கு உதவி வழங்கும் அணியில் சென்று, சண்டைமுனை அனுபவத்தைப் பெற்றிருந்தான். சாவுக்கு முந்திய ஒருசில நாட்களில் அவனது நினைவுகளைப் புரட்டிப் பார்க்கின்றேன் .....

தாக்குதலொன்றுக்குச் செல்வதற்காக கடுமையான பயிற்சிகள், சிலநாட்களாக நடைபெற்றுக்கொண்டிருந்தன. இச்சண்டையில் துப்பாக்கியோடு எதிரியைச் சந்திக்கக்கூடிய வாய்ப்பு தினகரனுக்கிருந்தது. பயிற்சி முடிந்து அரசியல் வகுப்புக்கள் நடக்கும் நேரங்களில், அமைதியாக - எவருடனும் அதிகம் அலட்டிக்கொள்ளாமல் - இருப்பான். சாப்பாட்டு வேளைகளில் எல்லாரும் நான் முந்தி நீ முந்தி என அவசரப்பட்டு முண்டியடித்துக்கொள்வார்கள். கடுமையான பயிற்சியாதலால் பசி அதிகமாகத்தானிருக்கும். ஆனால், தினகரன் அதை காட்டிக்கொள்ளமாட்டான்.

கடற்கரையில் முக்கியமான ஒரு பயிற்சி பெறுவதற்காக, அதிகாலையில் சில அணிகள் நாயாறு நோக்கிப் புறப்பட்டன. தினகரனும் அவர்களுள் அடங்கி

யிருந்தான். அவர்கள் புறப்பட்டு ஒருசில மணித்தியாலங்களில் குண்டுவெடிப்புச் சத்தமொன்று கேட்டது. சிலநிமிடங்களில் அவசர சிகிச்சைக்கு உதவியனுப்பும் படி, 'வோக்கி ரோக்கி'யில் செய்தி வந்தது. நெஞ்சு அடித்துக் கொள்ள முடிவை எதிர்பார்த்து நின்றோம். ஜீப் வண்டி வந்துகொண்டிருந்தது ....... ஜீப் வண்டியில் வெள்ளைத் துணியால் போர்த்தியபடி........ தினகரன்தான் ...

தினகரனின் இடுப்பில் இருந்த கைக்குண்டின் பாதுகாப்புப் 'பின்' தற்செயலாகக் கழன்றுகொண்டதாம். ஆபத்து வந்துவிட்டதை அடுத்த கணமே உணர்ந்த அவன், தன் சகதோழர்களைக் காக்கும் பொருட்டு, குண்டைத் தன்னோடு அணைத்துக் குப்புறப்படுத்துக் கொண்டானாம். அடுத்த கணம் ... ! வட்டக்கச்சிக் கிராமத்துக்கு அவனுடலைச் சுமந்து ஜீப்வண்டி விரைந்துகொண்டிருந்தது. எம் தோழனின் தியாகத்துக்காய், எமது தலைகள் குனிந்து கொள்கின்றன !

☆